தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு-144.

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம்

### அகத்திணையியல்

### பிற்பகுதி



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூல் நிலையம்



1972

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு—144.

வைத்தியநாத தேசிகர் இயற்றிய

# இலக்கண விளக்கம்

## பொருளதிகாரம்—அகத்திணையியல்

பிற்பகுதி

பதிப்பாசிரியர் :
பண்டித வித்வான், தி. வே. கோபாலையர், எம். ஏ., பி. ஓ. எல்.,
திருவையாறு.



தஞ்சை சரசுவதி மகால் நிர்வாகக் கமிட்டியினருக்காகக்
கௌரவ காரியதரிசி,
நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்களால்
வெளியிடப்பட்டது.

கி. பி. 1972] [விலை ரூ. 16-00

# அகத்திணையியல் — பிற்பகுதி

## பொருளடக்கம்

# வரைவியற் செய்தி

## வரைவின் இலக்கணம்

528 வரைவு எனப் படுவது உரவோன் கிழத்தியைக்
குரவர் முதலோர் கொடுப்பவும் கொடாமையும்
கரணமொடு புணரக் கடிஅயர்ந்து கொளலே.

வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிந்த தலைவன் வந்துழி வரையும் அன்றே; அவ்வரைவாவது இவ்வியல்பிற்று என இஃது அதன் இலக்கணம் கூறுகின்றது.

(இ-ள்) வரைவு என்று சொல்லப்படுவது, தலைமகன் தலைமகளைக் குரவர் முதலோர் கொடுப்பவும் கொடாது ஒழியவும், வதுவைச் சடங்கொடு பொருந்த மணம் செய்து கோடல் என்றவாறு.

வரைவு கற்பிற்கு ஒருதலையாக வேண்டுதலின் அச்சிறப்புத் தோன்ற 'வரைவு எனப்படுவது' என்றும், குரவரே அன்றி அவரோடு ஒரு தன்மையர் ஆகிய தாயத்தாரும் தாயொடு பிறத்தாரும் அவர் இல்லாதவழிச் சான்றோரும் தேவரும் கொடைக்கு உரிய மரபினர் ஆகலின் 'குரவர் முதலோர்' என்றும், 'கொடுப்ப' என்றும்,

> 'கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே
> புணர்ந்துஉடன் போகிய காலை யான'
>
> தொல். பொ. 143

என்ப ஆகலின் 'கொடாமையும்' என்றும்,

> 'கரணம் பிழைக்கின் மரணம் பயக்கும்'

என்பார் 'கரணமொடு புணர' என்றும் கூறினர்.

குரவர் ஆவார் இவர் என்பது,

> அரசன் உவாத்தியாயன் தாய்தந்தை தம்முன்
> நிகரில் குரவர் இவர்ஐவர் இவரைத்
> தேவரைப் போலத் தொழுதுஎழுக என்பதே
> யாவரும் கண்ட நெறி. ஆசாரக்கோவை.

என்பதனுன் அறிக.

வதுவைச்சடங்கு, ' இவளை நீ இன்னவாறு பாதுகாப் பாய் ' எனவும், 'இவற்கு இன்னவாறே நீ குற்றேவல் செய்து ஒழுகு' எனவும், அங்கியங் கடவுள் அறிகரியாக மந்திரவகை யால் கற்பித்தல்.

> உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவைப்
> பெருஞ்சோற்று அமலை நிற்ப நிரைகால்
> தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
> மனைவிளக்கு உறுத்து மாலை தொடரிக்
> கனைஇருள் அகன்ற கவின்பெறு காலை
> கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
> கேடுஇல் விழுப்புகழ் நாள்தலை வந்தென
> உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
> பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
> முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
> புதல்வர்ப் பயந்த திதலைஅவ் வயிற்று
> வால்இழை மகளிர் நால்வர் கூடிக்
> கற்பின் வழாஅ நற்பல உதவிப்
> பெற்றோன் பெட்கும் பிணையை ஆகென
> நீரொடு சொரிந்த ஈர்இதழ் அலரி
> பல்இருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
> வதுவை நன்மணம் கழிந்த பின்றைக்
> கல்லென் சும்மையர் ஞெரேல்எனப் புகுந்து
> பேரில் கிழத்தி ஆகஎன மாதர்
> ஓர்இல் கூட்டிய உடன்புணர் கங்குல்

கொடும்புறம் வளைஇய கோடிக் கலிங்கத்து
ஒடுங்கினள் கிடந்த ஓர்புறம் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சினள் உயிர்த்த காலை யாழநின்
நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரைஎன
இன்னகை இருக்கைப் பின்யான் வினவலின்
செஞ்சூட்டு ஒண்குழை வண்காது துயல்வர
அகம்மலி உவகையள் ஆகி முகன்இகுத்து
ஒய்யென இறைஞ்சி யோளே மாவின்
மடங்கொள் மதைஇய நோக்கின்
ஒடுங்கூஈர் ஓதி மாஅ யோளே. அகநா. 86

இதனுள், வதுவைக்கு ஏற்ற கரணங்கள் நிகழ்ந்தவாறும் தமர் கொடுத்தவாறும் காண்க.

[உழுந்தைக்கூட்டி அமைத்த கும்மாயத்தை வதுவைக்கு வந்தார் அனைவரும் பேரொலியோடு உண்ணவும், பல கால்களை உடைய பெரிய தண்ணிய பந்தரில் புதுமணல் பரப்பி, வீட்டை விளக்குகளாலும் மாலைகளாலும் அணி செய்து, இருள் நீங்கிய வனப்புமிக்க காலை நேரத்தில் தீயகோள்களின் தொடர்பு நீங்கிய உரோகணியோடு சந்திரன் கூடிய அச் சிறந்த நாளிலே, நிறைகுடங்களையும் நீர் நிறைந்த மண்டைகளையும் ஆரவாரம் மிக்க மூதறிவுடைய சிறந்த பெண்டிர் முற்படக் கொடுப்பனவற்றையும் பிற்படக் கொடுப்பனவற்றையும் முறையாகத் தரவும், பிள்ளைகளைப் பெற்ற பெருமாட்டியராகிய மங்கலமகளிர் நால்வர் கூடித் தலைவி தலைவன் கற்பித்தவாற்றினின்றும் வழுவாதிருத்தலுக்கு உரிய நல்ல பல உபதேசங்களைச் செய்து 'என்றும் கணவனால் விரும்பப்படும் மனைவியாக இருப்பாயாக' என்று கூறி நீரோடு அலரிப் பூவினையும் நெல்லையும் அவள் கூந்தலில் தெளிப்ப, திருமணச் சடங்குகள் யாவும் நிகழ்ந்த பிறகு, அற்றைஇரவு ஆரவாரம் உடைய உறவினர் அனைவரும் விரைவாகப்

புகுந்து ‘ பெரிய இல்லறக் கிழத்தி ஆவாயாக ’ என்று ஒரு சேர நல்லாசி கூற, அடுத்த மகளிர், ஒரே அறையில் தலைவியைத் தலைவனோடு கூட்டிய இருவரும் கூடுதற்குரிய முதல்இரவிலே, வளைந்த முதுகைச் சுற்றியிருந்த புத்தாடைக்குள் ஒடுங்கிக் கிடந்த இடத்தில் அணுகி, அவளைத் தழுவும் விருப்போடு தலைவன் அவள் முகத்தை மூடிக்கொண்டிருந்த ஆடையை நீக்க அவள் அஞ்சினளாய்ப் பெருமூச்சு விட்ட பொழுது அவன் ‘ உன் உள்ளத்துப்பட்டதை மறையாது கூறு ’ என்று அவளை நோக்கிக் கூற. தன் காதணி அசைய, மனம் மிக்க உவகையை உடையளாகி, மான் போன்ற மருண்ட பார்வையினையும், படிந்த தேனல் ஈரமான கூந்தலையும் உடைய அவள் தனது முகத்தைத் தாழ்த்தி விரைவாக வணங்கினள்.

இதனுள், ‘ உச்சிக் குடத்தர் ... .... வதுவை நன்மணம்’ என்ற பகுதியில் வதுவைச் சடங்குகள் நிகழ்ந்தவாறும், ‘ பேரில் கிழத்தி ஆகஎன மாதர்ஓர்இல் கூட்டிய ’ என்ற பகுதியில் தலைவிதமர் தலைவியைத் தலைவனோடு சேர்த்திய வாறும் காண்க. இது களவின்வழி நிகழ்ந்த கற்பாயிற்று.]

> பறைகொளப் பணிலம் ஆர்ப்ப இறைகொளத்
> தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
> நாலூர்க் கோசர் நன்மொழி போல
> வாய்ஆ கின்றே தோழி ஆய்கழல்
> செயலை வென்வேல் விடலையொடு
> தொகுவளை முன்கைநம் மடந்தை நட்பே. குறுந். 15

என்பதனுள், ‘ வாயாகின்றே ’ எனச் செவிலி நற்றாய்க்குக் கூறினமையானும், ‘ விடலை ’ எனப் பாலைத்தலைவன் பெயர் கூறினமையானும் கொடுப்போர் இன்றிக் கரணம் நிகழ்ந்த வாறு காண்க.

[இப்பாடல், தலைவி தலைவனோடு உடன் போயினபின் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள், நிற்பச் செவிலித் தாய் நற்றாய்க்கு அறத்தொடுநின்ற துறையைச் சார்ந்தது.

தோழி! அழகிய வீரக்கழலையும் செயலைமலரையும் வெள்ளிய வேலினையும் உடைய தலைவனோடு பல வாகத் தொக்க வளைகளை அணிந்த முன்கையை உடைய உன் மகள் செய்து கொண்ட நட்பானது, பழைய ஆல மரத்து அடியில் உள்ள பொதுஇடத்தில் தங்கிய நான்குஊர் களில் உள்ள கோசருடைய நன்மொழி தவறாது உண்மையா வது போல, முரசு முழங்கவும் சங்கு ஒலிப்பவும் மணம் செய்து கொண்டதால் உண்மை ஆயிற்று.

இதனுள், தலைவி குறிஞ்சிநிலத்தாள் ஆதலானும், தலை வன் பாலைநிலத்தவனாய்த் தலைவியை உடன்போக்கிக் கொண்டு மணம் செய்து கொண்டதைத் தோழி வாயிலாக உணர்ந்த செவிலி நற்றாய்க்குக் கூறுகின்றாள் ஆதலானும், கொடுப்போர் இன்றிச் சான்றோர் பிறரைக் கொண்டு தலை வன் தலைவியை முறைப்படி மணம் செய்து கொண்டான் என்பது உணரப்படும்.]

### விளக்கம்

இந்நூற்பா விளக்கம் எடுத்துக்காட்டு உட்படத் தொல் காப்பியப் பொருட்படல **142, 143** ஆம் நூற்பாக்களில் நச்சினார்க்கினியர் உரைத்ததே.

தொல்காப்பியனார் வரைவு இலக்கணத்தைக் கற்பு என்ற தலைப்புள் அடக்கினார்.

### ஒத்த நூற்பாக்கள்

'கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குஉரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குஉரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே.'

தொல். பொ. *142*

'கொடுப்போர் .... .... காலையான.' தொல். பொ. 143
'மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே.' ,, 144
'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப.' ,, 145
முழுதும் — ந. அ. 171
'வரைவு எனப் படுவது புரைநீர் கிழவோன்
உரைமலி கற்பின் உத்தமக் கிழத்தியைத்
தந்தைதாய் மாதுலன் தம்முன் தமரொடும்
முந்திய ஆசான் முதலோர் கொடுப்பக்
கரணம் வழுவாது கடி அமைந்து கொளலே.' மா. அ. 63
'கொண்டுதலைக் கழிந்துழிக் கொடுப்போர் இன்றியும்
கரணம் உண்டெனக் கழறினர் புலவர்.' மா. அ. 64
'ஆண்டு வரையாது ஆண்டகை அவளொடு
மீண்டு வரைதலும் மேலதன் மேற்றே.' ,, 65
'ஆராய்ந்து ஆதியின் அமைந்தஇக் கரணம்
காரா ளர்க்காம் காலமும் உளவே.' ,, 66
'மேலோர் கரணமும் கீழோர் கரணமும்
நூல்ஓர்ந்து உரைத்த நுண்ணிய மார்க்கம்
வேற்றுமைப்பட வீதித்தனர் பொய்யும் வழுவும்
தோற்றிய பின்னர்த் துறவுடை யோரே.' மா. அ. 67
156

## வரைவின் தொகை

529 வரைவு மலிவே அறத்தொடு நிலைஎன்று
உரைஅமை இரண்டும் வரைவிற்கு உரிய
கிளவித் தொகைஎனக் கிளந்தனர் கொளலே.

இது வரைவின் தொகை இத்துணைப் பகுதித்து என்கின்றது

(இ-ள்) வரைவு மலிவும் அறத்தொடு நிலையும் என்கின்ற இரண்டும் வரைவிற்கு உரிய கிளவியின் தொகை என்று கூறினர் அறிவோர் என்றவாறு. 157

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந அ. 172

*களைந்த வரைவிற்கு உரியகிளவித்தொகை*
*புலம்பயில் வரைவு மலிவுஅறத் துடன்நிலை*
*ஆயிரண்டு என்ப அறிவுடை யோரே.* மா. அ. 68

157

## வரைவுமலிவின் வகை

530 **வரைவு**முயல்வு உணர்த்தல்[1] **வரைவு**எதிர்வு **உ**ணர்த்தல்[2]
**வரைவு**அறிந்து மகிழ்தல்[3] பரவல்கண்டு உவத்தல்[4] என்று
ஒருநால் **வகைத்தே வரைவு** மகிழ்தல்.

இது, நிறுத்த முறையானே வரைவு மலிவு உணர்த்து வனவற்றுள் இஃது அதன் வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) வரைவு முயல்வு **உ**ணர்த்தல் முதலாகப் பரவல் கண்டு உவத்தல் ஈறாக நான்கு வகையினை உடைத்தாம் வரைவு மலிதல் **என்**றவாறு.

158

### விளக்கம்

1 தலைவன் தலைவியை வரைந்து கோடற்கு முயலுமாற்றை உரைத்தல்.

2 தலைவன் தமரை வரைவுபற்றிச் செலுத்தத் தலைவிதமர் வரைவிற்கு வந்தோரை எதிர்கொண்டு வரைவிற்கு உடன்பட்டவாற்றை உணர்த்தல்.

3 திருமணம் விரைவில் நிகழும் என்பதனை அறிந்து தோழியும் தலைவியும் மகிழ்தல்.

4 தலைவி வரைவினைமனம்கொண்டு தெய்வத்தை வழிபடுதல் கண்டு தோழியும் தலைவனும் மகிழ்தல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 173

'வரைவு மலிவின் வகையினை உணர்த்தின்
வரைவு முயல்வொடு வரைவுஎதிர்வு உணர்த்தலும்
வரைவுஅறிந்து உவத்தல் வாழ்த்தல்கண்டு உவத்தலோடு
ஈரிரண்டு எனநிகழ்த்து இயற்கைய வாகும். மா. அ. 69 158

## வரைவுமலிவின் விரி

531 காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி
காதலிக்கு உணர்த்தலும்[1] காதலி நற்றாய்
உள்ள மகிழ்ச்சி உள்ளலும்[2] பாங்கி
தமர்வரைவு எதிர்ந்தமை காதலிக்கு உணர்த்தலும்[3]
அவள்உவகை ஆற்றாது உளத்தோடு கிளத்தலும்[4]
தலைவனைப் பாங்கி வாழ்த்தலும்[5] தலைவி
மணம்பொருட் டாக அணங்கைப் பராநிலை
காட்டலும்[6] கண்டோன் மகிழ்வும்[7] என்று ஈட்டிய
இருமூன்றும் ஒன்றும் வரைவுமலி தற்காம்
விரிஎன விளம்பினர் மெய்உணர்ந் தோரே.

இது வரைவு மலிதலின் விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) காதலன் முலைவிலைவிடுத்தமை பாங்கி காதலிக்கு உணர்த்தல் முதலாகக் கண்டோன் மகிழ்தல் ஈறாகத் தொகுத்த ஏழ்கிளவியும் வரைவுமலிதற்கு உரிய விரி எனக் கூறுவர் அகப்பொருளை உணர்ந்தோர் என்றவாறு.

### விளக்கம்

1 தலைவன் தலைவிக்குப் பரிசப்பொருள் விடுத்த செய்தியைத் தோழி தலைவிக்கு உணர்த்துதல்.

2 தலைவி தன் நற்றாய் எத்தகைய மகிழ்ச்சி அடைவாள் என்பதை நினைத்துப் பார்த்தல்.

3 தலைவிதமர் தலைவன் விடுத்த சான்றோரை எதிர் கொண்டு தலைவனுக்குத் தலைவியை மணம்செய்து கொடுப்பதற்கு இசைந்த செய்தியைத் தலைவிக்குத் தோழி உணர்த்துதல்.

4 தலைவி மகிழ்ச்சி தாங்காமல் மனத்திற்குள்ளேயே சொல்லிக் கொள்ளுதல்.

5 தலைவன் வரைவிற்கு ஆவன செய்தமை கண்ட பாங்கி தலைவனை வாழ்த்துதல்.

6 தலைவி தலைவனோடு தன் திருமணம் இனிதின் ஈடேறுமாறு தெய்வத்தை வழிபட்டுக் கொண்டிருந்த காட்சியைத் தோழி தலைவனுக்குக் காட்டுதல்.

7 தலைவி தெய்வத்தை வழிபடும் காட்சியைக் கண்ட தலைவன் மகிழ்ச்சி அடைதல்.

## ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 174

‘ முலைவிலை விடுத்தமை முகிழ்நகைக்கு இகுளை
உலைவின்று உணர்த்தலும் ஒண்ணுதல் நற்றாய்
உள்ள மகிழ்ச்சி உள்ளலும் பாங்கி
தமர்வரைவு எதிர்வர்ஏனத் தையற்கு உணர்த்தலும்
உவகை ஆற்றாது உளத்தொடு கிளத்தலும்
இறைவனை இகுளை வாழ்த்தலும் இறைவி
கடவுளைப் பராநிலை காட்டலும் கண்டோன்
உரைபெற மகிழ்தலோடு ஒன்றிய ஏழும்
வரைவு மலிதற்கு வாய்ந்த விரியே.’ மா. அ. 70]

காதலன் மூலைவிலை விடுத்தமை பாங்கி
காதலிக்கு உணர்த்தல் :

என்கடைக் கண்வரினும் யான்பிற ஏத்தா வகைஇரங்கித்
தன்கடைக் கண்வைத்த தண்தில்லைச் சங்கரன் சூழ்கயிலைக்
கொன்கடைக்கண் தரும்யானை கடிந்தார்கொணர்ந்திறுத்தார்
முன்கடைக் கண் இது காண வந்து தோன்றும் முழுநிதியே.

திரு. 293

எனவும்,

[என் இறுதிக் காலத்தும் தன்னையன்றிப் பிறதெய்வங்களை யான் வழிபடாத உறுதியான உள்ளம் பெறுமாறு என்னிடத்தில் அருட்பார்வை செலுத்திய தில்லையிலுள்ள சிவபெருமானுடைய கயிலை மலையிலே அஞ்சத்தக்க இறுதியை நமக்கு வழங்குதற்கு நம்மை நோக்கி வந்த யானையை ஓட்டிய தலைவன் உன்னை மணத்தற்கு ஆம் பரிசப் பொருளுடன் தமரை விடுத்துள்ளான். பரிசப்பொருள்கள் நம்வீட்டின் முன்னிடத்தில் நிறைக்கப்பட்டுள்ளன.]

காதலி நற்றாய் உள்ள மகிழ்ச்சி உள்ளல் :

கயமா மலர்என்னும் கன்னியை வண்டுஒன்றும் காளைபல்புள்
இயமா மணம்புணர் ஈர்ந்துறை நாடர் எதிர்ந்தவர்மேல்
வயமா நடத்திய வாணன்தென் மாறை வருகுவரேல்
நயமாம் மண அணி கண்டுயாயும் இன்புறும் நம்மினுமே.

தஞ்சை. 282

எனவும்,

[குளப்பூவாம் கன்னியை வண்டாகிய தலைவன் பல பறவை ஒலிகளையும் திருமணக் காலத்து முழங்கும் வாத்தியங்களாகக்கொண்டு மணம் செய்யும் துறைகளையுடைய தலைவன் பகைவர் மேல் யானையைச் செலுத்திய வாணனுடைய தென்மாறையில் வருவானாயின், கலந்த உறவைக் காட்டும் திருமண அணிகளைக் கண்டு நம்மைவிட நற்றாய் பெரிதும் மகிழ்வாள்.]

பாங்கி தமர்வரைவு எதிர்ந்தமை தலைமகட்கு உரைத்தல் :

கூர்முள் முண்டகக் கூர்ம்பனி மாமலர்
நூல்அறு முத்தின் காலொடு பாறித்
துறைதொறும் பரக்கும் தூமணிச் சேர்ப்பனை
யானும் காதலேன் யாயும் நனி வெய்யள்
எந்தையும் கொடீஇயர் வேண்டும்
அம்பல் ஊரும் அவனொடு மொழிமே. குறுந் 51

எனவும்,

கூர்மையான முட்களைஉடைய கழிமுள்ளியினுடைய குளிர்ந்த மலர்கள், கோத்தநூல் அறுபடச் சிதறும் முத்துக் களைப்போலக் காற்றால் சிதறஅடிக்கப்பட்டுத் துறைகள் தொறும் பரவும் தூய அழகிய நெய்தல் நிலத்தலைவனை யானும் விரும்புகிறேன். அவனொடு என்மணம் முடித்தலைத் தாயும் நயக்கிறாள். எந்தையும் அவனுக்கு என்னை மகட்கொடுத் தற்கு விரும்புகிறான். ஊர்மக்களும் சிலர் அறிய நின்னைப் பற்றிக் கூறும் பழிமொழிகளை அவனை நின்னொடு சேர்த்தே சொல்லுவர்.]

தலைமகள் உவகை ஆற்றாது உளத்தொடு கிளத்தல் :

இன்னா நெறியும் குறியிடை யீடும் இலங்குஇழையார்
பின்னாள் இழைத்த பெருவெறி யாட்டும் பிறர்வரைவும்
நின்ஆ குலமும் தவிர்நெஞ் சேஇனி நின்உயிரை
அன்னார் மணமுரசு ஆர்க்கின்ற தால்நம் அருநகர்க்கே.
அம்பி. 333

எனவும்,

[நெஞ்சே ! உன் இனிய உயிரைஒத்த தலைவனுடைய திருமணத் தொடர்பான வாத்தியங்கள் நம் பெரிய இல்லத் தில் ஒலிக்கின்றன ஆதலின், தலைவன் குறிக்கண்வரும் தீய வழியும், குறிபிழைத்தலும், மகளிர் இழைத்த வெறியாட்டும்,

பிறர் நம்மை வரையவருதலும், இவை காரணமாக நீ படும் வருத்தங்களும் இனி நிகழ்தற்கு வாய்ப்பு இல்லை; ஆதலின் வருத்தம் நீங்குக.]

தலைவனைப் பாங்கி வாழ்த்தல் :

கொண்டல்வெளுக்கும்கருங்குழலாள்மனக்கோட்டமும்நின்
வண்டுஅணி யும்தழை வாட்டமும் கண்டகண் மாலும்அந்த
விண்டுஅலர் தாமரைத் தேவியும் போல்இங்ஙன் மேவியது
கண்டன மேஇறை வா இது வோ இன்னம் காண்பதுவே

அம்பி 334

எனவும்,

[தலைவ! கார்மேகத்தை வென்ற குழலை உடைய தலைவியின் மனவருத்தத்தையும் நீ கொணர்ந்த வண்டு மொய்க்கும் தழை வாடிய நிலையையும் அன்று கண்ட எம் கண்களால் இருவீரும் திருமாலும் திருமகளும் போல வீற்றிருக்கும் காட்சியைக் காணும் பேறு பெற்றுவிட்டோம். இன்னும் இத்தகைய நற்காட்சியே காணப்படுவது ஆகட்டும்.]

தலைவி மணம் பொருட்டாக
அணங்கைப் பராநிலை காட்டல் :

அணங்குஅரவு அல்குல் அரிவையர் ஆரத்தன மருப்புச்
சுணங்கலர்வேங்கைத்தொடைமலைநாடதுளங்குமின்போல்
வணங்குஇடைமாதுஉன்மணம்பொருட்டாகவளைஅவிழ்பூங்
கணம்கமழ் சாரல் அணங்கைப் பராநிலை கண்டருளே.

அம்பி. 335

எனவும்,

[மகளிரின் முத்துமாலை அணிந்த தனங்களாகிய யானைத் தந்தங்களில் அழகுதரும் தேமலைப்போல வேங்கையின் மலர்ந்த பூக்களால் அமைந்த மாலையை அணிந்த மலைநாடனே! தலைவி உன் திருமணம் முட்டின்றி நடைபெறப் பூக்களின் திரள் கமழும் மலைச்சாரலிலே தெய்வத்தை வழிபடும் பெற்றியைக் காண்பாயாக.]

பராநிலை கண்ட தலைமகன் மகிழ்தல் ;

பாண் ஆர் சுரும்பு விரும்புதண் சாரல் பனிஅருவிச்
சேண் ஆர் சிலம்பின் உறையும் கடவுளைத் தேமலர்தூஉய்
வாள்நாடு கண்ணி மணம்பொருட் டாக வழுத்தும்அன்பு
காணாய் மடநெஞ்ச மேவஞ்ச மோநங்கள் காதன்மையே.

அம்பி. 336

எனவும் வரும்.

[நெஞ்சே! வண்டுகள் விரும்பும் சாரலில், உயரத்திலிருந்து அருவி விழும் மலையில் உறையும் தெய்வத்திற்கு மலர்தூவித் தலைவி தன்மணம் இனிதின் ஈடேறுவதற்காக வழிபடும் அன்பைக்கண்டு, யான் தலைவியோடு கொண்டுள்ள நட்பு வஞ்சனை உடையதுஅன்று என்பதைத் தெளிந்து அறிவாயாக.]

இவற்றுள் காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி காதலிக்கு உணர்த்தலும், தலைவி மணம் பொருட்டாக அணங்கைப் பராநிலை பாங்கி தலைமகற்குக் காட்டலும் ஆகிய இரண்டும் வரைவு முயல்வு உணர்த்தற்கும்,

பாங்கி தமர்வரைவு எதிர்ந்தமை தலைமகட்கு உணர்த்தல் ஆகிய ஒன்றும் வரைவு எதிர்வு உணர்த்தற்கும்,

தலைவி நற்றாய் உள்ளமகிழ்ச்சி உள்ளலும் உவகை ஆற்றாது உளத்தொடு கிளத்தலும் தலைமகனைப் பாங்கி வாழ்த்தலும் ஆகிய மூன்றும் வரைவு அறிந்து மகிழ்தற்கும்,

தலைமகன் அணங்கைப் பராநிலைகண்டு மகிழ்தல் ஆகிய ஒன்றும் பரவல்கண்டு உவத்தற்கும் உரியவாம். 159

## அறத்தொடுநிலையின் வகை

532 முன்னிலை முன்னிலைப் புறமொழி என்றாங்கு
அன்னஇரு வகைத்தே அறத்தொடு நிலையே.

இஃது அறத்தொடு நிலையின் வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) முன்னிலை மொழியும் முன்னிலைப் புறமொழியும் என இருவகையினை உடைத்தாம், அறத்தொடுநிலை என்றவாறு.

'மொழி' என்பதனை முன்னும் கூட்டுக. 160

## விளக்கம்

'காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும்
நொதுமலர் வரையும் பருவம் ஆயினும்
வரைவுஎதிர் கொள்ளாது தமர்அவண் மறுப்பினும்
அவன்ஊறு அஞ்சும் காலம் ஆயினும்
அந்நால் இடத்தும் மெய்ந்நாண் ஒரீஇ
அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே'

இறை. அக. 29

அறம் என்பது தக்கது; அறத்தொடு நிலை என்பது தக்கதனைச் சொல்லி நிற்றல் என்றவாறு; அல்லதூஉம் பெண்டிர்க்கு அறம் என்பது கற்பு; கற்பின் தலைநிற்றல் என்பதூஉம் ஆம். (இறை. அக. 29. உரை)

முன்னிலை மொழி — நேரிடையாகக் கூறுதல்.

முன்னிலைப்புறமொழி — தாம் உரையாட வேண்டியவர் நேரில் இருந்தும், அவரை அழைத்துப் பேசாது அவர் செவி மடுக்குமாறு செய்தியை அறிவித்தல்.

## ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 175

'முன்உரை முன்னிலை முன்னிலைப் புறமொழி
அன்ன இருவகைத் தாம்அறத் தொடுநிலை.' மா. அ 71

160

## அறத்தொடுநிலையின் விரி

533 கையறு தோழி கண்ணீர் துடைத்துழிக்
கலுழ்தல் காரணம் கூறலும்[1] தலைவன்
தெய்வம் காட்டித் தெளிப்பத் தெளிந்தமை
எய்தக் கூறலும்[2] இகந்தமை இயம்பலும்[3]
இயல்பழித்து உரைத்துழி இயல்பட மொழிதலும்[4]
தெய்வம் பொறைகொளச் செல்குவம் என்றலும்[5]
இவ்வயின் செறித்தமை சொல்லலும்[6] செவிலி
கனைஇருள் அவன்வரக் கண்டமை கூறலும்[7]
எனமுறை இறைவி இயம்பிய ஏழொடு
எறிவளை வேற்றுமைக்கு ஏது வினவினும்
வெறிவிலக் கியவழி வினவினும் பாங்கி
பூவே[8] புனலே[9] களிறே[10] என்றுஇவை
ஏது வாகத் தலைப்பாடு இயம்பலும்
மின்னிடை வேற்றுமை கண்டுதாய் வினவுழி
முன்னிலை மொழியான் மொழிதலும் செவிலி[11]
என்றுஉடன் இயம்பிய எல்லாம் களவியல்
நின்றுழி அறத்தொடு நிற்றலின் விரியே.

இஃது அறத்தொடுநிற்றலின் விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) கையறுதோழி கண்ணீர் துடைத்துழிக் கலுழ்தல் காரணம் கூறல் முதலாகச் செவிலி கனைஇருள் அவன் வரக் கண்டமை கூறல் ஈறுகக் கிடந்த தலைவி கூற்றுக்கள் ஏழும், செவிலி தலைமகள் வேற்றுமைக்குக் காரணம் கேட்பினும், தான் வெறி விலக்கியவழிக் காரணம் கேட்பினும், பூவும் புனலும் களிறும் ஆகிய இவை காரணமாகப் புணர்ச்சியினை அறிவித்தலாகிய பாங்கி கூற்றுக்கள் மூன்றும், தலைமகள் வேறுபாடுகண்டு நற்றாய் தன்னை வினவியவிடத்து முன்னிலைமொழியானே செவிலி கூறும் கூற்றும் என்று

ஒருங்கு கூறப்பட்ட எல்லாக்கிளவியும் களவொழுக்கம் வெளிப்படாது நின்ற இடத்து அறத்தொடு நிற்றலின் விரியாம் என்றவாறு.

## விளக்கம்

இந்நூற்பாவில் தலைவி அறத்தொடு நிற்குமாறும் தோழி அறத்தொடு நிற்குமாறும் இணைத்துக் கூறப்பட்டுள் ளன.

தோழி அறியாமல் களவுப்புணர்ச்சி நிகழ்த்தித் தலைவி அவளிடம் அறத்தொடு நிற்குமாறு என்னைஎனின்,

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தானும் பாங்கற்கூட்டம் கூடியானும் தெருண்டு வரைதல்உற்ற தலைவன், மகட்பேசத் தமரை விடும்; விட்டவிடத்துத் தலைவிதமர் மகட்கொடைக்கு மறுப்ப, அஃது இலக்கணம் ஆகலான். அங்ஙனம் மறுத்த விடத்துத் தலைமகள் வேறுபடும். 'எம்பெருமான் மறுக்கப் பட்டமையால் மற்றொருவாருங் கொல்லோ' எனக்கலங்கி வேறுபாடு எய்தினபொழுதே தோழிக்குப் புலனும்; புல னுயினவிடத்து, 'எம்பெருமாட்டி! நினக்கு இவ்வேறுபாடு எற்றினுன் ஆயிற்று?' என்னும். என்றவிடத்து, 'இஃது எனக்குப்பட்டது; இன்னவிடத்து ஒருஞான்று நீயும் ஆயங் களும் தழையும் கண்ணியும் கோடற்கு எண்ணிச் சிறிது நீங்க, யான் நின்று ஒருமணிச் சுனை கண்டேன்; கண்ட அம்மணிச்சுனைதான் ஆம்பலே குவளையே நெய்தலே தாம ரையே என்ற இப்பூக்களான் மயங்கி மேதக்கதுகண்டு, வேட்கையான் ஆடுவான் இழிந்தேன்; இழுக்கிக் குட்டம் புக்கேன்; புக்குத் 'தோழியோ' என, நீ அங்ஙனம் கேளாய் ஆயினுயாக, ஒருதோன்றல் தோன்றிவந்து, எனது துயர் நீங்குதற்காகத் தன்கை நீட்டினுன்; நீட்டினவிடத்து மலக் கத்தான் நின்கை எனப் பற்றினேன்; வாங்கக் கரைமேல் நிறீஇ நீங்கினுன்; நீ அன்று கவலுதி எனச்சொல்லேன் ஆயி

னேன்; நீ எவ்வெல்லைக்கண்ணும் கைவிடாதாய், அவ்விடத்துக் கைவிடலின்ன ஆக்கிற்று விதி ஆகாதே! இனிப் பிறிது ஒன்றுங்கொல் என்று கலங்கி வேறுபட்டேன்' என்று தோழிக்குத் தலைமகள் அறத்தொடுநிற்கும்.

அங்ஙனுயின், தோழி காவலொடு மாறுகொள்ளாதோ எனின், கொள்ளாது; தோழிக்கு அறத்தொடு நிற்கும் ஆகலின் என்பது. அஃ காவலொடு மாறுகொள்ளினும் 'காவல் குற்றப் பட்டேன்' என்று தோழி இறந்துபடாமல் காக்கும் விதிஎன்பது. அஃதோனின், நிகழ்ந்த ஒழுக்கம் மறைத்துக் களைந்து படைத்து மொழிந்தமையான் பொய் உரைத்த வாகும் பிறஎனின், பொய் உரைக்கப்பட்டது ஆகாது; என்னை ? பழியும் பாவமும் அதனல் வாராமையின்; என்னை?

> 'பொம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கும் எனின்.' குறள். 292

என்ருர் ஆகலின், குற்றம் இன்று என்பது. இறை. அக. 29

இனி, தோழி அறத்தொடு நிற்குமாறு,

> 'தோழிக்கு உரியவை கோடாய் தேஎத்து
> மாறுகோள் இல்லா மொழியுமார் உளவே.' இறை. அக. 14

என்ற நூற்பாவில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

தோழி சொல்லுதற்கு உரியன செவிலித்தாய்மாட்டு மாறுகொள்ளாமைச்சொல்லும் சொற்களும் உள என்றவாறு.

எவற்றிெெடு மாறுகொள்ளாமையோ ? எனின், தாய் அறிவினெடு மாறுகொள்ளாமையும், தலைமகள் பெருமையொடு மாறுகொள்ளாமையும், தலைமகளது கற்பினெடு

மாறுகொள்ளாமையும், தோழிதனது காவலொடு மாறு கொள்ளாமையும், நாணினொடு மாறுகொள்ளாமையும், உலகினொடு மாறுகொள்ளாமையும் எனக்கொள்க.

'காப்புக் கைமிக்குக் காமம் பெருகுதல்' இறை அக. 29 முதலிய நான்கு இடத்தும் தலைவிக்கு வேறுபாடு உண்டாம். அஃது எப்பொழுது உண்டாயிற்று, அப்பொழுதே தோழிக்குப் புலனாம்; என்னை? தான் அவள் என்னும் வேற்றுமை இவள் ஆதலின். அவ்வாறு ஆயினவிடத்துத் தோழி "எனக்குப் புலனாயினவாறே போல யாய்க்கும் புலனாயினஞான்று வாளா ஒழியாள், அறிவாரை வினவும்; வினவியினஇடத்து வினவப்பட்டார் தெய்வத்தினான் ஆயிற்று என்ப; என்னை? பிறிது ஒன்று சுட்டி உணரும் தன்மைத்து அன்று இக்குலம் ஆகலானும், அதுவே சொல்லுதல்பயத்தது தம் கருமம் ஆகலானும், அறியாரே ஆயினும் சொல்லுப. சொல்ல, தாய் தெய்வத்திற்கு வழிபாடு செய்விக்கும்; செய்விக்க, தலைமகளுக்குக் கற்பு அழியும்; என்னை? தன் தலைமகனையன்றிப் பிறிது ஒரு தெய்வத்தை வணங்காள், பத்தினி ஆகலின்; தெய்வத்தை வணங்கக் கற்பு அழியும் என்று தலைமகள் ஆற்றாளாம்.

அல்லதூஉம், ஒழுக்கக் குறைபாடு நீங்கி வாராநின்ற தொல்குலம் மணிக்கலம் கதுவாய்ப்பட்டது போல யான் தோன்றி, இவ்வகை அணங்காட்டு அறியாது அணங்காட்டு எடுத்துக்கொள்ளப்பட்டது எனவும், யான் உற்றது நிரம்பற்பாட்டினாலும் வேலன் தனது வெறியாட்டுவலத்தினாலும் எம் பெருமானை அவ்வெறிக்களத்துக் கொண்டுவருங்கொல்லோ? என்னும் பேரச்சத்தினாலும், எம்பெருமானை அவ்வெறிக் களத்துக் கொண்டுவருகல்லாது என்கண் நின்ற வேறுபாட்டைப் புறத்தார்க்குப் புலனாகாமை மறைப்பது கொல்லோ எனவும், அங்ஙனம் மறைத்ததனைக் கேட்ட எம்பெருமான் 'என்னினைய

வேறுபாடு பிறிது ஒன்றினானும் நீங்கும்போலும்!' என்று உட்கொள்ளும் எனவும் தலைமகள் ஆற்றாளாம்" என்று தோழி ஆற்றாளாம்.

"ஆற்றாளாயினாளது ஆற்றாமை ஆற்றுவது ஒன்றனைப் பற்றும்; ஆற்றுவது பிறிது இன்மையின் யாய் அறிவாரை வினாவும்இடத்து என்னை வினாவும்; வினாவ, 'யான்அறியேன்' என்றதன் புறத்தாம் பிறரை வினாவுவது; அங்ஙனம் என்னை வினாவினவிடத்து இனி யாது சொல்லுவேன்?" என்று கூட்டம் இல் நாட்டவகையால் சிந்தித்துக் கொண்டிருந்தாள். இருந்த நிலைமைக்கண், தாய் பிற்றைஞான்று சிறுகாலை, படிமக்கலத்தொடும் புக்காள், மகளை அடியிற்கொண்டு முடி-காறும் நோக்கினாள். நோக்கி, 'அன்னாய்! என்மகள் பண்டையள் அல்லளால்; இவ்வேறுபாடு எற்றினான் ஆயிற்று? நின்னால் அறியப்படுவது உண்டோ?' என்னும்; என்றவிடத்து, "இவள், அன்றுகொண்டு என்னாலும் சிறிது உண்டு அறியப்படுவது; யாதோ எனின், எம்மைக் கூழைக் கற்றைக் குழவிப்பிராயத்து மாழை கலந்த ஏழை நீர்மையாரொடு நாள்கோலம் செய்து விளையாடி வம்மின் என்று போக்கினாய்; போக்கினவழி, யாம்போய், ஒரு வெண்மணல் பரந்த தண்மலர்ப் பொழிலிடை விளையாடி நின்றேமாக, ஒரு தோன்றல் இரு சுனைக் குவளைப்பூக்கொண்டு அவ்வழியே போந்தான்; போதா, நின்மகள் அவனை நோக்கி, 'அப்பூவினை எம்பாவைக்கு அணியத்தம்மின்' என்றாள். அவனும் பிறிது சிந்தியாது கொடுத்து நீங்கினான்; இஃது அறிவது அறியாக் காலத்து நிகழ்ந்தது" என்னும்.

இஃது அறிவது அறியாக் காலத்து நிகழ்ந்ததனை அறிவது அறிந்து, 'கொண்டார்க்கு உரியர் கொடுத்தார்' என்பதும் 'உற்றார்க்கு உரியர் பொற்றொடி மகளிர்' என்பதும் நினைத்து, அவனை வழிபடாது பிறிதோர் ஆறு ஆவதாயின் இக்குலத்துக்கு வடுவாம்கொல்லோ? என்று கருதினமை

யான், நின்மகள் வேறுபட்டது " என்னும். எனவே, தாய் அறிவினொடு மாறுகொள்ளாதாயிற்று; என்னை? 'விளையாடி வம்மின்' என்றமையின். இனி, பெருமையொடு மாறு கொள்ளாதாயிற்று, அக்காலத்து நற்செய்கை செய்ததனை இக்காலத்து நினைந்தமையின். இனி, கற்பினொடு மாறு கொள்ளாதாயிற்று, 'இவ்வாறன்றிப் பிறிது ஓராறு ஆயினஇடத்துக் குடிக்கு வடுவாம்' எனக்கருதினமையின். இனி, தன் காவலொடு மாறுகொள்ளாதாயிற்று, இருவரும் இருந்த நிலைமைக்கண் நிகழ்ந்தது என்றமையின். இனி, நாணினொடு மாறுகொள்ளாதாயிற்று, அறிவது அறியாக் காலத்து நிகழ்ந்தமையின். இனி, உலகினொடு மாறுகொள்ளா தாயிற்று, 'உற்றார்க்கு உரியர் பொற்றொடி மகளிர்' என்ற மையின். இது மாறுகோள் இல்லா மொழியாய் நிகழ்ந்த வாறு. இது பூத்தரு புணர்ச்சி. களிறுதரு புணர்ச்சிக்கும், புனல்தரு புணர்ச்சிக்கும் அவ்வாறே உரைத்துக்கொள்க.

துறை விளக்கம் :

1 தலைவியின் செயலற்ற நிலையைக்கண்டு தோழி அவளது கண்ணீரைத் துடைத்து, அவள் மனம் வருந்துதற்கு உரிய காரணத்தை வினவுதல்.

2 தலைவன் 'நின்னின் பிரியேன்; பிரியின் ஆற்றேன்' எனத் தெய்வத்தை முன் நிறுத்தி உறுதி கூறித் தெளி வித்த சொற்களை உண்மை என்று தேறியதால் தனக்கு இந்நிலை உண்டாயினவாற்றைத் தலைவி தோழிக்குக் கூறுதல்.

3 தலைவன் தன்னைப் பிரிந்து சென்றுவிட்ட செய்தியைத் தலைவி தோழியிடம் கூறுதல்.

4 தோழி 'தலைவன் தக்கவன் அல்லன்' என்று அவனைப் பற்றிக் குறை கூறியவிடத்துத் தலைவி அவன் தக்க வனே என்று அவன் பண்பு நலன்களைப் பாராட்டிக் கூறல்.

5 'தலைவன் செய்த தவற்றிற்காக அவனைத் தண்டிக்காதவாறு பொறுத்துக்கொள்ளுமாறு தெய்வத்தை வேண்டுதற்குச் செல்வோம்' என்று தலைவி தோழியிடம் கூறுதல்.

6 தன்னைத் தாய் இற்செறித்த செயலைத் தோழியிடம் தலைவி கூறுதல்.

7 செவிலித்தாய் முதல்நாள் செறிந்த இருளில் தலைவன் இரவுக்குறிக்கு வந்தபோது அவனைக் கண்டுவிட்டாள் என்ற செய்தியைத் தலைவி தோழிக்குக் கூறுதல். இவை தலைவி கூற்று.

8 தலைவியின் உடல் வேற்றுமையின் காரணத்தைத் தாய் வினவியவழித் தோழி விடைஇறுத்தல்.

9 வெறியாட்டைத் தோழி விலக்கியவழி, தாய் அதன் காரணத்தை வினவியவிடத்துத் தோழி கூறுதல்.

10 'தலைவன் தலைவிக்குப் பூத்தந்து அவள்மனத்தில் இடம் பெற்றான்; யானை தாக்காது தலைவியைப் பாதுகாத்தான்; நீரில் மூழ்காது அவளைக் காத்துக் கரை சேர்த்தான்' எனத் தலைவனும் தலைவியும் சந்திப்பதற்குப் பூ, களிறு, புனல் இவை ஏதுவாயினவாற்றைத் தோழி தாயிடம் கூறல் — இவை தோழி கூற்று.

11 தலைவியின் உடல் வேறுபாடுகண்டு அதன் காரணத்தை நற்றாய் வினவியவழி, செவிலி நேரிடையாகத் தான் தோழி வாயிலாக அறிந்தவற்றை நற்றாய்க்குக் கூறுதல்.

இவை தலைவி அறத்தொடு நிற்றல், தோழி அறத்தொடு நிற்றல், செவிலி அறத்தொடு நிற்றல் என்ற முப்பிரிவிற்றாய அறத்தொடு நிற்றலின் விரியாம். நற்றாய் குறிப்

பால்தான் அறத்தொடு நிற்பாளேயன்றி வாயால் ஒன்றும் நிகழ்ந்ததுபற்றிக் கூறுள் ஆதலின், அவள் கூற்றுக்கு வாய்ப்பு இன்று.

ஒத்த நூற்பாக்கள்

'வரைவுஇடை வைத்த காலத்து வருந்தினும்
வரையா நாளிடை வந்தோன் முட்டினும்
உரைஎனத் தோழிக்கு உரைத்தற் கண்ணும்
தானே கூறும் காலமும் உளவே.' தொல். பொ. 112

'முன்னிலை அறன்எனப் படுதல்என்று இருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்' 114

'பன்னூறு வகையினும் தன்வயின் வரூஉம்
நன்னயம் மருங்கின் நாட்டம் வேண்டலின்
துணைச்சுட்டுக் கிளவி கிழவியது ஆகும்
துணையோர் கருமம் ஆக லான.' „ 123

'அறத்தொடு நிற்கும் காலத் தன்றி
அறத்தியல் மரபிலள் தோழி என்ப.' 206

'எளித்தல் ஏத்தல் வேட்கை உரைத்தல்
கூறுதல் உசாதல் ஏதீடு தலைப்பாடு
உண்மை செப்பும் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய என்மனார் புலவர்.' 207

'உறுகண் ஓம்பல் தன்இயல்பு ஆகலின்
உரியது ஆகும் தோழிகண் உரனே.' 239

'மறுதலை இல்லா மாண்புஇயல் கிளவியின்
தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலும்
செவிலி புகழ்தலும் தோழி உணர்த்தலும்
முதுவாய்க் கட்டுவி முருகுஎன மொழிதலும்
அதுகுறித்து இனைதலும் அறனல வினவலும்

பொய்என மொழிதலும் பொன்றத் துணிதலும்
கையன்று என்றலும் காரிகை நேர்தலும்
பாங்கி வெறிக்கண் படர்க்கைமுன்னிலையும்
ஈன்றோள் தன்வயின் கைத்தாய் இயம்பலும்
வரைவுஎதிர் மறுத்தலும் மையலும் தெளித்தலும்
கிளந்த தமர்வயின் நற்றாய் கிளத்தலும்
இளையோர்க்கு எதிர்தலும் வெளிப்படை என்மனார்.'

த.நெ'வி.22

முழுதும் — ந. அ. 176, 177, 178, 179.

தலைவி அறத்தொடுநிற்றல் :

' கலுழ்தலின் பாங்கி கண்ணீர் துடைத்தலும்
கலுழ்தற் காரணம் கூறலும் கடவுளைச்
சூளுற்று உரைத்ததைத் துணிந்தமை சொல்லலும்
இகந்தமை இயம்பலும் இயற்பழித்து உரைத்தலும்
இயற்பட மொழிதலும் இறைவன் பொறைகொளச்
செல்குவம் என்றலும் சிறைபயில் இல்வயின்
செறித்தமை செப்பலும் செவிலி இறைவனைக்
கண்டமை கூறலோடு கருதிய ஒன்பதும்
ஒண்டொடி அறத்தொடு நிலைதனக்கு உரிய.'

மா, அ. 72

பாங்கி அறத்தொடுநிற்றல் :

' காரிகை வேற்றுமைக் காரணம் வினவினும்
வேரிகொள் வெறிவிலக் கியவழி வினவினும்
போதொடு புனல்களிறு என்றுஇவை ஏதுவின்
ஆதரப் பாங்கி அறத்தொடு நிற்கும்.' ,, 73

' அயலார் மணமுரசு ஆயிடை விலக்கலும்
கயல்விழிப் பாங்கி கூடன்என மொழிப.' ,, 74

செவிலி அறத்தொடுநிற்றல் :

‘ மெல்லியல் வேற்றுமை கண்டுதாய் வினவுழித்
தொல்இயல்பு உணர்ந்த தொன்மைசால் செவிலி
முன்னிலை மொழியான் மொழிதற்கும் உரியள்.’ ,, 75

நற்றாய் அறத்தொடுநிற்றல் :

‘ நற்றமர்க்கு அவ்வுழி நற்றாய் அறத்தொடு
நிற்றலும் உளதுஎன நிகழ்த்தினர் புலவர்.’ ,, 76

‘ இன்னணம் இயம்பிய எல்லாம் களவியல்
மன்னி வெளிப்படா அளவைத்து ஆகலின்
அறத்தொடு நிற்றல் அதன்வகை விரியே.’ ,, 77]

அநுவாத முகத்தான் ஐயறுதோழி கண்ணீர் துடைத்தலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள் :

வாரண மாவின் மருப்பும் பொருப்பும் மலைந்தகொங்கை
பூரணம் ஆகும் பொலங்கொடி யேபொற்பு நீஅழியும்
காரண மாஒன்று கண்டில மால்கண் கலுழ்வதுஎன்னோ
தோரண மாமறு கில்பலர் கண்டுஅலர் தூற்றுதற்கே.

அம்பி. 337

எனவும்,

[யானையின் மருப்பையும் மலையையும் வென்ற நகில்கள் வனப்பு நிரம்பப்பெற்ற பூங்கொடியே! உன்வனப்பு அழிதற்கு ஒருகாரணமும் எமக்குப் புலப்பட்டிலது. தோரணம் கட்டப்பட்ட பெரிய தெருக்களில் உள்ளார் பலரும் உன்னைப் பழி தூற்றுமாறு நீ கண்ணீர் உகுப்பதன் காரணம் யாது?]

தலைமகள் கலுழ்தற் காரணம் கூறல் :

பண்டு நமக்குப் பரிந்துமை ஊட்டிய பங்கயக்கை
ஒண்தொடி சோர உயங்குதல் நோக்கித் தயங்குழுது

தண்டலை தன்னில் தலைப்பட் டான்அத் தலைவனை நாம்
கண்டது கொண்டுஅல்ல வோஎன் றுபோலும்கலுழ்கின்றதே.
அம்பி. 338

எனவும்,

[என் கண்களிடம் அன்பு பூண்டு அவற்றிற்குத் தாமரை போன்ற கைகள் மைதீட்டின. பழைய சிறந்த சோலையில் வந்தடைந்த தலைவனைக் கண்கள் தாம்கண்ட காரணத்தினால், அவற்றுக்கு அழகு செய்வித்த கைகள், தொடிசோர வாடும் நிலை ஏற்பட்டுவிட்டது. தம் தவறுநோக்கிக் கண்கள் வருந்துகின்றன ]

தலைமகன் தெய்வம் காட்டித் தெளிப்பத்
தெளிந்தமை எய்தக் கூறல் :

கழியார் கருங்கடல் தெய்வமும் காட்டிக் கலந்தஅன்று
மொழியாதன இல்லைமுன் துறைவாய்முன்மொழிந்தவண்ணம்
ஒழியார் நமைஒரு நாளும்என் றேகொண்டது உள்ளமும்என்
விழியா னதுகலுழ் வான்அறி யேன்இன் று மெல்லியலே.
அம்பி. 339

எனவும்,

[மெல்லியலே! உப்பங்கழிகள் பொருந்திய கரிய கடலிலே தெய்வத்தை முன் நிறுத்தித் தலைவன் என்னைக் கூடின அன்று சொல்லாத சூளுறவு ஒன்றும் இல்லை. அங்கு மொழிந்தபடியே நம்மை ஒருநாளும் தலைவன் பிரியான் என்று என் நெஞ்சமும் உட்கொண்டது. ஆனால் இன்று என் விழிகள் கண்ணீர் உகுக்கும் காரணம் புலப்படவில்லை.]

தலைமகன் இகந்தமை இயம்பல் :

யாரும் இல்லை தானே களவன்
தான்அவன் பொய்ப்பின் யான்எவன் செய்கோ

தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே. குறுந். 25

எனவும் வரும். அநுவாதமுகத்தான் அது கேட்ட தோழி இயற்பழித்து உரைத்தலும் வரப்பெறும்.

[தலைவன் என்னைக் கூடியகாலையில் சாட்சி யாரும் இல்லை; அவனே சாட்சியாவான். அவனே என்திறத்துப் பொய் கூறுவான் ஆயின், என்னால் செய்யத்தக்க செயல் ஒன்றும் இல்லை. தினைக்கதிரின் தண்டு போன்ற சிறிய கால்களை உடையதாய் ஓடும் நீரில் ஆரல் மீனை உணவுக்காகத் தேடிக்கொண்டிருந்த நாரை ஒன்று பக்கலில் இருந்தது; கொலைத் தொழிலில் முனைந்திருந்த அதுவும் நமக்குக் கரி பகராது.

' கள்வன் ' என்ற பாடத்திலும் களவன் என்ற பாடமே சிறத்தல் காண்க.]

தோழி இயற்பழித்தல் :

மழவே துறந்து மறந்தவர் போல்தஞ்சை வாணன்வென்றி
முழவுஎய முந்நீர் முழங்குஇருங் கானல் முழுதுஉலகும்
தொழவே தகும்தெய்வம் நோக்கிச்செல் லேன்என்று சொல்லியும்நீ
அழவே துறந்தன ரே நல்லர் நல்லர்நம் ஆடவரே.

தஞ்சை. 292

எனவும்,

[குழந்தையை விட்டுப் பிரிந்து பின் மறக்கும் கொடியவர் போலத் தஞ்சைவாணன் கடற்கரைச் சோலையிலே உலகம் முழுதும் தொழும் தெய்வத்தை முன்னிட்டு ' நின்னின் பிரியேன் ' என்று சூளுறவு கூறிய பின்னும், நீ அழுமாறு பிரிந்து சென்ற நம் தலைவன் நல்லன் ! நல்லன் !!]

தலைமகள் இயற்பட மொழிதல் :

அடம்புஅமர் நெடுங்கொடி உள்புதைந்து ஒளிப்ப
வெண்மணல் விரிக்கும் தண்ணந் துறைவன்
கொடியன் ஆயினும் ஆக
அவனே தோழிஎன் உயிர்கா வலனே. ஐங். தனி. 6

எனவும்,

[அடப்பங்கொடி தன்னுள் புதைந்து மறையுமாறு வெள்ளிய மணல் குவியலாக விரியும் தலைவன் கொடியன் ஆயினும், அவன் அல்லனோ என் உயிர்த்துணைவன் !]

தெய்வம் பொறைகொளச் செல்குவம் என்றல் :

மாதங்கம்நல்கும்கைவாணன் தென்மாறைவை யைத்துறைவர்
ஏதம் பயந்திலர் எங்கட்கு நீஎம் இகந்ததனால்
கோதம் படாதி கொடுந்தெய்வ மேஎன்று கூர்பலிதூஉய்ப்
பாதம் பரவநல் லாய்இரு வேமும் படர்குவமே.

தஞ்சை 294

எனவும்,

[தோழி ! 'இரப்போருக்கு யானைகளையே கொடுக்கும் கொடைத்தொழிலையுடைய வாணன் தென்மாறை வையைத் தலைவன் எங்கட்குத் தீங்கு தரவில்லை; தெய்வமே ! எம்மைப் பிரிந்தமைக்காகத் தலைவனுக்குத் தீங்கு தாராதே' என்று தெய்வத்திற்குப் பலிதூவி அதன்பாதங்களைப் பரவுதலுக்கு நாம் இருவேமும் செல்வேம்.]

இல்வயின் செறித்தமை சொல்லல் :

கொன்னே வெகுண்டு மானிவண்டல் ஆடக் கொடிமருங்குல்
பொன்னே இனிப்புறம்போகல்என்றாள் அன்னை பூந்தொடிக்கை
மின்னே பசந்தஎன் மேனியும்பார்த்துள்ளம்வெய்துயிர்த்தாள்
என்னே விளைந்ததுஎன் னேஅறியார் அன்பர் ஈங்குஒன்றுமே.

அம்பி. 344

எனவும்,

[தோழி! தாய் என்னைக் 'கொடிபோன்ற இடையை உடைய பொன்னே' என்று அழைத்து, என்னிடம் கோபம் கொண்டு, 'இனி விளையாடுவதற்காக வீட்டிற்கு வெளியே செல்லாதே' என்றாள்; மேலும் பசலைபாய்ந்த என் உடலைப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள்; இங்கு நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றனையும் நம்தலைவன் அறியாது உள்ளானே.]

செவிலி கனைஇருள் அவன் வரக் கண்டமை கூறல் :

யாய்இன்று எனக்கு மணிமுன்றில் வாய்நென்னல்எல்லி அல்லி
வாய்ஒன்று தேன்உமிழ் மாதவிப் பந்தரில் வார்கழற்கால்
சேய்ஒன்றி நின்ற திறம்அறி யாமல் செறிஇருட்கண்
பேய்ஒன்றுகண்டுஅஞ்சினேன்என்றுகூறினள்பெய்வளையே.

அம்பி. 345

எனவும் வரும்.

[தோழி! தாய் நேற்று இரவு தேன் பிலிற்றும் மாதவிப் பாங்கர் தலைவன் இரவுக்குறிக்கு வந்து நின்ற செயலை அறியாமல், செறிந்த இருட்கண் பேய் ஒன்று கண்டு அஞ்சினேன் என்று இன்று வீட்டுவாயிலின் முன்னிடத்தில் என்னிடம் குறிப்பிட்டாள்]

இவற்றுள் அலுழ்தற் காரணம் கூறலாகிய ஒன்றும் ஒழித்து ஏனைய எல்லாம், பாங்கி வினவாது ஒழியவும் தலைமகள் அறத்தொடு நிலைக்கு உரியவாமாறு அறிந்து கொள்க.

அநுவாத முகத்தான், எறிவளை வேற்றுமைக்கு ஏது வினவலும் வெறி விலக்கலும் வெறி விலக்கியவழி வினாதலும் ஈண்டே வரப்பெறும் எனக் கொள்க.

செவிலி தலைமகள் வேற்றுமைகண்டு பாங்கியை வினாதல் :

வேய்இன மென்தோள் மெலிந்துஒளி வாடி விழிபிறிதாய்ப்
பாயின மேகலை பண்டையள் அல்லள் பவளச்செவ்வி

ஆயின ஈசன் அமரர்க்கு அமரன்சிற் றம்பலத்தான்
சேயினது ஆட்சியில் பட்டன ளாம்இத் திருந்திழையே.

திரு 282

எனவும்,

[வேய்போன்ற மென்தோள் மெலிந்து ஒளிகெட்டுக் கண் ஒளிமாறித் தலைவி பழைய வனப்பினை இழந்து விட்டாள்; இதன்காரணம் செம்மேனி அம்மானும் சிற்றம்பலத் தான் மகனாகிய முருகனுடைய ஆளுகையின்கீழ்ச் சூர்க்கோட் பட்டாள்போலும்.]

வெறி விலக்கல் :

கடவுள் கற்சுனை அடைஅவிழ்ந்து அமைந்த
பறியாக் குவளை மலரொடு காந்தள்
குருதி ஒண்பூ உருகெழக் கட்டிப்
பெருவரை அடுக்கம் பொற்பச் சூர்மகள்
அருவி இன்னியத்து ஆடும் நாடன்
மார்புதர வந்த படர்மலி அருநோய்
நின்அணங்கு அன்மை அறிந்தும் மாறாது
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவுள் ஆயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே. நற் 34

எனவும்,

[சுனைப்பூக்களோடு செந்நிறக்காந்தளை வனப்புறக்கட்டிச் சூட்டித் தெய்வம் ஏறின தேவராட்டி மலைப்பகுதி வனப்புறும்படி அருவி ஒலியையே வாத்திய ஒலியாகக் கொண்டு ஆடும் வெற்பனுடைய மார்பு தருதலான் வந்த நினைத்தல் மிக்க வேற்று மருந்துகளால் தீர்த்தற்கு அரிய காமநோய் நின்னால் தரப்பட்டது அன்று என்பதை அறிந்தும், கடம்ப

மாலை சூடி வேலன் வேண்டியதனால் அவன் வெறியாடும் இடத்திற்கு வந்த 'முருகனே! நீ தெய்வம் ஆயினும் இச் செயற்கண் மடமை உடையை ஆயினாய்.]

வெறி விலக்கியவழிச் செவிலி தோழியை வினாதல் :

மண்குன்ற வந்த கலியினை மாற்றிய வாணன் தஞ்சை
ஒண்குன்ற மங்கையர் முன்னர்மின் னேஉமை யாள்மகனைப்
பண்குன்ற வென்றசொல் வள்ளிதன் கோனைப்பைந் தார்அயிலால்
வெண்குன்றம் எறிந்தசெவ் வேளைஇவ் வாறுஎன் விளம்பியதே.

தஞ்சை. 299

எனவும்,

[மின்னே! உலகைக் கெடுக்கவந்த வறுமையை மாற்றிய வாணன் தென்மாறைமலையில் வாழும் மங்கையர்முன்னே, உமையாள் மைந்தனும், பண்ணை வென்ற இன்சொல் வள்ளி மணாளனும், குருகு பெயரிய குன்றத்தை வேலால் பிளந்தவனும் ஆகிய முருகப்பெருமானை நீ இங்ஙனம் 'முருகே! நீ மன்ற மடவை' என்று குறிப்பிட்ட காரணம் யாது?]

தோழி பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல் :

போர்உறை தீக்கணை போலும்நின் கண்கண்டு போதஅஞ்சி
நீர்உறை நீலமும் நீயும்நண் பாகஎன்று நின்மகட்குஓர்
தார்உறை தோளவர் தந்தனர் வாணன் தமிழ்த்தஞ்சைசூழ்
கார்உறை சோலையில் யாம்விளை யாடிய காலையிலே.

தஞ்சை. 300

எனவும்,

[வாணனுடைய தஞ்சையை அடுத்த மேகம் தங்கும் சோலையில் தோழியும் யானும் விளையாடிக் கொண்டிருந்த நேரத்தில், 'கொடிய அம்பு போன்ற உன் கண்களைக் கண்டு மிகவும் அஞ்சித் தண்ணீரிலேயே தங்கிக் கிடக்கும் நீலமலரும் நீயும் நண்பர் ஆகுக என்று உன் மகட்கு, மாலைதங்கும் மார்பினை உடைய தலைவன் ஒரு நீலப்பூவினை வழங்கினான்; பூத்தந்த அவனை மணத்தலை அவள் கருதுகின்றாள்.]

புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடுநிற்றல் :

ஒழிதோற்றியசொல்லிஉன்மகள்ஓதிக்குஉடைந்தகொண்டல்
பொழிதோல் திரள்உந்தி வந்தசெந் நீர்உந்திப் பொற்பினுக்குஓர்
சுழிதோற்றிடும்பகைதீர்க்கின்றபோதுஒருதோன்றலும்அவ்
வழிதோற்றி வந்துஎடுத் தான்தஞ்சை வாணன்தென் வையையிலே.

தஞ்சை. 301

எனவும்,

[தஞ்சைவாணன் தென்வையையிலே மற்றவர் கூற்றினை வெல்லும் இன்சொல்லையுடைய தலைவியின் தலைமயிர் அழகுக்குத் தோற்ற மேகம் பொழிய, யானைகளையும் அடித்துக் கொண்டுவந்த செந்நீர் வெள்ளம், தன் நீர்ச்சுழி தலைவியின் கொப்பூழுக்கு ஒப்பாகாது போயிற்றே என்ற பகைமையால் தலைவியை அடித்துச் சென்று ஒழிக்கக் கருதியபோது, தலைவன் அவ்வழி வந்து தலைவியை வெள்ளத்திலிருந்து மீட்டுக் காத்தான். தலைவி அவன் நினைவாகவே உள்ளாள்.]

களிறுதரு புணர்ச்சியால் அறத்தொடுநிற்றல் :

மண்அலை யாமல் வளர்க்கின்ற வாணன்தென் மாறைவெற்பில்
அண்ணலை ஆயிழைபாகன்என்று அஞ்சினம்அஞ்சனம்தோய்
கண்அலை நீர்இடப் பாகமும் மேல்வந்த கைக்களிற்றின்
புண்அலை நீர்வலப் பாகமும் தோயப் பொருதஅன்றே.

தஞ்சை. 302

எனவும் வரும்.

இம் மூன்றனுள் ஒன்றான் அறத்தொடு நிற்க அமையும் எனக்கொள்க.

[உலகம் வருந்தாதபடிக் காக்கும் வாணனுடைய தென் மாறையிலே, தலைவன், யானையைக் கண்டு அஞ்சி அஞ்சனம் தோய்ந்த கண்கள் நீர் பெருக்கக் கலங்கிய தலைவியை இடக் கையால் அஞ்சாதவாறு அணைத்துக்கொண்டு, வலக்கையால் யானையோடு போரிட்டு அதன் குருதி முழுதும் தன் மேல் படிய நின்றான். அந்நிலையில் வலப்புறமாக இருந்த தன்

உடல் குருதியால் சிவக்கத் தன் இடப்புறமாய் இருந்த தலைவி உடல் மைகரைந்த கண்ணீரால் கரிய இருந்த காட்சி, வலப்பால் செம்மையும் இடப்பால் கருமையுமாய் உள்ள அம்மையப்பனை நினைவுறுத்தியது.]

அநுவாத முகத்தான், தலைமகள் வேற்றுமைகண்டு
நற்றாய் செவிலியை வினாதலும் வரப்பெறும்.
அதற்குச் செய்யுள் :

குணம்குற்றம்என்னும்அக்கூறு அறியாதகுதலைமென்சொல்
அணங்குஉற்ற மையல் அறிந்தனையோ அரும் பாம்முலைகள்
சுணங்குஉற் றனவளைதோள்உற் றனஇல்லை சொல்தளரும்
நிணம்குற்ற வேற்கண் நிறம்பசப்பு ஊர நிரைவளையே.

அம்பி. 358

எனவும்,

[தோழி! குணமும் குற்றமும் பகுத்துஅறியும் அளவுக்கு வயது வரப்பெறாத மழலை பேசும் தலைவிக்கு ஏற்பட்ட மயக்கம் பற்றிய செய்தி உனக்குத் தெரியுமா? அரும்பு போன்ற நகில்களில் தேமல் படரத்தொடங்கி விட்டது. தோள்வளைகள் கழலத் தொடங்கிவிட்டன பேச்சும் தடுமாறுகிறது. வேல்போன்ற கண்கள் பசலை பாய்ந்துவிட்டன. அவளுக்கு இவ்வேறுபாடு ஏற்பட்டதன் காரணம் யாதோ?]

செவிலி நற்றாய்க்கு முன்னிலைப் புறமொழியான்
அறத்தொடு நிற்றல் :

இளையாள் இவளைஎன் சொல்லிப் பரவுதும் ஈர்எயிறு
முளையா அளவில்முதுக்குறைந்தாள்முடிசாய்த்துஇமையோர்
வளையா வழுத்தா வருதிருச் சிற்றம் பலத்துமன்னன்
திளையா வரும்அரு வீக்கயி லைப்பயில் செல்வியையே.

திரு. 294

நற்றாய் குறிப்பின் அன்றி அறத்தொடுநிற்சுப் பெருள் என்றமையால், அதற்கு உதாரணம் இன்று. **161**

[தலை தாழ்த்தித் தேவர்கள் வணங்கித் துதிக்கும் சிற்றம்பலத்தானுடைய அருவிகள் பரவிப் பாயும் கயிலைமலையிலே பயிலுகின்ற செல்வியாகிய நம் தலைவியை, இளைய இவ் வயதில் இவள் செய்துள்ள செயல்நோக்கி எவ்வாறு புகழ்ந்து வாழ்த்துவேன்! இரண்டு பற்கள் புதியனவாக விழுந்து முளைப்பதன் முன்னமேயே பேரறிவு படைத்துவிட்டாளே!]

**161**

## களவு வெளிப்பாட்டின் கிளவித்தொகை

534 போக்கே[1] கற்போடு புணர்ந்த கவ்வை[2]
மீட்சி[3] என்று ஆங்கு விளம்பிய மூன்றும்
வெளிப்படைக் கிளவி வெளிப்படு தொகையே.

இது களவு வெளிப்பாட்டிற்கு உரிய கிளவித்தொகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) போக்கு முதலாக மீட்சி ஈறுகச் சொல்லப்பட்ட மூன்றும் களவு வெளிப்பாட்டிற்கு உரிய கிளவித்தொகை என்றவாறு. **162**

### விளக்கம்

1 தமரைப் பிரிந்து தலைவி தலைவனுடன் செல்லுதல்.

2 தலைவி தலைவனுடன் சென்றதைப் பலரும் அறிதல்.

3 தலைவி தலைவனுடன் மீண்டு வருதல்.

இம் மூன்று கிளவித்தொகைக்கும் வகையும் விரியும் இனி வரும் நூற்பாக்களில் கூறப்பெறும்.

ஒத்த நூற்பாக்கள்

' தன்னும் அவளும் அவனும் சுட்டி
மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சம் சார்தல்என்று
அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய காலம் மூன்றுடன் விளக்கித்
தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பல் தொல். பொ. 36

' போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக்
கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும்
மகள்நெஞ்சு வலிப்பினும் ... .... செவிலி மேன.'
தொல். பொ. 115

' வெளிப்படை தானே கற்பினோடு ஒக்கும்.'
தொல். பொ. 141

' வெளிப்படை தானே விரிக்குங் காலைத்
தந்தை தாயே தன்னையர் என்றுஆங்கு
அன்னவர் அறியப் பண்பா கும்மே ' இறை. அக. 26

' அவருள்,
தாய்அறி வுறுதலின் ஏனோரும் அறிப.' ,, 27

' தந்தை தன்னையர் ஆயிரு வீற்றும்
முன்னம் அல்லது கூற்றுஅவண் இல்லை.' ,, 28

முழுதும் — ந. அ. 180

(பாடம்) ' வெளிப்படைக் கிளவியின் வழிப்படு தொகையே.'

' மிகைபயில் களவு வெளிப்படற்கு உரிய
தொகைபயில் கிளவித் தொகைஒரு நான்குஅவை
விரைந்துஉடன் போகல் வரைந்துஅவண் கோடல்
கற்பொடு புணர்ந்த கவ்வை மீட்சிஎனப்
பொற்புடை நாவலர் புணர்த்துஅமைத் தனரே '
மா. அ. 78

162

## உடன் போக்கு வகை

535 போக்குஅறி வுறுத்தல்[1] போக்குஉடன் படாமை[2]
போக்குஉடன் படுத்தல்[3] போக்குஉடன் படுதல்[4]
போக்கல்[5] விலக்கல்[6] புகழ்தல்[7] தேற்றல்[8] என்று
யாப்புஅமை உடன்போக்கு இருநால் வகைத்தே.

இது நிறுத்த முறையானே களவு வெளிப்படைக்கிளவித் தொகை மூன்றனுள் போக்குவகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) போக்கு அறிவுறுத்தல் முதலாகத் தேற்றல் ஈறுக எட்டுவகையினை உடைத்தாம், அன்பு அமைந்த உடன் போக்கு என்றவாறு. 163

### விளக்கம்

1 தோழி தலைவியை அழைத்துக்கொண்டு தலைவிதமர் அறியாமல் சென்றுவிடுமாறு தலைவனிடம் கூறுதல்.

2 தலைவியின் மென்மையையும் பாலையின் வன்மையையும் உட்கொண்டு தலைவன் தலைவியை அழைத்துச்செல்ல உடன்படாமை.

3 தோழி, தலைவனோடு வரின் தலைவிக்குப் பாலையும் சோலை யாகும் என்பதனை அவனிடம் விளக்கிக் கூறி அவனைத் தலைவியை உடன் அழைத்துச்செல்லுமாறு வற்புறுத்தல்.

4 தலைவன் தலைவியை உடன்கொண்டு போதலுக்கு ஒருப்படுதல்.

5 தோழி தலைவியைத் தலைவனுடன் உடன்போக்கி விடுத்தல்.

6 தலைவியை மீட்கச் செல்லும் செவிலியைத் தோழி விலக்குதல். கண்டோர், தங்கிச் செல்லுமாறு தலைவன்தலைவியரின் செலவைத் தடுத்தல்.

7 தலைவன் தலைவியைப் புகழ்ந்துகொண்டு அழைத்துச் செல்லுதல்.

8 தம் ஊர் அணிமையில் உள்ளது என்று கூறிச் செலவினால் மெலியும் தலைவியை அவன் தேற்றுதல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 181

'உடன்போக்கு உணர்த்தல் உரவோன் மறுத்தல்
பிரிவுஉடன் படுத்தல் பிரிவுஉடன் படுதல்
போக்கல் விலக்கல் புகழ்தல் தேற்றல்என
வாக்குஅமர் போக்கின் வகைநா லிரண்டே'

மா. அ. 79
163

## உடன்போக்கின் விரி

536 பாங்கி தலைவற்கு உடன்போக்கு உணர்த்தலும்[1]
ஆங்குஅவன் மறுத்தலும்[2] அவள்உடன் படுத்தலும்[3]
தலைவன் போக்குஉடன் படுதலும்[4] பாங்கி
தலைவிக்கு உடன்போக்கு உணர்த்தலும்[5] தலைவி
நாண்அழிபு இரங்கலும்[6] கற்புமேம் பாடு
பூண்முலைப்பாங்கி புகறலும்[7] தலைவி
ஒருப்பட்டு எழுதலும்[8] விருப்புடைப் பாங்கி
சுரத்துஇயல் உரைத்துழிச் சொல்லலும்[9] பாங்கி
கையடை கொடுத்தலும்[10] வைகுஇருள் விடுத்தலும்[11]
அவன்சுரத்துஉய்த்தலும்[12] அசைவுஅறிந்துஇருத்தலும்[13]
உவந்துஅலர் சூட்டி உள்மகிழ்ந்து உரைத்தலும்[14]
கண்டோர் அயிர்த்தலும்[15] காதலின் விலக்கலும்[16]
தம்பதி அணுமை சாற்றலும்[17] தலைவன்
தன்பதி அடைந்தமை தலைவிக்கு உணர்த்தலும்[18]
என்றுஇவை ஒன்பதிற்று இருவகைக் கிளவியும்
ஒன்றிய அன்பின் உடன்போக்கு விரியே.

இஃது உடன்போக்கு விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) பாங்கி தலைவற்கு உடன்போக்கு உணர்த்தல் முதலாகத் தலைவன் தன்பதி அடைந்தமை தலைவிக்கு உணர்த்தல் ஈறுகச் சொல்லப்பட்ட கிளவிகள் பதினெட்டும், பொருந்திய அன்பினை உடைய உடன்போக்கு விரியாம் என்றவாறு.

'ஒன்றிய அன்பின்' என்ற இலேசானே, தலைவி ஒருப்பட்டு எழுந்தவழி அங்ஙனம் ஒருப்பட்டு எழுந்தமை பாங்கி தலைவற்கு உணர்த்தலும், கண்டோர் தம் பதி அணுமை சாற்றிய பின்னர்த் தலைவன் தன் பதி அணுமை தலைவிக்குச் சாற்றலும், அவட்குத் தன் நகர் காட்டலும், தலைவன் தன் பதி அடைந்தமை தலைவிக்கு உணர்த்தியபின்னர்த் தலைவியோடு தன்மனை சார்தலும் வரவும்பெறும்.

விளக்கம்

1 'எமர் தலைவியை நீ வரைதற்கு உடன்படார்; ஆதலின், இவளை உடன்கொண்டு செல்க' எனப்பாங்கி தலைவனுக்கு அறிவித்தல்.

2 தலைவியின் மென்மைத்தன்மை கூறி அவளை உடன்கொண்டு செல்லுதலைத் தலைவன் மறுத்துக் கூறுதல்.

3 அங்ஙனம் போதற்குப் பாங்கி தலைவனை உடன்படச் செய்தல்.

4 தலைவன் தலைவியை உடன்கொண்டு போதற்கு உடன்படுதல்.

5 பாங்கி தலைவிக்குத் தலைவன் உடன்கொண்டு செல்லக் கருதுவதைக் கூறல்.

6 தலைவனுடன் தமர் அறியாது தான் சென்றால் தன் நாணம் அழிந்துவிடுமே என்று தலைவி வருந்துதல்.

7 'நாணினும் கற்பே சிறந்தது' என்பதனைப் பாங்கி தலைவிக்கு எடுத்துக் கூறுதல்.

8 தலைவனுடன் செல்லுதற்குத் தலைவி உடன்பட்டு எழுதல்.

9 சுரத்தின் இயல்பைப் பாங்கி உரைத்தவிடத்துத் தான் அதற்கு அஞ்சாமல் சுரம் செல்லத் துணிந்திருத்தலை அவளுக்குத் தலைவி கூறுதல்.

10 தலைமகனிடம் தோழி தலைமகளை அடைக்கலப்படுத்திக் கூறல்.

11 பாங்கி நடுயாமத்தில் தலைவியைத் தலைவனுடன் விடுத்தல்.

12 தலைவன் தலைவியைப் பாலைநிலத்தில் மெல்லக்கொண்டு ஏகுதல்.

13 சுரத்தில் பொழில் காணப்படுதல் அரிது ஆகலின் சோலையைக்கண்டு 'வியந்த தலைவன், தலைவி நடந்து வருதற்கண் இளைத்தலை அறிந்து அவளை அங்குத் தங்கி இளைப்பாறச் செய்தல்.

14 தலைவன் மனமகிழ்வோடு தலைவிக்கு மலர்களைப் பறித்துச் சூட்டி மனம் மகிழ்ந்து இருத்தல்.

15 சுரத்திடை அவ்விருவரையும் கண்டோர் 'இவர் தேவரோ ? மானிடரோ ?' என்று ஐயுறுதல்.

16 'பொழுது போயிற்று; நீங்கள் இனிப்போதற்கு இவ்வழி உரியது அன்று' என்று கண்டோர்கூறி, அவர்களை அன்புடன் விலக்குதல்.

17 'ஊர் அருகில் உள்ளது' என்பதை அவர்களுக்குக் கண்டோர் கூறுதல்.

18 தலைவன் தம் பதி வந்து சேர்ந்துள்ள செய்தியைத் தலைவிக்குச் சொல்லுதல்.

‘ ஒருதலை உரிமை வேண்டியும் மகடூஉப்
பிரிதல் அச்சம் உண்மை யானும்
அம்பலும் அலரும் களவுவெளிப் படுக்குமென்று
அஞ்ச வந்த ஆங்குஇரு வகையினும்
நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்
போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும்.’

தொ. பொ. 225

‘ பருவம் கூறல் படைத்துமொழி தல்லொடு
மருவுஅமர் கோதையை மகட்பேச்சு உரைத்தல்
பொன்அணிவு உரைத்தல் பொருள்விலை கூறல்
அன்னம்மென் நடையாள் அருமைகேட்டு அழிதல்
தளர்வுஅறிந்து உரைத்தல் தாழ்குழல் ஆடல்
உளம்நினைவு உரைத்தல் உடன்கொண்டு சேறற்கு
அருமை உரைத்தல் ஆதரம் கூறல்
மருவிய தடங்கயல் வாழாள் என்றல்
பொருவரு கற்பின் புனைநலன் உரைத்தல்
துணிந்தமை கூறல் துணிவு கேட்டல்
துணிவுஅறி வித்தல் தொல்லை நாண்விடல்
துணிவுஎடுத்துரைத்தல்கொண்டுஅகல்என உரைத்தல்
அடிவழி நினைந்துநின்று அவன்உளம் வாடல்
கொடியிடை யாளைக் கொண்டுசென்று உய்த்தல்
ஓம்படுத்து உரைத்தல் வழிப்படுத்து உரைத்தல்
தேம்படு கோதையைத் திறல்அடு வேலோன்
பையக்கொண்டு ஏகல் பயம்கெட உரைத்தல்
மைஅமர் கண்ணியை வழிஅயர்வு அகற்றல்
நெறிவிலக் கல்லொடு நெறியிடைக் கண்டவர்
செறிவுஎடுத்து உரைத்தல் சேயிழை யாளுடன்
வழிவிளை யாடல்வழிஎதிர் வருவோர்
எழில்நகர் அருமை இதுஎன உரைத்தல்
நகர்காட் டல்லொடு நகர்இடைப் புக்குப்
பதிபரிசு உரைத்தல் பாங்கியைக் கிட்டி

மதிநுத வாளை வளர்த்தவள் கேட்டல்
அறத்தொடு நிற்றல் அதுகேட்டு அழுங்கல்
திறப்பாடு உன்னிச் செவிலிகவன்று உரைத்தல்
அடிநினைந்து இரங்கல் அதுதாய்க்கு உரைத்தல்
மடவரல் போக வாடி உரைத்தல்
கிளிமொழிக்கு இரங்கல் கிளர்சுடர்ப் பராய்தல்
அளிபெறு பருவத்திற்கு அவள்கவன்று உரைத்தல்
நாடத் துணிதல் நற்றாய் நயந்தவர்
கூடக் கரைஎனக் கொடிக்குறி பார்த்தல்
சோதிடம் கூறல் சுவடுகண்டு அறிதல்
ஏகமுற் றவைகண்டு இரங்கி உரைத்தல்
வேட்ட மாதரைக் கண்டு வினவல்
புறவொடு புலத்தல் குரவொடு வருந்தல்
திறல்அருந் தவத்தொடு செல்லா நின்ற
மாவீர தியரை வழியிடை வினவல்
வேதியர் தம்மை விரும்பி வினவல்
புணர்ந்துஉடன் வருவோரைப் பொருந்தி வினவல்
மணம்தரு குழலாள் மன்னிய நிலையொடு
வேங்கை பட்டது கண்டு வியத்தல்
ஆங்குஅவர் இயைபு அணிஅவட்குஎடுத்துஉரைத்தல்
மீள உரைத்தல் மீளாது அவளுக்கு
ஊழ்முறை இதுஎன உலகுஇயல்பு உரைத்தல்
அழுங்குதாய்க்கு உரைத்தல் ஐம்பதோடு ஆறும்
உழுங்கொலை வேலோன் உடன்போக்கு ஆகும்.'

திருக்கோவை. மு. வீ. கள. 22

'அலர்பெரிது என்றலும் அயல்வரைவு உரைத்தலும்
உலகியல் கூறி நீஉரை என்றலும்
சுரம்செல ஆற்றும் நிலனெடு என்றலும்
வருந்திறம் உரைத்தலும் வழிநயப் பித்தலும்
விரும்பினன் நேர்ந்த பாவக் கிளவியும்
பொருந்தும் என்மனார் போக்குஉடன் வலித்தல்'

த. நெ. வி. 20

'கையடை மகிழ்ச்சி கண்டோர் கூற்றே
நைவுடைச் செவிலி நற்றாய் மொழியே
செல்சுரத்து இரங்கல் கண்டோர் தெளித்தல்
இல்வயின் பெயர்தல் இளையோர் செலவே
அறிந்தனன் மறைதல் அயலோர் மொழிதல்
பெயர்ந்தனர் வருதல் பெருங்கிளை மகிழ்வே
தாயர் கூற்றே தலைமகன் மொழியோடு
ஆயின பிறவும் உடன்செலவு ஆகும்.' த.நெ.வி. 23

முழுதும் — ந. அ. 182

'உரவோற்கு இகுளை உடன்போக்கு உணர்த்தல்
உரவோன் மறுத்தல் அவள்உடன் படுத்தல்
உரவோன் உடன்படல் ஒண்ணுதல் பாங்கி
வாள்நுதற்கு உடன்போக்கு உணர்த்தல் வாள்நுதல்
நாண்அழிபு இரங்கல் நவைதீர் பாங்கி
பொற்புஅமர் கற்பின் மேம்பாடு புகழ்தல்
இல்பயில் இறைவி ஒருப்பட்டு எழுதல்
வெய்ய சுரத்துஇயல் வீழுமிதின் கூறல்
கையடை கொடுத்தல் மைஇருள் விடுத்தல்
அருஞ்சுரத்து உய்த்தல் அயர்வுஅறிந்து இருத்தல்
மகிழ்ந்துஅலர் சூட்டி மனம்உவந்து உரைத்தல்
கண்டோர் அயிர்த்தல் கடத்திடை விலக்கல்
தண்டலை மன்பதி அணிந்தமை சாற்றல்
வண்டுஇமிர் தாரோன் தன்பதி அடைந்தமை
உணர்ந்திட உரைத்தல் ஒன்பதிற்று இரட்டியும்
புணர்ந்துஉடன் போகற்குப் பொருந்தியவிரியே.'
மா. அ. 80

பாங்கி தலைவற்கு உடன்போக்கு உணர்த்தல் :

மைநீர்நெடுங்கண்மடந்தையுடன் தஞ்சைவாணன்வெற்பா
செந்நீர் விழவுஅணி நின்நகர்க்கேசென்று சேர்ந்தருள்மற்று

இந்நீர்மை யன்றிஒர் ஆறும்இன் றால்இங்குஎம் ஐயர்என்றால்
முந்நீர் உலகும்கொள் ளார்விலை யாக முலையினுக்கே.

தஞ்சை. 305

எனவும்,

[வெற்பா! எம் ஐயர் தலைவியை மணந்துகோடற்குப் பரிசப்பொருளாக இவ்வுலகத்தையே கொடுப்பதானாலும் கொள்ளுபவராகத் தோன்றவில்லை. மையின் கருமைகொண்ட நெடுங்கண்ணள் ஆகிய தலைவியுடன் சிறந்த நீர்விழா நடக்கும் உன் ஊருக்குப் புறப்பட்டுச் சென்றுவிடு. இதனைத் தவிர இவளை அடைவதற்கு வேறு வழி எதுவும் இல்லை.]

தலைவன் உடன்போக்கு மறுத்தல் :

மெல்லியல் கொங்கை பெரியமின் நேர்இடை மெல்லடிபூக்
கல்இயல் வெம்மைக் கடம்கடுந் தீக்கற்று வானம்எல்லாம்
சொல்லிய சீர்ச்சுடர்த் திங்கள்அம் கண்ணித்தொல் லோன்புலியூர்
அல்லிஅங் கோதைநல் லாய்எல்லை சேய்த்துஎம் அகல்நகரே.

திரு 201

எனவும்,

[தேவர் புகழும் சிறப்புடைய சந்திரனைச் சூடிய சிவபெருமான் புலியூரில் உள்ள தோழியே! எம் பேரூர் சேய்மையில் உள்ளது. தலைவியின் கொங்கைகள் பெரிய. மின்னலைப் போன்ற இடை சிறிது. இவள் மெல்லிய பூப்போன்ற அடிகள் கல் பரவிய கொடிய பாலையாகிய கடுந்தீயில் யாங்கனம் செல்லவல்லன?]

பாங்கி தலைவனை உடன்படுத்தல் :

பிணையும் கலையும்வன் பேய்த்தே ரினைப்பெரு நீர்நசையால்
அணையும் முரம்பு நிரம்பிய அத்தமும் ஐய மெய்யே
இணையும்அளவும்இல்லா இறையோன்உறைதில்லைத்தண்பூம்
பணையும்தடமும்அன்றேநின்னொடுஏகின்எம்பைந்தொடிக்கே.

திரு. 202

எனவும்,

[ஐய! உன்னோடு செல்லும்போது, தலைவிக்கு மான்கள் நீர் வேட்கையுற்றுக் கானல்நீரைக் குடிக்கும்தண்ணீர் என்று கருதிச் செல்லும் காடுகள் நிறைந்த வழியும், தனக்கு ஒப்பும் எல்லையும் இல்லாத சிவபெருமான் தங்கும் தில்லையிலுள்ள பூக்கள் நிறைந்த குளமும் வயலும்போலும்!]

தலைவன் போக்கு உடன்படுதல் :

இன்னாத கானும் இனிதுஎன்று நீர்இங்கு இயைந்தஅன்பும்
அந்நாள் அளித்த அணங்கும்உண் டேஎனது ஆவிஅன்னார்
மின்னார் திருந்துஇழை மெய்வருந் தாவகை மெல்லமெல்லப்
பன்னாள் படவும் உடன்கொண்டு சேறும் பணிமொழியே.

அம்பி. 365

எனவும்,

[பணிமொழித் தோழியே! இன்னாதபாலையும் என்னுடன் வரின் தலைவிக்கு இனிதாக இருக்கும் என்று நீ கூறிய அன்பு மொழிகளும், பண்டு தலைவியை எனக்குத் தந்ததெய்வத்தின் திருவருளும் தவறாது உண்டு ஆதலின், என்உயிர்போன்ற தலைவியின் உடல் வருந்தாதவகையில் மெல்லப் பலநாள்கள் நடத்தியாவது உடன்கொண்டு சென்றுவிடுகிறேன்.]

பாங்கி தலைவிக்கு உடன்போக்கு உணர்த்தல் :

குறப்பாவை நின்குழல்வேங்கைஅம் போதொடு கோங்கம்விராய்
நறப்பா டலம்புனை வார்நினை வார்தம் பிரான்புலியூர்
மறப்பான் அடுப்பதுஓர் தீவினை வந்துஉறில் சென்றுசென்று
பிறப்பான் அடுப்பினும் பின்னும்துன் னத்தகும் பெற்றியரே.

திரு. 205

எனவும்,

[குறவர் குலப்பாவையே! சிவபெருமானுடைய புலியூரை மறக்கும் படியானது ஒரு தீவினை ஏற்படுமாயின் பல பிறப்புக்கள் எடுக்க நேரிடினும், மீண்டும் நினக்கே கணவ

ஞக வந்து உன்னேடு கூடுதற்கு உரிய தலைவன் உன் கூந்தலில் கோங்கம் பூவினை வேங்கைப் பூவுடன் கலந்து பாதிரிப் பூவையும் இணைத்துச் சூட்டுதலை விரும்புகிறான்.

பாலைநிலத்துக் கோங்கம் பூவைக் கூறி உடன் போக்கினைக் குறிப்பால் உணர்த்தியவாறு.]

தலைவி நாண் அழிபு இரங்கல் :

மறவாகை வேல்அங்கை வாணனை மாறையர் மன்னனைத்தம்
உறவாக எண்ணி உருதவர் போல்உயிர் ஓம்பிஎன்றும்
துறவாத நாணம் துறப்பது வேண்டலின் தொல்உலகில்
பிறவாது ஒழிகைநன் றேஒரு காலமும் பெண்பிறப்பே.

தஞ்சை. 310

எனவும்,

[வேல் ஏந்திய வாணனாகிய மாறையர்மன்னனை உறவாகக் கருதி நட்புக் கொள்ளாத பகைவர் போல, பாதுகாத்து இன்றுவரை யான் துறவாத நாணத்தைத் துறக்கும் நிலை இன்று எனக்கு ஏற்பட்டதனை நோக்கின், இவ்வுலகில் பெண்ணாகப் பிறவாதிருத்தலே சிறந்தது என்று தோன்றுகிறது.]

கற்பு மேம்பாடு பூண்முலைப்பாங்கி புகறல் :

தாயில்சிறந்தன்று நாண்தையலாருக்குஅந்நாண் தகைசால்
வேயில் சிறந்தமென் தோளிதிண் கற்பின் விழுமிதன்றுஈங்
கோயில் சிறந்துசிற் றம்பலத்து ஆடும்எம் கூத்தப்பிரான்
வாயில் சிறந்த மதியில் சிறந்த மதிநுதலே.

திரு. 204

எனவும்,

[மதிநுதலே ! ஈங்கோய்மலையில் சிறந்து காட்சி வழங்கிச் சிற்றம்பலத்தில் கூத்தாடும் சிவபெருமானுடைய வாயில் சிறந்த நூல்களிடத்துச் சிறப்புடைய பொருளாகச் சொல்லப் படுவனவற்றுள், நாணம் மகளிருக்குத் தாயினும் சிறந்தது; அந்நாணம்தானும் கற்பினும் மேம்பட்டது அன்று.]

தலைவி ஒருப்பட்டு எழுதல் :

மல்பாய் விடையோன் மகிழ்புலி யூர்என் னொடும்வளர்ந்த
பொற்பு ஆர் திருநாண் பொருப்பர் விருப்புப் புகுந்துநுந்தக்
கற்பு ஆர் கடுங்கால் கலக்கிப் பறித்துஎறி யக்கழிக
இற்பால் பிறவற்க ஏழையர் வாழி எழுமையுமே. திரு. 208

எனவும்.

[பாயும் விடை அரன் புலியூரிலே என்னோடு இதுகாறும் வளர்ந்த அழகுதரும் நாணம் தலைவனிடத்து யான்கொண்ட காமம் இடையே புகுந்து தள்ளக் கற்பாகிய கடுங்காற்று கலக்கி வேரோடும் பறித்து அப்புறப்படுத்துகையினாலே என்னைவிட்டு நீங்குவதாகுக. இந்நிலை ஏற்படுவதற்குக் காரணமான நற்குடியில் மகளிர் எழுமையும் பிறவாராக.]

அங்ஙனம் ஒருப்பட்டெழுந்தமை பாங்கி
தலைவற்கு உணர்த்தல் :

மின்ஏய்மருங்குல்நெருங் குழைபைங்கோதைவிளங்குஇழைநின்
பின்னே வருதல் கருதிய போதும்என் பிள்ளைக்கிள்ளை
அன்னே மகஅன்பும் அத்தனை யோஎன்றது அத்தனையின்
கொன்னே அருமந்த கொங்கைகண் ணீரில் குளித்தனவே.
அம்பி. 369

எனவும்,

[மின்னலை ஒத்த இடையையும், கோதையையும் பல அணிகளையும் உடைய தலைவி உன் பின்னே வரக் கருதிய-போதும் என் கிளிப்பிள்ளை 'அன்னையே! பிள்ளையிடத்துக் காட்டும் அன்பும் அவ்வளவுதானா? என்று கேட்டது. அதனைக் கேட்ட அளவில் வீணாகத் தலைவியின் நகில்கள் அவள் கண்ணீரால் நீராட்டப்பட்டன.]

பாங்கி சுரத்துஇயல்பு உரைத்துழித் தலைமகள் சொல்லல் :

செல்லின்கொடியகளிற்றண்ணல்வாணன்தென்மாறைஅன்ன
வில்லின் கொடிய புருவமின் னேஎன் விளம்புதிநீ

சொல்லின் கொடிய நம் அன்னையைப்போல்பவர் சூழ்ந்திருக்கும்
இல்லின் கொடியகொல்லோ செல்லும் நாட்டு அவ்விருஞ்சுரமே.

தஞ்சை. 313

எனவும்,

[இடியினும் கொடிய யானைப்படையை உடைய அண்ணலாகிய வாணனுடைய தென்மாறையில் இருக்கும், வில்லினும் வளைந்த புருவத்தை உடைய மின்னல் போன்று ஒளி வீசும் தோழியே! நீ என்ன கூறுகிறாய்? கொடுஞ்சொல் பேசும் நம் அன்னையைப் போன்றவர் சூழ்ந்து இருக்கும் நம் வீட்டைவிட உடன்போக்குப் போகும் நாட்டிற்கு இடைவழியில் உள்ள பாலைநிலங்கள் கொடியனவா?]

பாங்கி தலைமகளைத் தலைமகற்குக் கையடை கொடுத்தல் ;

பறந்திருந்து உம்பர் பதைப்பப் படரும் புரம்கரப்பச்
சிறந்துஎரி யாடிதென் தில்லை அன் னாள்திறத் துச்சிலம்பா
அறம்திருந்து உன் அரு ளும்பிறிது ஆயின் அருமறையின்
திறம்திரிந்து ஆர்கலியும்முற்றும்வற்றும்இச்சேண் நிலத்தே.

திரு. 213

எனவும்,

[வெற்ப! தேவருக்குத் தீங்கு தந்த முப்புரங்களையும் அழித்துச் சிறந்து எரியில் ஆடும் சிவபெருமானுடைய தில்லையை ஒப்பவளாகிய தலைவி திறத்தில் அறவழியிலேயே செல்லும் உன் அருள் வேறுபடுமாயின், இவ்வுலகில் வேத வழக்கு மாறுபடுதலோடு கடலும் முழுதும் வற்றிவிடும். உன் போன்றார் சிலராதல் அறவழி திறம்பாது வாழ்வதனால் தான், மறைவழியும் உலகநலனும் சிறந்துள்ளன.

பாங்கி வைகுஇருள் விடுத்தல் :

ஊரும் கலிகெழு சேரியும் தாயரும் உள்புலம்பித்
தேரும் பழிபுகழ் ஆக்கிவந்து எய்துவை சேய் அனையாய்

வாரும் பருமணி வம்பும் பொருமுலை வல்லியுடன்
யாரும் துயில்கொள்ளும் நள்இருள் யாமத்து எழுந்தருளே.
அம்பி. 371

எனவும்,

[முருகனை ஒப்பாய்! கச்சினைப் பொரும் தனபாரத்தை உடைய தலைவியுடன் எல்லாரும் உறங்கும் இந்நடுஇரவில் புறப்பட்டுச் சென்று, ஊரவரும் சேரியிலுள்ளாரும் தாயரும் மனம் பிரிவால் வாடிப் பேசும் பழிச்சொற்களைப் புகழ்ச்சொல்லாக மாற்றி விரைவில் தலைவியுடன் மீண்டு வந்துசேருவாயாக ]

தலைவியைத் தலைவன் சுரத்து உய்த்தல் :

பேணத் திருத்திய சீறடி மெல்லச்செல் பேண்அரவம்
பூணத் திருத்திய பொங்குஒளி யோன்புலி யூர்புரையும்
மாணத் திருத்திய வான்பதி சேரும் இருமருங்கும்
காணத் திருத்திய போலும்முன் நாம்மன்னும் கானங்களே.
திரு. 215

எனவும்,

[பாம்புகளை விரும்பி அணிகளாக அணியும் ஒளியோனுடைய புலியூரை ஒத்த அழகிய நம் ஊர் சேரும் இருபக்கமும் நன்கு படைத்து அமைக்கப்பட்டாற்போலும் காடுகள் வழி நெடுக உள்ளன. யான் விரும்பும் வண்ணம், கைபுனையப்பட்ட சிறிய அடிகளை உடையாய் ! மெல்லச் செல்வாயாக.]

தலைமகன் தலைமகள் அசைவு அறிந்து இருத்தல் :

வரமாவை வேல்படை வாணன்தென் மாறை வணங்கலர்கள்
புரமான வல்அழல் பொங்குவெங் கானில் பொருந்தியகூர்
அரமாய கல்உன் அடிமலர் ஆற்றல ஆதலினால்
சுரம்ஆறும் எல்லை,நல் லாய்இருப் பாய்இந்தச் சோலையிலே
தஞ்சை. 317

எனவும்,

[நல்லாய்! வேற்படைவாணனை வணங்காத பகைவர் சென்று சேரும் இடமான அழல்பொங்கும் கொடிய பாலையில் அரம் போன்ற கூரிய கற்களை உன் அடிகளாகிய மலர்கள் தாங்கும் ஆற்றல் உடைய அல்ல ஆதலின், பாலையின் வெப்பம் நீங்குங்காறும் இச்சோலையில் தங்கி இளைப்பாறுவாயாக.]

தலைமகன் தலைமகளை உவந்து அலர்சூட்டி
உள்மகிழ்ந்து உரைத்தல் :

அடிமலர்போற்றவும்போற்றிசெய்யா இவள் ஆய்முடிக்குயான்
கடிமலர் சூட்டவும் காட்டிய தால்கள்வர் காய்ந்துஎறியும்
துடிமலர் சீர்க்கு எதிர் கூகை இரட்டும் சுரத்திடைஓர்
வடிமலர் வேல்படை யான்வாணன் மாறைஎன் மாதவமே.

தஞ்சை. 318

எனவும்,

[வேற்படை வாணன் மாறையில் யான்செய்த தவம், ஆறலைகள்வர்கள் செருக்கோடு ஒலிக்கும் துடிப்பறையின் ஒலிக்கு எதிராகக் கோட்டான் குழறும் பாலை நிலத்தில், தலைவியின் அடிகளாகிய மலர்களை யான் போற்றுமாறும், அவளைப் புணர்ந்துகூறி அவள் கூந்தலுக்கு நறுமணமலர்களைச் சூட்டுமாறும் வாய்ப்பு அளித்தது.]

கண்டோர் அயிர்த்தல் :

கருஆர் புயல்என்றும் கண்டுஅறி யாதஇக் கான்அகத்தே
வருவார் சிலர்அவர் மற்றுஇவர் யாவர்கொல் வாரிதந்த
திருவாம் எனில்இவள் செங்கையில் பங்கயம் இல்லைசெல்வன்
மருஆர் துளவுஅணி மால்எனின் மார்பின் மறுஇல்லையே.

அம்பி. 377

எனவும்,

[கார்மேகத்தைக் கண்டறியாத இப்பாலையிலே பொதுவாக நன்மக்கள் வாரார்; இவர் யாரோ? தெற்றென உணர்தல் இயலவில்லை. இவளைத் திருமகள் என்று கொள்வோ

மாயின், இவள் செங்கையில் தாமரை இல்லை. இவனைத் திருமால் என்று கொள்வோமாயின், இவன் மார்பில் மச்சம் இல்லையே !]

ஒன்றென முடித்தலால், கண்டோர் மகிழ்தலும் இரங்கலும் வரப்பெறுதல் கொள்க.

கண்டோர் மகிழ்தல் :

முன்செல்ல நாணும் முகிழ்நகை வல்லி முருகன்இவன்
பின்செல்ல எண்ணும் பிடிநடை காணஇப் பேருலகில்
புன்செல்வர் தேடும் பொருள்போல்இறுகப் பொதிந்தஅன்பை
என்சொல்லல்இங்ஙன் தொலைந்ததிவ்வாறுஇவ் விருவர்க்குமே.
அம்பி. 378

எனவும்,

[தலைவனுக்கு முன்னே நடந்து செல்வதற்கு இப்புன்னகைப் பூங்கொடியாள் வெட்கப்படுகிறாள். இவள் பெண்யானை போன்ற நடையழகைக் காண இச்செல்வன் இவள்பின்னே செல்ல நினைக்கிறான். அற்பர் தாம் தேடும் பொருளை இறுகப் பொதிந்து வைப்பதுபோல, இவர் தம் அன்பும் இறுகப் பொதிந்த அன்பு. இவ்வாறு மகிழ்வோடு இவர்கள் பாலைநில நெடுந்தொலைவினைக் கடந்து வந்துள்ளனர்.]

கண்டோர் இரங்கல் :

பேதைப் பருவம் கழிந்திலள் இன்னமும் பேணியதன்
காதல் கொழுநன் விழுமிய கேண்மையைக் காதலித்துப்
போதற்கு அரிய புகைஅழல் கானகம் போந்தஇந்த
மாதைப் பயந்த மடந்தைஎவ் வாறுஉயிர் வாழ்ந்தனளே.
அம்பி. 380

எனவும் வரும்.

[இன்னும் இப்பெண் பேதைப் பருவத்தைக்கூடக் கடந் தவள் அல்லளாகத் தோன்றுகிருள். தன்னை விரும்பிய தன் காதற் கணவனுடைய நட்பைக் காதலித்து, நடத்தற்கு அரிய இக்கொடிய வெய்ய பாலையிலே நடந்து வந்த இப் பெண்ணைப் பெற்ற தாய் எவ்வாறு இவளைப் பிரிந்து இன்னும் உயிர் வாழ்கின்ருளோ ?]

கண்டோர் காதலின் விலக்கல் :

எம்ஊர் அல்லது ஊர்நணி இல்லை
வெம்முரண் செல்வன் கதிரும் ஊழ்த்தனன்
சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப
இளையள் மெல்லியள் மடந்தை
அரிய சேய பெருங்கல் ஆறே. சிற்றெட்டகம்

எனவும்,

[பூக்கள் தொடுத்த மாலையை அணிந்த மார்பனே! இப்பெண்ணே இளையள்; மெல்லியள்; நீ செல்லக் கருதியுள்ள வழி கடத்தற்கு அரிய நெடியதான பெரிய கற்கள் மிடைந்த வழியாகும். சூரியனும் மறையத் தொடங்கிவிட்டான். எம் ஊரைத் தவிரப் பக்கலில் வேற்றூர் எதுவும்இன்று. ஆதலின் இன்று இங்குத் தங்கி நாளை நின் செலவைத் தொடர்வா-யாக.]

கண்டோர் தம்பதி அணுமை சாற்றல் :

மின்தங்கு இடையொடு நீவியன் தில்லைச்சிற் றம்பலவர்
குன்றம் கடந்துசென் ருல்இன்று தோன்றும் குழஉக்காலம்
துன்றுஅம் கிடங்கும் துறைதுறை வள்ளைவெள் ளைநகையார்
சென்றுஅங்கு அடைகட ம்புடை சூழ்தரு சேண்நகரே.
திரு. 221

எனவும்,

[இத்தலைவியோடு நீ தில்லைச்சிற்றம்பலவனுடைய இக் குன்றினைக் கடந்து சென்ருல், தாமரைகள் பூத்த கிடங்கு

களும் துறைகள்தோறும் முத்தநகை மகளிர் சென்று நீராடும் குளங்களும் புடை சூழ்ந்த நெடுந்தொலைவு புகழ் பரவியுள்ள அப்பேரூர் காட்சியளிக்கும்.]

தலைவிக்குத் தலைவன் தன் பதி அணுமை சாற்றல் :

முன்னோன் அருள்முன்னும் முன்னா வினையின்முனகர்துன்னும்
இன்னாக்கடறிதுஇப்போழ்தேகடந்துஇன்றுகாண்டும்சென்று
பொன்ஆர் அணிமணி மாளிகைத் தென்புலி யூர்ப்புகழ்வார்
தென்னா எனஉடை யான்நட மாடுசிற் றம்பலமே. திரு. 217

எனவும்,

[இறைவன் அருளை முற்பிறப்பும் வேண்டிப் பெறாத தீவினையோர் தங்கும் கொடிய இப்பாலையை இப்பொழுது கடந்து சென்றால், இன்றே அழகிய மாளிகைகளை உடைய தென்புலியூரில் தென்னா என்று அடியவர் புகழும் சிவபெருமான் நடமாடும் சிற்றம்பலத்தைக் காணலாம்.]

தலைவிக்குத் தன் நகர் காட்டல்:

மின்போல் கொடிநெடு வானக் கடலுள் திரைவிரிப்பப்
பொன்போல் புரிசை வடவரை காட்டப் பொலிபுலியூர்
மன்போல் பிறைஅணி மாளிகை சூலத்த வாய்மடவாய்
நின்போல்நடைஅன்னம்துன்னிமுன்தோன்றும்நன் நீள்நகரே
திரு. 222

எனவும்,

[மின்னல் போல ஒளி வீசும் கொடிகள் வான் அளாவி வானம் ஆகிய கடலின் திரைகளைப் போலக் காட்சி வழங்கவும், பொன் நிறமான மதில்கள் மேருமலை போலத் தோற்றம் அளிக்கவும், பொலியும் புலியூரில் உள்ள சிவபெருமானைப் போலச் சந்திரமண்டலம்வரை அளாவி உச்சியில் சந்திரனைச் சூடும் மாளிகைகள் உன் நடைபோன்ற நடையை உடைய அன்னங்கள் விளையாடும் சூழலை உடையனவாக, நம் நகர் காட்சி வழங்கும்.]

தலைவன் தன்பதி அடைந்தமை தலைவிக்கு உணர்த்தல் :

செய்குன்று உவைஇவை சீர்மலர் வாவி விசும்புஇயங்கி
நைகின்றதிங்கள்எய்ப்புஆறும்பொழில்அவைஞாங்கர்எங்கும்
பொய்குன்ற வேதியர் ஓதுஇடம் உந்திடம் இந்திடமும்
எய்குன்ற வார்சிலை அப்பல வற்குஇடம் ஏந்திழையே,

திரு. 223

எனவும்,

[ஏந்திழை! உங்கே செய்குன்றுகள் உள்ளன. இவை அழகிய மலர்களை உடைய ஓடைகள்; வானத்தில் திரிதலால் வந்த இளைப்பைச் சந்திரன் போக்கிக்கொள்ளும் சோலைகள் அவை; பக்கம் எல்லாம் பொய் நீங்க வேதியர் வேதம் ஓதும் இடங்கள் அங்குள்ளன; இவ்விடம் மேருவாகிய வில்லை ஏந்திய அம்பலவன் நடமாடும் இடமாகும்,]

தலைவன் தலைவியொடு தன் நகர் சார்தல் :

சங்கம் முழங்க மணிமுரசு ஆர்ப்பத் தமர்எதிர்கொள்
அங்கண் நலம்திகழ் ஆவணம் போல்அகன் மாளிகையில்
பொங்குஇலை வேலனும் பூவையும் மேயினர் புண்டரிகச்
செங்கை வலந்திகிரித்திரு மாலும் திருவும்ஒத்தே.

அம்பி. 384

எனவும் வரும்.

[சங்குகள் முழங்கவும், முரசங்கள் ஆர்ப்பவும், தலைவன் உறவினர் எதிர்கொள்ளவும், கடைத்தெருவைப் போலப் பொலிவு பெறும் அகன்ற மாளிகையில் தலைவனும் தலைவியும் செந்தாமரைக்கையில் சக்கரம் ஏந்திய திருமாலும் திருமகளும் போல வந்து சேர்ந்தனர் ]

இவற்றுள் பாங்கி தலைமகற்கு உடன்போக்கு உணர்த்தலும் தலைவிக்கு உடன்போக்கு உணர்த்தலும் ஆகிய இரண்டும் போக்கு அறிவுறுத்தற்கும்,

தலைமகன் மறுத்தலும் தலைவி நாண் அழிபு இரங்கலும் ஆகிய இரண்டும் போக்கு உடன்படாமைக்கும்,

பாங்கி தலைவனை உடன்படுத்தலும் தலைவிக்குக் கற்பு மேம்பாடு கூறலும் ஆகிய இரண்டும் போக்கு உடன்படுத் தற்கும்,

தலைவன் போக்கு உடன்படுதலும் தலைவி ஒருப்பட்டு எழுதலும் பாங்கி சுரத்து இயல் உரைத்துழிச் சொல்லலும் ஆகிய மூன்றும் போக்கு உடன்படுதற்கும்,

பாங்கி கையடை கொடுத்தலும் வைகு இருள் விடுத்த லும் தலைமகன் தலைமகளைச் சுரத்து உய்த்தலும் ஆகிய மூன்றும் போக்கற்கும்,

தலைவன் தலைவியை அசைவு அறிந்து இருத்தலும் கண் டோர் காதலின் விலக்கலும் ஆகிய இரண்டும் விலக்கற்கும்,

தலைவன் தலைவியை உவந்து அலர்சூட்டி உள்மகிழ்ந்து உரைத்தலும் கண்டோர் அயிர்த்தலும் ஆகிய இரண்டும் புகழ்தற்கும்,

கண்டோர் தம் பதி அணுமை சாற்றலும் தலைவன் தன் பதி அடைந்தமை தலைவிக்கு உணர்த்தலும் ஆகிய இரண் டும் தேற்றற்கும் உரியவாம்.

164

## கற்பொடு புணர்ந்த கவ்வையின் வகை

537 செவிலி புலம்பல்[1] நற்றாய் புலம்பல்[2]
கவர்மனை மருட்சி[3] கண்டோர் இரக்கம்[4]
செவிலிபின் தேடிச் சேறல்[5] என்றாங்குக்
கற்பொடு புணர்ந்த கவ்வைஐ வகைத்தே.

கற்பொடு புணர்ந்த கவ்வை கூறுவனவற்றுள், இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) செவிலி புலம்பல் முதலாகச் செவிலிபின்தேடிச் சேறல் ஈறாக ஐந்து வகையினை உடைத்தாம், கற்பொடு புணர்ந்த கவ்வை என்றவாறு.

மனை எனினும் நற்றாய் எனினும் ஒக்கும். 165

### விளக்கம்

கற்பொடு புணர்ந்த கவ்வை — தலைவி தலைவனுடன் சென்ற செயலைப் பலரும் அறிந்து கூறும் சொற்கள்.

1 செவிலி தனிப்படர் உழத்தல்.

2 நற்றாய் தனிப்படர் உழத்தல்.

3 நற்றாய் மனம் மயங்குதல்.

4 கண்டவர் மனம் இரங்குதல்,

5 செவிலி உடன்போனவர்பின் தலைவியைத் தேடிச்சேறல்.

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 183

'கற்பொடு புணர்ந்த கவ்வையின் வகைதாம்
பொற்புறு செவிலி புலம்புதல் உடனே
நற்றாய் புலம்பல் நன்மனை மருட்சி
கண்டோர் இரக்கம் சுடத்திடைச் செவிலியின்
தேடிச் சேறலொடு தெரிந்ததுஓர் ஐந்தே.' மா. அ. 83

முத்துவீரியமும், திருக்கோவையார் உரையும் உடன் போக்கின்கண் இதனையும் அடக்கிக்கூறும். 165

### கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரி

538 வினவிய பாங்கியின் உணர்ந்த காலை
இனையல் என்போர்க்கு எதிர்அழிந்து மொழிதலும்[1]
தன்அறி வின்மை தன்னைநொந்து உரைத்தலும்[2]

தெய்வம் வாழ்த்தலும்[3] இவ்வொரு மூன்றும்
செவிலி அறத்தொடு நிற்றலின் கவலையில்
பாங்கி தன்னொடும்[4] பாங்கியர் தம்மொடும்[5]
அயலார் தம்மொடும்[6] பயில்இடம் தன்னொடும்[7]
தாங்கலள் ஆகிச் சாற்றிய நான்கும்
நிமித்தம் போற்றலும்[8] சுரம்தணி வித்தலும்[9]
தன்மகள் மென்மைத் தன்மைக்கு இரங்கலும்[10]
இளமைத் தன்மைக்கு உளம்மெலிந்து இரங்கலும்[11]
அச்சத் தன்மைக்கு அச்சமுற்று இரங்கலும்[12]
ஆகிய ஐந்தும் போகிய இறைமகள்
ஆயமும் தாயும் அழுங்கக் கண்டு
காதலின் இரங்கும் கண்டோர் இரக்கமும்[13]
ஆற்றாத் தாயைத் தேற்றலும்[14] ஆற்றிடை
முக்கோல் பகவரை வினாதலும்[15] மிக்கோர்
ஏதுக் காட்டலும்[16] எயிற்றியொடு புலம்பலும்[17]
குரவொடு புலம்பலும்[18] சுவடுகண்டு இரங்கலும்[19]
கலந்துஉடன் வருவோர்க் கண்டுகேட் டலும்[20] அவர்
புலம்பல் தேற்றலும்[21] புதல்வியைக் காணாது
கவலைகூர் தலும்[22] எனும் இவைஒன் பானும்என்று
இத்திறம் இயம்பிய எழுமூன்றும் ஒன்றும்
கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரியே.

இது கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரி இத்-துணைத்து என்கின்றது

(இ-ள்) வினவிய பாங்கியின் உணர்ந்த காலை இனையல் என்போர்க்கு எதிர் அழிந்து மொழிதல் முதலாகத் தெய்வம் வாழ்த்தல் ஈறாகச் சொல்லப்பட்ட இவ்வொருமூன்றும்.

செவிலி அறத்தொடு நிற்றலின் கவலையில் பாங்கிதன்னொடு புலம்பல் முதலாகப் பயில் இடம்தன்னொடு புலம்பல் ஈறாகச் சொல்லப்பட்ட நான்கும்,

நிமித்தம் போற்றல் முதலாக அச்சத்தன்மைக்கு அச்சம் உற்று இரங்கல் ஈறுகச் சொல்லப்பட்ட ஐந்தும்,

போகிய தலைமகள் ஆயத்தாரும் நற்றாயும் இரங்குமாறு கண்டு அன்பினன் இரங்கும் கண்டோர்க்கு இரக்கம் ஆகிய ஒன்றும்,

ஆற்றுத்தாயைத் தேற்றல் முதலாகப் புதல்வியைக் காணாது கவலை கூர்தல் ஈறுகச் சொல்லப்பட்ட ஒன்பதும்,

என்று இவ்வாறு கூறிய இருபத்திரண்டு கிளவியும் கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரியாம் என்றவாறு

அநுவாத முகத்தான், செவிலி பாங்கியை வினவலும், பாங்கி செவிலிக்கு உணர்த்தலும், செவிலி நற்றாய்க்கு அறத்-தொடு நிற்றலும் வரப்பெறும்.

ஒன்றென முடித்தலான், செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றலின் பின்னர் நற்றாய் தன்னுள்ளே இரங்கலும்,

நற்றாய் பாங்கிதன்னொடு புலம்பலின் பின்னர்த் தோழி அழுங்க நற்றாய் புலம்பலும்,

அயலார்தம்மொடு புலம்பலின் பின்னர்த் தத்தையொடு புலம்பலும்,

நிமித்தம் போற்றலின் பின்னர்த் 'தலைவன் மிக அன்பு செய்க' என்று தெய்வத்திற்குப் பராய தூஉம்,

முக்கோற்பகவரை வினாதலின் பின்னர் மாவிரதியரை வினாதலும், அதன் பின்னர் உய்த்துணர்வோரை உரைமின் என்றலும்,

குரவொடு புலம்பின பின்னர்ப் புறவொடு புலம்பலும் வரவும பெறும்.

## விளக்கம்

1 'என்மகள் எங்கே போயினள்?' என்று செவிலி பாங்கியை வினவியகாலை, பாங்கி 'நம்மவர் மணத்திற்கு உடன்படாமையால் நின்மகள் தன்னுடைய விருப்பத்தின்படியே தலைவனுடன் போயினள்' என்று செவிலித்தாய்க்குக் கூற, செவிலித்தாய் தன்னைத் தேற்றுவோரை நோக்கி மனம் நொந்து வருந்திக்கூறல்.

2 'தலைவனுடன் போதலைத் தலைவி எனக்குக் குறிப்பால் அறிவித்தும், அதனை நான் அறிந்து கொள்ளவில்லையே' என்று செவிலி தன் அறியாமை காரணமாக நொந்து உரைத்தல்.

3 'தலைவியை விரைவில் மீண்டு வரச் செய்தல் வேண்டும்' என்று செவிலி முருகக்கடவுளைத் துதித்தல்.

4 தன் கற்பின் மிகுதி தோன்றத் தலைவி தலைவன் ஒருவனுடன் சென்றனள் என்பதை நற்றாய்க்குச் செவிலி அறிவுறுத்தவே, நற்றாய் தலைவியின் உயிர்த்தோழியோடு தலைவியின் பிரிவை நினைத்து வருந்தி உரையாடுதல்.

5 நற்றாய் தலைவியின் பிரிவு குறித்துத் தோழியர் ஏனையாரோடு வருந்திப் பேசுதல்.

6 தலைவியின் உடன்போக்குக் குறித்து நற்றாய் அயலாரோடு நொந்து கூறுதல்.

7 தலைவி விளையாடும் இடங்களை நோக்கி நற்றாய் புலம்புதல்.

8 'என்மகள் மீண்டு வரும்படி நீ கரைவாயாயின் உனக்குச் சிறந்த உணவை அளிப்பேன்' என்று கூறி, நற்றாய் காக்கைக்குறி பார்த்தல்,

9 'என்மகள் சென்ற பாலைநிலத்தை மருதநிலமாகச் செய்யவேண்டும்' என்று நற்றாய் சூரியனை வேண்டுதல்.

10 'மலரை மிதிப்பினும் தளரும் என் மகளுடைய மெல்லிய அடிகள், பாலைநிலத்தின் வெம்மையை எவ்வாறு பொறுக்கும்?' என்று நற்றாய் இரங்குதல்.

11 'என்மகள் உலகியலில் சிறிதும் பழக்கப்படாத இளமைத் தன்மை உடையவள்; இவள் தலைவனோடு அமைதியாக யாங்கனம் 'உடன்போய்ச் சேர்வாள்?' என்று நற்றாய் வருந்துதல்.

12 தலைவியின் இயல்பாக உள்ள அச்சத்தன்மையையும் உடன்போக்கு நிகழ்த்தும் சுரத்தின் இயல்பையும் நினைத்து, நற்றாய் 'இவள் அஞ்சாது தலைவனைத் தொடர்ந்து சென்றனளோ?' என்று மனம் வருந்தி உரைத்தல்.

13 தலைவியைப்பற்றி நற்றாயும் ஆயத்தாரும் கூறிய சொற்களைக்கேட்ட அயலார் வருந்திப் பேசுதல்.

14 தலைமகளுடைய பிரிவினை ஆற்றாத நற்றாயைச் செவிலி தேற்றுதல்.

15 தலைவியைத் தேடி அவள் சென்ற திசையை நோக்கிச் சென்ற செவிலித்தாய் வழியிலே மூன்று கோல்களை உடைய துறவிகளைக் கண்டு அவர்களிடம் தலைவி நிலை பற்றி வினவுதல்.

16 செவிலி சொற்களைக் கேட்ட அந்தணர் தலைவி தலைவனுக்கு உரியவள் ஆதல் உலக இயல்பு என்று காரணம் காட்டிக் கூறுதல்.

17 செவிலி பாலைநிலப்பெண் ஒருத்தியிடம் தலைவியைப் பற்றிக் கூறி வருந்துதல்.

18 குராமரத்தொடு செவிலி புலம்புதல்.

19 தலைவன் தலைவி என்ற இருவரின் கால் சுவடு நிலத்தில் படிந்துஇருத்தலைக் கண்டு செவிலி வருந்துதல்.

20 காதலன்காதலியராக வருபவரைக் கண்டு, 'உங்களைப் போலவே இந்த வழியில் சென்ற என் மகளையும் அவள் காதலனையும் கண்டீரோ ? என்று செவிலி வினவுதல்.

21 செவிலியின் தனிமைத்துன்பத்தை அவர்கள் நீக்குதல்.

22 செவிலி தலைவியைத் தேடியும் காணாமையான் கவலை மிகுதல்.

ஒத்த நூற்பாக்கள்

'ஏமப் பேரூர்ச் சேரியும் சுரத்தும்
தாமே செல்லும் தாயரும் உளரே.' தொல். பொ. 37

'அயலோர் ஆயினும் அகற்சி மேற்றே.' ,, 38

'தலைவரும் விழும நிலைஎடுத்து உரைப்பினும்
போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்
நீக்கலின் வந்த தம்உறு விழுமமும்
வாய்மையும் பொய்மையும் கண்டோர்ச் சுட்டித்
தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும்
நோய்மிகப் பெருகித்தன் நெஞ்சுகலுழ்ந் தோளை
அழிந்தது களைஇய ஒழிந்தது கூறி
வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தோடு
என்றுஇவை எல்லாம் இயல்புஉற நாடின்
ஒன்றித் தோன்றும் தோழி மேன.' ,, 39

'தன்னும் அவனும் அவளும் சுட்டி
மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்

நன்மை தீமை அச்சம் சார்தல்என்று
முன்னிய காலம் மூன்றுஉடன் விளக்கித்
தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய.' தொல். பொ. 36
முழுதும் — ந.அ. 184, 185, 186, 187, 188, 189

'உரன்பயில் பாங்கியொடு உசாய்உணர் பின்னர்
இரங்கல் என்போர்க்கு எதிர்அழிந்து மொழிதலும்
தனுஅது அறிவின்மை தனைநொந்து உரைத்தலும்
பொலந்தொடிச் செவிலி புலம்பற்கு உரிய.' மா.அ. 84

'அறன்அறி செவிலி அறத்தோடு நின்றபின்
சேடி தன்னொடும் சேடியர் தம்மொடும்
அயலார் தம்மொடும் பயில்இடம் தன்னொடும்
புரிகுழல் நற்றாய் புலம்பற்கு உரியள்.' ,, 85

'புரந்த நிமித்தம் போற்றலும் சுடரொடு
இரந்துகொண்டு ஏத்தலும் இரும்பரல் பரந்த
சுரந்தணி வித்தலும் துடியிடை மென்மைத்
தன்மையும் இளமையும் தணத்தல்இல் அச்சமும்
முன்னி இரங்கலொடு ஒருவகை ஆறும்
மன்னிய நற்றாய் மருட்சிக்கு உரிய.' ,, 86

'ஒண்தொடி தாயுடன் உழையர் இரங்கக்
கண்டோர் இரங்குதல் கண்டோர் இரக்கம்.' ,, 87

'நற்றாய் தன்னைத் தேற்றலும் கற்றுஅறி
முக்கோல் பகவரை முன்னி வினுதலும்
தக்கோர் ஏதுச் சால்புறச் சாற்றலும்
எயிற்றியைக் கடத்திடை எதிர்ந்து புலம்பலும்
ஒள்ளிய குரவினை எள்ளுபு புலம்பலும்
கள்ளியம் புறவுடன் உள்ளி உசாவலும்
சுவடுகண்டு இரங்கலும் தோய்ந்துஉடன் வருவோர்க்

கண்டுகேட் டலும்அவர் கருத்துஉறத் தெளித்தலும்
காண்தகு புதல்வியைக் காணாது இடைதலும்
மீண்டவள் செல்வனும் செல்வியும் வியன்நகர்
ஆண்டுஅமைந் தனர்என ஆராய்ந்து உரைத்தலும்
கவின்உற இருவரும் கடவுள் பராவலொடு
புவிபுகழ் புலவர் புணர்த்தமுந் நான்கும்
செவிலிபின் தேடிச் சென்றுமீள் விரியே.' மா. அ. 88

'பொற்புடைத் தாகப் புகன்றமு வொன்பதும்
கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரியே.' ,, 89]

செவிலி பாங்கியை வினாதல் :

மயில்எனப்பேர்ந்துஇளவல்லியின்ஒல்கிமென்மான்விழித்துக்
குயில்எனப் பேசும்எம் குட்டன்எங்கு உற்றதுஎன் நெஞ்சகத்தே
பயில்எனப் பேர்ந்துஅறி யாதவன் தில்லைப்பல் பூங்குழலாய்
அயில்எனப் பேரும்கண் ணாய்என் கொலாம்இன்று அயர்கின்றதே.
திரு. 224

எனவும்,

[என் உள்ளத்தில் வந்து தங்கிப் பின் நீங்கி அறியாத சிவபெருமானுடைய தில்லையை ஒத்த பூங்குழலாய்! அயில் விழியாய்! மயில்போல மென்மையோடு ஒதுங்கிப் பூங்கொடி போலத் தளர்ந்து மான்போல விழித்துக் குயில்போலப் பேசும் என் மகள் எங்கு இருக்கின்றாள் ? இன்று நீ மனம் மயங்கி இருப்பதன் காரணம் என்ன ?]

பாங்கி செவிலிக்கு உணர்த்தல் :

ஆள்அரிக் கும்அரி தாய்த்தில்லை யாவருக் கும்எளிதாம்
தாளர்இக் குன்றில்தன் பாவைக்கு மேவித் தழல்திகழ்வேல்
கோள்அரிக் கும்நிகர் அன்னார் ஒருவர் குருஉமலர்த்தார்
வாள்அரிக் கண்ணிகொண் டாள்வண்டல் ஆயத்துஎம் வாள்நுதலே.
திரு. 225

எனவும்,

[உலகை ஆளுகின்ற திருமால் காண்பதற்கு அரிய வாய்த் தில்லையிலே யாவரும் தரிசிக்கத் தக்கவாறு எளியவாக உள்ள திருவடிகளை உடைய சிவபெருமானுடைய இம்மலை யிலே, ஒளிபொருந்திய கண்களையும் நெற்றியையும் உடைய தலைவி, நெருப்பைக் கக்கும் வேலை ஏந்திச் சிங்கம்போல வந்த தலைவன் வைத்திருந்த நிறமுடைய மலர் மாலையைத் தன் பாவைக்கு அணிவதற்காக விரும்பிக் கேட்டு அவன் கொடுப் பக் கொண்டாள்.]

பாங்கியின் உணர்ந்த செவிலி தேற்றுவார்க்கு
எதிர்அழிந்து மொழிதல் :

*வடுத்தான் வகிர்மலர் கண்ணிக்குத் தக்கின்று தக்கன்முத்தீங்*
*கெடுத்தான் கெடல் இல்தொல் லோன்தில்லைப் பன்மலர் கேழ்கிளர*
*மடுத்தான் குடைந்தன்று அழுங்க அழுங்கித் தழீஇமகிழ்வுற்று*
எடுத்தாற்கு இனியன வேஇனி ஆவன எம்அனைக்கே.

திரு. 226

எனவும்,

[மாவடுவின் வகிர்போன்று அமைந்த கண்களை உடைய தலைவிக்கு இப்பருவத்தில் இத்தகைய முதுக்குறைவு வியக்கத் தக்கது. தக்கனது வேள்வியைக் கெடுத்த அழிவில்லாத தொல்லோனுடைய தில்லையில் பலமலர்களும் நிறம்விடும் மடுவிலே தலைவி குளித்தஅன்று மூழ்கிப்போம் நிலையளாக, அதுகண்டு வருந்தி அவளைத் தூக்கிக் கரைசேர்த்த தலைவ னுக்கு இனியன செய்தலே இனி அவளுக்கு ஏற்ற செய லாகும்.]

செவிலி தன் அறிவின்மைதன்னை நொந்து உரைத்தல் :

முறுவல்அக் கால்தந்து வந்துஎன் முலைமுழு வித்தழுவிச்
சிறுவலக் காரங்கள் செய்தஎல் லாம்முழு துஞ்சிதையத்

தெறுவலக் காலனைச் செற்றவன் சிற்றம் பலஞ்சிந்தியார்
உறுவலக் கானகம் தான்படர் வான்ஆம் ஒளியிழையே.

திரு. 227

எனவும் வரும்.

முழுவி—முத்தங்கொண்டு; வலக்காரம் — விரகு.

[காலன் ஆற்றல் ஓய அழித்தவன் சிற்றம்பலத்தை நினையாதவர் சென்று சேரத்தக்க கானகத்திற்கு உடன்போக்குப் போதற்கு நினைத்துப்போலும், ஒளி பொருந்திய அணிகலன்களை உடைய தலைவி அப்பொழுது சிரித்துக்கொண்டு எனக்கு முத்தம்கொடுத்து என்னைத் தழுவி இத்தகைய சிறிய விரகுகளை எல்லாம் செய்தாள்போலும்! என் அறியாமையால் அவளது உள்ளக்குறிப்பை அறியாது போயினேனே!]

செவிலி தெய்வம் வாழ்த்தல் :

வேமாறு செய்யஎன் மெல்லிய லாளை விதித்தனை நீ
ஆமாறு செய்தனை ஆரணங் கேநின் அருள்ஒழிந்தால்
யாம்ஆறும்வண் ணம்இதற்குஒன் றும்இல்லைஓர் ஏதிலன்பின்
போமாறு செய்வித்த நீவரு மாறும் புரிந்துஅருளே.

அம்பி. 389

எனவும்,

[வெப்பத்தால் வேகச் செய்யும் வழியிலே என் பெண் செல்லுமாறு விதித்த தெய்வமே! நீ நல்ல காரியம் செய்தாய்! நீ எங்கட்கு அருள்செய்தலை நீக்கினால் நாங்கள் வருத்தம் தீர்த்துக் கொள்ளுதற்குரிய வாய்ப்பு வேறு ஒன்றும் இல்லை. அயலான்பின் போமாறு என்மகளை விதித்த நீ அவள் மீண்டு வருமாறும் செய்து எங்களைக் காப்பாயாக.]

செவிலி நற்றாய்க்கு அறத்தொடு நிற்றல் :

தொடுப்பார்தொடுத்துஅலர் தூற்றும்பழிவந்துசூழ்விதியைத்
தடுப்பார் எவர்இனிச் சாற்றுவது என்கொல் தடத்தின்முன்வீழ்ந்து

எடுத்தான் ஒருவன் இருப்பநின் றூர்தம் இருநிதிக்குக்
கொடுப்பான் இசைந்தனம் என்றுசென் றாள்நம் குலக்கொடியே.

அம்பி. 390

எனவும்,

[ஊரில் அலர் தூற்றுவார் தூற்றும் பழிச்சொல் நம் குடும்பத்துக்கு வருதல் வேண்டும் என்று விதித்த விதியை மாற்றுவார் ஒருவரும் உலகில் இல்லை. இனிமேல் பேசுவதற்கு யாது உள்ளது? குளத்தில் நம் பெண் விழுந்த அன்று அவளை எடுத்துக் காத்தவன் இருப்ப, அவனை விடுத்து மகட்பேச வந்தார்தம் பரிசப் பொருளைப் பெற்று, மகளை ஏதிலனுக்குக் கொடுக்க நாம் இசைந்தது கண்டு, நம் குலக்கொடியாகிய தலைவி, தன் தலைவனுடன் உடன்போக்குச் சென்றுவிட்டாள்.]

நற்றாய் தன்னுள்ளே இரங்கல் :

பூவைஉண் டோபுனக் கிள்ளைஉண் டோவெண் புதியமணல்
பாவைஉண் டோபெற்ற பாவிஉண் டோகுன்று பார்த்துஅழைக்கும்
தேவைஉண் டோகற்ற சிற்றில்உண் டோமற்றுஎன் சுற்றம்உண்டோ
பாவைஉண் டோமக ளேசெல்ல நீஇவ் வருஞ்சுரமே.

அம்பி. 391

எனவும்,

[மகளே! நீ இக்கொடிய பாலைவழியே துணிந்து சென்று விட்டாயே! இங்கு உனக்கு எத்தனையோ வசதிகள் இருந்தன. நீ போகும் இடத்தில் நானும் உன் தோழியர் குழாமும் இல்லை. சிலம்பு எதிர் கூவி விளையாட வாய்ப்பு இல்லை. விளையாடுதற்குப் பூவை, கிளி, வெள்ளிய மணல், பாவை முதலிய இல்லை. சிற்றில் இழைத்து விளையாடவும் வகை இல்லை. அங்ஙனம் ஆகவும் துணிந்து பாலைவழியே சென்று விட்டாயே.]

நற்றாய் பாங்கிதன்னொடு புலம்பல் :

முன்னே இதனை மொழிந்தனை யேல்நுந்தை முந்தைமணம்
பின்னே குழலி பெறுள்அல்ல ளேபிற ழாதுஎவர்க்கும்

தன்நேயம் வைத்துஅரு ளும்தஞ்சை வாணன் தமிழ்ச்சிலம்பில்
பொன்னே அனையநல் லாய்அவ மேசுரம் போக்கினையே.

தஞ்சை. 329

எனவும்,

[எல்லோரிடமும் தவறாது அன்புசெலுத்தும் வாணன் மலையில் உள்ள திருமகள்போன்ற பெண்ணே! தலைவி தலைவன் இவர்களது தொடர்பை முன்னமேயே தந்தை முன்னர் நீ கூறியிருப்பின் தலைவி தலைவனைத் திருமணம் செய்து கொள்ளும் வாய்ப்பைப் பெற்றிருக்கமாட்டாளா? அதனைச் செய்யாது அவளை வீணாகப் பாலைநிலவழியில் செல்லுமாறு விட்டுவிட்டாயே.]

தோழி அழுங்க நற்றாய் புலம்பல்:

தாய்என்செய் தாள்என்று தள்ளிஎன் பாவைதன் பால்மயங்க
மாயம்செய் தான்ஒரு வள்ளல்பின் னேஅழல் வெஞ்சுரத்துப்
போய்என்செய் தாள்என்று அறிகிலேன் ஒன்றும் பொறியிலியேன்
நீஎன்செய் வாய்மக ளேகண்கள் நீர்மல்க நின்றுநின்றே.

அம்பி. 392

எனவும்,

['மகளே! ' தாய் உனக்கு என்ன உதவி செய்து விட்டாள்?'' என்று கூறி என்னைப் புறக்கணிக்கச் செய்து தன்னிடமே தலைவி மயக்கம் கொள்ளுமாறு வஞ்சனை செய்த தலைவன்பின்னே, கொடிய பாலைவழியிலே என்மகள் அவனோடு உடன்போக்குச் சென்று எத்தகைய துணிச்சலான செயல் செய்துவிட்டாள் !'' என்று நல்வினை இல்லாத நான் அறியாது மயங்குகிறேன். நீ கண்ணீர் விடுத்துக்கொண்டிருக்கிறாயே? அவள் செய்த செயலுக்கு நீ யாது செய்தல் இயலும்?]

நற்றாய் பாங்கியர் தம்மொடு புலம்பல் :

புறம்தாழ் புரிகுழல் பூவைதன் பாவை புனைஅலங்கல்
சிறந்தான் ஒருவள்ளல் செய்யைய தாம்எனத் தெய்வம்தொழாள்
அறம்தான் நிலைபெற்று அரும்பழி காக்கும் அறிவுநெஞ்சில்
பிறந்தால் அருஞ்சுரம் பின்செல்ல வேண்டுங்கொல் பேதையரே.

அம்பி. 393

எனவும்,

[தலைவி, தன்பாவைக்கு அணிவிப்பதற்குத் தலைவன் ஒருவன் மாலை ஒன்று தந்தானாக, அதனை ஏற்று அவனைத் தவிர வேறு தெய்வத்தைத் தொழமாட்டாள். அறத்தில் நிலைபெற்றுப் பெரும்பழி தம்கண் வாராமல் பாதுகாக்கும் அறிவு தம்மனத்தில் ஏற்பட்டால், அதற்காகப் பெண்கள் தம் தலைவர்பின்னே பாலைநிலத்தில் போதல்வேண்டுவதோ?]

அயலார் தம்மொடு புலம்பல் :

யாழ்இயல் மென்மொழி வன்மனப் பேதைஓர் ஏதிலன்பின்
தோழியைநீத்துஎன்னைமுன்னேதுறந்துதுன்னார்கள்முன்னே
வாழிஇம் மூதூர் மறுகச்சென் றாள்அன்று மால்வணங்க
ஆழிதந் தான்அம் பலம்பணி யாரின் அருஞ்சுரமே. திரு 230

எனவும்,

[யாழ்போன்ற மென்மொழியையும் வன்மனத்தையும் உடைய சிறுமி ஓர் அயலான்பின், தோழியை நீத்து, என்னை அதற்கு முன்னே துறந்து, பகைவர்முன்னே ஊரவர் அலர் தூற்ற, திருமாலுக்குச் சக்கராயுதம் வழங்கிய சிவபெருமானுடைய சிற்றம்பலம் 'பணியாத தீவினையாளர் செல்லக் கூடிய கொடிய பாலைவனத்தை அடைந்தாள்.]

தத்தையொடு புலம்பல் :

கொன்நுனைவேல்அம்பலவன்தொழாரின்குன்றம்கொடியோள்
என்னணம் சென்றனள் என்னணம் சேரும் எனஅயரா

என்அனை போயினள்யாண் டையள் என்னைப் பருந்தடும்என்று
என் அனை போக்கன் றிக்கிள் ளை என் உள்ளத்தை ஈர்க்கின் றதே.

திரு. 231

எனவும்,

['அஞ்சத்தக்க கூர்மையை உடைய சூலம் ஏந்திய சிவ பெருமானைத் தொழாதவர் சேரும் மலைப்பகுதியைக் கொடி போன்ற என்மகள் எவ்வாறு கடந்தாளோ? எவ்வாறு கடப் பாளோ?' என்று வருந்துதலுக்கு மேலே, 'என் தாய் என்னை விடுத்துப் போய்விட்டாள்; என்னைப் பருந்து கொன்றுவிடும்' என்று கூவும் கிளியின் சொற்கள் என்னை மிகவும் வருத்து கின்றன.]

நற்றாய் தலைமகள் பயிலிடம்தன்னொடு புலம்பல் :

நன்றே உமக்குஅவர் நல்லதுஎல் லாம்சொல்லி நவ்விஇளங்
கன்றே அருமணிக் கந்துக மேகண் கலந்துஅழைக்கும்
குன்றே குவளை அங் கொய்தட மேஎதிர் கூஉம்குயிலே
என்றேகொல் உம்மையும்என் னையும்காண வந்துஎய்துவதே.

அம்பி. 365

எனவும்,

[இளமான்கன்றே! மணிப்பந்தலே! அழைக்கும் குன்றே! குவளை பூத்துள்ள குளமே! கூவும் குயிலே! உமக்கு நல்ல செய்திகள் பலவும் சொல்லி உம்மையும் என்னையும் அவர்கள் காண்பதற்கு மீண்டுவரும்நாள் எந்நாளோ?.]

நிமித்தம் போற்றல் :

பணங்கள்அஞ்சு ஆலும் பருஅரவு ஆர்த்தவன் தில்லை அன்ன
மணம்கொள்அம் சாயலும்மன்ன னும்இன்னே வரக்கரைந்தால்
உணங்கலஞ்சா துஉண் ணலாம்ஒள் நிணப்பலிஓக்குவன்மாக்
குணங்கள் அஞ் சால்பொலியும்நல சேட்டைக்குலக்கொடியே.

திரு. 235

எனவும்,

[சிறந்த ஐங்குணங்களால் மேம்பட்ட, சேஷ்டையின் வாகனமாகிய காக்கையே! ஐந்து படங்களையும் எடுத்து ஆடும் பெரிய பாம்பினைக் கச்சாகக் கட்டிய சிவபெருமான் தில்லையைப்போன்ற, தலைவன் தொடர்புகொண்ட, என் மகளும் அவள் கணவனும் இப்பொழுதே வருமாறு நீ ஒலிப்பாயானால், உணவைக் கவலையின்றி உண்ணலாம். உனக்கு நிறைய உணவு இடுகிறேன்.

குணங்கள் ஐந்து—மறைந்த புணர்ச்சித்தாதல், கலங்காமை, பொழுது இறவாது இடம்புகுதல், நெடுகக்காண்டல், மடியின்மை என்பன ]

**தலைவன் மிகஅன்பு செய்க என்று தெய்வத்திற்குப் பராவுதல்:**

'ஈன்றுபுறந் தந்த எம்மும்உள்ளாள்
வான்தோய் இஞ்சி நன்னகர் புலம்பத்
தனிமணி இரட்டும் தாள்உடைக் கடிகை
நுழைநுதி நெடுவேல் குறும்படை மழவர்
முனைஆத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்ஏர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுள் பேண்மார்
நடுகல் பீலி சூட்டித் துடிபடத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
போக்குஅருங் கவலைய புலவுநாறு அருஞ்சுரம்
துணிந்துபிறள் ஆயினள் ஆயினும்அணிந்து அணிந்து
ஆர்வ நெஞ்சமொடு ஆய்நலன் அளைஇத்தன்
மார்பு துணையாகத் துயிற்றுக தில்ல
துஞ்சா முழவின் கோவல் கோமான்
நெடுந்தேர்க் காரி கொடுங்கால் முன்துறைப்
பெண்ணைஅம் பேரியாற்று நுண்அறல் கடுக்கும்
நெறிஇருங் கதுப்பின்என் பேதைக்கு
அறியாத் தேஎத்து ஆற்றிய துணையே. அகநா. 35

எனவரும்.

[தன்னைப் பெற்று வளர்த்த நற்றாய் செவிலித்தாயர் ஆகிய எம்மையும் கருதாது, வான்அளாவிய மதிலைஉடைய எம் பெரிய இல்லம் இவள் பிரிவால் தனிமைத்துயர் எய்த, ஒற்றைமணி அடிக்கும் காம்பினைஉடைய வேற்படை ஏந்திய வராய்ப் பாலைநிலத்து ஊர்களை அடைந்த மழவர்கள், பகை முனையில் பசுக்களைக் கவர்ந்து மேட்டுநிலத்தில் வீழ்த்திய, வில்லையே ஏராகக்கொண்டு பகைவர்உடலை உழும் வாழ்க்கை யினை உடைய வீரர்களைப் புதைத்த கல்மேட்டில், நடுகல்லில் கடவுளாகித் தங்கிய வீரர்களுக்கு வழிபாடு ஆற்ற, நடுகல் லிற்கு மயிற்பீலி சூட்டித் துடிகொட்டி நெற்கள்ளோடு ஆட் டுக்கிடாயைப் பலியாக வழங்கும், மக்கள் போக்குவரத்து இல்லாத புலால்நாற்றம் வீசும் கடத்தற்குஅரிய பாலைநிலம் சேறலைத் துணிந்து அயலவன் தொடர்பைக்கொண்டு விட் டாள்ஆயினும், ஒலிநீங்காத முழவினைஉடைய கோவலூரின் தலைவனும் நெடிய தேரை உடையவனும் ஆகிய காரி என்ற வள்ளலுடைய கொடுங்கால் என்ற ஊர்த்துறையை உடைய பெண்ணையாற்றின் நுண்ணிய கருமணலை ஒக்கும் வளைவு-களைஉடைய கரியமயிர்முடியைஉடைய என்மகளுக்கு அவள் அறியாத பக்கத்து அழைத்துச் செல்லுதற்கு அமைந்த துணை யாகிய தலைவன், அவளுக்கு மலர் முதலியவற்றைப் பலகா-லும் அணிவித்து, விருப்பம் மிக்க நெஞ்சத்தொடு அவள் அழகை நுகர்ந்து, தன் மார்பே துணையாக அவளை உறங்கச் செய்வதற்கு அருளல் வேண்டும்' என்று செவிலி தெய்வத் தைப் பராயது.

எம்மும் உள்ளாள் நகர்புலம்பச் சுரம்துணிந்து பிறள் ஆயினள் ஆயினும் அவளை அறியாத் தேயத்து அழைத்துச் சென்ற துணைவன் ஆர்வத்தோடு அணிந்து நலன் அளைஇ மார்பு துணையாகத் துயிற்றலை யான்விரும்புகிறேன்-என்பது துறைச்செய்தி.]

நற்றாய் சுரம் தணிவித்தல் :

பெற்றேன் நெடும்கிள்ளை வாட முதுக்குறை பெற்றிமிக்கு
நல்தேன் மொழி அழல் கான் நடந்தாள் முகம் நான் அணுகப்
பெற்றேன் பிறவி பெருமல்செய் தோன்தில்லைத் தேன்பிறங்கு
மல்தேன் மலரின் மலர்த்து இரந்தேன் சுடர்வானவனே.

திரு. 232

எனவும்,

[ஒளிவீசும் சூரியனே! தலைவி தன்னைப்பெற்ற என்னொடு கிளியும் வாடுமாறு. பேரறிவு மிக்குக் கொடிய பாலையை நோக்கிச் சென்றுவிட்டாள். தன்னை அடைந்த என்னைப் பிறவிப்பிணி கெடுமாறு செய்த சிற்றம்பலத்தானின் தில்லையில் உள்ள தேன் நிரம்பிய மலர்போல அவள்முகம் மலரும்வகை வெப்பம் குறைந்த கதிர்களை வீசுமாறு உன்னை வேண்டுகிறேன்.]

நற்றாய் தலைமகள் மென்மைத்தன்மைக்கு இரங்கல் :

தாமே தமக்குஒப்பு மற்றுஇல் லவர்தில்லைத் தண்அனிச்சப்
பூமேல் மிதிக்கின் பதைத்துஅடி பொங்கும் நங் காய்எரியும்
தீமேல் அயில்போல் செறிபரல் கானில் சிலம்புஅடிபாய்
ஆமே நடக்க அருவினை யேன்பெற்ற அம்மனைக்கே.

திரு. 228

எனவும்,

[நங்கையே! நான்பெற்ற பெண் ஒப்பற்ற சிவபெருமானுடைய தில்லையிலே அனிச்சப்பூமேல் மிதித்தாலும் 'உறுத்தும்' என்று நடுங்கி அடிகொப்புளிக்கும் இயல்பினள். அவள், நெருப்பில்வேலை நட்டுவைத்தாற்போல வெப்பத்தால் கொதித்த பரல்கற்கள் நிரம்பிய பாலையிலே தன் சிலம்பு அணிந்த அடிகளை ஊன்றி நடத்தற்கு இயலுமா?.]

நற்றாய் தலைமகள் இளமைத் தன்மைக்கு
உளம்மெலிந்து இரங்கல் :

பைம்மலர்வாள்படைஊரற்குச்செய்யும்குற்றேவல் மற்றுஎன்
மைம்மலர்வாள்கண்ணி வல்லள்கொல் லாம்தில்லை யான்மலைவாய்
மொய்ம்மலர்க் காந்தளைப் பாந்தள்என்று எண்ணித் துண்ணென்று ஒளித்துக்
கைம்மல ரால்கண் புதைத்துப் பதைக்கும்எம் கார்மயிலே.
திரு. 233

எனவும்,

[சிவபெருமான் மலைமேல் மலர்ந்த காந்தட்பூவைப் பாம்பு என்று தவறாக எண்ணித் திடுக்கிட்டு ஒளிந்துகொள் ளக்கையால் தன்கண்களை மூடிக்கொண்டு நடுங்கும், கார்கால மயில்போன்ற என்மகள் தலைவனுக்குச் செய்யத்தக்க குற்றே-வல்களைச் செய்யும் ஆற்றல் உடையளோ? அல்லளே!.]

நற்றாய் தலைமகள் அச்சத்தன்மைக்கு அச்சமுற்று இரங்கல் :

நாள்மா தவிமலர் நாறுஇருங் கூந்தல் நடந்தவழிக்
கோள்மாக் குமுறும் கொடுங்குரல் கேட்டொறும் கூர்ங்கணையால்.
வாள்மாமுனைவென்ற வாணன்தென் மாறைமணிவரைவேய்த்
தோள்மான் வெருவுங்கொல் லோஎன்றுஎன் ஆருயிர் சோர்கின்றதே.
தஞ்சை. 338

எனவும்,

['வாணன் மாறையை அடுத்த மலையிலுள்ள மூங்கில் போன்ற தோள்களை உடைய என்மகள், கூந்தலில் மாதவிப் பூச்சூடி நடக்கும் வழியில், புலி முதலியவற்றின் கொடுங்குரல் கேட்குந்தோறும் அஞ்சுவளே' என்று என்உயிர் பதைக் கின்றது.]

தலைமகள் ஆயமும் தாயும் அழுங்கக்கண்டு காதலின் இரங்கும்
கண்டோர் இரக்கம் :

நொந்தும் அழுந்தும் துணைவியர் ஆற்றலர் நோக்கொடுஇன்சொல்
தந்துஇங்கு எவையும் தணந்துசென் றாள்எனத் தாள்பணியார்

மைந்தும்கதமும்தடிந்து அருள்வாணன்தென் மாறை அன்னுள்
பந்தும் கழங்கும்எல் லாம்கண்டு வாடும் பயந்தவளே.

தஞ்சை. 339

எனவும்,

['பகைவருடைய வலிமையையும் கோபத்தையும் அழிக்கும் வாணன் தென்மாறை அன்ன தலைவி எம்மை விடுத்துச் சென்றுவிட்டாளே! எங்களை அன்பொடு பார்த்து இன்சொல் கூறி, மறைவாக இங்குள்ள பொருள்களை எல்லாம் விடுத்துத் தலைவன் துணையே பெரிதாகச் சென்றுவிட்டாளே' என்று தோழியர் நொந்தும் கண்ணீர் உகுத்தும் வருந்துகின்றனர். அவள் விடுத்துச் சென்ற பந்தையும் கழங்குகளையும் கண்டு நற்றாய் வாடுகிறாள் ]

செவிலி ஆற்றாத் தாயைத் தேற்றல் :

வேயினதோளிமெலியல்விண்ணோர்தக்கன்வேள்வியின்வாய்ப்
பாயின சீர்த்தியன் அம்பலத் தானைப் பழித்து மும்மைத்
தீயினது ஆற்றல் சிரம்கண் இழந்து திசைதிசை தாம்
போயின எல்லைஎல் லாம்புக்கு நாடுவன் பொன்னினையே.

திரு. 234

எனவும்,

[மூங்கில் போன்ற தோள்களை உடையாய்! வருந்தாதே. தக்கன் வேள்வியில் தன் புகழைப் பரப்பிய சிவபெருமானைப் பழித்து மூவகைத் தீயினது ஆற்றலையும் கண்களையும் இழந்து பல திசைகளிலும் சிதறி ஓடிய தேவர்கள் சென்ற திசைகளின் எல்லைகாறும் சென்று தலைவியைத் தேடி வருகிறேன்.]

முக்கோல் பகவரை வினாதல் :

வெதிர்ஏய் கரத்துமென் தோல்ஏய் சுவல்வெள்ளை நூலின்கோண்மூ
அதிர்ஏய் மறையின்இவ் வாறுசெல் வீர்தில்லை அம்பலத்துக்

கதிர்ஏய் சடையோன் கரமான் எனஒரு மான்மயில்போல்
எதிரே வருமே சுரமே வெறுப்பஒர் ஏந்தலொடே.

திரு. 243

எனவும்,

[கையில் மூங்கில் கோலையும் தோளில் மாந்தோலையும் மார்பில் பூணூலையும், மேகத்தின் ஒலிபோன்ற மறை ஓசையையும் கொண்டு இவ்வழியாக வரும் அந்தணர்களே! தில்லை அம்பலத்துச் செஞ்சடை அண்ணலின் கையில் உள்ள மான் போன்ற ஒரு மான்விழியாள், பாலைநிலத்தார் தன்னைச் செறிந்துவர, ஒருதலைவனோடு மயில்போல உம் எதிரே வரக் கண்டீரோ ?]

மாவிரதியரை விறுதல் :

சுத்தியபொக்கணத்துஎன்புஅணிகட்டங்கம்சூழ்சடைவெண்
பொத்திய கோலத்தி னீர்புலி யூர்அம் பலவர்க்குஉற்ற
பத்தியர் போலப் பணைத்துஇறு மாந்த பயோதரத்துஒர்
பித்திதன் பின்வர முன்வரு மோஓர் பெருந்தகையே.

திரு. 242

எனவும்,

[தூய்மையை உடைய பொக்கணத்தையும், எலும்பாகிய அணியையும், கட்டங்கம் என்னும் படைக்கலத்தையும், சூழ்ந்த சடையையும், மெய்முழுதும் மூடியவெண்கோலத்தையும் உடையீர்! சிவபெருமானுடைய பத்தியில் ஈடுபட்ட அடியார்போல, தன் இடத்துக் காதலில் பெண் ஒருத்தி பின்னே வரத் தலைவன் ஒருவன் முன்னே வருதலைக் கண்டீரோ?]

உய்த்து உணர்வோரை உரைமின் என்றல் :

முன்னும் கடுவிடம் உண்டதென் தில்லைமுன் னோன்அருளால்
இன்னும் கடிஇக் கடிமனைக் கேமற்று யாம்அயர

மன்னும் கடிமலர்க் கூந்தலைத் தான்பெறு மாறும்உண்டேல்
உன்னுங்கள் தீதின்றி ஓதுங்கள் நான்மறை உத்தமரே.

திரு. 233

எனவும்,

[நான்மறை அந்தணரே! உலகைத் துன்புறுத்தும் விடம் உண்ட சிவபெருமான் அருளால், எங்கள் வீட்டிலேயே எம் பெண்ணின் மணத்தை யான் முடிக்கும் வாய்ப்பினைப் பெறு தற்கு நல்வினை உண்டாயின், ஆராய்ந்து தீதுஇன்றிக் கூறுங்கள்.]

மிக்கோர் ஏதுக்காட்டல் :

சுரும்புஇவர்சந்தும்தொடுகடல்முத்தும்வெண்சங்கும்எங்கும்
விரும்பினர்பால்சென்றுமெய்க்கணியாம்வியன்கங்கைஎன்னும்
பெரும்புனல் சூடும் பிரான்சிவன் சிற்றம் பலம்அனைய
கரும்புஅனமென்மொழியாரும்அந்நீர்மையர்காணுநர்க்கே.

திரு 248

எனவும்,

[சந்தனமும், முத்தும், சங்கும் தாம் பிறந்த இடத்தில் பயன்படாது விரும்பினவர்இடத்துச் சென்று அவர் உட-லுக்கு அழகு தரும். கங்கை சூடிய சிவபெருமானின் சிற்றம் பலம் அனைய வனப்புடைய கரும்பு அன்ன சொல்லினிமை உடைய பெண்களும், ஆராய்ந்துபார்ப்பவருக்கு அத்தன்மை யராகவே கொள்ளத்தக்கார்.]

செவிலி எயிற்றியொடு புலம்பல் :

பேதைப் பருவம்பின் சென்றது முன்றில் எனைப்பிரிந்தால்
ஊதைக்கு அலமரும் வல்லிஒப் பாள்முத்தன் தில்லைஅன்னாள்
ஏதில் சுரத்துஅய லானொடுஇன்று ஏகினள் கண்டனையே
போதில் பொலியும் தொழில்புலிப் பல்குரல் பொற்றொடியே.

திரு. 239

எனவும்,

[பூவணிந்து புலிப் பல் சூடிய நங்காய்! என் பெண் என்னைப் பிரிந்தால் பெருங்காற்றுக்கு அசைந்தாடும் கொடி போன்ற மென்மையள். அவள் பேதைப்பருவம் கடந்த பெதும்பைப் பருவத்தினள்; வடிவால் சிவபெருமான் தில்லையை ஒத்தவள். அவள், பழக்கம் அறியாத இப்பாலைவழியில் அயலவன் ஒருவனோடு வந்துவிட்டாள். நீ அவளைக் கண்டாயோ?]

செவிலி குரவொடு புலம்பல் :

பாயும் விடையோன் புலியூர் அனையாள் பாவைமுன்னே
காயும் கடத்திடை ஆடிக் கடப்பவும் கண்டுநின்று
வாயும் திறவாய் குழைஎழில் வீசவண்டு ஒலுறுத்த
நீயும்நின் பாவையும் நின்று நிலாவிடு நீள்குரவே. திரு. 241

எனவும்,

[உயர்ந்த குராமரமே! சிவபெருமான் புலியூரை அன்ன என் பெண் உன் கண் முன்னே கொடிய பாலைவனத்தில் தடுமாறிச் செல்லவும், அதனைப்பார்த்தும் நீ வாய் திறவாது இருந்துவிட்டாய். உன் தளிர்கள் எழில் வீசவும் வண்டுகள் தாலாட்டுப்பாடவும் நீயும் உன்பாவையும் நிலைபெற்று வாழ்க!

'வாழ்க' என்பது குறிப்புமொழி.]

புறவொடு புலம்பல் :

புயல்அன்று அலர்சடை ஏற்றவன் தில்லைப் பொருப்பரசி
பயலன் தனைப்பணி யாதவர் போல்மிகு பாவம்செய்தேற்கு
அயலன் தமியன்அஞ் சொல்துணை வெஞ்சுரம் மாதர்சென்றால்
இயல்அன்று எனக்கிற் றிலைமற்று வாழி எழில்புறவே.
திரு. 240

எனவும்,

[அழகிய புறவே! கங்கை சூடிய பார்வதிபாகனை வழிபடாதவர்போலத் தீவினை செய்தேனுக்கு மகள், அயலானாகிய தனியானவன் சொன்ன சொற்களையே துணையாகக்கொண்டு

கொடிய காட்டிடைச் செல்பவளை நோக்கி, 'இஃது உனக்கு ஏற்புடைத்தன்று' என்று நீ கூறவில்லை. நீ வாழ்க!

'வாழ்க'என்பது குறிப்பு மொழி.]

சுவடு கண்டு இரங்கல் :

தெள்வன் புனல்சென் னியோன்அம்பலம்சிந்தி யார்இனம்சேர்
முள்வன் பரல்முரம் பத்தின்முன் செய்வினை யேன்ஈடுத்த
ஒள்வன் படைக்கண்ணி சீறடி இங்குஇவை உங்குஉவை அக்
கள்வன் பகட்டுஉர வோன்அடி என்று கருதுவனே. திரு.237

எனவும்,

['சிவபெருமானது சிற்றம்பலத்தை நினையாத பாவியர் சேரும் முள் நிரம்பிய மேட்டுவழியில் தீவினையேன் பெற்ற வேற்கண்ணியின் சிறிய அடிச்சுவடுகள் இவை; அங்கு உள்ள அப்பெரிய அடிகள் என் மகளைக் கடத்திச் சென்ற கள்வனாகிய யானைபோன்ற வலிமையுடைய தலைவன் அடிகள்' என்று நினைக்கின்றேன்.]

கலந்து உடன்வருவோர்க் கண்டு கேட்டல் :

பைந்தார் விடலையும் நீயும் தகஇப் பரிசுஎதிரே
வந்தார் சிலர்உள ரோமக ளேவண் டல் ஆடும்அந்தண்
சந்துஆர் தடமுலை ஆயமும் தாயரும் தான்வளர்த்த
செந்தார் மழலைக் கிளியும்என் போல்இன்று தேடவைத்தே.
அம்பி- 405

எனவும்,

[மகளே! உன் கணவனும் நீயும் போல உங்களுக்கு எதிரே, தன்னுடன் விளையாடும் தோழியர்குழாமும், தான் வளர்த்த சிவந்த கழுத்துக்கோடுடைய மழலை பேசும் கிளியும் என்னைப்போல இன்று தங்களைத் தேடுமாறு வைத்துச் சிலர் வந்ததைக் கண்டாயா ?]

கலந்து உடன்வருவோர் புலம்பல் தேற்றல் :

மீள்வது செல்வதன்று அன்னை இவ் வெங்கடத்து அக்கடமாக்
கீள்வது செய்த கிழவோனொடும்கிளர் கெண்டைஅன்ன
நீள்வது செய்தகண் ணாள் இந் நெடுஞ்சுரம் நீந்திஎம்மை
ஆள்வது செய்தவன் தில்லையின் எல்லை அணுகுவரே.

திரு. 247

எனவும்,

[அன்னையே! இக்கொடிய பாலையிலே அப்பெரிய யானையைப் பிளந்த தலைவனும் கெண்டைக் கண்ணாளும் நீண்ட இப்பெரிய பாலையை நீந்தி எம்மை ஆட்கொண்ட சிவபெருமானுடைய தில்லையின் எல்லையை இந்நேரம் அடைந்திருப்பர். ஆதலின் இனிச்சென்று அவர்களைக் காண்டல் உனக்கு இயலாது. திரும்பிப் போதலே உனக்கு ஏற்றது.]

செவிலி புதல்வியைக் காணாது கவலை கூர்தல் :

கல்லார் சுரத்து வருவார் இருவரைக் கண்டஎல்லை
எல்லாம் அவரவர் என்றிருந் தேன்அவர் எம்இருவர்
அல்லா நிலைமை அருவினை யேன்இங்கு அறிந்தபின்னும்
செல்லாது மீண்டுஒரு கால்இரு காலும்என் சிந்தையுமே.

அம்பி. 407

எனவும் வரும்.

[கல்மிக்க பாலையிலே சேய்மையில் வருவார் இருவரைக் கண்டு என்மகளும் அவள் தலைவனுமே என்று நினைத்தேன். அண்மையில் வந்தபின், அவர்கள் என்மகளும் அவள் தலைவனும் அல்லர் என்ற நிலைமையைத் தீவினையேன் அறிந்த பின், இனி என் மனமும் கால்களும் ஓர் அடிகூட மேற்செல்ல மறுக்கின்றன. கவலையால் யான் செயலறவு பட்டுள்ளேன்.]

இவற்றுள், வினவிய பாங்கியின் உணர்ந்தகாலை இனையல் என்போர்க்கு எதிர் அழிந்து இரங்கல் முதலிய மூன்றும் செவிலி புலம்பற்கும்,

செவிலி அறத்தொடு நிற்றலின் கவலையில் பாங்கிதன்னொடு புலம்பல் முதலிய நான்கும் நற்றாய் புலம்பற்கும்,

நிமித்தம் போற்றல் முதலிய ஐந்தும் மனைமருட்சிக்கும்,

கண்டோர் இரக்கம் ஆகிய ஒன்றும் கண்டோர் இரங்கற்கும்,

ஆற்றாத் தாயைத் தேற்றல் முதலிய ஒன்பதும் செவிலி பின் தேடிச்சேறற்கும் உரியவாம் எனக்கொள்க. *166*

## மீட்சி வகை

539 தெளித்தல்[1] மகிழ்ச்சி[2] வினாதல்[3] செப்பல்[4] என
வெளிப்பட உரைத்த மீட்சிநால் வகைத்தே.

மீட்சி கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) தெளித்தல் முதலாகச் செப்பல் ஈறாக நான்கு வகையினை உடைத்தாம் மீட்சி என்றவாறு. *167*

### விளக்கம்

*1* நிகழ்ச்சியைத் தெளிவாகக் கூறுதல்.

*2* தலைவி மீண்டுவருதலால் பலருக்கும் ஏற்பட்ட மகிழ்ச்சி.

*3* நற்றாய் வேலனை வினவுதல்.

*4* மகிழ்ச்சியை ஒருவருக்கு ஒருவர் சொல்லிக்கொள்ளுதல்.

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 190

'உடன்கொடு போய உரவோன் தன்மனை
மடந்தையை வரைதல் வரையாது அவள்மனை
மீண்டு வரைதல்முன் வேள்விசெய் ததனை

ஆண்டகை உணர்த்துஎன அறிவுடைப் பாங்கி
பூண்டுணர்த் தினன்எனல் பொன்னகர் அடைந்தபின்
மீண்டு அவளுடன் உறல் மீட்சிநால் வகைத்தே.'
மா. அ. 90

167

## மீட்சியின் விரி

540 தலைவிசேண்அகன்றமைசெவிலிதாய்க்கு உணர்த்தலும்[1]
தலைவன் தம்மூர் சார்ந்தமை சாற்றலும்[2]
தலைவிமுன் செல்வோர் தம்மொடு தம்வரல்
பாங்கியர்க்கு உணர்த்தி விடுத்தலும்[3] அங்குஅவர்
பாங்கியர்க்கு உணர்த்தலும்[4] பாங்கியர் கேட்டு
நற்றாய்க்கு உணர்த்தலும்[5] நற்றாய் கேட்டுஅவன்
உளங்கோள வேலனை வினாதலும்[6] எனஉடன்
விளம்பிய இருமூன்றும் மீட்சியின் விரியே.

இது மீட்சியின்விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) தலைவி சேண்அகன்றமை செவிலி தாய்க்கு உணர்த்தல் முதலாக நற்றாய் தலைமகன் உளம்கொள வேலனை வினாதல் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறும் மீட்சியின் விரியாம். என்றவாறு.

ஒன்றென முடித்தலால், உடன்போய் வரைந்த நெடுந் தகை மீட்சி உரைத்தலும் வரப்பெறும்.

### விளக்கம்

1 தலைவி தலைவனுடன் அவன்ஊர் சென்றாள் என்பதனைச் செவிலி நற்றாய்க்கு உரைத்தல்.

2 மீண்டு வரும் தலைவன் தலைவியின் ஊரை அடைந்து-விட்ட செய்தியை அவளிடம் கூறல்.

3 தலைவி தம்முன் செல்வோர்களை அழைத்துத் தானும் தலைவனும் வருதலைத் தோழியர்களுக்குச் சொல்லி விடுத்தல்.

4 முன்சென்ற சான்றோர், அவர் வருகையைப் பாங்கி-யருக்குத் தெரிவித்தல்.

5 தலைவனும் தலைவியும் மீண்டுவரும் செய்தியைப் பாங்கியர் கேட்டு நற்றாய்க்குத் தெரிவித்தல்.

6 'தலைவன் தலைவியைத் தன் மனைக்கு அழைத்துக் கொண்டு செல்வானோ? அல்லது எம்மனைக்கே அழைத்துக்கொண்டு வருவானோ?' என்று பூசாரியை நற்றாய் கேட்டல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 191

'இறைவனைப் பயந்தவள் எமர்இல் வரைந்தமை
இறைவிநற் றாய்உற எய்துஅவண் என்றலும்
இறைவிஊர் சார்ந்தமை இறைவன் சாற்றலும்
தலைவிமுன் செல்வோர் தம்மொடு தன்வரவு
இளையர்க்கு உணர்த்தி விடுத்தலும் இளையர்க்கு
ஆங்குஅவர் உணர்த்தலும் பாங்கியர் உணர்ந்து
நற்றாய்க்கு உணர்த்தலும் நற்றாய் உணர்ந்துஅவன்
உளம்கொள வேலனை வினாதலும் எனஉடன்
விளம்புஇரு மூன்றும் மீட்சியின் விரியே'. மா.அ.91]

தலைவி சேண்அகன்றமை செவிலி தாய்க்கு உணர்த்தல்:

சேடுஆர் மலர்க்குழல் வல்லியை அன்னைவெந் தீவினையேன்
நாடா வயின்இல்லை ஞாலத்து அகவயின் நன்கமலக்
காடார் பழனக் கழனிநன் னாடு கடந்துதன்ஊர்
வாடா வளமனைக் கொண்டுசென்றான்ஒரு வள்ளல் இன்றே.

அம்பி. 408

எனவும்,

[அன்னையே! மலர்க்குழற்கொடியாகிய தலைவியை, உலகம் முழுதும், நல்வினையற்ற நான் தேடாத இடம் இல்லை. கமலக்காடு போன்ற குளங்களையும் வயல்களை உடைய நல்ல

நாட்டைக் கடந்து, ஒரு வள்ளல், அவள் வருந்தாத வகையில் தன் ஊரிலுள்ள தன் செல்வமனைக்கு இன்றே கொண்டு சென்றுவிட்டான்.]

உடன்போய் வரைந்த நெடுந்தகை மீட்சி உரைத்தல் :

அனைத்தாயதன்நகர் ஆன்றபொன்மாளிகைச் சான்றவர்முன்
எனைத்தாய பல்கிளை ஏத்த மணம்புரிந்து இன்புறும்நாள்
மனைத்தாயர்தந்தைதன்ஊர்வண்டல்ஆயம்மறந்தாஎல்லாம்
நினைத்தாள்நிரைவளைமீண்டான்அறிந்துநெடுந்தகையே.

அம்பி. 409

எனவும்,

[அத்தகைய சிறப்புள்ள தன் ஊரிலே தன் பொலிவுற்ற பேரில்லிலே சான்றவரும் தன் சுற்றத்தவரும் ஏத்தத் தலைவியைத் திருமணம் செய்துகொண்டு இன்புறும் நாளிலே, நிரைவளைத் தலைவி தன் ஊர் வீடு தாயர் தந்தை தோழியர் ஆகியவர் பற்றி மறந்திருந்ததை எல்லாம் நினைத்தாளாக, அவள் நினைப்பை உணர்ந்து, தலைவன் அவளுடன் அவள் ஊருக்கு மீண்டான்.]

தலைவன் தம்ஊர் சார்ந்தமை சாற்றல் :

துப்புஓது சேயிதழ்த் தூநகை யாய்வெம் சுரத்திடைநாம்
அப்போது இருந்த அகன்பொழில் ஆயத்துஉன் ஆரமுலைக்கு
ஒப்புஓ தியமென் முகைக்கன்னி காரம்இம் முற்றத்துநீ
எப்போதும் வைகும் இளமரக் காவும் இலஞ்சியுமே,

அம்பி- 410

எனவும்,

[பவள இதழ்களையும் தூய பற்களையும் உடையாய்! நாம் உடன்போக்கு வந்தகாலைப் பாலைநிலத்தில் நாம் தங்கி இளைப்பாறியபொழுது உன் முலைக்கு ஒப்பாகக் கூறப்பட்ட

அரும்புகளை உடைய கோங்கமரம் இது. நீ எப்போதும் தங்கும் இளமரச் சோலையும், குளிக்கும் குளமும் இதோ காட்சி அளிக்கின்றன.]

தலைவி முன் செல்வோர் தம்மொடு தம்வரல் பாங்கிக்கு உணர்த்தல் :

ஒன்றே உளம்கொண்டு இருபிறப்பு எய்திமுத் தீயும்உய்த்து
நன்றே நவில்கின்ற நான்மறை யீர்தம்மை நான் அகன்ற
அன்றே தொடங்கி அலமரும் ஆயத்து அரிவையர்க்குச்
சென்றே வருவது உரைமின்கள் யாம்அத் திருநகர்க்கே.

அம்பி. 411

எனவும்,

[தெய்வம் ஒன்றையே மனத்துக் கொண்டு இருபிறப்பாளராய் முத்தீயும் ஓம்பி நல்லனவற்றையே பேசும் நான்மறை அந்தணீர்! தம்மை நான் பிரிந்த அன்றுதொடங்கி மனம் சுழலும் ஆயத்தாருக்கு யாம் அவர்கள் ஊருக்கு மீண்டு வரும் செய்தியைச் சென்று சொல்லுங்கள் ]

முன்செல்வோர் பாங்கியர்க்கு உணர்த்தல் :

நண்போடு இனியதுஓர் நல்விருந்து எய்துவிர் நாளைஎல்லைத்
தண்போது அணிகுழல்தையல் நல்லீர்செய்ய தண்தமிழ்தோய்
பண்போல் இனிய பணிமொழிச் செந்தளிர்ப் பைந்தொடிதன்
கண்போல் ஒருவர் கலந்துஉடன் மீள்வது கண்டனமே.

அம்பி 412

எனவும்,

[தையல் நல்லீர்! தமிழ்ப்பண்போல் இன்மொழித் தையலுடன் கண்போன்று இனிய ஒருவன்கூடி உடன்மீளும் காட்சியை யாம் கண்டோம். நாளை விருப்பத்தோடு இனியதொரு நல்விருந்தை நீங்கள் பெறுவீர் என்பதை மனங்கொள்ளுங்கள்.]

பாங்கியர் கேட்டு நற்றாய்க்கு உணர்த்தல் :

மேவிஒன் னார்எம்மை மெய்த்துணை போக விடுத்திருந்த
பாவிஎன் றவகை பாக்கியம் செய்தனம் பாய்அரிக்கண்
காவிஅன் னாள்அருங் கானகம் நீந்திநம் மாநகர்வாய்
ஆவிஅன் னாருடன் வந்தனள் காண்என்பர் அந்தணரே.
அம்பி. 413

எனவும்,

[பகைவர்கள் எங்களைத் 'தலைவியைத் துரத்திவிட்டுத் தனியே வாளா இருக்கும் பாவிகள்' என்று அலர் தூற்றாத படி நாங்கள் பாக்கியம் செய்துவிட்டோம். இங்கு வந்த அந்தணர்கள் குவளைக்கண்ணளாகிய தலைவி அரிய காட்டைத் தன் உயிர்போன்ற தலைவனுடன் கடந்து நம் வீடு நோக்கி வரும் செய்தியைக் குறிப்பிட்டுள்ளார்கள்.]

நற்றாய் தலைமகன் உளம்கொள வேலனை வினாதல் :

தென்மாறை நன்னகர் மன்னவன் வாணன்செழுந்தஞ்சைசூழ்
பொன்மா திரத்துப் புலன்உணர் வீர்சுரம் போய்வருவோன்
என்மா தரைஎன் மனைத்தரு மோதன்னை ஈன்றநற்றாய்
தன்மா மனைஉய்க்கு மோசொல்லுவீர்ஒன்று தான்எனக்கே.
தஞ்சை. 354

எனவும் வரும்.

[வாணன் தஞ்சையைச் சூழ்ந்த நான்குதிசைகளிலும் மேல் நிகழக்கூடிய செய்திகளை உணரும் வேலனே! 'பாலை நிலத்திற்கு என் பெண்ணை உடன்போக்கி மீளும் தலைவன், முதற்கண் அவளை என் மனைக்கு அழைத்து வருவானோ'? அல்லது தன் தாய் இருக்கும் வீட்டிற்கு அழைத்துச் செல்வானோ? என்பதனை எனக்கு விளக்கிச் சொல்லுக.]

இவற்றுள், தலைவி சேண் அகன்றமை செவிலி தாய்க்கு உணர்த்தலும் தலைவன் தம் ஊர் சார்ந்தமை சாற்றலும் ஆகிய இரண்டும் தெளித்தற்கும்,

தலைவி முன் செல்வோர் தம்மொடு தம்வரல் பாங்கியர்க்கு உணர்த்தி விடுத்தலும் பாங்கியர் நற்றாய்க்கு உணர்த்தலும் ஆகிய இரண்டும் மகிழ்ச்சிக்கும்,

நற்றாய் தலைமகன் உளம் கொள வேலனை வினவுதலாகிய ஒன்றும் வினவுதற்கும்,

முன்செல்வோர் பாங்கியர்க்கு உணர்த்தல் ஆகிய ஒன்றும் செப்பற்கும் உரியவாம். *168*

## மீட்சியுள் வரைதற்கு உரியன

541 மடந்தையை உடன்போய் வரைந்து மீடற்கும்
அவள்மனை வரைதற்கும் தன்மனை வரைதற்கும்
இயைதலும் உரிய செவிலிகூற்று ஒழித்தே.

இது மேல்கூறியவற்றுள் வரைதற்கும் உரியன இவை என்கின்றது.

(இ-ள்) மடந்தையை உடன்போய் வரைந்துமீடற்கும் வரையாது மீண்டு அவள்மனையின்கண்ணே ஆதல் தன்மனையின்கண்ணே ஆதல் வரைந்து கோடற்கும் இலக்கணத்தான் உரியவாம், செவிலி கூற்றாகிய ஒன்றையும் ஒழித்து அல்லாத ஐந்தும் என்றவாறு. *169*

### ஒத்த நூற்பா

முழுதும் — ந அ. 192
*169*

## தன்மனை வரைதலின் வகை

542 வினவுதல்[1] செப்பல்[2] மேவல்[3] என்று இறைவன்
தனது இல் வரைவு தான்மூ வகைத்தே.

தன்மனை வரைதல் கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) வினுதலும் செப்பலும் மேவலும் என மூவகை யினை உடைத்தாம், தலைவன் மீண்டுவந்து தன்மனையின் கண்ணே வரைதல் என்றவாறு. *170*

### விளக்கம்

*1* நற்றாய் செவிலியை வினுதல்.

*2* செவிலி நற்றாய்க்கு விடை கூறுதல்.

*3* தலைவனும் தலைவியும் தலைவியின் இல்லத்தை அடைதல்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. *193* *170*

## தன்மனை வரைதலின் விரி

543 பணிமொழி நற்றாய் மணன்அயர் வேட்கையின்
செவிலியை வினுதலும்[1] செவிலிக்கு இகுளை
வரைந்தமை உணர்த்தலும்[2] வரைந்தமை செவிலி
நற்றாய்க்கு உணர்த்தலும்[3] உற்று ஆங்கு இருவரும்
தலைவி இல் வந்துழித் தலைவன் பாங்கிக்கு
யான்வரைந் தமைநுமர்க்கு இயம்புசென்று என்றலும்[4]
தான்அது முன்னே சாற்றியது உரைத்தலும்[5]
என்னும்இவ் வைந்தும் மின்நிலை வேலோன்
மன்னிய தன்மனை வரைதலின் விரியே.

இது தன்மனைவரைதலின் விரி இத்துணைத்து என் கின்றது.

(இ-ள்) பணிமொழி நற்றாய் மணன் அயர் வேட்கை யின் செவிலியை வினுதல் முதலாகப் பாங்கி தான் அது முன்னே சாற்றியது உரைத்தல் ஈருகச் சொல்லப்பட்ட ஐந் தும் மீண்ட தலைமகன் தலைமகளைத் தன் மனையின்கண்ணே வரைந்து கோடலின் விரியாம் என்றவாறு.

### விளக்கம்

1 நற்றாய் தன்மகள் மணத்தைத் தன் இல்லத்தில் நிகழ்த்துதல் வேண்டும் என்ற விருப்பத்தில் செவிலித்தாயை வினவுதல்.

2 செவிலித்தாய்க்குத் தோழி தலைவன் மணம்செய்து கொண்டதனைக் குறிப்பிடுதல்.

3 மணம் செய்து கொண்டதைச் செவிலி நற்றாய்க்கு உரைத்தல்.

4 தலைவனும் தலைவியும் தலைவிவீட்டிற்கு வந்தவழித் தலைவன் தோழியிடம் தான் தலைவியை மணந்து கொண்ட செய்தியைத் தலைவிதமருக்குத் தெரிவிக்குமாறு குறிப்பிடுதல்.

5 தோழி 'நான் அதனை முன்னமேயே கூறிவிட்டேன்' என்று தலைவனிடம் கூறுதல்.

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 194

'கவின்உடை நற்றாய் கடிமணம் நிகழ்தற்குச்
செவிலியை வினாதலும் செவிலிக்கு இகுளை
வரைவு நிகழ்ந்த வாய்மை உணர்த்தலும்
புரைதீர் செவிலி பொற்பநற் றாய்க்குத்
திருமணம் நடந்த செவ்வி உணர்த்தலும்
இருவரும் தலைவி இல்செல இறைவன்
யான்வரைந் தமைநுமர்க்கு இயம்புஎன இகுளை
தான்அது முன்னர்ச் சாற்றியது உணர்த்தலும்
என்ன வரன்முறை இயம்பிய ஐந்தும்
மன்னன் தன்மனை வரைந்ததன் விரியே.' மா.அ. 92]

பணிமொழி நற்றாய் மணன் அயர் வேட்கையின்
செவிலியை வினாதல் :

தாமாக மேவினும் நம்மனைக் கேவந்து தண்சிலம்பர்
மாமா திணைமணம் செய்வதற் கேமரு வார்கமலப்
பூமாது கேள்வன் புகழ்த்தஞ்சை வாணன் பொருப்பில்இனி
ஆம்ஆறுஉயிர்அனையாய்சொல்வமோஅவர்அன்னையர்க்கே.
தஞ்சை. 355

எனவும்,

[தோழி! தாமாக உடன்போன தலைவன் தலைவியோடு திரும்பி வந்தாலும், நம் வீட்டிற்கே வந்து நம் மகளை மணம் செய்வதற்குத் தஞ்சைவாணன் மலையில் இந்நிகழ்ச்சி நடைபெறுமாறு தலைவனுடைய அன்னைமாரிடம் சென்று வேண்டிக்கொள்வோமா?]

செவிலிக்கு இகுளை வரைந்தமை உணர்த்தல் :

என்நாம்இயம்புவதுயாய்க்குஇனிநாம்அன்னை இன்றுதம்மில்
கொன்ஆரும்நித்திலக்கோவைநம்மாதைக்கொடிநெடுந்தேர்க்
கன்னடர்மண்கொண்டவாணன்தென்மாறையில்காதலர்தாம்
நன்னாள் மணம்புணர்ந் தார்என்று தூதர் நவின்றனரே.
தஞ்சை. 356

எனவும்,

[அன்னையே! பொன்னோடு முத்துவடம் பூண்ட நம் தலைவியை, கருநாடரை வென்றவாணனுடைய தென்மாறையில் தலைவன் நல்ல நாளில் மணம் செய்துகொண்டு விட்டான் என்று தூதர்கள் கூறினர் ஆதலின், நாம் நற்றாய்க்கு என்ன சொல்லுவது?]

வரைந்தமை செவிலி நற்றாய்க்கு உணர்த்தல் :

எனைக்கே ளிரும்நின்று இயற்றஅங் கேமண இன்பம்எய்தி
அனைக்கேண்மை நண்ணிய அண்ணல்பின் னாகம் அன்னைஇன் றிம்

மனைக்கேவரும்எனவந்துசொன்னார்தஞ்சைவாணன்வெற்பில்
சுனைக்கேழ் மலர்க்கழு நீர்க்குழ லாய்சில தூதர்முன்னே.

தஞ்சை. 357

எனவும்,

[தஞ்சைவாணன் மலைச்சுனைக் கழுநீரைச் சூடிய குழலாய்! 'உறவினர் புடைசூழ அவ்வூரில் திருமணம் செய்து கொண்டு தலைவியோடு தொடர்பை உறுதிப்படுத்திக் கொண்ட தலைவன்பின்னே நம் பெண்ணாகிய தலைவி இன்று நம் வீட்டிற்கு வருவாள்' என்று சில தூதர்கள் வந்து முற்படத் தெரிவித்துள்ளனர்.]

உற்றுஆங்கு இருவரும் தலைவீஇல் வந்துழித் தலைவன் பாங்கிக்கு யான் வரைந்தமை நுமர்க்கு இயம்பு என்றல் :

ஓங்கும் பலவும் கதலியும் சூழும்எம் ஊர்வயின்போய்ப்
பாங்குஒன் றியசெழும் பாவகன் முன்னர்ப் பணிமொழியாய்
வாங்கும் சிலைநுதல் மடந்தைக்கு மங்கல நாண்புனைந்தது
ஈங்குஉன் பெருந்தமர் யாவர்க்கும் நீசென்று இயம்புகவே.

அம்பி. 416

எனவும்,

[பணிமொழித் தோழியே! பலாவும் வாழையும் சூழ்ந்த எம் ஊருக்குப் போய், என்றும் துணையாக உதவும் அக்கினிக்குமுன், வில்போன்ற நெற்றியை உடைய தலைவிக்கு மங்கலநாண் புனைந்து யான் அவளை மணந்து கொண்ட செய்தியை உன் உறவினர் யாவருக்கும் சென்று தெரிவிப்பாயாக.]

தான் அது முன்னே சாற்றினன் என்றல் :

அன்னைக்கியம்பினன் ஆண்தகையான்முன் அறிந்துதென்னன்
தன்னைப் பணிந்துகுற் றேவல்செய் யாது சமர்எதிர்ந்த

மன்னைப் புறங்கண்ட வாணன்தென் மாறை வரையில்எங்கள்
பொன்னைக்கொணர்ந்து நும் கேள்முன்னர் நீபொன் புனைந்ததுவே.

எனவும் வரும். தஞ்சை 359

[ஆண்தகையே! பாண்டியனை முன்னமேயே சரணம் அடையாது போரில் எதிர்த்த அரசனைத் தோற்றோடச்செய்த வாணன் தென்மாறை மலையில் எம் தலைவியை அழைத்துச் சென்று, நும் உறவினர் முன்னர், நீ மணந்துகொண்ட செய்தியை நான் முன்னமேயே அறிந்து என்தாய்க்குக் கூறி விட்டேன்.]

இவற்றுள் நற்றாய் மணன் அயர்வேட்கையில் செவிலியை வினுதல் ஆகிய ஒன்றும் வினுதற்கும்,

வரைந்தமை பாங்கி செவிலிக்கு உணர்த்தலும், வரைந்தமை செவிலி நற்றாய்க்கு உணர்த்தலும், பாங்கி தான் அது முன்னே சாற்றியது உரைத்தலும், ஆகிய மூன்றும் செப்பற்கும்,

தலைமகன் வரைந்தமை நுமர்க்கு இயம்பு சென்று என்றலாகிய ஒன்றும் மேவுதற்கும் உரியவாம் என்றவாறு. 171

### உடன்போய் வரைந்து மீடற்கு உரியன

544 ஆதி ஒன்றுஒழித்து அல்லன நான்கும்
மாதினை உடன்போய் வரைந்து மீடற்கும்
நீதியின் உரிய நினையுங் காலை.

இது மேல் கூறியவற்றுள் வரைந்து மீடற்கு உரியன இவை என்கின்றது.

(இ-ள்) நற்றாய் மணன் அயர்வேட்கை ஒன்றும் ஒழித்து அல்லாத நான்கும் தலைமகன் புணர்ந்து உடன்போய்த் தலைமகளைத் தன் ஊரின் வரைந்து மீடற்கும் உரியவாம், ஆராயுங் காலத்து என்றவாறு. 172

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 195

‘உரைத்தவற் றினுள் முதல் ஒழிந்த நான்கும்
வரைத்திரு மகளைமன் னவன்உடன் கொண்டுபோய்
வரைந்து மீள வருதற்கும் உரித்தே’ மா. அ. 93

172

## ஒருபடி மீண்டு வரைதலின் விரி

545 இருவர் இல்லிற்கும் இயைந்தபன் னொன்றும்
ஒருவகை மீண்டு வரைதலின் விரியே

இது ஒருவகை மீண்டு வரைதலின் விரி இத்துணைத்து எனத் தொகுத்து உணர்த்துகின்றது.

தலைவன் தம்மூர் சார்ந்தமை உணர்த்தல் முதலாகப் பாங்கி தான் அது முன்னே சாற்றியது உரைத்தல் ஈறுகச் சொல்லப்பட்ட, அவள் மனை வரைதற்கும் தன்மனை வரைதற்கும் உரிய கிளவி பதினொன்றும் உடன்போய் மீண்டு வரைந்துகோடலின் விரியாம் ஒருபடியாக என்றவாறு.]

ஒருபடி என்றது மேல் சூத்திரங்களுள் கவர்ச்சி நீங்குதற்கு எனக்கொள்க. 173

### விளக்கம்

1 தலைவன் தம்மூர் சார்ந்தமை சாற்றல்.

2 தலைவி முன்செல்வோர் வாயிலாகத் தம் வரவைப் பாங்கியர்க்கு உணர்த்தல்.

3 அவர் பாங்கியர்க்கு உணர்த்தல்.

4 பாங்கியர் நற்றாய்க்கு உணர்த்தல்.

5 நற்றாய் வேலனை வினாதல். (இ. வி. பொ. 168, 169)

6 நற்றாய் திருமணம்பற்றிச் செவிலியை வினவுதல்.

7 செவிலிக்குத் தோழி வரைந்தமை கூறல்.

8 வரைவு நிகழ்ந்துவிட்டதைச் செவிலி நற்றாய்க்குக் கூறல்.

9 தாம் வரைந்த செய்தியைத் தலைவிதமர்க்கு இயம்புமாறு தலைவன் கூறல்.

10 தோழி தான் அதனை முன்னரே அறிவித்தமை கூறல்.

இ. வி. 171

ஆகிய பத்துமே இக்கிளவித்தொகையாம் ஆதலின் 'பன்னொன்றும்' என்ற பாடமும், கிளவி பதினொன்றும் என்ற உரையும் பொருந்துவ அல்ல.

' இருவர் இல்லிற்கும் இயைந்திடு பத்தும் '

என்ற பாடமும், கிளவி ஒருபதும் என்ற உரையுமே ஏற்பன ஆதல் அறிக. [சுன்னாகம் குமாரசாமிப்பிள்ளை பதிப்பு பக். 156]

ஒருபடி—ஒருவகை; இது மீண்டு வரைதலின் ஒரு வகைக்குரிய துறை கூறுகின்றதாகும். இது ஒரு தனிப்பட்ட வகையாதலின் இதனை மேலைச் சூத்திரங்களோடு இயைத்துக் காண்டல் கூடாது. இதுபற்றி மாறன்அகப்பொருள் ஒன்றும் கூறாமையும் காண்க.

முழுதும் — ந. அ. 196

173

## உடன்போக்கு இடையீட்டு வகை

546 போக்குஅழி வுறுத்தல்[1] வரவுஅழி வுறுத்தல்[2]
நீக்கம்[3] இரக்கமொடு மீட்சி[4]என்றுஆங்கு
உடன்போக்கு இடையீடு ஒருநான்கு வகைத்தே.

உடன்போக்கு இடையீடு கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது

(இ-ள்) போக்கு அறிவுறுத்தல் முதலாக மீட்சி ஈறுக நான்கு வகையினை உடைத்தாம் உடன்போக்கு இடையீடு என்றவாறு 174

## விளக்கம்

1 தலைவிதான் தலைவனுடன் உடன்போதலைத் தோழியர் செவிலி முதலியோருக்குச் சொல்லிவிடுத்தல்.

2 தன்தமர் தன்னை மீட்கத் தலைவனைப் பின்தொடர்ந்து வரும் செய்தியைத் தலைவி தலைவனுக்குக் கூறுதல்.

3 தலைவன் தலைவியை விடுத்து, ' தலைவி தமருக்கு ஊறு செய்தல் ஆகாது' என்ற கருணைஉள்ளத்தான் மறைதல்.

4 தலைவி தலைவனைப் பிரிந்த இரக்கத்தோடு தமரைப் பின் தொடர்ந்து தன் ஊர் மீளல்.

உடன்போக்கு இடையீடு–தலைவி தலைவனுடன் போதற் கண் இடையே அதற்கு ஊறு நிகழ்தல்.

## ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 197

' செலவுஅறி வுறுத்தல் வரவுஅறி வுறுத்தல்.
இடந்தனில் நீக்கம் இரக்கமொடு மீட்சிஎன்று
உடன்போக்கு இடையீடு ஒருநால் வகைத்தே.'

மா. அ. 94

174

## உடன்போக்கு இடையீட்டு விரி

547 நீங்கும் கிழத்தி பாங்கியர் தமக்குத்
தன்செலவு உணர்த்தி விடுத்தலும்[1] தன்செலவு
ஈன்றாட்கு உணர்த்தி விடுத்தலும்[2] ஈன்றாட்கு
அந்தணர் மொழிதலும்[3] அறத்தொடு நிற்றலின்
தமர்பின் சேறலைத் தலைவிகண்டு உரைத்தலும்[4]

**அவன்விடுத்து அகறலும்[5] தமரொடும் செல்பவள்**
**அவன்புறம் நோக்கிக் கவன்றுஅரற் றலும்[6] எனும்**
**இருமூன்றும் உடன்போக்கு இடையீட்டு விரியே.**

இஃது உடன்போக்கு இடையீட்டுவிரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) நீங்கும் கிழத்தி பாங்கியர்தமக்குத் தன்செலவு உணர்த்தி விடுத்தல் முதலாகத் தமருடன் செல்பவள் அவன் புறம்நோக்கிக் கவன்று அரற்றல் ஈறுகச் சொல்லப்பட்ட ஆறும் உடன்போக்கு இடையீட்டு விரியாம் என்றவாறு.

உரையிற்கோடலான், தமர்பின் சேறலைக் கண்டோர் இரங்கலும் வரப்பெறும்.

### விளக்கம்

1 உடன்போக்கில் வீட்டை நீங்கிச் செல்லும் தலைவி தோழியருக்குத் தான் தலைவனுடன் போதலைச் சொல்லி அனுப்புதல்.

2 தன் உடன்போக்கை நற்றாய்க்கு அந்தணர்வாயிலாகச் சொல்லி விடுத்தல்.

3 நற்றாய்க்கு அந்தணர் தலைவியின் உடன்போக்கை அறிவித்தல்.

4 நற்றாய் அறத்தொடுநிற்றலின், தன்தமர் வெகுண்டு தன்னைத் தலைவனிடமிருந்து மீட்கப் பின்தொடர்ந்து வருதலைத் தலைவி கண்டு தலைவனுக்கு உணர்த்துதல்.

5 போரிட நேரின் தன் அம்புகளால் தலைவிதமருக்கு ஊறு நிகழ்த்தும் நிலை ஏற்படுமே என்று அஞ்சித் தலைவன் தலைவியை விடுத்து அப்பாற் சென்று மறைதல்.

6 தலைவியை அவள்தமர் மீட்டுச் செல்கையில் அவள் திரும்பித் திரும்பித் தலைவனைப் பார்த்துக்கொண்டு அரற்றிக்கொண்டே செல்லுதல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 198

'இன்புறத் தலைமகள் இருளையர் தமக்குத்
தன்செலவு உணர்த்தி விடுத்தலும் தகைசால்
நற்றாய்க்கு உணர்த்தி விடுத்தலும் நற்றாய்க்கு
அந்தணர் உணர்த்தலும் ஆயிழை நற்றாய்
அறத்தொடு நிற்றலின் தமர்பின் சேறலைச்
சிறப்புடைச் சேயிழை செம்மற்கு உணர்த்தலும்
தலைமகன் தலைமகள் தனைவிடுத்து அகறலும்
தமருடன் செல்பவள் அவன்புறம் நோக்கிக்
கவன்றுஆற் றலும்எனக் கழறுமூ விரண்டும்
ஈண்டுஉடன் போக்குஇடை யீட்டு விரியே.'

மா. அ. 95

'ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும்
ஒன்றிய தோழியொடு வலிப்பினும் விடுப்பினும்
இடைச்சுரம் மருங்கின் அவள்தமர் எய்திக்
கடைக்கொண்டு பெயர்தலின் கலங்குஅஞர் எய்திக்
கற்பொடு புணர்ந்த கவ்வை உளப்பட
அப்பாற் பட்ட ஒருதிறத் தானும்.'....தொல். பொ. 41

நீங்கும் கிழத்தி பாங்கியர் தமக்குத் தன் செலவு உணர்த்தி விடுத்தல் :

இன்னே இரங்கும்என் ஆயத் தவருக்கும் ஈன்றுஎடுத்த
அன்னே எனவரும் தன்ஐய ருக்கும்இவ் வாண்தகைதன்
பின்னே வளம்கெழு தண்ணறுங் கானகம் போகின்றவா
சொன்னேனுமக்கெமதுஊர்செல்லுவீர்இதுசொல்லும்இன்றே.

அம்பி. 418

எனவும்,

[எம் ஊர் நோக்கிச் செல்லும் சான்றோரே! என் பிரிவு நினைத்து இரங்கும் என் தோழியருக்கும், 'அம்மா' என்று அழைத்துவரும் என் அண்ணன்மாருக்கும் இத்தலைவன் பின்னே வளமான குளிர்ந்த காட்டுவழியிலே யான் உடன் போக்கு நிகழ்த்துகின்றவாற்றை நீங்கள் சென்று சொல்லுங்கள்]

தலைமகள் தன்செலவு ஈன்றாட்கு உணர்த்தி விடுத்தல் :

தீட்டச்சொல் லாமழு வார்நெல்லை நாதர் சிலம்பில் கல்வி
நாட்டச்சொல்லீர்முல்லைப்பந்தர்க்குக்கால்நவ்விநாஉலராது
ஊட்டச்சொல்லீர்புனல்தேடும்என்பூவைஉறங்கத்தொட்டில்
ஆட்டச்சொல் லீர்அந் தணீர்பெற்ற பாவி அளவும்சென்றே.

நெல்லைக்கோவை. 48

எனவும்,

[இயற்கையாகவே கூரிதான மழுவை ஏந்திய நெல்லை நாதர் மலையிலே, கல்வியிலேயே நாட்டமுடைய சொற்களைக் கூறும் அந்தணரே! என்னைப் பெற்ற நல்வினையற்ற என் தாயிடம் சென்று, முல்லைப்பந்தருக்குக் கால் நடும்படியும், மானுக்கு நாவறளாது நீர் ஊட்டும்படியும், என் பூவைப் பறவை உறங்குமளவும் அதன் தொட்டிலை ஆட்டும்படியும் யான் வேண்டியதாகச் சொல்வீராக.]

நற்றாய்க்கு அந்தணர் மொழிதல் :

அன்பே மருவி அருஞ்சிலை பூண்டகை ஆண்தகைபின்
நின்பேதை சென்றனள் நீள்நிழல் கான்இடை நீபுலம்புஉற்று
என்பே துறுவது இலங்குஇழை யாய்இங்ஙன் எய்தியமான்
தன்பே ரறிவுக்கு உயர்வட மீனும் தருவது அன்றே.

அம்பி. 419

எனவும்,

[அன்னையே! அன்பே பொருந்திக் கையில் வில்ஏந்தித் தன்னைக் காத்துவரும் தலைவன்பின் உன்மகள் சென்றுவிட்

டாள். அவர்கள் சென்ற கானம் நீண்ட நிழலை உடையது. நீ ஏன் வருந்தித் தவிக்கின்றாய்? உன் மகள் பேரறிவுக்கு அருந்ததியும் நிகர் ஆகாள்.]

நற்றாய் அறத்தொடு நிற்றலின், தமர்பின் சேறலைத் தலைவி கண்டு உரைத்தல் :

உவலைப் பதுக்கை முரம்புசெல் லாமல் உலகமங்கை
தவலைத் தவிர்த்த தமிழ்த்தஞ்சை வாணன் தரியலர்போம்
கவலைக் கடத்துச் சிலைத்திரை கோலிக் கடும்பகழித்
தவலைப் படைக்கடல் தோன்றல்பொற் றேர்வங்கம் சூழ்கின்றதே.

தஞ்சை 363

எனவும்,

[கற்குவியலும் மேடுமாய் வீணாகாமல் பண்படுத்திப் பூமிதேவியின் வருத்தத்தைப் போக்கிய வாணனுடைய பகைவர்கள் போகும் பிளவுபட்ட வழிகளை உடைய காட்டில், வில்லாகிய அலைகோலி அம்பாகிய திவலைகளை உடைய படையாகிய கடல், தலைவியை அழைத்துச் சென்ற தலைவனுடைய அழகிய தேராகிய மரக்கலம் தன் இடைப்படுமாறு சுற்றிக் கொள்கிறது ]

தமர் பின் சேறலைக் கண்டோர் இரங்கல் :

இருகுன்று அனைய இளமுலை மானுடன் ஏகும்இவன்
ஒருகுன்று எனநின்று உடலும்வெம் கூற்றம் அடல்குறித்து
வருகின்ற வான்தொடர் வேங்கையைப் போலும் மறவர்கெட்டேன்
அருகுஒன்ற நின்றுஇனி யார்தடுப் பார்என்று அறிகிலமே.

அம்பி. 423

எனவும்,

[தலைவியுடன் செல்லும் இத்தலைவன் ஒரு மலையைப் போல எதிர்த்து நின்று போராடும் எமனை ஒப்பான். இவனை எதிர்ப்பது கருதி வருகின்ற கூட்டமான வேங்கையைப்

போல வீரர்கள் வந்துள்ளனர். ' இருவருக்கும் அருகே போய் நின்று போர் நிகழாமல் தடுக்கக் கூடியவர் யாவர் இருத்தல் கூடும்?' என்பது நமக்குப் புலப்படவில்லையே.]

தலைவியைத் தலைவன் விடுத்து அகறல் :

கொடித்தேர் மறவர் குழாம்வெங் கரிநிரை கூடில்என்கை
வடித்தவேர் இலக்குஎளிதின் வாய்க்குஉத வாமன்னும் அம்பலத்தோன்
அடித்தே ரலர்என்ன அஞ்சுவன் நின்ஐயர் என்னின் மன்னும்
கடித்தேர் குழல்மங்கை கண்டிடுஇவ் விண்தோய் கனவரையே.

திரு. 216

எனவும்,

[தலைவியே! மறவர்கூட்டமாகிய யானைகள் என்னை வந்து அணுகின், என் அம்புக்கு எளிதில் இலக்காகி அழிந்து விடும். உன் தமையன்மார் வரின், சிவபெருமானுடைய திருவடிக்கண் ஈடுபடாதவர்களைப் போல அஞ்சுவேன். வானளாவிய இப்பெரிய மலையில் போரிட வருவார் யாவர்? என்பதைக் கண்டு சொல்.]

தமருடன் செல்பவள் அவன்புறம் நோக்கிக்
கவன்று அரற்றல் :

ஏமான் எனஅஞ்சும் எற்காத் தலின்அவ் இரவிபொன்தேர்
வாம்மானின்வாழ்வனவாகபன்னுள் தஞ்சைவாணன் ஒன்னார்
போம்மான் அதர்இடத்து என்னையர்தோன் றப்புறங்கொடுத்த
கோமான் மணிநெடுந் தேர்நுகம் பூண்ட குரகதமே.

தஞ்சை. 365

எனவும் வரும்.

[தஞ்சைவாணன் பகைவர் செல்லும் மான் அடிச் சுவட்டை உடைய வழியிலே என் தமையன்மார் வந்தாராக, அவருக்கு ஊறு செய்தல் கூடாது என்ற பெருந்தன்மையால்

புறம்கொடுத்து அகன்ற என் தலைவனுடைய தேர் நுகத்தில் பூட்டிய குதிரைகள், அம்புபட்ட மான் போல, தலைவனுக்கும் என் தமையன்மாருக்கும் நேரக்கூடிய தீங்குபற்றி அஞ்சிய என் துயரத்தைப் போக்கியதால், சூரியன் தேரில் பூட்டப்பட்ட குதிரைகளைப் போல நீடு வாழ்க.] 175

## சான்றோரை முன்னிட்டு வரைதல்

548 தன்ஊர் வரைதலும் தன்மனை வரைதலும்
என்னும்இவ் விரண்டுஒழித்து எவற்றினும் கிழவோன்
அந்தணர் சான்றோர் முன்னிட்டு அருங்கலம்
தந்தனன் வரைதல் தகுதி என்ப.

இஃது இவ்வகை வரைவு ஒழித்து எவ்வகை வரைவின்கண்ணும் நிகழும் திறன் கூறுகின்றது.

(இ-ள்) உடன்போய்த் தன் ஊரின்கண்ணே வரைதலும் மீண்டுவந்து தன் மனையின்கண்ணே வரைதலும் ஆகிய இரண்டும் ஒழித்து அல்லாத எல்லாவரைவின்கண்ணும் தலைமகன் அந்தணரையும் சான்றோரையும் முன்னிட்டு அருங்கலம் கொடுத்து வரைதல் உலகியற்கை என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

இவ்வாறு வரைந்துகொண்டுழிக் கண்டோர்
மகிழ்ந்து கூறல் :

பூரண பொற்குடம் வைக்க மணிமுத்தம் பொன்பொதிந்த
தோரணம் நீடுக தூரியம் ஆர்க்கதொன் மால்அயற்கும்
காரணன் ஏர்அணி கண்ணுதலோன்கடல் தில்லைஅன்ன
வார்அண வும்முலை மன்றல்என்று ஏங்கும் மணமுரசே.

திரு. 296

எனவரும். 176

[திருமாலுக்கும் பிரமனுக்கும் ஆதிகாரணனாய நெற்றிக் கண்ணனுடைய கடலை அடுத்த தில்லைஅன்ன தலைவியின் திருமணத்தின்போது பூரணகும்பங்கள் வைக்கப்பட, தோரணங்கள் தொங்கவிடப்பட, வாத்தியங்கள் ஒலிக்கப்பட மணமுரசம் முழங்கப்படும்.]

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 199

'கண்டுவந்து எதிர்கொளல் களித்தனராய்த் தமர்
கொண்டுஅகம் புகுதல் குழீஇய கொள்கையர்
கொடுப்பக் கோடலின் குறித்ததுஓர் மூன்றும்
வடுத்தவிர் வனவாம் வரைந்துகொள் வகையே.'
மா. அ. 81

'குலன்எதிர் கோடல் கொண்டுஅகம் புகுதல்
கலன்அணிந் தனராய்க் கோலம் காண்டல்
கொணர்ந்து அழல் சான்றாய்க் கொடுப்பக் கோடல்
மணந்தவர் அணிதனைக் கண்டோர் மகிழ்தல்
வடமீன் கண்டுமண அறைபுக வாழ்த்தல்
அருமறைச் சடங்கிற்கு அமைத்த தருப்பையை
மருமலர்த் தாரோன் மனத்துஉற நகுதல்
ஆங்குஅதை இறைவிக்கு அவன்தெளித்து உரைத்தல்
பாங்குஉடைப் பாங்கிகை யடைபணிப் பதனொடு
மன்பார் புகழ்தர வரைந்துகோ டலின்விரி
ஒன்பான் ஆகும் உணர்ந்துணர்த் துகிலே.' மா.அ.82

மணஞ்சிறப்பு உரைத்தல் என்ற தலைப்பில் திருக்கோவையாரும் முத்துவீரியமும் கூறுவன, இந்நூலிலும் நம்பியகப்பொருளிலும் இல்வாழ்க்கையின் விரியாய் உள்ளமை குறித்து உணரத்தக்கது. 176

# கற்பியற் செய்தி

## கற்பின் பொது இலக்கணம்

549 **பொற்புஅமை சிறப்பின் கற்புஎனப் படுவது
மகிழ்வும் ஊடலும் ஊடல் உணர்த்தலும்
பிரிவும் பிறவும் மருவிய தாகும்.**

இது நிறுத்தமுறையானே களவு என்னும் கைகோள் உணர்த்தி வரைவின் வழித்தாகிய கற்பு உணர்த்துவான் புகுந்தவற்றுள், இஃது அதன் பொதுஇலக்கணம் உணர்த்து கின்றது.

(இ-ள்) பொலிவு அமைந்த சிறப்பினை உடைய கற்பு என்று சொல்லப்படுவது உள்ள மகிழ்ச்சியும் ஊடலும் ஊடல் உணர்த்தலும் பிரிவும் பிறவும் பொருந்தியதாகும் என்ற வாறு.

பிரமம் முதலியனவும் கற்பு ஆதல் ஒக்குமேனும், கந்த ருவம் போல ஒத்த அன்புடையர் ஆதல் ஒருதலை அன்மை யின் அவை கைக்கிளை பெருந்திணைப்பாற்படுதலின், அவை போலாது, சிறந்த அளவு இல் இன்பத்து ஐந்திணை மருங் கின் கற்பு என்பார், 'பொற்புஅமை சிறப்பின் கற்பு எனப் படுவது' என்றார்.

அஃதாவது, 'கொண்டானின் சிறந்ததெய்வம் இன்று' எனவும் 'அவனை இன்னவாறே வழிபடுக' எனவும் இருமுது குரவரானும், அந்தணர் திறத்தும் சான்றோர் தேத்தும் ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் ஒழுகும் ஒழுக்கம் தலைவனு னும் கற்பித்தவாறு ஒழுகுதலாம். இனித்தலைமகனும், களவின்- கண் ஓரையும் நாளும் தீது என்றதனைத் துறந்து ஒழுகிறற்-

போல ஒழுகாது, ஒத்தினும் கரணத்தினும் யாத்த சிறப்பு இலக்கணங்களைக் கற்பித்துக்கொண்டு, துறவறத்தில் செல்லும் துணையும் இல்லறம் நிகழ்த்தலும் ஆம். 'பிற' என்றதனால், பிரிந்துழிவரும் விகற்பம் எல்லாம் கொள்ளப்படும். 177

## விளக்கம்

நிறுத்தமுறை — 'அளவுஇல் இன்பத்து ஐந்திணை'
இ. வி. பொ. 24

என்ற நூற்பா.

பிரமம் முதலிய நான்கும் தொடக்கத்தில் பொருந்தாக் காமமாக இருந்து, பின் பொருந்தும் காமம் ஆகியன.

அசுரம் முதலிய மூன்றும் முன்னர் ஒருதலைக்காமமாக இருந்து பின் அன்புடைக்காமம் ஆகியன. தொடக்கம் முதல் அன்புடைக்காமம் ஆயினது கந்தருவ ஒழுக்கத்தோடு ஒருபுடையான் ஒத்த ஐந்திணைக்காமம் ஆதலின், ஐந்திணைமருங்கின் கற்பே சிறந்தது என்பது.

அந்தணர்—நீத்தார்; சான்றோர்—கல்வி அறிவு ஒழுக்கங்களான் அமைந்தார்; ஐயர் — தலைவர்களாகிய அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முன் முதலாயினோர்; அமரர்—தேவர்.

மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்
துறந்த ஒழுக்கம் கிழவோற்கு இல்லை.
தொல். பொ. 135

ஆதலின், தலைவன் களவுஒழுக்கத்தில் ஓரையும் நாளும் பாரான் என்பது.

இங்குக் குறிக்கப்பட்டுள்ள கற்புப்பற்றிய விளக்கம் நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பொருட்படலம் 142 ஆம் நூற்பாவில் குறிப்பிட்டுள்ள செய்தியேயாம்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 200, மு வீ. கற். 1

'மறைவெளிப் படுதலும் தமரின் பெறுதலும்
இவைமுத லாகிய இயல்நெறி திரியாது
மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்புஎனப் படுமே.'

தொ. பொ. 499

'கற்புஎனப் படுவது கற்பினை வழுவாது
தற்கொண் டானையும் தன்னையும் பேணி
இல்லறத்து ஒழுகும் இல்லறக் கிழத்தி
நல்லறத் தவர்மதி நன்மாண் பதனொடும்
மகிழ்ச்சியும் ஊடலும் ஊடல் உணர்த்தலும்
இகழ்ச்சியில் பிரிவுடன் பிறவும் இயன்ற
புகழ்ச்சியின் எய்திஇல் பொருந்துவது ஆகும்.'

மா. அ. 97

177

## கற்பின் கிளவித் தொகை

550 இல்வாழ்க் கையே பரத்தையின் பிரிவே
ஓதல் பிரிவே காவல் பிரிவே
தூதில் பிரிவே துணைவயின் பிரிவே
பொருள்வயின் பிரிவுஎனப் பொருந்திய ஏழும்
வளம்மலி கற்பின் கிளவித் தொகையே.

இது கற்பு என்னும் கைகோளின் கிளவித்தொகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ற்) இல்வாழ்க்கை முதலாகப் பொருள்வயின் பிரிதல் ஈறுகச் சொல்லப்பட்ட ஏழும் கற்பு என்னும் கைகோளின் கிளவித் தொகையாம் என்றவாறு. 178

## விளக்கம்

திருமணம் செய்து கொள்வது இல்வாழ்க்கை நடத்தித் துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் துணையாகித் தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்னும் ஐம்புலத்து ஆறு ஓம்புதலாதலின், திருமணத்தை அடுத்து வரும் கற்பின் முதல்கிளவியாக இல்வாழ்க்கை கூறப்படுகிறது. இவ்வில்வாழ்க்கையை 'மணம் சிறப்பு உணர்த்தல்' என்று திருக்கோவையாரும் முத்துவீரியமும் குறிப்பிடும்.

> 'உடம்பொடு உயிரிடை என்ன மற்றன்ன
> மடந்தையொடு எம்மிடை நட்பு.' குறள். 1122

என்ற குறளிலே தலைவி உடலாகவும் தலைவன் உயிராகவும் கொள்ளப்படுவதன் சிறப்பு, தனிநிலையில் உடலும் உயிரும் அஃறிணை; இரண்டும் சேர்ந்த அளவிலேயே உயர்திணை; அதுபோல, தனி நிலையில் தலைவனோ தலைவியோ சமுதாயத்திற்கு உதவுதல் இயலாது; இருவரும் கூடியவழியேதான் உதவுதல் இயலும் என்பதாகும். இதனால் கற்புக்காலத்தின் அடிப்படைக் கடமை இல்வாழ்க்கையாதல் தேற்றம்.

பரத்தையின் பிரிவு

'காதல் பரத்தை நால்வர்க்கும் உரித்தே' (இறை. அக. 40) என்ற நூற்பா உரைகளைக் கீழ்க் காண்க :

காதலிக்கப்பட்ட பரத்தையின் பிரிவு எல்லா வருணத்தாருக்கும் உரித்து என்றவாறு.

தம்மைக் கண்டு காதலித்தார் என்பது அறிவர் அன்றே, அவர்தாம் பேரறிவினர் ஆகலான்? அன்னார்தாம் பின்னைத் தலையளியாது விடுவது அருள் அன்று; அதனால், அஃது எல்லாருக்கும் உரித்து என்பது கொள்க. இவ்வுரை பொருந்தாது; என்னை காரணம் எனின், மிக்காரைக் கண்டால் இழிந்தாரும் உயர்ந்தாரும் மற்றும் எல்லாரும் காதலிப்ப; அவர்மாட்டெல்லாம் பிரியல் வேண்டும். பிரியவே, எல்லாக் குற்றமும் தங்கித்

தலைமையொடு மாறுகொள்ளும். அல்லதூஉம் அன்பினுல் பிரியார், அருளினுல்பிரிவர் என்பதூஉம் சொல்லப்பட்டதாம். அதனுல், காதலித்தாள்மாட்டுப் பிரியும் பிரிவு அமையாது எனக்கொள்க.

இனி ஒரு திறத்தார் காதலைச் செய்யும் பரத்தை காதல்பரத்தை என்ப. என்னை காரணம் எனின், வைகலும் பாலே துய்த்துச் செல்வான் ஒருவன் இடைஇடை புளிங்கறியும் உண்டக்கால் ஆம் பாலின் விசேடம் அறிவானுவது. அதுவே போலத் தலைமகள் குணங்களைத் துய்த்துச் செல்லாநின்ருன் இடையிடை சிறுகுணத்தர் ஆகிய பரத்தையர்மாட்டுப் பிரிந்து வரத் தலைமகள்மாட்டுக் காதல் மிகும்; அல்லாவிட்டால், இவள் குணம் பொருவுஅரியது என்பது அறியலாகாது. என்னை? இன்னுதது ஒன்று உண்மையான், இனியதன் இன்பம் அறியப்படும் என்பது.

இவ்வுரையும் பொருந்தாது; என்னே காரணம் எனின், அவர் ஓதியைச் சார்த்திக் கொண்டுஅன்றே இவள் குணங்களைப் பெரிய என்பது அறியும் எனின், அவர்மாட்டுப் பிரியாது நின்றவிடத்து இவள்தன் குணங்களை மிக்கன கொல்லோ மிக்கில கொல்லோ என ஐயப்பட்டு நின்ருன் ஆகல் வேண்டும்; அங்ஙனம் ஆயின், ‘ தான் அவள் என்னும் வேற்றுமை இலர் ’ என்பதனோடு மாறுகொள்ளும்; என்னை ? தம் குணங்களை ஐயப்படுவார் இன்மையான் என்பது.

மற்று என்னே எனின், தலைமகனுல் காதலிக்கப்பட்ட பரத்தை எனக் கொள்க. அஃதே எனின், இவன் கண்டாரை எல்லாம் காமுறுவன் ஆகானே எனின், ஆகான். ஆகாதவாறு சொல்லுதும் :

தலைமகனுல் தலைநின்று ஒழுகப்படுவன தருமம், அருத்தம், காமம் என மூன்று. அம்மூன்றினையும், ஒரு பகலை மூன்று கூறிட்டு முதற்கண் பத்து நாழிகையும் அறத்தொடு

படச்செல்லும்; இடையன பத்து நாழிகையும் அருத்தத் தொடு படச் செல்லும்; கடையன பத்து நாழிகையும் காமத் தொடு படச்செல்லும். ஆதலான், முதற்கண் பத்து நாழிகை அறத்தொடு படச் செல்லும் தலைமகன், தலைமகளும் வேண் டவே, தானும் வேண்டிப் போந்து அத்தாணி புகுந்து அறம் கேட்பதும் அறத்தொடு படச்சொல்வதும் செய்யும்; நாழிகை அளந்துகொண்டு இடையன பத்து நாழிகையும் இறையும் முறையும் கேட்டு அருத்தத்தினெடு பட்டனவே செய்து வாழ் வானும்; அவ் அருத்தத்து நீக்கத்துக் கடையன பத்துநாழிகை யில் தலைமகள்உழைப் போதரும். போதர, அப்போதரவு பார்த்திருந்த பரத்தையர், குழல்ஊதி, யாழ்எழீஇத் தண் ணுமை இயக்கி முழவு இயம்பித் தலைமகனை இங்குக் கூத்து உண்டு என்று அறிவிப்ப. என்னை?

> ' குழல் எழீஇ யாழ்எழீஇத் தண்ணுமைப் பின்னர்
> முழவு இயம்ப லாமந் திரிகை.'

என்று கூத்து நூலுடையாரும் சொன்னர் என்பது.

அவ்வகை அறிவிக்கப்பட்ட தலைமகன் ' நாம் இதனை ஒரு கால் நோக்கிப் போதும் ' என்று செல்லும். சென்றக் கால், அவர்கள் தம்கண் தாழ்விப்பர் என்பது. அஃதே எனின் இவன் பரத்தையரைத் தலைமகளை எய்திஇருந்தே உடையன் ஆதல் எய்தாததன்முன் உடையன் ஆதல் இரண்டு அல்லது இல்லை; அவற்றுள், எய்திஇருந்தே உடையன் ஆயினனே எனின், ' தலைமகள் குணமேயும் அன்றிப் பிறவும் இன்பம் செய்வன உளவாகக் கருதினும். ஆகவே,

> கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்
> ஒண்தொடி கண்ணே உள. குறள். 1101

என்பதனொடு மாறுகொள்ளும் என்பது. இனி, தலைமகளை எய்தாத முன் உடையன் ஆயினானே எனின், இவன் கற்ற காலம் இன்றிக் காமத்துக் கண்ணே கெழுமி வருகின்றானும்; ஆகவே, நெறியால் வளர்ந்தான் அல்லன் ஆம் என்பது. மற்று என்னோ உரை எனின், தலைமகளை எய்தாத முன்னே பரத்தையரை உடையன் என்பது. எனவே, மேல்சொல்லப் பட்ட குறை எய்தாதோ எனின், எய்தாது; குரவர்கள் இவன் அறியாமையே இவள் உரிமை இது எனவும், மற்றும் எல் லாம் இவற்கு என்று வகுத்துவைத்துதாம் வழங்கித் துய்ப்ப என்பது; அவ்வகையே குரவர்களான் இவன் உரிமை என்றே வளர்க்கப்பட்டார் ஆகலான், தலைமகளை எய்துவதன் முன் உளன் என்பது. இவன் முன்னே தன் உரிமையாவது அறிந்த வாறு என்னை எனின், தலைமகன் தலைமகளை நீங்கித் தரும மும் அருத்தமும் உட்பட்டுத் தலைமகள்மாட்டுப் போதரு மிடத்து, அவர் முன் சொன்னவாறே குழலும் யாழும் தண் ணுமையும் முழவும் இயம்புப; இயம்பினஇடத்து இஃது என்னை' என்னும்; என்றக்கால், 'அது நின் உரிமையன்றோ?' என்ப; என்றார்க்கு, 'அஃது என் உரிமை ஆயினவாறு என்னை?' என்னும்; என்றவிடத்து, 'நின் குரவர்களான் நினக்கு உரிமையாக வழங்கப்பட்டார்' என்ப 'ஆயின், எம் குரவர் பணிமாறுகொள்ளல் ஆகாது' என்பதனால், காண்டற் குச் செல்லும்; சென்றானை அவர் தங்கண் நயப்பிப்ப என்பது. இது பரத்தையிற் பிரிவு நிகழுமாறு.

அஃதே எனின், மற்றைப்பிரிவு எல்லாம் வேண்டுக, ஆள்வினை மிகுதி உடைமையான்; இஃது எற்றிற்கோ வேண் டியது எனின், பரத்தையின் பிரிந்தான் தலைவன் என்றால் ஊடலே, புலவியே, துனியே என்று இவை நிகழும்; நிகழ்ந் தால், அவை நீங்கிக் கூடின இடத்துப் பெரியதோர் இன்ப மாம்; அவ்வின்பத்தன்மையை வெளிப்படுப்பன அவை எனக்கொள்க. மென்சுவைமேலே நடந்தான் ஓர் ஆசிரியன் ஆகலான், இப்பிரிவு வேண்டினான் என்பது. (இறை. அக. உரை)

'புணர்ந்துரை உலகியல் எனும் திறம் இரண்டினும்-தொல்லியல் வழாமல் சொல்லப்படும்' இலக்கியவழக்கிற்குப் பரத்தையிற் பிரிவு சுவைதருமேனும், உலகியலுக்கு ஏற்புடைத்தன்று என்பதனை வள்ளுவனார்,

> வரைவிலா மாணிழையார் மென்தோள் புரைஇலாப்
> பூரியர்கள் ஆழும் அளறு. குறள். 919
>
> இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
> திருநீக்கப் பட்டார் தொடர்பு. குறள். 920

என்று கூறியவாற்றானும், கம்பர் பெருமானும் தசரதன் 'தோய்ந்தே கடந்தான் திருவின்தொடர் போகப்பௌவம்' என்று சுட்டியவாற்றானும், சான்றோர் பிறர்கருத்துக்களானும் உணர்க.

ஓதற் பிரிவு.

தலைவன் ஓதற்குப்பிரியும் எனின், இவன் பொருஇறந்தான் என்பதனொடு மாறுகொள்ளும், என்னை? தலைமகளை எய்தி இருந்தே இவன் ஓதுவான் பிரிவான்எனின், முன் ஞானம் இலனும்; இலனாகவே, ஞானத்தின் வழியது ஒழுக்கம் ஆகலானும், ஒழுக்கத்தின் வழித்துத் தலைக்குலம் ஆகலானும் இவையெல்லாம் குறைபட்டானும் என்பது. அற்றன்று; பண்டே குரவர்களால் கற்பிக்கப்பட்டுக் கற்றான், அறம் பொருள் இன்பம் வீடுபேறுகள் நுதலிய நூல்கள் எல்லாம்; 'இனி, பரதேசங்களினும் அவை வல்லார் உளர்எனின், காண்பல்' என்று, வல்லார்கள் உள்வழிச்சென்று தன் ஞானம் மேற்படுத்து அவர் ஞானம் கீழ்ப்படுத்தற்குப் பிரியும் எனக் கொள்க. (இறை. அக. 35 உரை)

இனி, இல்லறத்தில் வாழும் தலைவன் பின்னர்ப்பின்பற்றுதற்குரிய வானப்பிரத்த சந்நியாச நிலைகளுக்கு வேண்டிய கல்வியை ஞானக்குரவர் வாயிலாகக் கற்றற்குப் பிரிவான் என்பது நச்சினார்க்கினியர் கருத்து. (தொல். பொ. 188 நச்.)

காவல் பிரிவு.

தலைவன் நாடுகாவலுக்குப் பிரியுமானின், அவன் நாட்டைப் பிறர் புகுந்து அலைப்பதும் கொள்வதும் செய்ய, அவரை நீக்குதற்கு நீங்கும் எனின், இங்ஙனம் பிறரால் இளிவந்தனசெய்து நலியப்படுமோனின், ஆண்மையில் குறைபட்டானும் என்பது. அற்றன்று;

நாடு காத்தற்குப் பிரியும் என்பது நலிவார் உளராக நலிவு காத்தற்குப் பிரியும் என்பது அன்று. நாட்டகத்து நின்றும் நகரகத்தும் தமக்கு உற்றது உரைக்கலாத மூத்தார்களும் பெண்டிர்களும் இருகைமுடவரும் கூனரும் குருடரும் பிணியுடையாரும் என இத்தொடக்கத்தார் தம்முறைக்கருமம் கேட்டுத் திருத்துதல் பொருட்டாகவும், காட்டகத்து வாழும் உயிர்ச்சாதிகள் ஒன்றனை ஒன்று நலிவன உளவாயினஇடத்துத் தீது என்று அவற்றை முறைசெய்வதற்கும், கொடிவலைப்பட்டுக் கிடந்தனவற்றைத் துறைநீக்குதல் பொருட்டாகவும், வளம் இல்வழி வளம் தோற்றுவித்தற் பொருட்டாகவும், தேவகுலமே சாலையே அம்பலமே என்று இத்தொடக்கத்தனவற்றை ஆராய்தற்கும், அழிகுடி ஓம்புதற்கும் பிரியும் என்பது. அல்லதூஉம், பிறந்தஉயிர் தாயைக்கண்டு இன்புறுவதுபோலத் தன்னால் காக்கப்படும் உயிர்வாழ் சாதிகள் தன்னைக்கண்டு இன்புறுதலின், தான் அவர்கட்குத் தன் உருக்காட்டுதற்கும், மாற்றரசர் ஒற்று வந்தஇடத்து அவர் முன்னர்த் தன்ஊக்கம் காட்டுதற்பொருட்டாகவும் பிரியும். அதனானே மாற்றரசரும் திறைகொடுப்பர் என்பது.

(இறை. அக. 35 உரை)

தூதின் பிரிவு.

சந்து செய்வித்தற்குப் பிரியுமோனின், தூதுவன் ஆயினானும்; தூதுவராவார் பிறருக்குப் பணிசெய்து வாழ்வாராவர்; அவரது பொருவிறப்பு என்னையோ என்பது அற்றன்று;

தலைவன் தூதுவர்போலச் சந்துசெய்வித்தற்குப் பிரியும் என்பது அன்று. இருவர் அரசர் 'நாளைப் பொருதும், இன்று பொருதும்' என்று முரண்கொண்டு இருந்த நிலைமைக்கண் தான் அருள்அரசன் ஆகலின், 'இம்மக்களும் இவ்விலங்குகளும் எல்லாம் பட, இவ்விரண்டு குலத்திற்கும் ஏதம்நிகழும்; அதனால் இப்போர் ஒழிப்பன்' என்று இருவரையும் இரந்து சந்து செய்வித்தலும் ஒன்று. அல்லதூஉம், தேவரும் அசுரரும் பொருத காலத்துத் தேவரையும் அசுரரையும் 'ஒருவீர் ஒருவீர் மிக்காரை ஒறுப்பல் யான்' என்று பாண்டியன் மாகீர்த்தி சந்துசெய்வித்ததுபோல, 'இருவரின் மிகைசெய்தீரை ஒறுப்பல்' என்று சந்து செய்வித்தலும் ஒன்று; இருவரையும் ஒறுக்கும்துணை ஆற்றலுடையனாகலான் என்பது. அஃதே எனின், தன்னகத்து இருந்து விட அமையாதோ, அன்ன ஆற்றலன் ஆகலான்? தான் செல்லவேண்டுமோ எனின், செல்லவேண்டும் என்பது; என்னை? காதலர்ப் பிரிந்து ஒருகருமம் முடிப்பதனின் மிக்க ஆள்வினை இல்லைஎன்பது. ஆதலால், பிரிந்தே சந்துசெய்விக்கும் என்பது.

(இறை. அக. 35 உரை)

துணைவயின் பிரிவு

தலைவன் வேந்தர்க்கு உற்றுழிப் பிரியுமே எனின், கருமச்சேவகன் ஆம்; கருமம் செய்வான் சேவகன் என்ப, இறப்பவும் இழிவந்ததோர் ஒழுக்கம். பிறர்குறிப்பன்றித் தன் குறிப்பு இல்லை எனப்படும்; ஆதலின், இவரது பொருவிறப்பு என்னையோ என்பது. அற்றன்று;

சேவகனாய்ப் பிரியும் என்பது அன்று; தனக்கு நட்டான் ஓர் அரசன் சென்றஇடத்து அவற்கு ஆய மறுதலையை வென்று நீக்குதற்குப் பிரியும் என்றுகொள்க.

(இறை. அக. 35 உரை)

பொருள்வயின் பிரிவு.

தலைவன் பொருள்வயின் பிரியுமே எனின், முன்னர்ப் பொருளிலன் ஆயினும்; ஆகவே. எள்ளுநர்ப் பணித்தலும் இரந்தோர்க்கு ஈதலும் என்னும் இவை எல்லாம் பொருட் குறைபாடு உடையார்க்கு நிகழாமையின், இக்குறைபாடு எல்லாம் உடையனும்; அவை உடையானது பொருவிறப்பு என்னையோ என்பது. அற்றன்று;

பொருட்பிணி என்பது பொருள் இலனாய்ப் பிரியும் என் பது அன்று. தன் முதுகுரவரால் படைக்கப்பட்ட பொருள் எல்லாம் கிடந்ததுமன். அதுகொடு துய்ப்பது ஆண்மைத் தன்மை அன்று எனத் தனது தாளாற்றலால் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியும் என்பது. அல்லதூஉம் தேவர் காரியமும் பிதிரர் காரியமும் தனது தாளாற்றலால் படைத்த பொருளால் செய்தன தனக்குப் பயன்படுவன; என்னை? தாயப்பொருளால் செய்தது தேவரும பிதிரரும் இன்புறர் ஆதலான், அவர்களையும் இன்புறுத்தற் குப் பிரியும் என்பது. (இறை அக. 35 உரை)

ஒத்த நூற்பாக்கள்

‘ஓதல் பகையே தூதுஇவை பிரிவே.’ தொல். பொ. 25
‘பொருள்வயின் பிரிதலும் அவர்வயின் உரித்தே.’ 33
‘காவல் பாங்கின் ஆங்கோர் பக்கமும்
பரத்தையின் அகற்சி’ 41
‘வேண்டிய கல்வி யாண்டுமூன் று இறவாது.’ 188
‘வேந்துறு தொழிலே யாண்டினது அகமே.’ 189
‘ஏனைப் பிரியும் அவ்வயின் நிலையும்.’ 190
‘பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே
நிலத்திரி பின்றுஅஃது என்மனார் புலவர்.’ 224
முழுதும் — ந. அ. 201

'ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க்கு உற்றுழி பொருட்பிணி பரத்தைஎன்று
ஆங்க ஆறே அவ்வயின் பிரிவே.' இறை அக. 35
மு. வீ. கற். 3

கற்பினுள் துறவே கடிவரைவு இன்றே! இறை, அக. 34

'பெருகும் இல் வாழ்க்கை பரத்தையின் பிரிதல்
செருவினுக்கு உற்றுழிச் செல்வ துடனே
பொருவில் புரத்தலின் பொருள்வயின் பிரிதல்
தூதில் பிரிதல் சுருதி முதலிய
ஓதப் பிரிதலோடு ஓரேழ் என்ப
கிளந்த கற்பின் கிளவித் தொகையே.' மா. அ. 98

178

## இல்வாழ்க்கையின் வகை

551 கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி
பாங்கி மகிழ்ச்சி செவிலி மகிழ்ச்சிஎன்று
ஈங்குநால் வகைத்து இல்வாழ்க் கையே.

நிறுத்தமுறையானே இல்வாழ்க்கை கூறுவனவற்றுள், இஃது அதன்வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) கிழவோன் மகிழ்ச்சி முதலாகச் செவிலி மகிழ்ச்சி ஈறுகச்சொல்லப்பட்ட நாலுவகையினை உடைத்-தாம, இல்வாழ்க்கை என்றவாறு. 179

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ 202

'இறைவன் மகிழ்ச்சி இறைமகள் மகிழ்ச்சி
நிறைபயில் செல்வி நீதியின் மகிழ்ச்சிஎன்று
இயம்பிய நால்வகைத்து இல்வாழ்க் கையே.'
மா. அ. 98

179

## இல்வாழ்க்கையின் விரி

552 தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தலும்[1]
தலைவனைப் பாங்கி வாழ்த்தலும்[2] தலைவியை
வரையும்நாள் அளவும் வருந்தாது இருந்தமை
உரையாய் என்றலும்[3] பெருமகள் உரைத்தலும்[4]
தலைவனைப் பாங்கி வரையும்நாள் அளவும்
நிலைபெற ஆற்றிய நிலைமை வினதலும்[5]
மன்றல் மனைவரு செவிலிக்கு இகுளை
அன்புற உணர்த்தலும்[6] வாழ்க்கைநன்று அறைதலும்[7]
மணமனைச் சென்று வந்த செவிலி
பொற்றொடி கற்பியல் நற்றாய்க்கு உணர்த்தலும்[8]
நன்மனை வாழ்க்கைத் தன்மை உணர்த்தலும்[9]
அன்னவர் காதல் அறிவித் தலும்[10] என
இன்னவை பத்தும்இல் வாழ்க்கை விரியே.

இஃது இல்வாழ்க்கை விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல் முதலாக அன்னவர் காதல் அறிவித்தல் ஈறுகச் சொல்லப் பட்ட பத்தும் இல்வாழ்க்கை விரியாம் என்றவாறு.

### விளக்கம்

1 'உன் உதவியால் அன்றோ நான் இவளை அடைந்தேன்!' என்று பாங்கியைத் தலைவியின்முன் தலைவன் புகழ்தல்

2 தலைவியை மணந்து நலம் செய்தமை குறித்துத் தலைவனைப் பாங்கி வாழ்த்துதல்.

3 தன் திருமணநாள் வரும்வரை அவள் வருந்தாது இருந்-ததன் காரணத்தைத் தோழி வினவுதல்.

4 'தலைவனது கருணை எனக்கு இன்பத்தையே அளித்து வந்தமையால் வருத்தாது இருந்தேன்' என்று தலைவி பாங்கிக்கு கூறுதல்.

5 பாங்கி தலைவனை நோக்கி 'நின் திருமணநாள் வரும் அளவும் யாங்கனம் வருந்தாது இருந்தாய்? என்று வினவுதல்.

6 தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் மணமனைக்கு வந்த செவிலியை நோக்கிப் பாங்கி அவ்விருவருடைய காதல் சிறப்பையும் எடுத்துஉரைத்தல்.

7 அவர்தம் இல்வாழ்க்கை சிறப்புற்று இருக்குமாற்றைத் தோழி செவிலிக்குக் கூறுதல்.

8 செவிலி தன் மனைக்கு மீண்டு வந்து தலைவியின் நற்றுயிடம் அவளது கற்பியல்பைப் பாராட்டிக் கூறுதல்.

9 செவிலி தலைவி இல்லறம் நடத்தும் வனப்பினை நற்றுயிடம் பாராட்டி உரைத்தல்.

10 செவிலி தலைவன்தலைவி என்ற இருவருடைய காதல் சிறப்பையும் நற்றுயிடம் பாராட்டிக் கூறுதல்.

## ஒத்த நூற்பாக்கள்

'மணமுரசு கூறல் மகிழ்ந்துரைத் தல்லொடு
வழிபாடு கூறல் வாழ்க்கைநலம் கூறல்
காதல்கட் டுரைத்தல் கற்புஅறி வித்தல்
கற்புப் பயப்பு உரைத்தல் காதல்மருவு உரைத்தல்
கலவி உரைத்தல் கருதிய ஒன்பதும்
நலம்மிகு மணம்இவை நாடும் காலே.' திருக்கோவை.

மு. வீ. கற். 2

முழுதும் — ந. அ. 203

'இறைவன் இறைவிமுன்பு இகுளையைப் புகழ்தலும்
இறைவனை இகுளை இன்புற்று வாழ்த்தலும்
வரையும் துணையும் வருந்தாது இருந்தமை

உரைஎன்று இருளை ஒண் ணுதலை வினுதலும்
ஒண் ணுதல் உணர்த்தலும் அண்ணலைப் பாங்கி
மடந்தையை வரையும்நாள் அளவும் திடன்பெற
ஆற்றிய நிலைமை அதனை வினுதலும்
திருமனை வந்த செவிலிக்கு இருளை
இருவர் அன்பும் எழில்பெற உணர்த்தலும்
நயந்தஇல் வாழ்க்கைநன்கு இயம்பலும் நன்னுதல்
பயந்தநற் றாய்க்குஅவள் சென்றுஅதைப் பகர்தலும்
என்னும்ஐ யிரண்டும் இல்வாழ்க்கை விரியே.'

மா. அ. 100]

தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல் :

அந்நாள் முதல்இன்று அளவுஉள வாய அரும்படர்போய்ப்
பொன்ஆர் அமளி பொருந்தினம் யாம்பொருந் தாதவர்முன்
இன்னா அரும்பிணிக்கு இனிமருந் தாக இடைநின்றுநீ
முன்னாள் முயன்ற முயற்சிஇவ் வாறு முடிந்ததுவே.

அம்பி. 435

எனவரும்.

[அன்றுமுதல் இன்றுவரை களவு ஒழுக்கத்தான் உண்டாகிய நினைவுமிகும் நோய்தீரப் பொன்மயமான படுக்கையில் யாங்கள் பிணைந்துவிட்டோம். பகைவர்கள் தந்த கொடிய நோய்களுக்கு எல்லாம் இனிய மருந்தாகுமாறு, தலைவிக்கும் எனக்கும் இடைநின்று நீ இதுவரை முயன்ற முயற்சி இவ்வாறு முடிந்துள்ளது.]

ஒன்றெனை முடித்தலால் தலைவனைப் பாங்கி புகழ்தலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள் :

பனிநின்ற சோலைப் பலவுச் சினைகலை பாய்ந்துஉகளக்
கனிநின்று நீளும் கணமலை நாட களைக்கரும்பை

நுனிநின் றருந்திய துஒக்கும்என் றேமின் நுடங்குஇடையாள்
துனிநின்ற நாணம் தடுக்கநின் னோடு தொடுத்தஅன்பே.
அம்பி. 436

எனவரும்.

[குளிர்ந்த சோலையில் பலாமரக் கிளைகளிலே ஆண் குரங்குகள் பாய்ந்து கூத்தாடுவதால் கனிகள் காம்பு நீண்டு தொங்கும் பலவாகிய மலைநாடனே! மின்னலைப்போல அசையும் இடையினை உடைய தலைவி காமத்துன்பம் நின்று நாணத்தைத் தடுக்க உன்னோடு கொண்ட அன்பு, கரும்பை நுனியிலிருந்து அடிநோக்கித் தின்பதைப்போல, முன் உப்புக்கறித்துப் பின் தொடர்ந்த தித்திப்பை நல்குவதாயிற்று.]

தலைவனைப் பாங்கி வாழ்த்தல் :

தேற்றிய வஞ்சினம் பொய்யா வகைநின் திருப்புயத்தில்
ஏற்றிய தொங்கல் இவள்குழற்கு ஏற்றி இலங்குஇழையார்
தூற்றிய போல வரும்தொலை யாஎன்கண் சோர்புனலும்
மாற்றிய எம்பெரு மான்வாழி வாழி வளம்சிறந்தே.
அம்பி. 434

எனவும்,

[நீ தெளிவித்த சூளுறவு தவறாதபடி காத்து உன் மார்பில் நீ சூடிய மாலையை இவள் கூந்தலில் முடித்து, ஊர்மகளிர் தூற்றும் அலர்போல என் கண்களிலிருந்து இடைவிடாது வந்த கண்ணீரையும் போக்கி, எனக்குச் சிறப்புத் தந்த எம்பெருமான்! நீ நாளும் வளம் சிறந்து வாழ்க.]

வரையும் நாள் அளவும் வருந்தாது இருந்தமை
பாங்கி தலைவியை வினாதல் :

தினைக்காவல் மாறி மலைக்கும்வெம் போர்வெஞ் சிலைக்குறவர்
மனைக்கா வலில்தனி வைகிய நாளும் வரைவுஇடைவைத்து

உனைக்கா தலர்விட்டு உறைந்தஅந் நாளும் ஒளித்ததுஎங்கே
சுனைக்காவி அன்னகண் ணாய்தொலையா நலம்துய்க்கும்அன்பே.

அம்பி. 439

எனவும்,

[காவிக்கண்ணாய்! பகலிலே தினைப்புனத்தைக் காக்கும் காவல் நீங்கிக் குறவர்மனையில் இற்செறிக்கப்பட்டு நீ தனியே வைகிய நாள்களிலும், தலைவன் வரைவு இடைவைத்துப் பொருள்வயின் பிரிந்த அந்நாள்களிலும், உன் குறையாத நலத்தைத் தலைவன் துய்க்கும் அன்பு உனக்கு எங்கே சென்று ஒளித்தது?.]

தலைமகள் வருந்தாது இருந்ததற்குக் காரணம் கூறல் :

பாங்காய இன்பப் பணிமொழி யாய்இப் பரிசுநெஞ்சில்
தாங்கா வருநலம் தாங்கஅரி தோ தலை நாள்அளித்த
பூங்காவி உண்டு புரவலர் தாம்வந்து இரவுபகல்
நீங்காத நெஞ்சம்உண்டு என்தஞ்ச மாகிய நீயும்உண்டே.

அம்பி. 440

எனவும்,

[எனக்குத் துணையாகிய இன்பம்தரும் இனியமொழியை உடைய தோழியே! இவ்வாறு மனம் தாங்கமுடியாமல் வரும் தலைவன் அன்பினைப் பிரிவிடத்துத் தாங்குதல்அரிதோ? தலைவன் முதல்நாள் அளித்த கருங்குவளைப் பூவும், தலைவன் இரவுபகல் வந்து என்பால் இடம்கொண்டதால் அவனை நீங்காத மனமும், எனக்குப் பற்றுக்கோடாகிய நீயும் வருந்-தாது காத்தலை அறிக.]

பாங்கி தலைவனை வரையும் நாள் அளவும் நிலைபெற
ஆற்றிய நிலைமை வினுதல் :

முருகுஅவிழ் மூழ்குழல் மோந்துஅவள் ஏந்து முலைபுளகித்து
உருக முயங்கி மயங்கியும் நீர்உல வாதஇன்பம்
பெருகுவது அன்றி அலம்பிற வாபின்னை யான்நுமக்குஇங்கு
அருகிய நாள்என்செய் தீஐய னேஇந்த அன்புகொண்டே.

எனவும்,

அம்பி. 438

[ஐயனே! தலைவியின் மணம் நாறும்கூந்தலை மோந்து அவள் நகில் தடத்தில் முழுகி மயங்கி நீ இன்பம்பெற்ற நாள்களைத் தவிர்ந்து, இக்களவொழுக்கத்திற்கு இடையீடு வர, யான் உமக்குத் தலைவி அரியளாமாறு செய்வித்த நாட்களில், இத்தகைய பிரிதல் ஆற்றாத அன்புகொண்டு நீ எவ்வாறு ஆற்றி இருந்தாய்?]

பாங்கி மனமனைச் சென்ற செவிலிக்கு இருவர் அன்பும் உரைத்தல்:

சீர்இயல் ஆவியும் யாக்கையும் என்னச் சிறந்தமையால்
கார்இயல் வாள்கண்ணி எண் அகலார்கம லம்கலந்த
வேரியும் சந்தும் வியல்தந் தெனக் கற்பின் நிற்பர் அன்னே
கார்இயல் கண்டர்வண் தில்லை வணங்கும் எம் காவலரே.

திரு. 30

எனவும்,

[அன்னே! நீலகண்டனை சிவபெருமானுடைய தில்லையை வணங்கும் எம் தலைவன், தலைவியும் தானும் உடலும் உயிரும் போலச் சிறந்தமையால், வாள்போன்ற கூரிய கருங் கண்ணியாம் தலைவியின் எண்ணத்தை விட்டு நீங்கான். தாமரைப் பூவைச் சேர்ந்த தேனும் சந்தனமரமும், இடத்து நிகழ்பொருளும் இடமுமாய் இயைந்து தம் பெருமையைப் புலப்படுத்திநிற் போல, இயைந்து இல்வாழ்க்கைக்கு ஏற்பச் சிறப்பாக உள்ளனர்.]

பாங்கி செவிலிக்கு இல்வாழ்க்கை நன்று உணர்த்தல்:

பால்நாறு அடிசிலும் ஊன் ஆர் கொழுங்குறைப் பாகுப் உற்ற
தேன் ஆர் கருனையும் தீம்புளிப் பாகும்நின் சேயிழையாள்
ஆறுத அன்பின் அமைத்துஇமிழ் வாரி அமிழ்தின்அன்பன்
தான் ஆர நல்கி அகம்மகிழ் கூரும் தகுதியளே.

அம்பி. 445

எனவும்,

[தாயே! நின்மகள் பால்உணவும் ஊன்அடிசிலும் இனிய பொரிக்கறியும் இனிய புளிக்குழம்பும், குறையாத அன்பினோடு சமைத்துப் பாற்கடலில்இருந்து எடுத்த அமுதத்தைப் போலத் தன் அன்புறுகிய தலைவன் உண்ணப் படைத்து, அதுகண்டு மனம் மகிழும் சிறப்பினள்.]

மணமனைச் சென்றுவந்த செவிலி பொற்றொடி
கற்பியல் நற்றாய்க்கு உணர்த்தல் :

அருந்தும் பசியும் அடுமணல் சோறும் அயர்த்து இறைவன்
வருந்தும் பசிக்கு வருந்துமில் வாழ்க்கையும் வேட்கையுடன்
பொருந்தும் விருந்தும் புறந்தரு நீர்மையும் போற்றிஅவன்
திருந்தும் திறம்செய லும்கற்ற வா நின் திருமகளே.

அம்பி. 446

எனவும் வரும்.

[உன் அழகியபெண் தான் உண்ணவேண்டும்என்று கருதும் பசிஉணர்ச்சியையும் மணல்சோறு அடும் விளையாட்டையும் விடுத்துக் கணவன் வருந்தும் பசியைத் தீர்க்கச் சமைக்கும் இல்வாழ்க்கையையும், விருப்பத்தோடு பொருந்தும் விருந்து புறந்தருதலையும், தலைவன் விரும்பும் செய்கைகளையே தான் செய்யும் செயலையும் எவ்வாறு இவ்வளவு விரைவில் கற்றுவிட்டாள் என்பது வியப்பாகஉள்ளது.!]

ஒன்றெனை முடித்தலால், கற்புப்பயந்த அற்புதம்
உரைத்தலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள் :

சிறப்பம் திகழ்தரு திண்மதில் தில்லைச்சிற் றம்பலத்துப்
பொன்பந்தி அன்ன சடையவன் பூவணம் அன்னபொன்னின்
கற்புஅந்தி வாய்வட மீனும் கடக்கும் படிகடந்தும்
இல்பந்தி வாய்அன்றி வைகல்செல் லாதுஅவன் ஈர்ங்களிறே.

திரு 305

எனவரும்.

[சிற்பங்கள் திகழும் மதிலை உடைய சிற்றம்பலத்தில் எழுந்தருளியிருக்கும் செக்கர் சடையானுடைய பூவணம் என்ற ஊரை ஒத்த இயற்கை வனப்புடைய தலைவியின் கற்பு அருந்ததியின் கற்பையும் விஞ்சியது நாட்டை வீட்டுப் பிரிந்துபோயினும், தலைவன் ஊரும் களிறு, மாலையில் தன் வீட்டுக் கட்டுத்தறியில் அன்றி வேற்றிடத்தில் நின்று தங்காது.]

செவிலி நற்றாய்க்கு நன்மனை வாழ்க்கை உணர்த்தல் ;

தொண்டுஇனம்மேவும்சுடர்க்கழலோன்தில்லைத்தொன்னகரில்
கண்டஇல்நம் மேவும்இல் நீஅவள் நின்கொழு நன்செழுமென்
தண்டுஇனம்மேவுதிண்தோளவன்யான் அவள்தற்பணிவோள்
வண்டுஇன மேவும் குழலாள் அயல்மன்னும் இவ்வயலே.

திரு. 302

எனவும்,

[அடியார் கூட்டம் தன்னைச் சூழ்ந்திருக்கும் திருவடிகளை உடைய சிவபெருமானுடைய தில்லைநகரில் யான் கண்ட தலைவியது வீடு நாம் இருக்கும் வீட்டை ஒக்கும்; அவள் உன்னை ஒக்கும்; தலைவன் நின் கணவனை ஒப்பான்; தோழி என்னை ஒத்துக் காணப்படுகிறாள்; வண்டு தங்கும் கூந்தலாளாகிய தலைவியின் அயல்வீட்டார் நம் அயல்வீட்டாரைப் போல அன்புடன் பழகி வருகின்றனர்.]

செவிலி நற்றாய்க்கு இருவர் காதலும் அறிவித்தல் :

மன்னவன் தெம்முனை மேல்செல்லும் ஆயினும் மால்அரிஏறு
அன்னவன் தேர்புறத்து அல்கல்செல் லாது வரகுணனும்
தென்னவன்ஏத்துசிற்றம்பலத்தான்மற்றைத்தேவர்க்கெல்லாம்
முன்னவன் மூவல்அன் னாளும்மற் றோர்தெய்வம் முன்னலளே.

திரு. 306

எனவும் வரும்.

[அரசனுடைய ஆணையால் தலைவன் போர்முனைக்குச் செல்லும் நிலை ஏற்பட்டாலும், தலைவனுடைய தேர் தன்நிலையின்கண் அன்றி வெளிஇடத்துத் தங்காது. வரகுணனாகிய பாண்டியன் வழிபடும் சிற்றம்பலத்தானாகிய, மற்ற தேவர்களுக் கெல்லாம் முற்பட்ட சிவபெருமானின் மூவல் என்ற ஊரை ஒத்த இயற்கை வனப்புடைய தலைவியும் தலைவனைத் தவிர வேறு ஒரு தெய்வத்தையும் தெய்வமாகக் கருதாள்.]

இவற்றுள், தலைவன் தலைவிமுன் பாக்கியைப் புகழ்தலாகிய ஒன்றும் கிழவோன் மகிழ்ச்சிக்கும், தலைவனைப் பாங்கி வாழ்த்தல் முதலாகச் செவிலிக்கு வாழ்க்கை நன்று அறைதல் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறனுள் பெருமகள் உரைத்தல் ஆகிய ஒன்றும் கிழத்தி மகிழ்ச்சிக்கும், மற்றவை பாங்கி மகிழ்ச்சிக்கும், செவிலி நற்றாய்க்குத் தலைமகள் கற்பியல் உணர்த்தல் முதலாகிய மூன்றும செவிலி மகிழ்ச்சிக்கும் உரியவாம்.] 180

### பரத்தையின் பிரிவின் வகை

553 வாயில் வேண்டல்[1] வாயில் மறுத்தல்[2]
வாயில்நேர் வித்தல்[3] வாயில் நேர்தல்[4] என்று
ஆய பரத்தையின் அகற்சிநால் வகைத்தே.

(இ-ள்) வாயில் வேண்டல் முதலாக வாயில் நேர்தல் ஈறாக நான்கு வகையினை உடைத்தாம் பரத்தையிற்பிரிவு என்றவாறு. 181

### விளக்கம்

1 பரத்தையின் பிரிந்து வந்த தலைவன் தலைவியை அடைவதற்கு வாய்ப்பினை வேண்டுதல்.

2 தலைவன் விருப்பிற்கு இணங்குதற்குத் தலைவி மறுத்தல்.

3 தோழி முதலிய தூதுவர்கள், தலைவியிடம் தலைவன்

செயல்பற்றி வெகுளாது அமைதியுறுமாறு ஏதுக்கள் பலகாட்டி, அவள் உடன்பட முயலுதல்.

4 வாயிலோர் வேண்டியாங்குத் தலைவி வெகுளி நீங்கித் தன் இல்லத்திற்குத் தலைவன் வருதற்கு இசைதல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 204

'வாயில் வேண்டல் மறுத்தல்நேர் வித்தல்
நேயம் அதனொடு நேர்தல்என்று உரவோன்
ஆய்ந்துஉரை பரத்தையின் அகற்சிநால் வகைத்தே.'

மா. அ. 101

181

## உணர்த்த உணரும் ஊடலின் விரி

554 காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு
ஏதுஈ தாம்இவ் விறைவிக்கு என்றலும்[1]
தனித்துழி இறைவி துனித்துஅழுது இரங்கலும்[2]
ஈங்குஇது என்எனப் பாங்கி வினாதலும்[3]
இறைமகன் புறத்துஒழுக்கு இறைமகள் உணர்த்தலும்[4]
தலைவியைப் பாங்கி கழறலும்[5] தலைவி
செவ்வணி அணிந்து சேடியை விடுப்புழி
அவ்வணி உழையர்கண்டு அழுங்கக் கூறலும்[6]
பரத்தையர் கண்டு பழித்தலும்[7] பரத்தையர்
உலகியல் நோக்கி விடுத்தலின் தலைவன்
வரவுகண்டு உவந்து வாயில்கள் மொழிதலும்[8]
வரவுஉணர் பாங்கி அரிவைக்கு உணர்த்தலும்[9]
முதிரா மென்முலை எதிர்கொண்டு பணிதலும்[10]
புணர்ச்சியின் மகிழ்வும்[11] என்று உரைத்தபன் னொன்றும்
உணர்த்த உணரும் ஊடற்கு உரிய.

இஃது இளைய கலாம் ஆகிய ஊடல் விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு ஏது ஈதாம் இவ்விறைவிக்கு என்றல் முதலாகப் புணர்ச்சியின மகிழ்தல் ஈருகச் சொல்லப்பட்ட பதினொன்றும் உணர்த்த உணரும் ஊடற்கு உரியவாம் என்றவாறு.

### விளக்கம்

பரத்தையின் பிரிவு—பரத்தையின்பம் நுகர்தற்குத் தலைவன் பிரிதல்.

1 தலைவன் பரத்தைபால் இன்பம் நுகர்தற்குப் பிரிந்த இடத்து அச்செயலை அறிந்தவர்கள் இவன் இங்ஙனம் பிரிந்தது தலைவியின் ஊடலுக்குக் காரணமாம் என்றல்.

2 தனித்த இடத்துத் தலைவி துன்பம்உற்று வருந்துதல்.

3 'இங்ஙனம் நீ துன்புறுதலுக்குக் காரணம் யாது?' என்று தலைவியைப் பாங்கி வினவுதல்.

4 தலைவன் பரத்தைபால் சென்றதனைத் தலைமகள் தோழிக்கு உணர்த்துதல்.

5 'தலைமகனுடைய குற்றத்தைக் கூறுதல் கற்புடைமைக்குத் தகாது' என்று பாங்கி தலைவியை இடித்து உரைத்தல்.

6 தலைவி பூப்பு உற்றதைத் தலைமகன் அறிதற்குத் தலைவி, செம்மலர் முதலியவற்றை அணிந்துகொள்ளச்செய்து ஒருத்தியைப் பரத்தை வீட்டில் இருக்கும் தலைவன்பால் விடுத்தபொழுது, அதனைக்கண்ட அயலார் வருந்திக் கூறுதல்.

7 செவ்வணி அணிந்து வந்தவளைக் கண்டு பரத்தையர் தலைவியைப் பழித்துப் பேசுதல்.

8 அ 'தலைவி பூப்பு எய்தி நீராடியபின் ஈராறுநாளும் தலைவியுடன் தலைவன் இருத்தல் வேண்டும்' என்ற விதியை அறிந்து பரத்தையர் தலைவனைத் தலைவிபால் விடுத்தல்.

ஆ தலைவன் பரத்தையர் இல்லத்தை விடுத்துத் தலைவியை நோக்கி வருதலைக்கண்டு, பாங்கி முதலிய வாயிலோர் மகிழ்ந்து கூறுதல்.

9 தலைவன் தலைவியை நோக்கி வருஞ் செய்தியைப் பாங்கி தலைவிக்கு உணர்த்துதல்.

10 தலைவி தலைவன் தவற்றை மறந்து அவனை எதிர் கொண்டு அழைத்தல்.

11 இருவரும் புணர்ச்சியின் மகிழ்தல்.

இவை உணர்த்த உணரும் ஊடலுக்கு உரிய துறைகளாம்.

'புலவி—புணர்ச்சியான் வந்த மகிழ்ச்சி குறைவுபடாமல் காலம் கருதிக்கொண்டு உய்ப்பது ஓர் உள்ளநிகழ்ச்சி.

ஊடல்—உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்புமொழியான் அன்றிக் கூற்றுமொழியான் உரைப்பது.

அங்ஙனம் ஊடல் நிகழ்ந்தவழி அதற்கு ஏதுவாகிய பொருள் இன்மை உணர்வித்தல் உணர்வு எனப்படும். இல்லது கடுத்த மயக்கம் தீர உணர்த்துதலான் உணர்த்துதல் எனவும், அதனை உணர்தலான் உணர்வு எனவும் படும். புலவிக்காயின் உணர்த்துதல் வேண்டா; அது குளிர்ப்பக் கூறலும் தளிர்ப்ப முயங்கலும் முதலியவற்றான் நீங்குதலின். ஊடல் முதிர்வான் பிறப்பது துனி. அது பிரிவின் பாற்படும்; என்னை? காட்டக் காணாது கரந்து மாறுதலின். துனி வெறுப்பு'' என்று பேராசிரியர் வரைந்த விளக்கம் உளம் கொளத்தக்கது (தொல் பொ. 499. பேரா.)

## ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 205

‘ காந்தன் பரத்தையின் பிரிந்துழிக் கண்டோர்
ஏந்திழை ஊடற்கு ஏதுஇஃது என்றலும்
புலம்புஅற இருந்தவள் புலம்பி இரங்கலும்
இலங்கிழைப் பாங்கிஈது என்என வினுதலும்
அண்ணல்புறத் தொழுக்கு ஒண்ணுதல் உணர்த்தலும்
பண்அமர் மொழிச்சியைப் பாங்கி கழறலும்
இருந்துஇழை செவ்வணி அணிந்துசே டியைவிட
அருந்தமர் உழையர்கண்டு அழுங்கிக் கூறலும்
பண்புஇகழ் பரத்தையர் கண்டு பழித்தலும்
நண்பனை உலகியல் நாடி விடுத்தபின்
மன்னவன் வரவினை வாயிலோர் மொழிதலும்
மென்னகைக்கு அதனை இகுளை விளம்பலும்
இணர்புரி குழலாள் எதிர்கொண்டு பணிதலும்
புணர்ச்சியின்மகிழ்வும்என் றுஉணர்த்துபன்னென் றும்
உணர்த்த உணரும் ஊடற்கு உரிய.’ மா. அ. 102

காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு ஏது ஈதாம்
இவ்விறைவிக்கு என்றல் :

பங்கே ருகத்தண் பழன நல் லூரன் பவனிவரக்
கொங்குஏய் நறுங்குழல் கோதையர் கண்டு குவித்தகையும்
அங்கே அவர்அவர் அன்புக்கு அருள்செய்து அமைத்தகையும்
பொங்குஏர் இளமுலை யாள்புல வாவகை போவது அன்றே.
அம்பி. 447

எனவும்,

[தாமரை பூக்கும் குளங்களை உடைய ஊரன் உலாப் போதர, நறுமணம் பொருந்திய கூந்தலை உடைய பரத்தையர் கண்டு கைகுவிப்பத் தலைவன் அங்கு அவர்மாட்டு அருள் செய்து செய்த செயல்கள் தலைவிக்கு புலவியை உண்டாக்காமல் போகா.]

தனித்துழி இறைவி துனித்து அழுது இரங்கற்குச் செய்யுள் :

அப்புஉற்ற சென்னியன் தில்லை உருரின் அவர்உறுநோய்
ஒப்புற்று எழில்நலம் ஊரன் கவர உள்ளும்புறம்பும்
வெப்புற்று வெய்துஉயிர்ப்பு உற்றுத்தம் மெல்அணையேதுணையாச்
செப்புஉற்றகொங்கையர்யாவர்கொல்ஆர்உயிர்தேய்பவரே.

திரு. 354

எனவும் வரும்.

[கங்கையைச் சடையில் வைத்த சிவபெருமானுடைய தில்லையை உருதவர் அடையும் நோய் போன்று, தலைவன் அழகைக் கொள்ளைகொண்டு பிரிந்ததனால் உள்ளும் புறமும் சூடுற்று பெருமூச்செறிந்து தம் தலையணையே துணையாக உயிர் தேய்ந்துகொண்டிருக்கும் இளையார்கள் என்போல் பிறர் உளரோ.]

ஒன்றென முடித்தலால், கனவில் கண்டு இரங்கலும், செஞ்சுடர்க்கு உரைத்ததூஉம், வாரம் பகர்ந்ததூஉம், அடிசில் அமைத்த மடவரல் இரங்கலும், தலைவன் பிரிந்தலைமக்கு இரங்கலும் வரவும்பெறும்.

கனவில் கண்டு இரங்கல் :

தேவா சுரர்இறைஞ் சும்கழ லோன்தில்லை சேரலர்போல்
ஆஆ கனவும் இழந்தேன் நனவுஎன்று அமளியின்மேல்
பூஆர் அகலம்வந்து ஊரன் தாப்புலப் பாய்நலம்பாய்
பாவாய் தழுவிற் றிலேன்விழித் தேன்அரும் பாவியனே.

திரு 355

எனவும்,

[பாவாய்! தேவரும் அசுரரும் வணங்கும் திருவடியை உடைய சிவபெருமானின் தில்லையைச் சேராதவர்போல, ஐயோ! கனவினையும் இழந்துவிட்டேன். படுக்கையிலே தலைவன் தன்மார்பினை யான் தழுவுதற்குக் கொடுக்கப் புலவி

யோடு தழுவாமல் கனவை நனவாகக் கருதிப் பாவியாகிய நான் விழித்தேன் ஆதலின், கனவிலும் தலைவனைக் கூடும் வாய்ப்பை இழந்தேனே !]

செஞ்சுடர்க்கு உரைத்தல் :

செய்ம்முகம் நீலம் மலர்தில்லைச் சிற்றம் பலத்துஅரற்குக்
கைம்முகம் கூம்பக் கழல்பணி யாரின் கலந்தவற்குப்
பொய்ம்முகம்காட்டிக்கரத்தல்பொருத்தம்அன்றுஎன்றிலையே
நெய்ம்முகம் மாந்தி இருள்முகம் கீளும் நெடுஞ்சுடரே.

திரு. 356

எனவும்,

[நெய்யை உட்கொண்டு இருளைப்போக்கும் விளக்கே ! 'வயலிலே நீலம் மலரும் சிற்றம்பலத்துச் சிவபெருமானை வழிபட்டுக் கைகூப்பி அவன் திருவடிகளைப் பணியாதவர்கள் போலத் தம்மைக்கூடிய தலைவியருக்கு முகத்தைக் கனவிலே காட்டி நனவிலே மறைதல் பொருத்தம்அன்று' என்பதை என் தலைவனுக்கு நீ கூறவில்லையே.]

வாரம் பகர்ந்தது :

பூங்கு வளைப்பொலி மாலையும் ஊரன்பொன் தோள்இணையும்
ஆங்கு வளைத்துவைத் தாரேனும் கொள்கநள் ளார்அரணம்
தீங்கு வளைத்தவில் லோன்தில்லைச் சிற்றம் பலத்துஅயல்வாய்
ஓங்கு வளைக்கரத் தார்க்குஅடுத் தோம்மன் உருவரையே.

திரு. 357

எனவும்,

[பகைவர் அரணை அழிக்க மேருவை வில்லாக வளைத்த தில்லைச் சிற்றம்பலத்தானுடைய புறச்சேரியில் பரத்தையருக்குத் தலைவனை மானியமாக வழங்கிவிட்டோம். தலைவனுடைய குவளைப்பூமாலையையும் அவன் தோள்களையும் யார் வேண்டுமாயினும் வளைத்து வைத்துக்கொள்வாராக.]

அடிசில் அமைத்த மடவரல் இரங்கல் :

அலைஏற் றியஇப்பி வைத்துஅடுப் பாக அரும்புஅவிழ்தேன்
உலைஏற் றியசங்கின் நித்திலம் பெய்துஅனல் ஒண்துகிரால்
கலைஏற் றியநுதல் நாம்அடும் சோறுஇடக் கைக்கமலத்து
இலைஏற்ற வெம்பசி இன்றுஇல்லை யோநம் இறையவர்க்கே.

அம்பி. 449

எனவும்,

[பிறைநுதலாய்! அலைகள் கரை சேர்த்த இப்பியை அடுப்பாக அடுக்கித் தேனை உலையாகச் சங்காகிய பாத்திரத்தில் பெய்து முத்தாகிய அரிசியை இட்டு பவளமாகிய விறகை வைத்து நாம் அட்ட சோற்றை இடத் தன் தாமரை போன்ற கைகளையே இலையாகக் கொண்டு அன்று ஏற்ற காலத்துத் தலைவனுக்கு இருந்த விரும்பத்தக்க பசி இன்று இல்லைபோலும்.]

தலைவன் பிரிந்தமைக்கு இரங்கல் :

காவும் பருமணல் கானலும் போய்அருங் கங்குலினும்
வாவும் பரிநெடுந் தேர்வரக் காண்கிலம் வாவிதொறும்
மேவும் கருங்கயல் செங்கழு நீரின் மிசைப்பிறழப்
பூவும் புலவும் கமழ்புனல் ஊரன் புகற்சிநன்றே.

அம்பி. 450

எனவும் வரும்.

[சோலைகளுக்கும், பெரியமணலை உடைய கடற்கரைச் சோலைகளுக்கும் இரவிலும் செல்லும் தலைவன் தேர் நம் இல்லத்திற்கு வருதலைக் காண்கிலோம். ஓடைகளில் கயல்மீன்கள் செங்கழுநீர்ப் பூக்களின்மேல் பிறழுதலால் பூக்களும் புலவுநாறும் புனல் ஊரனாகிய தலைவனுடைய விருப்பம் நம்மாட்டு நன்றாய் இருக்கிறது!]

ஈங்கு இதுஎன் எனப் பாங்கி வினுதல் :

எம்மா திரமும் புரவலர்த் தேடி இரந்துஉழல்வோர்
தம்மா துயரம் தவிர்த்துஅருள் வாணன் தமிழ்த்தஞ்சைவாழ்
நம்ஆவி அன்னவர் நாள்தொறும் நாள்தொறும் நல்கவும்நீ
விம்மா வருந்துவது ஏன்பிரிந் தாரின் விளங்குஇழையே.

தஞ்சை. 379

எனவும்,

[எல்லாத் திசைகளிலும் தம்மைக் காப்பவரைத்தேடித் தடுமாறும் இரவலருடைய பெருந்துயரத்தைப்போக்கி அருள் செய்யும் வாணனுடைய தமிழ்த்தஞ்சையில் வாழும் நம் உயிர்போன்ற தலைவன் நாள்தோறும் உனக்குத் தலையளி செய்யவும் மனம்நொந்து, தம் தலைவரைப் பிரிந்த தலைவியர் போல, விளங்கிழையாளாகிய நீ வருந்துவது எதற்காக?]

இறைமகன் புறத்து ஒழுக்கு இறைமகள் இயம்பல் :

தார்ஆகம் நல்கினர் காரிகை யாய்தஞ்சை வாணன்தன்னைச்
சேரா தவர்எனத் தீவினை யேன்நையச் செங்கண்வன்கண்
காரான் கழனிக் கரும்புஇனம் சாயக் கதழ்ந்துசெந்நெல்
ஆராது அயலின்பஞ் சாய்ஆரும் ஊரன் அயலவர்க்கே.

தஞ்சை. 380

எனவும்,

[தோழியே! சிவந்த கண்களையும் தறுகண்மையையும் உடைய எருமை வயலிலே கரும்புகள் சாய விரைந்து சென்று செந்நெல்பயிரை உண்ணாது பக்கத்திலுள்ள பஞ்சாய்க் கோரையை உண்ணும் தலைவனுக்கு, தஞ்சைவாணனை நண்பராகச் சேராதவர்களைப் போலத் தீவினையை உடைய நான் வருந்தும்படி பரத்தையர் தம் மார்பைத் தழுவுதற்கு நல்கினர்.]

தலைவியைப் பாங்கி இகழ்தல் ;

மாலைக் குமுத மலர்தரும் தேன்உண்ட வண்டுவரக்
காலைக் கமலம் குவிந்தது வோஅருங் கற்பினுக்கும்

ஏலக் கருங்குழல் மங்கையர் காதலர் என்செயினும்
சீலத்து இயல்புகுன் றார்வருந் தேல்மெய் திருந்துஇழையே.

அம்பி. 453

எனவும் வரும்.

[திருந்துஇழைத் தலைவியே! மாலையிலே மலர்ந்த குமுதப்பூவில் தேனை உண்ட வண்டு, காலையில் தன்னிடத்துத் தேன் நுகர வரும்போது, தாமரை குவிந்து தேன் கொடுக்க மறுக்கின்றதா? மங்கையர் கற்பினால், காதலர் என்ன செய்தாலும் தம் நல்லொழுக்க இயல்பு மாறார்; ஆதலின் தலைவன் செயல்குறித்து வருந்தாதே]

செவ்வணி அணிந்து சேடியை விடுப்புழி அவ்வணி உழையர் கண்டு அழுங்கக் கூறலும் எனவே, செவ்வணி அணிந்து சேடியை விடுவாய் என்றலும், விடுத்தலும் வரப் பெறும்.

செவ்வணி அணிந்து சேடியை விடுவாய் என்றல் :

பருதி நிறத்துப் பணித்துகில் ஆர்த்துப் பணைமுலைமேல்
குருதி நிறத்துகிர் குங்குமம் சேர்த்திஇக் கோலம்கொண்டு
கருதிய கற்புக் கடன்நெறி கூறிநம் காதலர்க்கு
வருதி எனப்பகர்ந் தேவிடு சேடியை வாணுதலே.

அம்பி. 454

எனவும்,

['தோழி! செக்கர்ஞாயிறு போன்ற ஆடையை உடுக்கச் செய்து மார்பில் செங்குங்குமம் பூசிக்கொள்ளச் செய்து இச் செவ்வணியோடு மகளிர் கற்புக்கடனாகிய முறையைக் குறிப்-பால் பரத்தை இல்லில் இருக்கும் நம் தலைவனுக்குத் தெரிவித்து வருவாய்' என்று தோழி ஒருத்தியிடம் சொல்லி அவளை அனுப்புவாயாக.]

செவ்வணி அணிந்து சேடியை விடுத்தல் :

அரத்தம் உடீஇ அணிபழுப்பப் பூசிச்
சிரத்தையால் செங்கழுநீர் சூட்டிப் - பரத்தை
நினைநோக்கிக் கூறினும் நீஒழியல் என்று
மனைநோக்கி மாணை விடும். திணைமாலை. 144

எனவும் வரும்.

[செந்நிற ஆடை உடுத்தி, செஞ்சாந்து பூசி, பொறுப்போடு செங்கழுநீர்ப் பூவைச் சூட்டி, 'பரத்தை உன்னை நோக்கி ஏதேனும் இகழ்ந்து கூறினும் நீ தலைவனைக் காணாது வாராதே' என்று தலைவன் தங்கிஇருந்த பரத்தைமனையை நோக்கிச் சேடி ஒருத்தியை அனுப்புவாள்.]

அவ்வணி உழையர்கண்டு அழுங்கக் கூறல் :

வேளாண் மரபு விளக்கிய வாணன்மின் னூர்கழல்சூழ்
தாளான் வளம்கெழு தஞ்சைஅன் னீர்சங்கம் தந்தநன்னீர்த்
தோளா மணிஅன்ன தொல்குல ஓடையில் தோன்றியபூ
வாளா அலர்தொடுப் பார்க்குஎங் ஙனேவந்து வாய்த்ததுவே.
தஞ்சை. 382

எனவும்,

[வேளாண் மரபினை விளக்கும் வாணன் என்ற பெயருடைய கழல் சூழ்ந்த திருவடிகளை உடையவனுடைய வளம் பொருந்திய தஞ்சையை ஒத்தவரே! சங்கிலிருந்து தோன்றிய துளையிடாத முத்துப்போன்ற மேதக்க குலமாகிய ஓடையில் தோன்றிய பூ, வீணாக அலர் தொடுப்பவருக்கு எவ்வாறு வந்து கிடைத்ததோ ?- தலைவியின் உயர் குடிப்பிறப்புக் கூறியவாறு.]

பரத்தையர் கண்டு பழித்தல் :

தண்ணந் துறைவன் மனைஉறை பாவை தகுதிசொல்லின்
பண்ஒன் றியமொழி யீர்வசை யேபனி வார்குவளைக்

கண்ணும் குழலும் கருகித் துகிலும் கனதனமும்
வண்ணம் சிவந்து வெளுத்தது நாணும் மடமையுமே.

அம்பி. 456

எனவும்,

[பண்போன்ற இனிய சொல்லீர் ! பனி வாரும் குவளை போன்ற கண்ணும் கூந்தலும் கருகி, ஆடையும் நகில்களும் சிவந்து, நாணும் மடமைப்பண்பும் வெளுத்து வாழும், துறைவனுடைய தலைவியின் தகுதியைப் பற்றிப் பேசுதல் இழிந்த செய்தியாம்.]

வரவுகண்டு உவந்து வாயில்கள் மொழிதல் :

வில்லைப் பொலிநுதல் வேல்பொலி கண்ணி மெலிவுஅறிந்து
வல்லைப் பொலிவொடு வந்தமை யால்நின்று வான்வழுத்தும்
தில்லைப் பொலிசிவன் சிற்றம் பலம்சிந்தை செய்பவரின்
மல்லைப் பொலிவயல் ஊரன்மெய் யேதக்க வாய்மையனே.

திரு. 368

எனவும்,

[வில்போன்ற நுதலையும் வேல்போன்ற கண்களையும் உடைய தலைவியின் மெலிவை உணர்ந்து விரைவாக அவள் மாட்டுத் தலைவன் வந்துசேர்ந்தான் ஆதலின், தேவர் வாழ்த் தும் சிவபெருமானுடைய சிற்றம்பலத்தை மனத்து நினைப் பவரைப்போல, வளமானவயல் ஊரனாகிய தலைவன் உண்மை யில் சொன்ன வாய்மைவழி நிற்பவன் ஆவன்.]

தலைமகன் வரவு பாங்கி தலைவிக்கு உணர்த்தல் :

புறத்தாறு ஒழுகி வரினும்இப் போது புகைஉயிர்த்தல்
அறத்தாறும் அன்பும் அருளும்அன் றேஅன்பர் தேர்கடவீ
மறத்தாரை வாள்விழி யாய்திரு மாளிகை வாசல்வந்துஉன்
திறத்து ஆர்வம்உற் றுநின்றுர்எதிர்கோடல்சிறப்புஉடைத்தே.

அம்பி. 457

எனவும்,

[கண்ணீர் உகுக்கும் கொடிய வாள்போன்ற கூரிய விழி யாய்! தலைவன் புறத்தொழுக்கம்கொண்டு வரினும், இப் பொழுது வெப்பமாக மூச்சுவிட்டு வெகுளியைத் தோற்று வித்தல், அறமும் அன்பும் அருளும் ஆகாது, தலைவன் தன் தேரைச் செலுத்திக்கொண்டு நம்வீட்டு வாசற்கு வந்து உன் னிடத்தில் விருப்பத்தோடு நிற்கின்றான். அவனை எதிர் கொண்டு அழைத்து வரவேற்றலே உனக்குச் சிறப்புடைத் தாகும்.]

தலைவனைத் தலைவி எதிர்கொண்டு பணிதல் :

மருவில் பெருநலம் மன்னுவ தாம்தஞ்சை வாணன்வெற்பர்
ஒருவில் பசலை உருக்குவ தாம்எமக்கு ஊடல்எவ்வாறு
இருவில் புருவ இளங்கொடி யேஎய்தும் எய்தல்இல்லாத்
திருவில் புனை நறுந் தார்வரை மார்பர் திருமுன்நின்றே

தஞ்சை. 386

எனவும் வரும்.

[தஞ்சைவாணன் வெற்பணுகிய நம் தலைவன், நம்மைக் கூடி இருப்பின் நமக்குப் பேரின்பம் ஏற்படுகிறது. நம்மை அவன் விட்டு நீங்கின் நம்மைப் பசலை உருக்குகிறது. இரு வில் போன்ற புருவங்களை உடைய தோழியே! வானவில் போலப் பல நிற மலர்களால் புனையப்பட்ட மலை போன்ற மார்பினை உடைய தலைவன்முன் நின்று நயக்கு ஊடுதல் என்பது எவ்வாறு இயலுவதாம்.?]

உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்தென் புலந்து. —(குறள் 1287)

இதுவும்அது.

[தண்ணீர் இழுத்துச்செல்லும் என்பதை அறிந்தும் தண்ணீரில் பாய்பவர் செயல்போல, புலவி முடிவுபோகாது என்பதை அறிந்தும் தலைவனோடு புலந்து பெறும்பயன் யாது ?]

புணர்ச்சியின் மகிழ்தல் :

உள்ளத்து உவகை ஒருதலைப் பட்ட இருதலைப்பைம்
புள்ஒத்து இனிய புதுமலர்க் காவில் புணர்ந்தஇன்ப
வெள்ளக் கடலிடை வீழ்ந்துஉடன் நீந்துவர் மெய்மறந்து
வள்ளக் கமல வளவயல் ஊரனும் மாதருமே.

அம்பி. 460

எனவரும்.

[வள்ளம்போலக் காணப்படும் தாமரை பூக்கும் வளம் சான்ற வயல் ஊரனும் மாதரும், மனத்திலே மகிழ்ச்சி ஒரே நிலையதாக அமைந்த, இருதலையையும் ஓர் உடலையும்உடைய பறவையை நிகர்ப்ப, இனிய புதுமலர்க்காவில் புணர்ச்சி யாகிய இன்பவெள்ளம் நிறைந்த கடலிடை வீழ்ந்து மெய் மறந்து அவ்வெள்ளத்தை உடன் நீந்துவர்.]

182

**உணர்த்த உணரா ஊடலின் விரி**

555 வெள்ளணி அணிந்து விடுப்புழிப் புள்ளணி
மாலைவேல் அண்ணல் வாயில் வேண்டலும்[1]
தலைவிநேய் ஆடியது இகுளை சாற்றலும்[2]
தலைவன் தன்மனத்து உவகை கூர்தலும்[3]
தலைவிக்கு அவன்வரல் பாங்கி சாற்றலும்[4]
தலைவி உணர்ந்து தலைவனொடு புலத்தலும்[5]
பாணன் முதலாப் பாங்கன் ஈறாப்
பேணிய வாயில்கள் பெரியோன் விடுத்துழி
மறுத்தலும்[6] விருந்தொடு வந்துழிப் பொறுத்தல்கண்டு
இறையோன் மகிழ்தலும்[7] இறைமகள் விருந்துகண்டு
ஒளித்த ஊடல் வெளிப்பட நோக்கிச்
சீறேல்என்று அவள் சீறடி தொழலும்[8] இஃது
எங்கையர் காணின் நன்றுஅன்று என்றலும்[9]
அங்குஅவர் யாரையும் அறியேன் என்றலும்[10]
காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தலும்[11]
தாமக் குழலியைப் பாங்கி தணித்தலும்[12]

தணியாள் ஆகத் தலைமகன் ஊடலும்[13]
அணிவளைப் பாங்கி அன்புஇலை கொடியையென்று
இணர்த்தார் மார்பனை இகழ்தலும்[14] பிறவும்
உணர்த்த உணரா ஊடற்கு உரிய.

இது முதியகலாம் ஆகிய ஊடல்விரி இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) வெள்ளணி அணிந்து விடுப்புழித் தலைவன் வாயில் வேண்டல் முதலாகப் பாங்கி தலைவனை அன்புஇலை கொடியை என்று இகழ்தல் ஈறுகச் சொல்லப்பட்டனவும் பிற வும் உணர்த்த உணரா ஊடற்கு உரியவாம் என்றவாறு.

அநுவாதமுகத்தான், வெள்ளணி அணிந்து விடுத்தலும் வரப்பெறும்.

விளக்கம்

1 தான் புதல்வனைப் பெற்றமையைத் தலைவனுக்கு அறி வித்தற்கு நினைத்து வெண்மலர் முதலியவற்றை அணிந்து கொள்ளச் செய்து ஒருத்தியைத் தலைவியான வள் தலைவன்பால் விடுத்த இடத்து, அதுகண்டு அவன் வந்து நின்று, 'யான் தலைவியைப் பார்க்கும்படி செய் தற்கு நீ தூதாக வேண்டும்' என்று பாங்கியை வேண் டுதல்.

2 தலைவி புனிறுதீர்ந்து நெய் முழுகியதைப் பாங்கி தலைவனுக்குத் தெரிவித்தல்.

3 தலைவன் தன் மனத்தின்கண் மகிழ்ச்சி மிகுதல்.

4 தலைவிக்குத் தலைவன் வந்துள்ள செய்தியைப் பாங்கி சொல்லுதல்.

5 தலைவி தலைவன் வருகையை உணர்ந்து தலைவனோடு வெகுளுதல்.

6 தலைவி, பாணன் - விறலி - பாங்கி முதலிய வாயில்களை மறுத்தல்.

7 தலைவன் தான் விருந்தினருடன் வந்ததைக் கண்டு தலைவி ஊடலின்றித் தன் தவற்றைப் பொறுத்துக் கொண்டமை கருதி மகிழ்தல்.

8 விருந்தினரைக் கண்டதும் மறைந்த ஊடல், பள்ளியிடத்துச் சேர்ந்தவழித் தலைவிக்கு வெளிப்பட்டமை கண்டு, தலைமகன் வருந்திக் 'கோபம் கொள்ளாதே' என்று அவள் அடியில் விழுதல்.

9 'நீ என் அடிக்கண் பணிதலைப் பரத்தையர் கண்டால், உனக்குத் தீங்கை விளைவிப்பர்' என்று தலைவிகூறுதல்.

10 'நீ குறிக்கும் பரத்தையர் ஒருவரையும் இதுகாறும் அறிந்திலேன்' என்று தலைவன் கூறுதல்.

11 'உம்முடைய காமக்கிழத்தியை யான்கண்டு அறிந்தேன்' என்று தலைவி தலைமகனுக்குக் கூறுதல்.

12 தலைவியின் ஊடலைப் பாங்கி நீக்க முயலுதல்.

13 தலைவி ஊடல் தணியாளாகத் தலைமகன் மனம் வெகுளுதல்.

14 பாங்கி தலைவனை அன்பற்றவன், கொடியவன் என்று இகழ்ந்து கூறுதல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 206

'மென்னகை வெள்ளணி அணிந்து விடுத்துழி
மன்னவன் வந்து வாயில் வேண்டலும்
மைந்தனை ஈன்று மடந்தைநெய் ஆடலைத்

தந்திரப் பாங்கி தலைவற்கு உணர்த்தலும்
உரவோன் தன்மனத்து உவகைகூர் தலும்அவன்
வரவுஉணர்ந்து இதனை வாள்நுதற்கு உணர்த்தலும்
தலைவி யுணர்ந்து தலைவனொடு புலத்தலும்
பாண்மகன் முதலாப் பாங்கன் ஈறு
ஆண்மகன் விடுத்த வாயில்அவள் மறுத்தலும்
பாணன் வரவினைப் பாங்கி பழித்தலும்
பாண்மகன் அவ்வழிப் பணிந்து வெறுத்தலும்
புதுவிருந்தொடும்வரப்பொறுத்தல்கண்டுஇறைமகன்
மதிபெற வியந்து வாழ்த்துபு மகிழ்தலும்
களித்தவன் விருந்தொடும் கடிமனை அகத்துஉற
ஒளித்த ஊடல் வெளிப்படு காலை
மின்னிடை அமளியில் வெண்ணிட மெலிதலும்
பொன்னடி பணிந்தவன் பொறுத்திஎன்று ஏத்தலும்
எங்கையர் காணின் நன்று அன்றுஇஃது என்றலின்
அங்குஅவன் பிறர்தமை அறியேன் என்றலும்
காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தலும்
ஏமுறப் பாங்கி இறைவியைத் தணித்தலும்
தணியா ளாகத் தலைமகன் ஊடலும்
அன்பனைப் பாங்கி அன்புஇலை கொடியைஎன்று
இன்புறக் கூறலும் இன்னன பிறவும்
உணர்த்த உணரா ஊடற்கு உரிய.' மா. அ. 103]

வெள்ளணி அணிந்து விடுப்புழிப் புள்அணி மாலை வேல்
அண்ணல் வாயில் வேண்டல் :

என்பால் குறையை நினைந்து மருதுஎதிர் கொள்ளவல்லை
தன்பால் புலவி தணிசென்று நீதஞ்சை வாணன்வையம்
அன்பால் பரவும் புகழுடை யான்அரு ளேஅனையாய்
உன்பால் புலவி உருள்வண்ண வார்குழல் ஒண்ணுதலே.

தஞ்சை. 388

எனவும்,

[தஞ்சைவாணன் ஆகிய, உலகத்தவர் அன்பால் போற்றும் புகழ் உடையவனின் அருளே அனைய தோழி! என்னிடம் ஏற்பட்ட குறையை நினைத்து மறுக்காமல், என்னை எதிர்ஏற்றுக் கொள்வதற்கு நீ தலைவிபால் சென்று அவள் ஊடலைத் தணிப்பாயாக. தலைவி உன்னிடத்தில் கோபம் கொள்ளமாட்டாள். ]

தலைவி நெய்யாடியது இகுளை சாற்றல் :

கையார் வரிவளைக் காரிகை நீயும் கடும்பரியும்
மையார் விழிவிலை மங்கையர் இல்லம் மறந்துவந்தது
எய்யாது இருந்திலள் அய்யா அருமணி ஈன்றுஎடுத்த
மெய்ஆ றவும்விர வும்துனி ஆறவும் வேண்டும்இன்றே.
அம்பி. 464

எனவும்,

[ஐயா ! கையில் வளையல் அணிந்துள்ள தலைவி, நீயும் நின் குதிரையும் விலைமங்கையர் வீட்டை மறந்து இங்கு வந்துள்ள செய்தியைத் தான் அறியாமல் இருக்கவில்லை. நல்ல முத்துப் போன்ற புதல்வனை ஈன்றுஎடுத்த உடல் வருத்தம் நீங்கவும் அவள் வெறுப்பு நீங்கவும் வேண்டும்.]

தலைவன் தன்மனத்து உவகை கூர்தல் :

செய்யும்தவம்உடையேன்சென்றுகாண்குவதுஎன்றுசெவ்வி
மைஉண் குவளை மடம்கெழு நோக்கும் மனம்மகிழ்வும்
கையும் குழவியும் தீம்பால் எறிக்கும் கனதனமும்
நெய்யும் பசந்து நிலவுஎழு மேனியும் நீர்மையுமே.
அம்பி. 465

எனவும்,

[என் தலைவியின் மைஉண்ட குவளைமலர் போன்ற மடநோக்கினையும் மனமகிழ்ச்சியையும், குழந்தையை ஏந்திய

கைகளையும், பால் பரவியுள்ள தனங்களையும் நெய்யாடிப் பசந்து ஒளி வீசும் உடம்பையும் குணங்களையும் முற்பிறப்பில் நற்றவம் புரிந்த நான் என்று வந்து காண்பேன்?]

தலைவிக்கு அவன் வரல் பாங்கி சாற்றல் :

மருஆர் குழலி வருந்திய மெய்யும் மகவும்கையும்
பருவார் முனிந்த பயோதர பாரமும் பச்சுடம்பும்
ஒருவாத உள்ளத்து உவகையும் காண நம் ஊரர் நின்பொன்
திருவாசல் வந்துநின் ருர்அறி யேன்நின் திருவுளமே.

அம்பி. 466

எனவும்,

[நறுமணம் கமழும் கூந்தலை உடையாய்! உன் வருந்திய உடல், கையில் ஏந்தியுள்ள குழந்தை, கச்சினைக்கடந்து பரந்த நகில்கள், ஈன்றணிமை உடைய உடல், நீங்காத மன மகிழ்ச்சி இவற்றைக் காண்பதற்கு நம் தலைவன் உன் இல்லத்து வாசலில் வந்து நிற்கின்ருன். உன் உள்ளக்கருத்தை யான் அறியேன்.]

தலைவி உணர்ந்து தலைவனெடு புலத்தல் :

ஆம்பால்விரவினது அன்பால்அறிந்து அயில் அன்னம்அன்னீர்
போம்பால் அலையசொல் பூவையர் சேரியில் புல்லிஇங்ஙன்
யாம்பாலனைக்கொண்டுஇனிவைகல்போக்குதும்எம்முலையின்
தீம்பால் படில்அவர் செய்குறி மார்பில் சிதையும்அன்றே.

அம்பி. 471

எனவும்,

[நீரோடு விரவிய பாலினைப் பகுத்து அறிந்துஉண்ணும் அன்னத்தை ஒப்பீர்! வெளிப்படும் பால்போன்ற இன்சொல் பரத்தையர் சேரியில் அவரைப் புல்லி இங்குவந்து எம் நகிலின் தீம்பால் படின், தலைவன் மார்பில் பரத்தையர் செய்துள்ள குறிகள் சிதைந்துவிடும். ஆதலின் அவர்கள் புலத்

தலும் கூடும்; எனவே தலைவன் இங்கு வருதல் வேண்டா. யாங்கள் குழந்தையைக்கொண்டே இனிப் பொழுது போக்கிக்கொள்வோம்.]

பாணன் முதலாகப் பாங்கன் ஈறுகப் பேணிய வாயில்கள்
பெரியோன் விடுத்துழித் தலைமகள் மறுத்தலுள்,
பாணற்கு மறுத்துரை :

மைகொண்ட கண்டர் வயல்கொண்ட தில்லைமக்கு ஊரர்நின்வாய்
மெய்கொண்டஅன்பினர்என்பதுஎன்விள்ளா அருள்பெரியர்
வைகொண்ட ஊசிகொற் சேரியில் விற்றுஎம்மில் வண்ணவண்ணப்
பொய்கொண்டு நிற்கல்உற்றேபுலை ஆத்தின்னிபோந்ததுவே.
திரு. 386

எனவும் வரும்.

[மாடு தின்னும் புலையனே! நீ கூறிய ஊசியைக் கொல்லன் சேரியில் விற்பவன். 'நீலகண்டராகிய சிவபெருமானின் தில்லைநகர்த் தலைவன் உன்னிடம் மெய்யான அன்பினன்; நீங்காத அருளினன்' என்று எங்களிடம் பலதிறப்பட்ட பொய் மொழிகளைப் பேசுதற்கோ இங்கு வந்துள்ளாய்?]

'பிற' என்றதனால், வாயில் மறுக்கப்பட்ட பாணன் கூறலும் தலைமகள் பாணனைச் சொல்லலும் வரப்பெறும்.

வாயில் மறுக்கப்பட்ட பாணன் கூறல் :

கொல்ஆண்டுஇலங்குமழுப்படையோன்குளிர்தில்லைஅன்னாய்
வில்ஆண்டு இலங்கும் புருவம் நெரியச்செவ் வாய்துடிப்பக்
கல்ஆண்டு எடேல்கருங் கண்சிவப்பு ஆற்று கறுப்பதுஅன்று
பல்லாண்டு அடியேன் அடிவலம் கொள்வன் பணிமொழியே.
திரு. 387

எனவும்,

[கொலைத் தொழில் செய்யும் மழுவாளியின் தில்லையை ஒப்பாய்! வில்லை ஒத்த புருவங்கள் வளையச் சிவந்த வாய்

துடிப்ப என் மீது எறிவதற்குக் கற்களை எடுத்தல் வேண்டா. கரிய கண்களில் தோன்றியுள்ள கோபத்தை நீக்கிக்கொள்; மெல்லிய மொழியினை உடைய நீ தலைவனை வாயில் மறுப்பது அழகு அன்று; உன்னைப் பல்லாண்டு வாழுமாறு வாழ்த்தி உன்னைச் சுற்றி வந்து வணங்குகிறேன்.]

தலைமகள் பாணனை மறுத்தல் :

வண்புனல்ஊர்வையைசூழ்தஞ்சைவாணனை வாழ்த்தலர்போல்
கண்புனல் ஊரும்நின் காதல்கண் டேன்என் கடைத்தலைக்கே
தண்புனல் ஊரன்வந் தான்என்று சாற்றினை தாளம்உறாப்
பண்புனல் ஊர்கள்எல் லாம்பாடி ஏற்கின்ற பாணமகனே.

தஞ்சை. 395

எனவும் வரும்.

[வையை சூழ் தஞ்சைவாணனை வாழத்தாதவர்களைப் போலக் கண்ணீர் உகுக்கும் உன் அன்பு எனக்கு நன்ருகத் தெரியும். தாளத்திற்குப் பொருந்தாத பண்களை வளமான ஊர்களில் எல்லாம் பாடிப் பிச்சை ஏற்கும் பாணனே! என் வீட்டுவாசலுக்குத் தலைவன் வந்துள்ளான் என்று எத்தகைய பொய்ச் சொற்களைக் கூறுகின்ருய்?]

விறலி வாயில் மறுத்தல் :

அயிலும் கயலும் அனையகண் அஞ்சனம் மாற்றிவஞ்சத்
துயிலும்துடைத்தஅன்றேசெவிதூர்ந்ததுசோர்ந்ததுஉள்ளம்
மயிலின் புறத்து முருகனைப் போல வருமகிழ்நன்
பயிலும் பரத்தையர் பாடியில் பாடுஇனி பாடினியே.

அம்பி. 487

எனவும்,

[பாடினியே! மயில்மீது இவர்ந்து வரு முருகனைப் போலத் தலைவன் பரத்தையர் சேரியில் பயிலத்தொடங்கின அன்றே, அயிலும் கயலும்போன்ற என் கண்கள் அஞ்

சனத்தை மறந்து உறக்கத்தை நீத்தன. நீ அங்குப் பாடிய பாடல்கள் என்செவிகளைத் தூர்த்தன. இனி, நீ பரத்தையர் இருப்பிடத்திலேயே சென்று பாடு.]

கூத்தர் வாயில் மறை :

வடிக்கண் ணியரொடும் வந்தனை நீவந் தனைசெயல்உன்
நடிக்கும் பழைய நடத்தில்ஒன் றேஇந் நடிமறவார்
அடிக்கண் அதிர்கழல் வீரிய நாமங்கொள் ஆரியஇப்
படிக்கண் நகர்முழு தும்பாடி ஆடும் பரத்தையரே.

அம்பி. 488

எனவும்,

[வீரர்களாய் வீரக்கழல் அணிந்த வீரர்களின் பெருமையை ஒத்த பெருமைஉடைய ஆரியக்கூத்தனே! இவ்வுலகில் நகர்முழுதும் பாடி ஆடும் பரத்தையர் குழாத்தோடு நீ இங்குவந்து என்னை வந்தனைசெய்வது ஆகிய இந்நடிப்பு உன்பழைய நடனங்களில் ஒன்றுபோலும் !]

பாங்கி வாயில் மறை :

உடைமணி கட்டிச் சிறுதேர் உருட்டி உலாத்தரும்இந்
நடைமணி யைத்தந்த பின்னர்முன் நான்முகன் மால்அறியா
விடைமணி கண்டர்வண் தில்லைமென் தோகைஅன் னார்கள்முன்னம்
கடைமணி வாள்நகை யாய்இன்று கண்டனர் காதலரே.

திரு. 385

எனவும்,

[பிரமனும் திருமாலும் காணமுடியாதவராய் விடை ஏறிய நீலகண்டரின் தில்லையை ஒத்த மகளிர் முன்னே, முத்த வெண்ணகைத் தோழீ! மணிகட்டித் தேர்உருட்டித் தெருவில் நடக்கும் நம் புதல்வன் பிறந்தபின்னர், இன்றே நம் தலைவன் நம் வீட்டை அணுகியுள்ளான்.]

விருந்தொடு வந்துழிப் பொறுத்தல் கண்டு
தலைமகன் மகிழ்தல் :

கருந்துன்று வார்குழல் கன்னிஇல் வாழ்க்கையும் கையும்செவ்வாய்
முருந்துஒன்று மூரல் முறுவலும் காண முகம்அறியா
விருந்துஒன்று வேறுஒன்றின் மீளா அருந்துனி மீட்கநல்ல
மருந்துஒன்றுஉவந்துஇங்ஙனேமனமேவந்துவாய்த்ததுவே.

அம்பி. 492

எனவும் வரும்.

[மனமே ! கரிய குழலியாகிய தலைவியின் குறைவற்ற இல்வாழ்க்கைச் சிறப்பையும், அவள் கைகளையும் செவ்வாயினையும், மயில் இறகின் அடிபோன்ற பற்களையும் நான் கண்டு மகிழ்வதற்கு, முன் தெரியாத விருந்து ஒன்று, மற்ற வாயில்களால் நீக்க முடியாத தலைவியின் வெறுப்பினை நீக்கி அவளைப் பழைய நிலையள் ஆக்குவதற்கு, நல்ல மருந்தாக நான் மகிழுமாறு நமக்கு இன்று வாய்த்த நல்வினை வியக்கத் தக்கது.]

அநுவாத முகத்தான், விருந்து ஒன்று வந்துழிப் பொறுத்தலும் வரப்பெறும்.

விருந்துகண்டு பொறுத்தல் :

வண்தார் மகிழ்நன் வருவது கேட்டு மலர்க்கண் அம்பு
கொண்டாள் புருவச் சிலைகுனித் தாள்குளிர் வெண்பனிசூழ்
வெண்டாமரைவியர்த்தாள்உயிர்த்தாள்நல்விருந்துஅயலே
கண்டாள் முகம்மலர்ந் தாள்புரந் தாள்அருங் கற்பினையே.

அம்பி. 491

எனவரும்.

[தலைவன் பரத்தையர் இல்லத்திலிருந்து மீண்டும் தன் மனை வருகின்றான் என்பதனைக் கேட்டுக் கோபத்தால் கண்களில் நீர் பெருக, புருவங்களாகிய விற்கள் வளைய, முகம் வியர்த்து வெறுப்பினால் வெண்தாமரை போல் வெளுக்கப்

பெருமூச்சுவிட்ட தலைவி, தலைவனுடைய பக்கலில் விருந்தினன் வருதலைக்கண்டு, தன் கற்பைப் பாதுகாக்கும் கருத்தான் வெறுப்பை மறைத்து முகம் மலர்ந்தாள்.]

தலைமகள் விருந்துகண்டு ஒளித்த ஊடல்
பள்ளியிடத்து வெளிப்படத் தலைமகன் நோக்கிச்
சீறேல் என்று அவள் சீறடி தொழுதல் :

படர்ந்த கலாம்இன்னது என்றுஉரை யாமல் பயில்அமளி
கடந்த கலாபம் கலைபுறம் சூழக் கதம்தணியத்
தொடர்ந்துஅக லாத துணைஅடித் தாமரை சூடுவல்இம்
மடந்தை கலாம்அக லாமலி நீர்கண்கள் மல்கினவே.

அம்பி. 494

எனவும் வரும்.

[இத்தலைவியின் கோபம் நீங்காததனால் இவள் கண்கள் நீர் உகுக்கின்றன. தனக்கு ஏற்பட்ட கோபம் இன்னது என்று கூறாமல், படுக்கையில், கலாபத்தோடு அணியப்பட்ட ஆடையால் தன்முதுகையும் சேர்த்துப் போர்த்திக்கொண்ட இவள் கோபம் நீங்குமாறு, இவளைத் தொடர்ந்து இவள் அடித்தாமரைகளைத் தலையால் வணங்கி இவள் ஊடல் தீர்ப்பேன்.]

அநுவாத முகத்தான், ஒளித்த ஊடல் வெளிப்படலும் வரப்பெறும்.

ஒளித்த ஊடல் வெளிப்படல் :

திருத்திஅன் போடு திளைக்கின்ற செவ்வீச் செருக்குஇடையே
கருத்தில்அங்கு உற்ற கலாம் இங்கு அறிந்திலம் காதலியான்
ஒருத்திஎன்று உன்னை ஒருவன்என் றேஇருந் தேன்இனிநீ
இருத்திஎன் றேமொழி யாஇழிந் தாள்பள்ளி இன்னகையே.

அம்பி. 493

எனவரும்.

[தலைவியின் ஆடை அணிகளை ஒப்பனை செய்து அவளைத் துய்க்கும் நேரத்தில் அப்பெருமிதத்தின் இடையே அவள் உள்ளத்துப் பட்ட கோபம் எனக்குப் புலனாகவில்லை. 'இது வரை உனக்குக் காதலி யான் ஒருத்தியே உள்ளேன் என்று இருந்தேன்; அந்நிலை மாறியதனால் இப் படுக்கையில் நீயே இருப்பாயாக' என்று கூறி, அவள் படுக்கையிலிருந்து இறங்கினாள்.]

இஃது எங்கையர் காணின் நன்று என்றல் :

தொடிவைத்த செங்கை அலவன் உலாவும் துறைசெயத்தோர்
வடிவுஒத்த சிந்தை மலிபுனல் ஊர வணங்கியநின்
முடிவைத்த செங்கையும் மென்முலை ஆகம் முயங்கவந்துஎன்
அடிவைத்த செங்கையும் எங்கையர் காணின் அறவும்நன்றே.

அம்பி. 455

எனவும்,

[செங்கையால் கவருடும் போது வெற்றி பெற்றார் வடிவை ஒத்த மகிழ்ந்த சிந்தையை உடைய தலைவ! நீ வணங்குதற்கு உன் முடிமேல் குவித்த உன் கைகளையும், என் மார்பைத் தழுவவந்து என் அடிமேல் வைத்து வணங்கிய உன் கைகளையும் பரத்தையர் காணின் மிக நன்றாயிருக்கும்!]

நின்னலது அங்கவர் யாரையும் அறியேன் என்றல் :

மன்னும் புலவியை மாற்றியும் தேற்றியும் வல்லவண்ணம்
இன்னம் தெளியிலை என்னைஎன் னேஎன்செய் கேன்இதற்கு
முன்னம் படிந்து முழுகுநன் னீர்க்கங்கை முன்துறைநீத்து
அன்னம் படியும்கொல் லோஉவர் ஆழியில் ஆர்அணங்கே.

அம்பி. 478

எனவும்,

[அணங்கே! உன்புலவியை மாற்றி உன்னைத் தெளிவிப்பதற்கு வேண்டியன யான் முயன்றும், நீ மன அமைதிஉற்றாய்

அல்லை. இதற்கு யான் இனி யாது செய்தல் வல்லேன்? கங்கையில் படிந்த அன்னம் அதன் துறையை விடுத்து உப்புக்கறிக்கும் கடலில் படியுமா?]

காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தல் :

ஐயுற வாய்நம் அகன்கடைக் கண்டுவண் தேர்உருட்டும்
மைஉறு வாள்கண் மழவைத் தழுவமற்று உன்மகனே
மெய்உற வாம்இதுஉன் இல்லே வருகஎன வெள்கிச்சென்றாள்
கைஉறு மான்மறி யோன்புலி யூர்அன்ன காரிகையே.

திரு. 391

எனவும்,

[கையிலே மான்குட்டியை ஏந்திய சிவபெருமானுடைய புலியூரை ஒத்த பெண் ஒருத்தி, உடல் அமைப்புக்கண்டு 'உன்மகனோ?' என்று ஐயுற்று, நம் வீட்டு வாசலில் சிறு தேர் உருட்டும் நம் மகனைத் தழுவவே, யான் அவளை அணுகி 'இவன் உன் மகனே; உனக்கு இந்த உண்மையான உறவு உண்டு; இவ்வீடும் உனக்கு உரிய வீடுதான்' என்று கூறினேனாக, அவள் வெட்கிச்சென்றாள்.

தலைமகளைப் பாங்கி புலவி தணித்தல் :

உப்பு அமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். (குறள். 1302)

எனவும் வரும்.

மாவா ரணம்அன்ன வாணன்தென் மாறைநம் மன்னன்நின்னைப்
பாவாய் பணியவும் பார்க்கிலை நீஇடப் பாகமங்கை
தாவாத சங்கரன் கங்கைதன் கொங்கை தழீஇஇதழிப்
பூவார் சடைமுடி மேல்வைத்த போதும் பொறுத்தனளே.

தஞ்சை. 401

என்பதும் அது.

[உப்பு உணவிற்கு எவ்வளவு தேவையோ அவ்வளவே இல்வாழ்க்கைக்குப் புலவி தேவைப்படும்; அப்புலவியைச் சிறிது நீட்டித்தல் உணவுப் பண்டங்களில் சேர்க்கப்படும் உப்பு அளவை மிகுப்பது போலும்.

யானையை ஒத்த வாணனுடைய தென்மாறையிலுள்ள நின் கணவன், பாவாய்! உன்னை வணங்கவும், நீ அவனைப் பற்றி நினைக்கவில்லை. இடப்பக்கம் தான் நீங்காது இருந்த நிலையிலும், சிவபெருமான் கங்கையைத் தழுவித் தன் தலை-மேல் வைத்துக் கொண்டதனையும் பொறுத்தாள் அந்நங்கை நல்லாள்!]

அநுவாத முகத்தான், தலைவி புலவி தணியாள் ஆதலும் வரப்பெறும்.

தலைவி புலவி தணியாளாதல் :

பங்கயம் மல்லல் பழனநன் னாடும் பதியும்இல்லும்
எங்கையர் போல இனியம் அல் லோம்எங்கள் பால்தொடர்பு
செங்கயல் பாயக் கருங்கயம் மேவிய சேவல்அன்னம்
சங்கம் அதிலே திரிதண் புனல்ஊர தகுவதுஅன்றே.

அம்பி. 496

என வரும்.

[செங்கயல் பாயவும், குளத்தில் பொருந்திய அன்னச் சேவல் சங்குகளை இவர்ந்து திரியும் புனலூர! நாடும் ஊரும் இல்லும் பரத்தையரைப் போல நாங்கள் இனிமை உடை-யோம் அல்லோம் ஆதலின், சான்றோனாகிய உனக்கு எங்கள் தொடர்பு தகுவதன்று.]

தலைமகள் தணியாளாகத் தலைமகன் ஊடல் :

திருந்தேன் உயநின்ற சிற்றம் பலவர்தென் னம்பொதியில்
இருந்தேன் உயவந்து இணைமலர்க் கண்ணின்இன் னேக்குஅருளிப்

பெருந்தேன் எனநெஞ்சு உகப்பிடித்து ஆண்டநம் பெண்அமிர்தம்
வருந்தேல் அதுஅன்று இதுவோ வருவதுஒர் வஞ்சனையே.

திரு. 394

எனவும்,

[திருத்தமில்லாத யானும் உய்யுமாறு சிற்றம்பலத்து ஆடிய சிவபெருமானுடைய பொதியமலையில், யான் உய்யு மாறு அருளோடு பார்த்து என் நெஞ்சில் அமுதுவார்த்து என்னைப் பிணித்து ஆட்கொண்ட நம் பெண்அமிர்தம் இவள் அல்லள். இவ்வுரு அவள் போல்வது ஒரு மாய உருவாகும்.]

பாங்கி அன்பிலை கொடியை என்று இணர்த்தார்
மார்பனை இகழ்தல் :

நெறியார் அலங்கல் மணிமுடி யாய் என்றும் நின்னைஅன்றி
அறியா இவள்இங்கு அரியள்அன் றேமண்ணில் ஆரிடத்தும்
குறியாத அன்புடைக் கொம்புஅனை யாரைக் குறுகிஅந்தண்
முறியார் களப முலைமுகந்தோறும் முயல்கசென்றே.

அம்பி. 499

எனவும் வரும்.

[மாலை சூடிய மணி முடியாய்! என்றும் உன்னையன்றி வேற்றவரை அறியாத இவள் உனக்கு அரியவள்தான். உல கில் பொருள்மேல் அன்றி அதனைக் கொடுப்பார் யாரிடத்தும் அன்பைப் பிணித்து வைக்காத பரத்தையரை அணுகி அவர் களைத் தழுவுவதற்குச் சென்று முயல்வாயாக.]

அநுவாத முகத்தான், அன்பிலை கொடியை என்றலும் வரப்பெறும்.

அன்பிலை கொடியை என்றல் :

வேம்பின் பைங்காய்என் தோழி தரினே
தேன்பூங் கட்டி என்றனிர் இனியே

பாரி பறம்பின் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
வெய்ய உவர்க்கும் என்றனிர்
ஐய அற்றால் அன்புஇல் பாலே. குறுந். 196

எனவரும்.

[ஐய! பண்டு என் தலைவி வேப்பங்காயைக் கொடுத்தாலும் அதனைக் 'கருப்புக்கட்டி' என்று சுவைத்து உண்டனிர்! இப்பொழுது அவள் சற்று முத்தாளாக, தைத்திங்களில் பாரியின் பறம்புமலையின் இனிய குளிர்ந்த நீரை அவள் பருகக் கொடுப்பினும், 'உப்புக்கரித்துச் சுடுகின்றது' என்கின்றீர்! அன்பு மாறிய திறம் அத்தன்மையதாகிவிட்டது!]

'பிற' என்றதனால், மகப்பொறை கூர்ந்தவண்ணம் உரைத்தலும், தலைவன் புதல்வனைக் காண்டலும், பள்ளியின் அழுங்கலும், பரத்தையர் காதல் பரத்தையைப் புகழ்ந்து தம்மை இகழ்தலும், தலைவி புனல்ஆடலும், பரத்தையரோடு புனலாடியது இல்லை' என்றவழி உரைத்தலும், பரத்தையைப் பழித்தலும், காமக் கிழத்தி வாயில்வேண்டலும், பாங்கி வாயில் நேர்வித்தலும், புதல்வன்வாயிலும், புதல்வற்புலத்தலும், மகற்கு அறிவுறுத்தலும், மகப்பழித்து நெருங்கலும் வரப்பெறும். அவற்றுள், புதுப்புனல் வரவு உரைத்தல், பரத்தையரொடு தலைவன் புனலாடல், தலைவி புதுப்புனலாடல், பரத்தையர் காதற்பரத்தையைப் புகழ்ந்து தம்மை இகழ்தல் என்ற நான்கற்கும் பரத்தையைப் பழித்தற்கும் செய்யுள் முன்னர்க்காட்டினும். (நூற்பாக்கள்—62, 90, 103 இவற்றிலுள்ள எடுத்துக்காட்டுப்பாடல்கள்)

மகப்பொறை கூர்ந்த வண்ணம் உரைத்தல் :

சீலம் தகைபெறு சாலிஅன் னுள்சிறு வன்தரித்த
காலம் தமது கவின்நிறம் பெற்றன காலம் இன்னும்

கோலம் தரும்செங் குமுதமும் நீலமும் குன்றுஎடுத்த
பாலன் துயில்கொண்ட பாயலும் காலைப் பதுமமுமே.
அம்பி. 461

எனவும்,

[நல்லொழுக்கத்தின் மிக்க அருந்ததி போன்ற தலைவி கருவுற்ற காலத்தில் அவள் உறுப்புக்கள் முழுஅழகையும் நிறத்தையும் பெற்றுவிட்டன. அவள் குமுதவாயும் நீலக்கண்களும், மகன் தங்கியிருக்கும் ஆலிலைவயிறும், அதனால் மகிழும் முகத்தாமரையும் இன்னும் நாளும் அழகுசிறக்கும் ]

தலைவன் புதல்வனைக் காண்டல் :

ஆவும்கனகமும் அந்தணர்க்குஈந்து அங்குஅமரர்க்குஎல்லாம்
பூவும் புகையும் பொழிந்து அவி ஏற்றிப் புதியபண்ணும்
பாவும் புனைந்து பரிசிலர் பாடப் பருவம்நன்று
யாவும் பெறஎடுத் தான்குடித் தோன்றலை ஏந்தலுமே.
அம்பி. 468

எனவும்,

[அந்தணருக்கு ஆவும் பொன்னும் தானமாக வழங்கித் தேவருக்குப் பூவும் புகையும் வழங்கி அவி உண்ணச்செய்து, புதிய புதிய பாடல்களைப் பரிசில் பெறும் பாவலர் பாட, நல்ல நேரத்தில் தலைவன் தன்குலத்தோன்றல் ஆகிய மகனைத் தன்கையில் எடுத்தான்.]

தலைவன் பள்ளியின் அழுங்கல் :

துணைஏதும் இன்றி நடுங்குநள் போலும் துடிமருங்குல்
பிணைமய மடநடைப் பெண்அமு தேஇன்பப் பேர்உததிப்
புணையே அனையபொற் றேஞும் தனமும்இப் பொங்குஅமளி
அணையே பொருந்த வரும்புற மோஎமக்கு ஆவதுஇன்றே.
அம்பி. 472

எனவும்,

[தலைவி துணை எதுவும்இன்றி நடுங்கிஞள்போலும். துடிபோன்ற மருங்குலையும் மான்போன்ற பார்வையையும் உடைய மடநடைப் பெண்அமுதின் இன்பப்பெருங்கடலின் தெப்பம் போன்ற தோள்களும் நகில்களும் இச்சிறந்த படுக்-கையில் கிடக்கும் எனக்குப் பயன்உருமல் புறத்தே இருக்கின் றனவே.]

பதங்கம் பழிச்சல் :

அறவோர் மொழிந்த அரிந்தமன் காத்த அகன்புறவுக்கு
உறவோ பதங்கம் விகங்கம் அன் ருேஉத விக்குஉதவி
நறவுஒடு தண்புனல் நாடன்என் றேஎன்கண் நய்கியதால்
மறவோம் இதற்குஉள்ள வாசிஎந் நாளும் மடமயிலே.

அம்பி. 473

எனவும்,

[மயிலே! சான்ருேரால் போற்றப்படும் சிபி மன்ன னின் மரபினன் நான். அவன் உயிர்காத்த புருவுக்குச் சிறகு களை உடைய இவ்விளக்குப் பூச்சி உறவுபோலும்! 'உதவி செய்தார்க்குக் கைம்மாறு செய்யவேண்டும்' என்று, சிபியின் மரபினஞகிய தேனும் புனலும் ஓடும் நாடஞகிய என்கண், விளக்கை அணைத்துத் தலைவி என்னைப் புல்லுமாறு இப்பதங் கம் வாய்ப்பு அளித்தது. இதற்கு உள்ள அன்பை யாம் என்றும் மறவோம்.]

காமக் கிழத்தி வாயில் வேண்டல் :

வெறுக்கத் தகுவன செய்யினும் ஊரன் விளங்குஇழைநீ
பொறுக்கத் தகாதாம் போல்அலை யேவெம் புரவிஇன்றிச்
சிறுக்கைத்தலம்கொண்டுதேர்கடவா நின்றசிங்கம்பெற்றும்
கறுக்கத் தகுவதுஅன் றேசிவப்பு ஊரநின் கண்இணையே.

அம்பி 489

எனவும்,

[தலைவியே! தலைவன் வெறுக்கத்தக்க செயல்களைச் செய்தாலும் நீ பொறுக்கும் இயல்பற்ற எம்போன்ற காமக் கிழத்தி யல்லையே. குதிரை இன்றிச் சிறுகைகளால் நடைத் தேர் செலுத்தும் புதல்வற்பெற்ற குலமகளாகிய நீ உன் கண் கள் சிவப்ப வெகுளுதல் தக்கது அன்று.]

பாங்கி வாயில் நேர்வித்தல் :

பூவே அனையர் புரிகுழல் பூவையர் பூவை அயில்
மாவே அனையர் வரிகழல் காளையர் வாள்நெடுங்கண்
ஏவே அனைய இலங்குஇழையாய் நின்று இரங்கல்என்னே
நீவேய் அனைய நிரைவளைத் தோளி நிறம்பசந்தே.

அம்பி 500

எனவும்,

[அம்பனைய கண்களை உடைய தலைவீ! வேய்த் தோளாய்! மகளிர் பூக்களை அனையர். ஆடவர் பூக்களில் தேன் உண்ணும் வண்டினை அனையர். இதனைத் தெரிந்து கொண்டும் நீ நிறம்பசந்து வருந்துவது ஏன்?]

புதல்வற் புலத்தல் :

மைவார் குழல்மட மங்கையர் தங்கள் வதுவைஉன்னிக்
கைவா ரணம்கட வும்பெரு மானைக் கலுழ்ந்துஅழைத்துஉன்
செவ்வாய் அமுதால் அணிந்தசெஞ் சாந்தம் சிதையப்புல்லி
இவ்வாறு செய்ததுஎல் லாம்யாவர் மேல்இனி ஏறுவதே.

அம்பி. 503

எனவும்,

[பரத்தையரை வதுவை செய்யக்கருதி யானையைச் செலுத்திச் சென்ற உன்தந்தையை அழுது அழைத்து, உன்னைத் தூக்கிக்கொள்ளச்செய்து, உன்வாய் எச்சிலால் உன் தந்தை அளித்த சந்தனம் சிதைய அவனைப்புல்லி, இப்படி எல்லாம் செய்த மகனே! உன் தந்தை இனி இங்கு வாரான் ஆதலின் இனி யாவர்மேல் நீ இவர்தல் கூடும்?]

மகற்கு அறிவுறுத்தல் :

கொய்யும் சுவல்பரி யும்குலப் பாகும்முட் கோலும்இல்லா
வையம் கடவும் மழகளி றேவருந் தாமல்எங்கை
செய்யும் பெருந்தவ மேகலந் தாருமைத் தீமையும்அப்
பொய்யும்கல் லாதுஒழி வாய்புனல் ஊரனைப் போலஇன்றே.

அம்பி. 504

எனவும்,

[குதிரையும் பாகனும் தாற்றுக்கோலும் இல்லாத நடைத்தேரைச் செலுத்தும் இளங்களிறுபோன்ற என்மகனே! வருந்தாமல் என் தங்கையர் செய்த பெரிய தவமே வடிவு எடுத்தாற்போன்று அவரிடத்தும் அன்புகாட்டும் புதல்வனே! உன் தந்தையைப்போலத் தன்னைச் சேர்ந்தவருக்குத் தீங்கு செய்வதனையும், அவர்களிடம் பொய் உரைப்பதனையும் கற்காமல், அவனுடைய நல்ல பண்புகளையே பின்பற்று வாயாக]

மகற்பழித்து நெருங்கல் :

வலத்துஇயல் சூல மதுரேசர் கோயில் வலம்செயப்போய்ச்
சலத்துஇயல் செய்து வரும்களி றேவிலை சாற்றிவிற்கும்
நலத்தியர் சேரிக்கு நல்விருந் தாவது நாளும்உங்கள்
குலத்துஇயல்பாய்இருந்தால்உன்னையோநொந்துகூறுவதே.

மதுரை 349

எனவும் வரும். பிறவும்அன்ன. 183

[வெற்றிதரும் சூலத்தை ஏந்திய சொக்கநாதர் கோயிலை வலம்செய்துவரப் போய், இடையே பரத்தையர்களைக் கண்டு வஞ்சனை செய்துவரும் மகனே! உடலை விலைக்கு விற்கும் பரத்தையர் சேரிக்கு நல்ல விருந்தினராய்ப் போய்சேருவது உங்கள் குலத்தாருக்கே நாளும் இயல்பாகிவிட்டது. உன்னை நொந்து கூறுவதில் பயன் என்ன? உன் தந்தை இப்பருவத்தில் பரத்தையர் சேரிக்குப் போகவும், நீ குழந்தைப் பருவத்திலேயே அங்குச் செல்லத்தொடங்கிவிட்டாய்!] 183

## உணர்த்த உணரா ஊடலின் ஒழிபு

556 ஆயிழை மைந்தனும் ஆஅற் றுமையும்
வாயி லாக வரவுஎதிர் கோடலும்[1]
மணந்தவன் போயபின் வந்த பாங்கியோடு
இணங்கின மைந்தனை இனிதினின் புகழ்தலும்[2]
தலைவனைப் புகழ்தலும்[3] சிலைநுதல் பாங்கி
மனைவியைப் புகழ்தலும்[4] இனையன பிறவும்
அனைவகை மொழிந்த அதன்பால் படுமே.

இஃது உணர்த்த உணரா ஊடற்கு உரிய ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) ஆயிழை மைந்தனும் ஆற்றுமையும் வாயிலாகத் தலைமகன் வந்துழித் தலைமகள் எதிர்கோடல் முதலாகப் பாங்கி மனைவியைப் புகழ்தல் ஈறுகச் சொல்லப்பட்டனவும் பிறவும் அத்தன்மைத்தாகிய உணர்த்த உணரா ஊடற்கு உரியவாம் என்றவாறு.

இவற்றை வேறு கூறியது, அவை போலாத ஊடல் சிறுபான்மை நோக்கி என்க.

### விளக்கம்

1 மைந்தனும் ஆற்றுமையும் வாயிலாக வந்த தலைவனை எதிர்கோடல்.

2 தலைவன் நீக்கத்துக்கண் வந்த தோழியோடு தலைவனைப் புகழ்தல்.

3 தலைவனைத் தலைவி புகழ்தல்.

4 தோழி தலைவியைப் புகழ்தல்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ, 207

'அரிவை மைந்தனும் ஆற்ருமையுமே
வாயி லாக வரவுஎதிர் கோடலும்
புணர்ந்தவன் போயபின் புனைஇழை இகுளையோடு
அணங்குதன் மைந்தனை அன்புறப் புகழ்தலும்
துணைவனைப் புகழ்தலும் தூநகைப் பாங்கி
துணைவியைப் புகழ்ந்து சொல்லலும் அதன்பின்
மதுப்பொழி தாரோன் மணமனை வாயில்
பொதுத்தலத்து இருந்துழிப் புரைதீர் மனைவியர்
நினைவுஅறி கண்புதை நிகழ்தலும் பிறவும்
உணர்வதோடு உணரா ஊடல்கள் உட்கொளும்'.

மா. அ. 104]

மகனும் ஆற்ருமையும் வாயிலாகத் தலைமகன் வந்துழித் தலைமகள் எதிர்கோடல் :

வெள்ளம் பரந்தன்ன வேட்கைசென்ருலும் மிகப்பெரியோர்
உள்ளம் சிறியவர் மேல்செல்லு மோஒளி கோமளம்சேர்
வள்ளம் கமல மலர்த்தஞ்சை வாணன்தென் மாறைஅன்னப்
புள்ளம் புனல்வயல் ஊரபுன் காமம் புகல்வதன்றே.

தஞ்சை. 404

எனவும்,

[ஒளியும் வனப்பும் பொருந்திய கிண்ணம் போன்ற தாமரைமலர்கள் பூக்கும் வாணனுடைய தென்மாறையைப் போன்ற, அன்னங்கள் தங்கும் வளம் சான்ற வயல் ஊரனே! புல்லிய காமம் விரும்பத்தக்கதன்று. வெள்ளம் பரவினுல் போன்ற வேட்கை தோன்றினுலும், சான்ருேர்-உள்ளம் சிறியவரிடம் படர்ந்து செல்லுமோ?]

தலைமகனைப் புணர்ந்து நீங்கியபின் வந்த பாங்கியொடு
தன்மகனைப் புகழ்ந்து உரைத்தல் :

இருமையில் ஏயும் பயன்களெல் லாம்தன்னை ஈன்றநமக்கு
ஒருமையிலேவந்துறத்தகைந்தான்மைந்தன்ஒண்சுடர்போல்
வரும் அயிலேகொண்டுமாதடிந்தான்அன்னவாணன்தஞ்சைத்
திருமயி லேஅனை யாய்புன லூரனைத் தேருடனே.

தஞ்சை. 405

எனவும்,

[வேலால் கிரவுஞ்சமலையைப் பிளந்த முருகனை ஒத்த வாணன் தஞ்சையில் உள்ள மயிலனையாய்! இம்மை மறுமை என்ற இரு பிறப்பிலும் நமக்குக் கிடைக்கக் கூடிய பயன்களை எல்லாம் தன்னைப் புதல்வனாகப் பெற்றெடுத்த நமக்கு இவ்வொரு பிறப்பிலே வந்து பொருந்துமாறு, நம் புதல்வன் தலைவனைத் தேரோடு தடுத்து நம் மனைக்குக் கொண்டுவந்து விட்டான். இப்பாடல் அகநானூறு 66ஆம் பாடற்கருத்தைக் கொண்டது.]

தலைவி தலைவனைப் புகழ்தல் :

கொண்டானில்துன்னியகேளிர்மற்றுஇல்லைக் குறிப்பின்என்று
தண்டா தவர்சொன்ன சால்புகண் டேன்தலம் ஏழ்புரக்கும்
வண்தார்மணிப்புயன்வாணன்தென்மாறைமகிழ்நர்முன்னுள்
உண்டா கியபழங் கேண்மைஇந் நாளும் ஒழிந்திலரே.

தஞ்சை 406

எனவும்,

[உலகம் காக்கும் அழகிய புயத்தை உடைய வாணனது தென்மாறையில் தலைவன் பண்டு நம்மாட்டுக்கொண்ட நட்பினை இன்னும் மறக்கவில்லை ஆதலின், 'கணவனைப்போலச் சிறந்த உறவினர் வேறு யாவரும் இரார்' என்று சான்றோர் சொன்ன மேதக்க மொழியின் பொருள் புலனாயிற்று.]

பாங்கி தலைவியைப் புகழ்தல் :

சிறந்தார் புகழ்தரும் தீம்புனல் ஊரன்செய் தீமைஎல்லாம்
மறந்துஆர்வம்எய்திவணங்குதலால்இவள்வாணன் தஞ்சை
நிறம்தா ரகைஅன்ன நித்திலம்போலும்நன் னிள்குலத்தில்
பிறந்தார் நிறைந்தகற்பு ஓர்வடி வேபெற்ற பெற்றியளே.

தஞ்சை 407

எனவும் வரும். 184

[சான்றோர் புகழும் புனல் ஊரனாகிய தலைவன் செய்த தீமைகளை எல்லாம் மறந்து விருப்பம் எய்தி வணங்குதலால், இத்தலைவி வாணனது தஞ்சையில் ஒளி வீசும் விண்மீன் களைப் போன்று ஒளிரும் முத்தைப்போன்ற நல்ல சிறந்த குலத்தில் பிறந்தவர்பால் நிறைந்த கற்புஎல்லாம் திரண்டு ஒருவடிவு எடுத்தாற்போலும் தன்மையள் ஆவள்.]

184

## பரத்தையின் பிரிவின் விரி

557 மூன்று சூத்திரத்து மொழிந்தவை எல்லாம்
ஆன்ற பரத்தையின் அகற்சியின் விரியே.

இது பரத்தையிற்பிரிவின் விரி இத்துணைத்து என்கின் றது.

(இ-ள்) காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு ஏது ஈதாம் இவ் வீறைவிக்கு என்றல் முதலாகப் பாங்கி மனைவி யைப் புகழ்தல் ஈறாகச் சொல்லப்பட்டன எல்லாம் பரத்தை யின் பிரிவின் விரியாம் என்றவாறு.

வாயில் வேண்டல் முதலாக நான்கு வகைக்கும் ஏற்கு மாறு அறிந்து கொள்க. 185

### ஒத்த நூற்பாக்கள்

தலைவன் கூற்று :

'பயல்கெழு துணைஅணை புல்லிய புல்லாது
உயங்குவள் கிடந்த கிழத்தியைக் குறுகிப்

புல்குளன முன்னிய நிறை அழி பொழுதின்
மெல்லென் சீறடி புல்லிய இரவினும்
உறல்அருங்கு உண்மையின் ஊடல் மிகுத்தோனை
பிறபிற பெண்டிரின் பெயர்த்தற் கண்ணும்
நின்றுநனி பிரிவின் அஞ்சிய பையுளும்
சென்றுகை இகந்துபெயர்த்து உள்ளிய வழியும்
காமத்தின் வலியும் கைவிடின் அச்சமும்
தான்அவள் பிழைத்த நிலையின் கண்ணும்.' ..

தொல். பொ. 146

தலைவி கூற்று :

'கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி
நயந்த கிழவனை நெஞ்சு புண்உறீஇ
நளியின் நீக்கிய இளிவரு நிலையும்
புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு
அகன்ற கிழவனைப் புலம்புநனி காட்டி
இயன்ற நெஞ்சம் தலைப்பெயத் தருக்கி
எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினும்
தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி
எங்கையர்க்கு உரைஎன இரத்தற் கண்ணும்
செல்லாக் காலைச் செல்கஎன விடுத்தலும்
காமக் கிழத்தி தன்மகத் தழீஇ
ஏமுறு விளையாட்டு இறுதிக் கண்ணும் ...
தந்தையை ஒப்பர் மக்கள் என்பதனால்
அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கலும்....
கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி
அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக்
காதல் எங்கையர் காணின் நன்றுஎன
மாதர் சான்ற வகையின் கண்ணும்
தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை
மாயப் பரத்தை உள்ளிய வழியும் ...

காமக் கிழத்தியர் நலம்பா ராட்டிய
தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும்
கிழவோள் செப்பல் கிழவது என்ப.' தொல்.பொ. 147

தோழி கூற்று :

'அடங்கா ஒழுக்கத்து அவன்வயின் அழிந்தோளை
அடங்கக் காட்டுதல் பொருளின் கண்ணும்
பிழைத்துவந்து இருந்த கிழவனை நெருங்கி
இழைத்தாங்கு ஆக்கிக் கொடுத்தற் கண்ணும்....
புறம்படு விளையாட்டுப் புல்லிய புகற்சியும் ...
மாண்நலம் தாஎன வகுத்தற் கண்ணும்
பேணா ஒழுக்கம் நாணிய பொருளினும்
உணர்ப்புவயின் வாரா ஊடல்உற் றோள்வயின்
உணர்த்தல் வேண்டிய கிழவோன்பால் நின்று
தான்வெகுண்டு ஆக்கிய தகுதிக் கண்ணும்
அருமைக் காலத்துப் பெருமை காட்டிய
வெண்மைக் காலத்து இரக்கத் தானும்
பாணர் கூத்தர் விறலி என்றிவர்
பேணிச் சொல்லிய குறைவினை எதிரும்
நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக்
காத்த தன்மையின் கண்நின்று பெயர்ப்பினும் ...
தோழிக்கு உரிய என்மனார் புலவர்.' தொல். பொ. 150

'உணர்ப்புவரை இறப்பினும் செயற்குறி பிழைப்பினும்
புலத்தலும் ஊடலும் கிழவோற்கு உரிய.'

தொல். பொ. 156

'புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்தும்
சொலத்தகு கிளவி தோழிக்கு உரிய.'

தொ. பொ. 157

'பரத்தைமை மறுத்தல் வேண்டியும் கிழத்தி
மடத்தகு கிழமை உடைமை யானும்
அன்புஇலை கொடியை என்றலும் உரியள்.' ,, 158

‘ அவன்குறிப்பு அறிதல் வேண்டியும் கிழவி
அகன்மலி ஊடல் அகற்சிக் கண்ணும்
வேற்றுமைக் கிளவி தோற்றவும் பெறுமே.’ ,, 159

‘ காமக் கடப்பினுள் பணிந்த கிளவி
காணுங் காலை கிழவோற்கு உரித்தே
வழிபடு கிழமை அவட்குஇயல் ஆன.’ ,, 160

‘ அருள்முந்து உறுத்த அன்புபொதி கிளவி
பொருள்பட மொழிதல் கிழவோட்கும் உரித்தே.’ 161

‘ மனைவி தலைத்தாள் கிழவோன் கொடுமை
தம்முள ஆதல் வாயில்கட்கு இல்லை.’ ,, 162

‘ மனைவி முன்னர்க் கையறு கிளவி
மனைவிக்கு உறுதி உள்வழி உண்டே.’ ,, 163

‘ எல்லா வாயிலும் இருவர் தேஎத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப.’ ,, 178

‘ மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலை புலவியுள் உரிய.’ ,, 227

‘ பரத்தையின் பிரிவே நிலத்திரிபு இன்றே.’
இறை. அக. 42

‘ கற்பினுள் பிரிந்தோன் பரத்தையின் மறுத்தந்து
அறப்பொருள் படுப்பினும் வரைநிலை இன்றே.’ ,, 43

‘ புகழும் கொடுமையும் கிழவோன் மேன.’ ,, 44

‘ உணர்ப்புவயின் வாரா ஊடல் தோன்றின்
புலத்தல் தானே கிழவற்கும் வரையார்.’ ,, 45

‘ கண்டவர் கூறல் காதல் தோழி
பொறை உவந்து உரைத்தல் பொதுப்படக் கூறி
வாடி அழுங்கல் மாறுகொண் டவனொடு
கனவுஇழந்து உரைத்தல் விளக்கொடு வெறுத்தல்
வாரம் பகர்ந்து வாயில் மறுத்தல்
பள்ளிஇடத்து ஊடல் பணிமொழி ஆடல்
செவ்வணி விடுக்க இல்லோர் கூறல்

அயல்அறிவு உரைத்து அவள் அழுக்கம் எய்தல்
செவ்வணி கண்ட வாயிலவர் கூறல்
மனைபுகல் கண்ட வாயிலவர் கூறல்
முகம்மலர்ச்சி கூறல் முனிவது என்னெனக்
காலம்நிகழ்வு உரைத்தல் கலவி எய்தலை
எடுத்துரைத் தல்லொடு கலவி கருதிப்
புலத்தல் குறிப்புஅறிந்து புலந்தமை கூறல்
வாயிலவர் வாழ்த்தல் புனல்வரவு உரைத்தல்
தேர்கண்டு மகிழ்தல் சேடியர் விழவின்
தம்முள் உரைத்தல் தன்னை வியத்தல்
நகைத்துஉரைத் தல்லொடு நாண் கண்டு உரைத்தல்
பாணன்வரவு உரைத்தல் பாங்கிஇயல் பழித்தல்
உழையர்இயல் பழித்தல் ஒண்ணுதலாள் அவற்கு
இயற்பட மொழிதல் இயல்புநினைந்து உரைத்தல்
வாயில் பெறுது மகன்திறம் நினைதல்
வாயிற்கண் நின்று தோழிக்கு உரைத்தல்
வாயில் வேண்டத் தோழி கூறல்
மன்னிய தோழி வாயில் வேண்டல்
மனையவர் மகிழ்தல் வாயில் மறுத்தல்
பாணனொடு வெகுடல் பாணன் புலத்தல்
விருந்தொடு செல்லத் தணிந்தமை கூறல்
ஊடல்தணி வித்தல் அணைந்தவழி ஊடல்
புனல்ஆட்டு வித்தமை கூறிப் புலத்தல்
கலவி கருதிப் புலவி புகறல்
மிகுத்துஉரைத்து ஊடல் விறல்வேல் காளை
ஊடல் நீட வாடி உரைத்தல்
துனிமொழிந்து உரைத்தல் துகள்ஒன்று இல்லாப்
புதல்வன்மேல் வைத்துப் புலவி தீர்தல்
கலவிஇடத்து ஊடல் முன்நிகழ்வு உரைத்தல்
பரத்தையைக் கண்டமை பயன்படக் கூறல்
ஊதியம் எடுத்துஉரைத்து ஊடல் தீர்த்தல்

எண்ணுறு ஒன்றுஇவை பரத்தையின் பிரிவுஎனப்
பண் ஆர் மொழியாப் பகர்ந்திசி னோரே.'
திருக்கோவை, மு. வீ. கற். 9

முழுதும் — ந. அ. 208

வாயில் மறுத்தலும் வாயில் கூறலும்
தோழி மாற்றலும் புலவி தோற்றலும்
கிழவன் புலத்தலும் கிழவி புலத்தலும்
விழைகுநன் விழையான் இவன்என விளம்பலும்
தாய்கண்டு உரைத்தலும் தாங்கிய காதலின்
ஆயின பிறவும் ஆயிடைப் பிரிவே.' த. நெ. வி. 25

'முறைபெறச் சூத்திரம் மூன்றினும் உரைத்தவை
அறைதரு பரத்தையின் அகற்சியின் விரியே.'
மா. அ. 105

185

## ஏனைய பிரிவுகளின் வகை

558 பிரிவுஅறி வுறுத்தல்[1] பிரிவுஉடன் படாமை[2]
பிரிவுஉடன் படுத்தல்[3] பிரிவுஉடன் படுதல்[4]
பிரிவுழிக் கலங்கல்[5] வன்புஉறை[6] வன்பொறை[7]
வருவழிக் கலங்கல்[8] வந்துழி மகிழ்ச்சிஎன்று
ஒருமையின் கூறிய ஒன்பது வகைய
கல்வி முதலா எல்லாப் பிரிவும்.

நிறுத்த முறையானே, இது கல்வி முதலிய பிரிவின் வகை இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) பிரிவு அறிவுறுத்தல் முதலாக வந்துழி மகிழ்ச்சி ஈறாகக் கூறப்பட்ட ஒன்பது வகையினை உடைய வாம், கல்வி முதலாகிய ஐந்துவகைப் பிரிவும் என்றவாறு.

ஒருமையின் கூறுதல்—ஒரு தன்மைபற்றிக் கூறுதல்.

ஒரு தன்மைபற்றிக் கூறுதலான் ஒன்பது வகையவாம் எனவே, பலதன்மை பற்றிக் கூறின் பல்வேறு வகையவாம் என்பதூஉம் பெற்றும். பெறவே, வகைவேறுபாடே விரி ஆகலின், அவற்றின் விரியும் உடன் கூறினுர் என்பது. பிரிவு அறிவுறுத்தல் ஒரு தன்மைபற்றிக் கூறும்இடத்து ஒன்ருயி னும், தலைவன் பாங்கிக்குப் பிரிவு அறிவுறுத்தலும் அவள் அதனைத் தலைவிக்கு அறிவுறுத்தலும் எனப் பல தன்மை பற்றிக் கூறும் இடத்துப் பலவாமாறும் காண்க. ஏனையவற்றிற் கும் ஏற்புழி இவ்வாறே உய்த்து உணர்க.

### விளக்கம்

1 தலைவன் தான் பொருள் முதலிய குறித்துப் பிரியவேண்டிய நிலையைத் தலைவிக்குத் தோழி வாயிலாக அறிவுறுத்தல்.

2 தொடக்கத்தில் தலைவி தலைவனுடைய பிரிவிற்கு இசையாதிருத்தல்.

3 தலைவனும் தோழியும் பொருள் முதலிய குறித்துப் பிரிய வேண்டுவதன் இன்றியமையாமையைத் தலைவிக்கு எடுத்து இயம்பி அவளைப் பிரிவிற்கு இசையச்செய்தல்.

4 தலைவி தலைவனுடைய பிரிவிற்கு இசைதல்.

5 தலைவன் பிரிந்தவழித் தலைவி ஆற்ருது கலங்குதல்.

6 தலைவி பிரிவு குறித்து வருந்தலாகாது என்று தோழி வற்புறுத்தல்.

7 தலைவி அரிதின் பொறுத்து ஆற்றியிருத்தல்.

8 வினைமுற்றி மீண்டு வரும் தலைவன் வரும்வழியில் மாவும் புள்ளும் முதலிய கண்டு தலைவியை நினைத்துக் கலங்குதல்.

9 தலைவன் மீண்டு வந்தவழித் தலைவியும் தலைவனும் மீட்சி குறித்து மகிழ்தல்.

ஒத்த நூற்பாக்கள்

ஓதல் பிரிவு :

' கல்வி நலம் கூறல் பிரிவுநினைவு உரைத்தல்
கலக்கம்கண்டு உரைத்தல் காதலர் தமது
வாய்மொழி கூறல் வருவன நான்கும்
தீமையில் கல்வி தேருங் காலே.'

திருக்கோவை, மு. வி. கற். 4

காவல் பிரிவு :

' பிரிவுஅறி வித்தல் பிரிவுகேட்டு இரங்கல்
வருபவை இரண்டும் வையம் காவல்.' „ 5

தூதிற் பிரிவு :

' பிரிவு கூறல் வருத்தம் தணித்தல்
இருபகை தணித்தற்கு ஏகல் என்ப.' „ 6

துணைவயின் பிரிவு :

' பிரிந்தமை கூறல் பிரிவு ஆற்றாமை
கார்மிசை வைத்தல் காரை நோக்கி
வருந்தி உரைத்தல் மலர்க்குழல் அரிவை
கூதிர்கண்டு கவறல் குளிர்முன் பனிக்குஅவள்
நொந்து கூறல் நோக்கிப் பின்பனிக்கு
இரங்கி உரைத்தல் இளவேனில் கண்டுஅவள்
இன்னல் எய்தல் இதுஅவர் குறித்த
பருவம் ஆம்என வரவு கூறல்
பருவம்மறைத்து உரைத்தல் மறுத்துரைத் தல்லொடு
தேர்வரவு கூறல் வினைமுற்றி நினைதல்
நிலைமைநினைந்து உரைத்தல் முகிலொடு கூறல்

வரவுஎடுத்து உரைத்தல் மறவாமை கூறல்
மற்றுஇவைஈரெட்டும்உற்றுழிப்பிரிவாம்.' மு.வி.கற். 7

பொருள்வயின் பிரிவு :

'வாட்டம் கூறல் பிரிவுநினைவு உரைத்தல்
ஆற்ருது புலம்பல் ஆற்ருமை கூறல்
திணைபெயர்த்துரைத்தல்பொருத்தம் அறிந்துஉரைத்தல்
பிரிந்தமை கூறல் பிரிவுஆற் ருமையான்
இரவுஉறு துயரத்திற்கு இரங்கி உரைத்தல்
நிகழ்ச்சிநினைந்து அழிதல் உருவுவெளிப் படுதல்
நெஞ்சொடு நோதல் நெஞ்சொடு புலத்தல்
நெஞ்சொடு மறுத்தல் நாள்எண்ணி வருந்தல்
ஏறு வரவுகண்டு இரங்கி உரைத்தல்
பருவம்கண்டு இரங்கல் முகிலொடு கூறல்
தேர்வரவு கூறல் இளையர்எதிர் கோடல்
உள்மகிழ்ந்து உரைத்தல் ஓதிய இருபதும்
மாமதி நுதலாய் வான்பொருள் பிரிதல்.'
திருக்கோவை மு. வி. கற். 8

முழுதும் — ந. அ. 209

'பிரிவகை உணர்த்தலும் பாங்கி கூற
உரிதினின் அழுங்கலும் அழுங்காக் காலை
அறிகுவன் என்றலும் அறியக் கூறலும்
நறுநுதல் இனைதலும் நயவரக் கூறலும்
தெரியிழை நேர்தலும் செலவுடன் மயங்கலும்
வந்தது பொழுதுஎன வருந்தலும் தோழி
நொந்தனன் உரைப்பவும் நோவாள் கூறலும்
ஆற்று வித்தலும் ஆயிடை வருவோன்
மேனவும் சேயிடைப் பிரிவுஎனக் கொளலே.'
த. நெ. வி. 24

'போக்குஅறி வுறுத்தல் போக்குஉடன் படாமை
போக்குஉடன் படுத்தல் போக்குஉடன் படுதல்

போயுழிக் கலங்கல்வன் புறையே வன்பொறை
வரும்வழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்று
ஒருதலை யாக உரைத்தாண் வகைய
அருள்மலி காவல் முதலிய ஐந்தே' மா. அ. 106]

கல்விப் பிரிவு பாங்கிக்குத் தலைமகன் அறிவுறுத்தல் :

சீர்அளவு இல்லாத் திகழ்தரு கல்விச்செம் பொன்வரையின்
ஆரளவுஇல் லாஅள வும்சென் றார் அம்பலம் துன்னிநின்ற
ஓர்அளவு இல்லா ஒருவன் இருங்கழல் உன்னினர்போல்
ஏர்அளவு இல்லா அளவினர் ஆகுவர் ஏந்திழையே. திரு. 308

எனவும்,

[தலைவியே! எல்லையற்ற கல்வியாகிய மேருமலையின் எல்லைவரை சென்ற நம் தலைவர், அம்பலத்து நின்ற சிவபெருமானின் திருவடிகளை அறிந்து நினைந்தவர் போல், நன்மைக்கு எல்லை இல்லாத திருவினராவர்.]

கல்விப் பிரிவு

கல்விப் பிரிவு தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல் :

வீதல்உற் றார்தலைமாலையன் தில்லைமிக் கோன்கழற்கே
காதல்உற் றார்நன்மை கல்விசெல் வீதரும் என்பதுகொண்டு
ஓதல்உற் றார்உற்று உணர்தல்உற் றார்செல்லல்மல்அழல்கான்
போதல்உற் றார்நின் புணர்முலை உற்ற புரவலரே.

திரு. 309

எனவும்,

[செல்வியே ! 'இறந்த தேவர்களின் தலைமாலையை அணிந்த தில்லைக்கண் உள்ள சிவபெருமானுடைய திருவடிகளிலேயே அன்புற்றாரது நன்மையைக் கல்வி தரும்' என்பது கருதி, ஓதுதலான் மிக்கவரை அடைந்து எல்லா நூல்களையும் உணர்தலுற்று, நின் புணர்நகிலைச் சேர்ந்த தலைவர், இன்னுமையைச் செய்யும் வெய்ய பாலையில் போதலை நினைத்தார்.]

கல்விக்குப் பிரிந்துழிக் கார்ப்பருவம் கண்டு
தலைவி வருந்தல் :

யாணர்க் குழல்மொழி என்செய்கு வேன்கல்வி எல்லைஎல்லாம்
காணப் பிரிந்தவர் காண்கில ரால்கடல் மேய்ந்துதஞ்சை
வாணர்க்கு எதிர்ந்தவர் மங்கையர் போலும்என் வல்உயிரின்
ஊண்அற்பம் என்னஎண் ணுவரும் மேகம் உருமுடனே.

தஞ்சை. 409

எனவும்,

[புதுப்புது இசையைப் பரப்பும் குழல் போலும் மொழியினை உடைய தோழியே! கடல்நீரைஉட்கொண்டு, தஞ்சைவாணனை எதிர்த்த பகைவர்தம் மனைவிமார்களைப் போல நீர் உகுத்தற்கு, என் உயிர் மெல்லிது என்று எண்ணுது, கார் மேகம் இடியுடன் வருகின்றது. கல்வியின் எல்லையைக் காண்பதற்கு ஓதற்பிரிவை மேற்கொண்டுள்ள தலைவர் இக் கார்மேகத்தைக் காண்பார் அல்லர். யான் என் செய்வேன்?]

கார்ப்பருவம் கண்டு வருந்திய தலைவியைத் தோழி
ஆற்றுவித்தல் :

திருமால் அறியாச் செறிகழல் தில்லைச்சிற் றம்பலத்துஎம்
கருமால் விடைஉடை யோன்கண்டம் போல்கொண்டல் எண்திசையும்
வருமால் உடன்மன் பொருந்தல் திருந்த மணந்தவர்தேர்
பொரும்மால் அயில்கண்நல் லாய்இன்று தோன்றும்நம் பொன்னகர்க்கே.

திரு. 326

எனவும்,

[திருமாலும் அறியாத திருவடியை உடையவனுய்ச் சிற்றம்பலத்தான் ஆகிய இடபவாகனனுடைய கழுத்தைப் போல மேகம் இருண்டு எட்டுத்திசைக்கண்ணும் வாராநின்றது. அதனல், வேற்கண் தோழி! தம்முடனே நிலைபெற்ற கல்வி பொருந்துதலைக் காண, நம்மை மணந்த தலைவரது தேர் இன்றே நம் இல்லின்கண் வந்து சேரும்.

திருக்கோவையாரில் இப்பாடல் துணைவயிற் பிரிவின் கண்ணதாய் உள்ளது. இங்கு யாம் ஓதற்பிரிவிற்கு ஏற்பப் பொருள் கொண்டுள்ளாம்.]

காவற் பிரிவு

காவல்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல் :

அல்லவை நீக்கி அறப்புறம் காக்கவும் ஆதுலர்கள்
சொல்லுவ கேட்டுஅவர் துன்பம் துடைக்கவும் சூழ்கடல்பார்
எல்லையின் ஒன்றைஒன்று இன்னு செயும்இகல் வாட்டுதற்கும்
செல்லுவ தேகடன் ஆம்நாடு காவல் சிறந்தவர்க்கே.

அம்பி 519

எனவும்,

[நாடுகாவலில் சிறந்த தலைவனுக்கு, தீயவற்றை நீக்கி அறப்புறத்தைக் காப்பாற்றவும், நோயாளிகள் சொல்லுவன-வற்றைக் கேட்டு அவர்களது துன்பத்தைப் போக்கவும், உலகில் இன்னுசெய்யும் பகைமையைப் போக்கவும் செல்லுவதே கடமையாகும்.]

பாங்கி காவல்பிரிவு உடன்படாமை :

பண்காவல்கொண்டபணிமொழிச்செங்கைப்பசுங்கிளிக்கும்
கண்காவல் என்பதும் கண்டும்செல் வீர்கொல் கருங்கடல்சூழ்
மண்காவல் கொண்ட மணிநெடு வேல்முடி மன்னவர்க்குப்
பெண்காவல் கொள்கை பெரும்பழி போலும் பெருந்தகையே.

அம்பி. 520

எனவும்,

[பெருந்தகையே! பண்ணைவென்ற இன்சொல் தலைவிக்கு உன் கண்களே காவலாகும் என்பதை உணர்ந்தும் செல்வாய்கொல்லோ? கடல்சூழ் உலகைக் காக்கும் வேலை ஏந்திய முடி மன்னவருக்குப் பெண்ணிற்கு இடர் வாராமல் காத்துக்கொண்டிருப்பது பெரிய பழிபோலும்!]

காவல் பிரிவு தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல் :

முப்பான் இளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள்
வீப்பான் வியன்தில்லை யான்அரு ளால்விரி நீர்உலகம்
காப்பான் பிரியக் கருதுகின் றார்நமர் கார்க்கயல்கண்
பூப்பால் நலம்ஒளி ரும்புரி தாழ்குழல் பூங்கொடியே.

திரு. 312

எனவும்,

[கருங்கயல் புரிகுழல் தலைவியே! யாவரினும் மூத்தானும் இளையானும் யாருக்கும் முன்னவனும் பின்னவனும் திரிபுரங்களை அழிப்பானும் ஆகிய தில்லையான் அருளால் உலகத்தைப் பாதுகாக்க நம் தலைவர் பிரியக் கருதுகின்றார்.]

காவற்குப் பிரிந்துழித் தலைவி கூதிர்ப்பருவம் கண்டு வருந்தியமை :

நிறைசூல் எழிலி பொழிந்துகண் மாறிய பின்னை நின்ற
குறைசூழ் புறவு குழைபயன் சோரும் குறுந்துளிகொண்டு
அறைதூறைவாடை அலைக்கும்நன் னாள் இங்கு அறிகிலர்கொல்
நறைசூழ் மலர்க்குழ லாய்நாடு காவல் நயந்தவரே.

அம்பி. 522

எனவும்,

[மணம் கமழ் மலர்க் குழலாய்! மேகம் மழை பொழிந்து நீங்கிய பின், காடுகள் தளிர்ப்பச் சிறுதிவலை கொண்டு வாடைக்காற்று துன்புறுத்தும் நாளை, நாடுகாவலை விரும்பும் நம் தலைவர் இங்கு அறியார்கொல்?

கூதிர்ப்பருவம்கண்டு வருந்திய தலைவியைத் தோழி ஆற்றுவித்தல் :

பணிவார் குழைஏழி லோன்தில்லைச் சிற்றம் பலம்அனைய
மணிவார் குழல்மட மாதே பொலிகநம் மன்னர்முன்னுப்

பணிவார்திறையும்பகைத்தவர்சின்னமும்கொண்டுவண்தேர்
அணிவார் முரசினொடு ஆலிக்கும் மாவொடு அணுகினரே.
திரு. 330

எனவும்,

[பாம்பைக் குழையாக அணிந்த எழிலோன் ஆகிய சிவபெருமானின் சிற்றம்பலம் அனைய, நீலமணிபோன்ற கூந்தலை உடைய தலைவியே! நம் தலைவன், தன்முன் பணிந்தவர் அளித்த கப்பப்பொருளையும் பகைத்தவர் சின்னங்களையும் கொண்டு, வளவிய தேரில் முரசம்ஒலிக்க, தாவிஓடும் குதிரையோடு நம் ஊர் வந்தடைந்துவிட்டான் ஆதலின், நீ இனிக் கவலையை நீத்துப் பொலிக.]

வினைமுற்றி மீண்டமை பாங்கி தலைவிக்கு உணர்த்தல் :

புங்கம் படவண்டு இமிர்நறுங் கோதைப் புரிகுழலாய்
அங்கம்படர்கொண்டுஅழிவதுஎன்னேஇனி ஆடினரைப்
பங்கம் படவென்ற பன்மணித் தேர்வெம் பரிகடவிச்
சங்கம் படகம் முழங்கவந் தார்நம் தலைவர்இன்றே.
அம்பி 536

எனவும் வரும். இவைஇரண்டும் வன்பொறைக்கு உரியவாம்.

பிறவும்அன்ன.

[வண்டு ஒலிக்கும் கோதையை அணிந்த சுருண்ட குழலாய்! பகைவரைவென்ற தேரில் குதிரைகளைக்கட்டிச் செலுத்திச் சங்கம் முதலிய வாத்தியங்கள் ஒலிக்க நம் தலைவன் இன்றே வந்துவிட்டான். ஆதலின், இனி நீ உன் உடல் கவலையால் வாடுவது ஏன்?]

### தூதிற் பிரிவு

தூதிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தற்குச் செய்யுள்:

மூளா அரும்பழி மூண்டுஇரு வேந்தர்கள் மொய்அமரின்
மாளா வகைசென்று மாற்றுதல் வேண்டி மணிவரைவேய்த்

தோளாய் பிரிந்து வருநாள் அளவும் சுரும்புஇமிர்பூந்
தாள்ஆர் மலர்க்குழ லாள்வருந் தாவகை சாற்றுகவே.

அம்பி 523

எனவும்,

[மலையில் வளரும் மூங்கில் போன்ற தோளாய்! பழி மூள வேந்தர் இருவர் போரில் மாளாதபடி அவர்களைச் சந்து செய்வித்தல் வேண்டி, யான் பிரிந்து மீண்டு வரும் நாள் வரையில், சுரும்பு இமிரும் மலர்க்குழலாளாகிய தலைவி வருந்தாதபடி அவளை ஆற்றுவித்துக்கொண்டு இருப்பாயாக.]

பாங்கி பிரிவு உடன்படாமை :

வேயும் கரும்பும் விரும்பிய தோள்இந்த மெல்லியலும்
யாயும் பகைகண்டு இருக்கவைத் தோஎதிர்ந்தா ரைமுனையில்
பாயும் புரவிப் படைஇரு வேந்தர் பகைத்தவரைப்
போயும் தணித்துப் பொருந்திடு மாறு வருந்துவதே.

அம்பி. 524

எனவும்,

[மூங்கிலும், கரும்பும் போன்ற தோள்களை உடைய தலைவியும் அவள் தாயும் ஊரவர் கூறும் பகை மொழிகளைக் கேட்குமாறு இருக்கவைத்தோ, பகைவர்மேல் போர்முனையில் பாயும் குதிரைப் படையை உடைய பகைவேந்தர் இருவரையும் நீர்போய்ப் பகை தணித்துப் பொருந்துமாறு முயலுவது?]

தூதிற்பிரிவு தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல் :

மிகைதணித் தற்குஅரிதாம் இருவேந்தர்வெம்போர்மிடைந்த
பகைதணித் தற்குப் படர்தல்உற் றார்நமர் பல்பிறவித்
தொகைதணித் தற்குஎன்னை ஆண்டுகொண் டோன்தில்லைச் சூழ்பொழில்
முகைதணித் தற்குஅரி தாம்புரி தாழ்தரு மொய்குழலே [வாய்

திரு 314

எனவும்,

[யான் பலபிறவிகளை எடுக்காதவகை என்னை ஆட் கொண்ட சிவபெருமானது தில்லையைச் சூழ்ந்த பொழி லிடத்தே பூத்த போதுகளால் தனது இயற்கைமணம் மாற் றுதற்கு அரிதாகிய கூந்தலைஉடைய தலைவியே! ஒருவர் உள்ளமிகுதியை ஒருவர் தணித்தற்கு அரியராகிய வேந்தர் இருவர் தம்மிடையேகொண்ட பகையை நீக்கி அவரிடை அமைதி நிலவுமாறுசெய்ய, நம் தலைவன் செல்லுதலை மேற் கொண்டுள்ளான்.]

தூதிற்பிரிந்துழித் தலைவி முன்பனிப்பருவம் கண்டு வருந்தல்:

பருந்துஆர் சுடர்இலை வேல்பகை வேந்தர் பகைதணிப்பப்
பிரிந்தார் வருகிலர் பெய்வளை யாய்பிர சம்புலந்து
கருந்தா மரைஎன்னச் செந்தா மரைகரு கப்பெருக
வருந்தார் வருந்துற மஞ்சுதெற்கு ஓட வரும்பனியே.

அம்பி. 526

எனவும்,

[பெய்வளையாய்! பருந்துகள் பின்தொடரும் வேற்படை உடைய, பகைத்த வேந்தர்தம் பகையைப் போக்கிச் சந்து செய்விக்கப் பிரிந்த நம்தலைவர் இம்முன்பனிக்காலத்தும் மீண்டு வந்திலர். வண்டுகள் வெறுத்துச் செல்லச் செந் தாமரைகள் கருந்தாமரைபோலக் கருகவும், இதற்குமுன் பிரிவுகருதி வருந்தாதவரும் வருந்தவும் மேகங்கள் தென்புறம் ஓட முன்பனிக்காலம் வந்துள்ளது.]

தூதில் பிரிந்துழி முன்பனிப் பருவம் கண்டு வருந்திய
தலைமகளைத் தோழி ஆற்றுவித்தல்:

சுற்றும் குழல்நின் பிணிவீடுப் பான்வந்து தோன்றினர்பார்
முற்றும் பொழிகின்ற முன்பனி நாள்முகி லும்கடலும்
வற்றும் பருவத்தும் மண்புரப் பான்தஞ்சைவாணன் ஒன்னார்ச்
செற்றும் படையின்வெம் போர்தணிப் பானன்று சென்றவரே.

தஞ்சை. 416

எனவும் வரும். பிறவும் அன்ன.

[கார்மேகமும் கடலும் வற்றும் காலத்தும் உலகைக் காத்தற்கு மேற்கொண்ட தஞ்சைவாணனுடைய பகைவரைப் போல வெகுளும் படையின் போர் தணிக்கச் சென்ற தலைவன், உலகு முழுவதும் முன்பனி பொழிகின்ற இக்காலத்தே, தலைவியின் துயரைப் போக்குதற்கு வந்துதோன்றிவிட்டான்.]

துணைவயின் பிரிவு

*துணைவயின் பிரிவு தலைமகனால் உணர்ந்த தோழி அதற்கு உடன்படாமை :*

*கன்னல் சிலைமதன் காதும் செருவில் கலங்குகின்ற*
*இன்னற்கு உதவிசெய் தால்என்ன தாகும் இருஞ்செருவின்*
*மன்னர்க்கு உதவி செயப்பிரி யும்வரி யுங்கழற்கால்*
*செந்நெல் பழனக் கழனிநல் லூரஎம் சேயிழைக்கே.*

*அம்பி. 528*

எனவும்,

[போரிலே நண்பராகிய மன்னவர்க்கு உதவிசெய்யப் பிரியும் கழற்காலினையும், செந்நெல் விளையும் வயல்களையும் உடைய நல் ஊர! எம்தலைவி கருப்புவில்லோனாகிய மன்மதன் செய்யும் போரில் கலங்கும் துன்பத்திற்கு நீ உதவிசெய்தால், என்ன குறைவு உனக்கு ஏற்படும்.?]

*துணைவயின் பிரிவு தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல் :*

*போது குலாய புனைமுடி வேந்தர்தம் போர்முனைமேல்*
*மாது குலாயமென் னோக்கிசென் றார்நமர் வண்புலியூர்க்*
*காது குலாயகுழை எழி லோனைக் கருதலர்போல்*
*ஏதுகொ லாம்விளை கின்றதுஇன்று ஒன்னார் இடுமதிலே.*

*திரு 316*

எனவும்,

*[அன்பு வெளிப்படுத்தும் மெல்லிய பார்வையுடையாய்!* போர்ப் பூச்சூடிய முடிவேந்தர்தம் போர்முனைமேல் நம் தலை-

வன் சென்றுள்ளான். புலியூரிலுள்ள குழையணிகாதனை வழி படாதவர் படும் துன்பம் போல, இன்று பகைவருடைய மதில் களுக்கு எத்தகைய தீங்குகள் நேரிடுமோ?]

துணைவயின் பிரிந்துழித் தலைவி பின்பனிப்பருவம் கண்டு வருந்தியது :

சுற்றின வீழ்பனி தூங்கத் துவண்டு துயர்களன்று
பெற்றவ ளேஎனைப் பெற்றுள் பெடைசிற கான்ஒடுக்கிப்
புற்றுஇல வாள்அர வன்தில்லைப் புள்ளும்தம் பிள்ளை தழீஇ
மற்றுஇனம் சூழ்ந்து துயிலப் பெறும்இம் மயங்குஇருளே.

திரு. 320

எனவும் வரும்.

[பெடைகளைத் தம் சிறகுகளுக்குள் ஒடுக்கி, புற்றில் இல்லாத கொல்லுதல் தொழிலை உடைய பாம்பை அணிந்த சிவபெருமானுடைய தில்லையிலே பறவைகளும் தம் குஞ்சு களைத் தழுவி, இனம் சூழத் துயில்பெறும் இம் மயக்கந்தரும் இருளில், 'சுற்றிலும் பனி பெய்யத் துவண்டு துயர் உறுவா ளாக' என்று என் தாய் என்னைப் பெற்ற தீவினை உடையேன் யான்.]

தலைவி பாணனைப் பாசறை விடுத்தல் :

தகைமெலியக் கொங்கை தங்குபைம் பொன்னும்வெஞ் சாயகப்பூந்
தொகைமெலி யப்படும் துன்பமும் சொல்லு தொழுதுஇறைஞ்சாப்
பகைமெலி யத்தங்கு பாசறை மேல்செல்லும் பாணமுல்லை
முகைமெலியப்புனை தொங்கல்எய்கேள்வர் தம்முன்புசென்றே.

அம்பி, 530

எனவும்,

[பாணனே! தொழுது வணங்காத பகைவர் மெலியு மாறு பாசறையில் இருக்கும் முல்லைப்பூமாலை அணிந்த என் தலைவன்முன்பு சென்று, என் அழகு கெடுமாறு கொங்கை

யில் பசலை பூத்திருப்பதனையும், கொடிய மன்மதன் கருப்பு-வில்லிலிட்டுப் பூ அம்பு தொடுத்தலால் உடல் மெலியப் படும் துன்பத்தினையும் நீ சென்று சொல்லுவாயாக.]

தலைவன் பாணனை வினுதல் :

தேதா எனமுரல் செவ்வழி யாழ்கொண்டு சேரிவிட்டுப்
போதாத பாணர்எப் போதுவந் தீர்புலவு உண்பருந்து
மீதுஆடு பாசறை வாய்வினை யேனுக்கு வேல்நெடுங்கண்
சூதுஆர் வனமுலைத் தோகைஎன் ஞேநின்று சொல்லியதே.

அம்பி. 531

எனவும்,

[தேதா என்று ஒலிக்கும் செவ்வழிப்பண்பாடும் யாழினை எடுத்துக்கொண்டு உம் சேரியை விட்டு என்றும் நீங்காத பாணராகிய நீர், பருந்துகள் வட்டமிடும் எம் பாசறைக்கு எப்போது வந்தீர்? பகைவினைக்கண் இங்குத் தங்கியிருக்கும் எனக்கு, வேல் போன்ற நெடுங்கண்களையும் சூதடு கருவி போன்ற அழகிய நகிலினையும் உடைய தலைவி என்ன செய்தி சொல்லி அனுப்பினுள்?]

தலைமகனுக்குப் பாணன் கூறல் :

திருவடி வீழ்ந்துஅடி யேன்திரு வேவிடை என்றுசெப்பப்
பருவரல் எம்பெரு மாட்டி பகர்ந்தது பற்றலரைப்
பொருதுஇகல் வென்ற புனைமணித் தேரும் புரவலரும்
வருவது கண்டிட யாம்பெற் றிலேம்என்னும் வாசகமே.

அம்பி 532

எனவரும். இது சொல்லிய கூற்று எனச் சொல்லியது ஆகலின், பிரிவுழித் தலைவி கலங்கலின் பாற்படும்.

[எம்பெருமாட்டியின் திருவடிக்கண் வீழ்ந்து வணங்கி 'அம்மையே ! விடைகொடுங்கள்' என்று யான் வேண்ட, எம்பெருமாட்டி தன் துயரைக் குறிப்பிட்டமுறை இதுவே.

'பகைவரைப் போரிட்டு மாறுபாட்டை அழித்த நெடுந்தேரும் தலைவரும் வெற்றியோடு மீண்டு வருதலைக்காணும் வாய்ப் பினை யாம் பெறும்அளவு அதுகாறும் உயிரோடு இருக்கமாட் டோம்' என்ற சொற்களே அவள் கூற்றுகும்.]

தலைவன் பாசறைப் புலம்பல் :

சாந்தம் கமழும் தடமுலை யாள்நின்ற தன்மைஇது
வேந்தன்பகைமுற்றிமீளஎண்ணேன்வெயில்போய்ஒளித்துக்
காந்தும் கடுங்கன லும்பொடி போர்க்கும் கடைப்பனிநாள்
போந்தும் கிடந்துவிட் டேன்என்ன பாவம் புகல்வதுவே.

அம்பி 533

எனவரும்.

[சந்தனம் மணக்கும் தடநகிலாள் இருக்கும்நிலை இது வாம். வேந்தனுடைய பகைவர்களை அழித்து விரைவில் மீண்டு வருதலைக் கருதேனாய், வெயில் ஒளிப்பக் கனலும் பொடி போர்க்கப் பின்பனிக்காலம் வந்தும் பாசறையிலேயே தங்கிவிட்டேன். யான் செய்துள்ள தீவினையை என்ன என்று புகல்வேன்?]

தலைவி பிரிந்துழிக் கனவு கண்டு இரங்கல் :

வனவேய் பொருதடந் தோள்வடந் தோய்முலை வல்லுப்புல்ல
நனவே எனஉன்னி நாட்டம் துறந்துநன் ஞானம்இல்லார்
எனவே தனிநின்று இரங்கவெங் கானத்து இகலும்கங்குல்
கனவே உனக்கும் கனவுஎய்து மால்ஒரு காலத்திலே.

அம்பி. 551

எனவும் வரும். இவை ஆறும் பிரிவுழிக் கலங்கற்கு உரிய வாம்.

[வேய்த்தோள் வனமுலை நல்லாளைக் கனவிடைப் புல்லி- னேனாக, நனவாகக் கண்விழித்து நல்ல ஞானம் இல்லாதவர் களைப் போலக் கலங்கித் தனியே நின்று நான் வருந்துமாறு கொடிய காட்டில் எனக்கு மாறுபாட்டைச் செய்யும் இராக்

காலக் கனவே! உனக்கும் ஒரு காலத்தில் கனவு வந்து உன்னைத் துன்புறுத்தும் ]

பின்பனிப் பருவம் கண்டு வருந்திய தலைவியைத் தோழி ஆற்றுவித்தல் :

வடுக்கண்டனையகண்மங்கை நல்லாய் தஞ்சைவாணன்வெற்
அடுக்கம் குளிர அசைகின்ற வாடை அகன்றவர்க்கு [பில்
நடுக்கம்செய் பின்பனி நாளின்வந் தார்அமர் நண்பன்உற்ற
இடுக்கண் களைய அன் றேஅகன் கானம் இகந்தவரே.

தஞ்சை. 419

எனவரும்.

[வடுவகிர் போன்ற கண்களை உடைய தலைவி! போரில் ஈடுபட்ட நண்பனுடைய துன்பத்தைப் போக்கக் காட்டைக் கடந்து சென்ற நம் தலைவர் தஞ்சைவாணன் மலையில் பக்கமலைகள் குளிர அசைகின்ற வாடைக்காற்றுப் பிரிந்தவர்களுக்கு நடுக்கம் செய்யும் பின்பனிநாளில் வந்து சேர்ந்தார்.]

‘ தூதும் துணையும் ஏது வாகச்
சென்றேன் அவ்வினை நின்று நீட் டித்துழிப்
புலந்து பாசறைப் புலம்பவும் பெறுமே.’

இ. வி. பொ. 89

என்ப ஆகலின், வினை ஓர்யாண்டின் முடியாது நீட்டித்தவழி, தலைவன் தலைமகள்உருவுவெளிப்பாடு கண்டு சொல்லியது :

மைக்குஞ் சரநிரை யால்தஞ்சை வாணன் மருவலரைக்
கைக்கும் களம்கெழு பாசறை யூடு கயலும்வில்லும்
மொய்க்கும் சுடர்இள அம்புலி தானும் முயங்கிஎல்லாத்
திக்கும் தொழவரு மேசுருள் ஓலைத் திருமுகமே.

தஞ்சை. 433

எனவரும். இது வன்பொறைக்கு உரித்து.

[யானைப் படையால் தஞ்சைவாணன் பகைவரைத் துன் புறுத்தும் களம் உடைய பாசறையில், கயலும் வில்லும் இளம்பிறையும கலந்து எல்லாத் திசையிலுள்ளாரும் தொழு-மாறு வனப்புடைய சுருண்ட ஓலைத் திருமுகம் உருவெளியா-கக் காட்சி வழங்குகிறது.]

கயல்—கண்; வில்—புருவம்; பிறை—நெற்றி; ஓலை—காதணி; திருமுகம் — தலைவியின் அழகிய முகம்.]

வினை முடித்ததன்பின் வியன்பதி சேய்த்து என வினுதல் :

முன்இட்ட வாசி நுகம்பூட் டலும்முன்பின் ஆக்குதிண்தேர்
பின்இட்ட ஓட்டம் கடிந்துநண் பாபொரும் பேரரசர்
வெந்இட்டவேல்வலவாணன்தென்மாறைசெல்வெண்புரிமின்
தன்இட்ட மேசென்ற கார்என்செய் யாது தனிச்சியையே.

[தஞ்சை. தனி]

எனவும்,

[நண்பா ! முன்னர்க் குதிரையைத் தேரின் நுகத்தில் பூட்டலும், முன் செல்லும் தேர்களை எல்லாம் பின்னிடச் செய்து முன்னே விரையும் நம் தேரின் வேகத்தையும் மீறி, போரிட வந்த பேரரசர் முதுகுகாட்டி ஓடுமாறு செய்த வேலில் வல்ல வாணனுடைய தென்மாறையினை நோக்கி விரைந்து சென்ற மின்னலோடு சென்ற கார் தனியாக இருக் கும் தலைவியை என்ன பாடுபடுத்தாது ?]

வினைமுற்றி மீண்டவன் உருவு வெளிப்பாடு
கண்டு கூறியது :

வரிதரு காஞ்சி மணிநெடுந் தேரும் வயங்கெழுவான்
பரியும் இருங்கண் பகடும்ஐ வாட்படை யும்குவிந்து

திரிய முனிந்தது தேர்வல வாஅகல் வார்செருவிட்டு
இரிய முனிந்துஇறை கொண்டுஅகல் காலையில் எத்திக்குமே.

அம்பி. 534

எனவும் வரும். இவை இரண்டும் வருவழிக் கலங்கற்கு உரிய வாம்.

[தேர்வலவா! பகைவர்கள் போர்க்களத்தை விட்டு ஓடுமாறு வெகுண்டு பாசறைக்கண் தங்கி வென்று மீண்டு வரும் காலத்தில், எத்திசையின் கண்ணும் காஞ்சி அணிந்த மணி நெடுந்தேரும் வானை முட்டும் கருங்கண் யானையும் வியக்கத் தக்க வாட்படையும் திரண்டு என்னைக் கோபித்தன.

தேர் — அல்குல்; யானை — நகில்; வாள் — கண்; இவை உருவெளியில் காணப்பட்டவை.]

பாசறை முற்றி மீண்டு ஊர்வயின் வந்த தலைமகன்
பாகற்குச் சொல்லல் :

மால்கொண்டவாரணவாணன்தென்மாறைவலவா நண்ணூர்
கால்கொண்டவாள்அமர்கைஅகல்பாசறைக்கைவயின்முட்
கோல்கொண்ட வாறும்நின் ஏவல்கொண்டு யான்இக் கொடிநெடுந்தேர்
மேல்கொண்டவாறும்நம்ஊர்வந்தவாறும்வியப்புஎனக்கே.

தஞ்சை. 424

என வரும். இது வந்துழி மகிழ்ச்சி. பிறவும் அன்ன.

[மதமயக்கம் பொருந்திய யானைப்படைகளை உடைய வாணன் தென்மாறைவலவனே! பகைவர் முனைந்த வாட்-போர் நம்மாட்டு வெற்றியாக முடிவுற்றதாக, அப்பேராரவா-ரத்தில், நீ கையில் கோல் கொண்டதும், உன் ஏவலின்படி யான் இக்கொடிநெடுந்தேரில் ஏறியதும், நம் ஊருக்கு யான் வந்ததும் எனக்கு வியப்பைத் தருவனவாகும்.]

## பொருள்வயின் பிரிவு

பொருள்வயின் பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல் :

முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்எனப்
பனிவரும் கண்பர மன்திருச் சிற்றம் பலம்அனையாய்
துனிவரும் நீர்மை இதுஎன்னென்று தூநீர் தெளித்துஅளிப்ப
நனிவரும் நாள்இது வோஎன்று வந்திக்கும் நன்னுதலே.

திரு. 332

எனவும்,

[சிவபெருமானுடைய சிற்றம்பலம் அனையாய்! 'முனிவருக்கும் தேவருக்கும் செய்ய வேண்டிய கடமைகள் தான் ஈட்டிய பொருளைக் கொண்டே நிறைவேற்றுதல் வேண்டும்' என்று யான் கூறிய அளவில், கண்ணீர் உகுத்துத் தலைவி வருந்தினாளாக, அவளுக்குப் பனிநீர் தெளித்து மயக்கம் தெளிவித்து, 'நீ வருந்துமாறு என்னை ?' என்று ஆற்றுவிப்ப, தலைவி 'தலைவன் மீண்டு வரும் நாள் இதுவோ?' என்று வணங்கி நின்றாள்; அத்தகைய நீர்மையாளை நீயே உணர்த்திப் பிரிவாயாக.]

பொருள்வயின் பிரிவு தலைவிக்குப் பாங்கி அறிவுறுத்தல் :

வறியார் இருமை அறியார் எனமன்னும் மா நிதிக்கு
நெறிஆர் அருஞ்சுரம் செல்லலுற் றார்நமர் நீண்டுஇருவர்
அறியா அளவுநின் றோன்தில்லைச் சிற்றம் பலம்அனைய
செறிவார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் திருநுதலே.

திரு. 333

எனவும் வரும்.

[திருமாலும் பிரமனும் தம் முயற்சியால் காண அரியனாய் நின்றோனது சிற்றம்பலம் அனைய இயற்கைவனப்புடைய கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் திருநுதல் தலைவியே! 'செல்வம் இல்லாதவர் இம்மை மறுமை இரண்டனையும் அறி

யார்' என்று நிலைபெற்ற பெருஞ் செல்வம் தேட, நம் தலைவன் வழி அறிதற்கு அரிய கொடிய பாலைவனத்தைக் கடக்கச் சென்றுவிட்டான்.]

திருவூ ரகத்து நின் றோர்திருப் பாடகத் துள்இருந்தோர்
மருஉளர்பொழில்வெஃகணைக்கிட ந்தோர்வண்டுஉலாவுமலர்த்
தருஊர் பொழில்தந்தி வெற்பின்மின் னே நம் தனம்முழுதும்
ஒருஊர் கலத்தில்சென் றோர்தன மாக உணர்ந்திலரே.

இதுவும்அது.

[மின்னே! ஏரகத்தில் நின்றும் பாடகத்தில் இருந்தும் வெஃகாவில் கிடந்தும் உலகைப் பாதுகாக்கும் திருமாலுடைய, வண்டுகள் மொய்க்கும் மரங்கள் அடர்ந்த சோலைகளை உடைய தந்தி மலையிலே, நம்மைப்பிரிந்து ஊர்தியில் சென்ற தலைவர் தம்தனங்களைத் தம் தனமாகக் கருதவில்லையே !]

பாங்கி தலைவிக்கு உடன்படுத்தல் :

இருங்கற்பு உடையவர் இன்புறும் ஆடவர் ஏகுவதும்
அருங்கற்புஉடையவர்ஆற்றும்திறனும்அணிஇழைப்பொன்
மருங்கில் படர்முலை யாய்அவர் மீண்டு வருவதுவும்
கருங்கல் புடைதழு வும்கடல் ஞாலம் கடன்என்றுமே.

அம்பி. 547

எனவரும். இஃது ஏனையவற்றிற்கும் ஒக்கும்.

[தலைவியே ! கல்வி யறிவின்மிக்க மேதக்க ஆடவர் பொருள்தேடப் பிரிவதும், அவர்தம் கற்புடை மனைவியர் பொறுத்திருக்கும் திறனும், பின் சென்ற தலைவர் மீண்டு வருவதும், சக்கரவாள கிரியைப் புறஎல்லையாக அடுத்த கடலை உடைய உலகத்தின்கண் என்றும் பின்பற்றத் தக்க கடமைகளாம்.]

பொருள்வயின் பிரிந்துழித் தலைவி இளவேனில்
பருவம் கண்டு வருந்தியது :

வாழும் படிஒன்று கண்டிலம் வாழிஇம் மாம்பொழில்தேன்
சூழும் முகச்சுற்றும் பற்றின வால்தொண்டை அம்கனிவாய்
யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பலம் ஆதரியாக்
கூழின் மலிமனம் போன்றுஇரு ளாநின்ற கோகிலமே.
திரு. 322

எனவும்,

[கொவ்வைக்கனி போன்ற இதழினையும் யாழ் போன்ற மொழியினையும் உடைய பார்வதிபாகனாகிய சிவபெருமானின் சிற்றம்பலத்தை விரும்பாத, உணவையே விரும்பி உட்கொள்ளும் மனம் போல, கரிய நிறத்தை உடைய குயில்கள் இம் மாம்பொழிலின்கண் குடைதலால் தேன் துளிகள் நாற்புறமும் வந்து பற்றின. இவ்விளவேனில் காலத்திலும் தலைவன் மீண்டு வாராமையால், இனி உயிர் வாழுமாறு ஒன்றும் கண்டிலேம்.]

இளவேனில் பருவம் கண்டு வருந்திய தலைவியைத்
தோழி ஆற்றுவித்தல் :

வார்த்தன பார மடமயி லேகுயில் மாருதமாம்
தேர்த்தனி வீரன் திருநாள் இதுவந்து சேர்மின்என்று
தார்த்தட மேரு எனும்புயன் வாணன்தஞ் சாபுரிநின்று
ஆர்த்தது கேட்டுவந் தார்பொருள் தேட அகன்றவரே.
தஞ்சை. 422

எனவும்,

[மயிலே! மேருமலைபோன்ற மாலை அணியும் புயங்களை உடைய வாணனுடைய தஞ்சாபுரியிலிருந்து, ' குயில் தென்றலாகிய ஒப்பற்ற தேரை உடைய வீரனாகிய மன்மதன் திருநாள் இது. பிரிந்தவர் வந்து சேருங்கள் ' என்று அவன் காளமாக ஊதி ஆரவாரித்ததனைக் கேட்டுப் பொருள் தேடச் சென்ற நம் தலைவன் மீண்டு வந்துவிட்டான்.]

தலைவிக்குத் தோழி நிமித்தம் கூறல் :

அரவுஇசைக் கும்திரு அல்குல்நல் லாய்அடை யார்மடியப்
பொரஇசைக் கும்பரி பூண்டுபொற் றேர்நம் புரவலர்தாம்
வரஇசைக் கும்பல்லி வாமம் துடிக்கும் வரிநெடுங்கண்
இரவுஇசைக் கும்குழ லோடுஇள வாடைஇன்று என்செயுமே.
அம்பி. 535

எனவும்,

[அரவு அல்குலாய்! பகைவர் அழியப் போரிட ஒலிக்கும் குதிரை பூட்டப்பட்டுப் பொற்றேரைச் செலுத்தி நம் தலைவன் வருவான் என்பதை இசைக்கும் பல்லியின் சொகினத்தையும், கண்கள் இடந்துடிக்கும் நன்னிமித்தத்தையும் காண்பாயாக. இனி, இரவில் ஒலிக்கும் குழல் ஓசையும் வீசும் வாடைக்காற்றும் நம்மைத் துன்புறுத்துதல் இயலாது.]

தலைவன் வரவு உணர்த்தல் :

குரவுஅலர் பூங்குழ லார்நெடு வீதி குறுகிவண்டு
விரவுஅலர் தூவி மிகமிக வாழ்த்த வியந்துமுன்நின்று
இரவலர் ஏத்த இனவளை ஆர்ப்ப இயம்முழங்கப்
புரவலர் இன்றுவந் தார்திரு வேதம் பொருள்முடித்தே.
அம்பி. 556

எனவும்,

[திருவே! குராமலர் மணம் கமழும் மகளிர் தம் பெரு வீதியிலே பறந்துசென்று வண்டு அலர்தூவி வாழ்த்த, இரவலர்கள் முன்நின்று புகழ, சங்குகள் ஆர்ப்ப, வாத்தியங்கள் முழங்கத் தலைவன் இன்று பொருள் தேடும் தன்தொழிலை முடித்துக்கொண்டு நம் வீடு வந்து சேர்ந்துவிட்டான்.]

தலைவனைப் பாகன் தேற்றல் :

திண்காட்டு இருஞ்சுரம் சேய்த்துஎன வேநின் திருவுளத்துப்
புண்காட்ட டைந்து புலம்பாது ஒழிபொறை காட்டுகின்ற

மண்காட்டுதிண்புயத்தான்வாணன்மாறையின்மன்னவநின்
கண்காட்டும் முன்னம் கடிதினின் வாழ்பதி காட்டுவனே.

தஞ்சை. 341

எனவும் வரும். இவை நான்கும் வன்புறைக்கு உரியவாம்.

[உலகைத் தாங்கும் திண்ணிய புயத்து வாணனது மாறையின் மன்னவனே! 'திண்ணிய காட்டுவழி அமைந்த இப் பாலைநிலம் ஊரிலிருந்து சேய்மைக்கண் உள்ளதே' என்று உன் மனத்தில், புண்பட்டு வருந்திப் புலம்பாதே. நீ கண்ணால் 'புறப்படு' என்று குறிப்பிட்ட உடனே, மிக விரைவில் நீ வாழும் ஊருக்கு உன்னைக் கொண்டுசென்று விடுவேன்.]

பொருள்வயின் பிரிந்து மீண்ட தலைவன் சுரத்திடைத் தலைவியை நினைத்தல் :

சேணும் திகழ்மதில் சிற்றம்பலவன்தெண் ணீர்க்கடல்நஞ்சு
ஊணும் திருத்தும் ஒருவன் திருத்தும் உலகின்எல்லாம்
காணும் திசைதொறும் கார்க்கய லும்செங் கனியொடுபைம்
பூணும்புணர்முலையும்கொண்டுதோன்றும்ஒருபூங்கொடியே.

திரு. 341

எனவரும். இது வருவழிக் கலங்கற்கு உரித்து.

[வானளாவிய மதில்களை உடைய சிற்றம்பலத்தானாய், கடல்நஞ்சை அமுதமாகக் கொண்ட சிவபெருமானுடைய உலகம் முழுதும், உருவெளியாக, ஒரு பூங்கொடி, காணும் திசைகள் தோறும், கரியகயல்மீனும் செங்கனியும் பசிய அணிகளும் புணர்முலையும் கொண்டு காட்சி வழங்குகிறது.]

தலைமகன் வந்துழித் தலைவி மகிழ்ச்சி :

பரியும் கரியும் பரிநெடுந் தேரும் படைநவின்று
விரியும் கடல்அன்ன தானையும் வேந்தும்வெம் போர்கடந்து

வரியும் கழல்முடி மன்னர் நின்று ஏத்த வரும்பரிசும்
தெரியும் தெரியிழை யீர்காண வாரும்இச் சேண் நிலத்தே.

அம்பி. 537

எனவும்,

[பரி, கரி, தேர், ஆள் என்ற நால்வகைப் படையோடு கூடிய பகைமன்னரைப் போரில் வென்று அழித்து, கழலை அணிந்த முடிமன்னர்களும் நின்று புகழுமாறு, நம் தலைவன் வரும் அழகைக் காண்பதற்கு மங்கைமார் எல்லோரும் இப்பரந்த இடத்திற்கு வாருங்கள் !]

தலைமகளோடு இருந்த தலைவன் கார்ப்பருவம் கண்டு உவந்து சொல்லியது :

கொத்தலர் ஓதிஅம் கொம்பர் அன்னாள்பொங்குகொங்கைவிம்ம
முத்துஅலர் ஆகம் முயங்கினம் யாம்மூழ நீர்விழிபோல்
மைத்து அலர் நீல யலர்வயல் சூழ்தஞ்சை வாணன்வண்மைக்
கைத்தலம் மான இனிப்பொழி வாழிய கார்ப்புயலே.

தஞ்சை 425

எனவும் வரும். பிறவும் அன்ன. 186

[கார்மேகமே ! கொத்தாகப் பூக்கள் மலரும் மயிர் முடியை உடைய அழகிய கொடிபோன்ற தலைவியின் கொங்கைகள் விம்ம, முத்துப்போல வியர்வை துளிக்க, அவள் மார்பத்தை யான் தழுவிக்கொண்டுள்ளேன். மகளிர் விழி போல நீலம் மலரும் வயல்களை உடைய தஞ்சைவாணனுடைய கொடைத்தொழிலை உடைய கைகளைப்போல, இனி நீ பெயல் பொழிந்து வாழ்வாயாக !] 186

# ஒழிபியற் பகுதி

---

## அகப்பொருள் இயல்

559 கூறிய அகப்பொருள் ஆறுஇரு வகைத்தாய்ப்
பாட்டுஉறுப் பாய்வரூஉம் பண்பிற்று என்ப
போக்குஅறு மரபின் புல்லிய நெறித்தே.

மேல் கூறியவாற்றான், அகப்பொருள் இலக்கணம் அகத்திணைஇயலுள்ளும், புறப்பொருள் இலக்கணம் புறத்திணை இயலுள்ளும், அணி இலக்கணம் அணிஇயலுள்ளும் செய்யுள் இலக்கணம் செய்யுள்இயலுள்ளும் உணர்த்தி, அவற்றின் ஒழிபு இலக்கணங்களுள் ஒவ்வொன்றற்குச் சிறந்தனவற்றை அவ்வவ் வோத்துக்களுள் உணர்த்தி, அந்நான்கற்கும் பொதுவாய் எஞ்சி நின்றவற்றைப் பாட்டியலுள் உணர்த்துவான் தொடங்கி, அவ்வாறு அகத்திணைஇயல் உணர்த்தி அதன்ஒழிபு உணர்த்திய புகுந்தவற்றுள், செய்யுள் இடவயின் புல்லிய நெறித்தே.' [இ. வி. பொ. 2] என்பதனன், இச் சூத்திரம் அகப்பொருள் செய்யுள்அகத்து வருங்கால் இத்துணைப் பகுதிப்பட்டு இவ்வாறு வரும் என்பதோர் ஒழிபு கூறுகின்றது; என்னை? பொதுப்படச் 'செய்யுள் இடவயின் புல்லிய நெறித்தே' என்ற துணை அல்லது பன்னிரு பகுதிப்பட்டு உறுப்பாய் வரும் என்னும் விசேடவிதி ஆண்டுப் பெறப்படாமையின்.

(இ-ள்) மேல்கூறிப்போந்த அகப்பொருள் செய்யுளகத்து வருங்கால், பன்னிருபகுதியை உடைத்தாய்ச் செய்யுட்கு உறுப்பாய் வந்து விளங்கும் இயல்பினை உடைத்தாம் என்றவாறு.

'ஒழிபு எனப் படுவது அகப்பாட்டு உறுப்பும்
வழுவும் அமைதியும் தழுவியது ஆகும்.' ந. அ. 210

என இப்பன்னிரண்டையும் அகப்பாட்டு உறுப்பாகநோக்கி அகத்திணை ஒழிபு ஆக்கின் அது பொருந்தாது; செய்யுள் உறுப்பாக நோக்கிய வழி, அவை செய்யுள் இலக்கணம் ஆவது அல்லது, அகத்திணை ஒழிபு ஆகாமையின். 187

### விளக்கம்

அகப்பொருள் செய்யுளகத்து வரும் என்பது இரண்டாம் நூற்பாவில் சுட்டப்பட்டுள்ளது. ஆயின் அது பன்னிரு பகுதிப்பட்டுப் பாட்டுக்கு உறுப்பாய் வரும் என்பது இங்கே கூறப்படுகிறது. நம்பி அகப்பொருள் நூலார் திணை முதலிய பன்னிரண்டனையும் அகப்பாட்டு உறுப்பு என்றார். செய்யுளுக்கு உறுப்பு என்று கொள்வதாயின் செய்யுளியலிலேயே கூறல் வேண்டும்; ஈண்டுக் கூறுவது பொருந்தாது. திணை முதலியவற்றைச் செய்யுள் உறுப்பாகக் கொண்ட தொல்காப்பியனார் செய்யுளியல் முதல் நூற்பாவில் அவற்றைக் குறிப்பிட்டுள்ளமை காண்க.

### ஒத்த நூற்பா

'ஒழிபு .... .... .... .... ஆகும்.' ந. அ. 210

187

## அகப்பாட்டு உறுப்புக்கள்

560 **திணையே கைகோள் கூற்றே கேட்போர்**
**இடனே காலம் பயனே முன்னம்**
**மெய்ப்பாடு எச்சம் பொருள்வகை துறைஎன**
**அப்பால் ஆகும்அவ் வாறிரு வகையே.**

இது, மேல் 'ஆறிரு வகை' என்றார், அவை இவை என்கின்றது.

(இ-ள்) திணை முதலாகத் துறை ஈறாகக் கிடந்த அப் பகுதிகளாம், மேற்கூறிய பன்னிருவகை என்றவாறு. *186*

ஒத்த நூற்பாக்கள்

திணையே ... .... .... .... துறைஎன்று
அப்பால் ஆறிரண்டு அகப்பாட்டு உறுப்பே.' ந.அ. 211

'திணையே கைகோள் கூற்றுவகை எனாஅப்
இடனே காலம் எச்சம் மெய்ப்பாடு
பயனே கோள்என்று ஆங்கப் பத்தே
அகன்ஐந் திணையும உரைத்தல் ஆறே.'

இறை. அக. 56

'திணையே கைகோள் கூற்றே கேட்போர்
கேட்போர் இடனே காலவகை எனாஅப்
பயனே மெய்ப்பாடு எச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ
.... .... .... .... .... .... .... .... .... .... .... ....
வல்லிதின் கூறி வகுத்துரைத் தனரே.'

தொல். பொ. 313

*188*

## திணையும் கைகோளும்

561 முன்னவை இரண்டும் சொன்னவை யாய்அவற்று
ஒன்றுஅவண் வருதல் ஒன்றித் தோன்றும்.

இது, நிறுத்தமுறையானே எழுவாய் எண்ணும் முறைமைக்கண் நின்ற திணையும், இரண்டாம் எண்ணும் முறைமைககண் நின்ற கைகோளும் இவ்வியல்பினவாய்ச் செய்யுட்கு உறுப்பாய் வரும் என்பதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) முதற்கண் நின்ற திணையும் கைகோளும் மேற்கூறிய இலக்கணத்தனவாகிக் கைக்கிளை முதலிய ஏழுதிணையுள் ஆண்டைக்கு இயைபுடைய யாதானும் ஒரு திணை செய்-

யுளகத்து அதற்கு உறுப்பாய் வருதலும், களவும் கற்பும் ஆகிய கைகோள் இரண்டனுள் ஆண்டைக்கு இயைபுடைய யாதானும் ஒரு கைகோள் செய்யுளகத்து அதற்கு உறுப்பாய் வருதலும் பொருந்தித்தோன்றும் என்றவாறு.

'முன்னவை இரண்டும் சொன்னவை யாகும்.'

என்றே ஒழியின் கூறியது கூறலாம் அல்லது அகத்திணை ஒழிபு ஆகாமையின் 'வரும்' என்றும், ஒன்று அவண் வரும் என்னுது வாளா வரும் எனின், அவை வரினும் வரும், வாராது ஒழியினும் ஒழியும் எனப்படுதலான், 'ஒன்று அவண் வரும்' என்றும் கூறினர் என்று உணர்க. 189

**விளக்கம்**

'முன்னவை இரண்டும் சொன்னவை ஆகும்.' ந. அ 212 என்று கூறின், முன்னர்க் கொள்ளப்படும் திணையும் கைகோளும் பண்டே விளங்க உரைக்கப்பட்டன என்ற செய்தி பெறப்படுமே அன்றி, திணையும் கைகோளும் அகப்பாட்டு உறுப்பாய் அகத்திணைச் செய்யுட்கண் தவறுது வரும் என்ற கருத்துப் பெறப்படாது. திணையும் கைகோளும் அகப்பாட்டு உறுப்பாய் வரும் என்று கூருமல், வாளா திணையும் கைகோளும் முன்பு கூறப்பட்டன என்றே ஒழியின், வேறு பயப்பாடு இன்மையில் கூறியது கூறல் என்ற குற்றமாகவே ஒழியும்.

அகப்பாட்டில் திணை ஒன்றும் கைகோள் ஒன்றும் தவருது வரும் என்று கூறப்படவேண்டுவதே செய்தி ஆதலின், 'அவற்று, ஒன்று அவண் வருதல் ஒன்றித் தோன்றும்' என்ற தொடர் இன்றியமையாது கூறப்பட வேண்டுவது என்ற கருத்து வலியுறுத்தப்பட்டது.

முன்பு சொல்லப்பட்ட செய்தியாவன :

'அதுவே கைக்கிளை ஐந்திணை ஏனைப்
பெருந்திணை எனஎழு பெற்றித் தாகும்.' இ.வி.பொ. 4

எனவும்,

'அளவில் இன்பத்து ஐந்திணை மருங்கின்
களவுகற்பு என இரு கைகோள் வழங்கும்.' இ.வி.பொ. 24

எனவும் கூறப்பட்டன. 189

## கூற்றிற்கு உரியார்

562 பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி
சீர்த்தகு சிறப்பின் கிழவன் கிழத்தியோடு
அளவியல் மரபின் அறுவகை யோரும்
களவியல் கிளவிக்கு உரியர் ஆகலும்
பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணம் சான்ற அறிவர் கண்டோர்
பேணுதரு சிறப்பின் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த அறுவரோடு தொகைஇத்
தொன்னெறி மரபின் கற்பின் கிளவிக்கு
உரியர் ஆகலும் உரிய வாகும்.

இது, மூன்றும் எண்ணும் முறைமைக்கண் நின்ற கூற்று இருவகைக் கைகோளினும் செய்யுட்கு உறுப்பாய் வருங்கால், அஃது இத்துணைத்தாய் வரும் என்பதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) பார்ப்பான் முதலாகச் சொல்லப்பட்ட கலந்து ஒழுகும் மரபினை உடைய அறுவகையோரும் களவு என்னும் கைகோள்பற்றிச் செய்யுளகத்து நிகழும் கிளவி கூறுதற்கு உரியர் ஆகலும், பாணன் முதலாகச் சொல்லப்பட்ட அறுவகையோரும் மேல்சொல்லப்பட்ட பார்ப்பான் முதலாகிய அறுவகையோரொடும் கூடப் பன்னிருவரும் கற்பு என்னும் கைகோள்பற்றிச் செய்யுளகத்து நிகழும் கிளவி கூறுதற்கு உரியர் ஆகலும் சிறந்தனவாம் என்றவாறு.

'தொன்னெறி மரபு' என்றதனால், பாகனும் தூதனும் கூறவும் அமையும், அவர் ஏனையர் போலச் சிறப்பிலர் ஆயினும் எனக்கொள்க.

பார்ப்பான் நன்றும் தீதும் ஆராய்ந்து உறுதி கூறும் உயர்குலத் தோழன். பாங்கன் பெரும்பாலும் தலைவன்வழி நின்று ஒழுகும் ஒத்த குலத்தோனாகிய தோழனும் இழிகுலத் தோனாகிய தோழனுமாம். 'கலந்து ஒழுகும் மரபு' என்றதனால், பார்ப்பாரினும் பாங்கரினும் சிலரே அதற்கு உடன்படுவர் எனவும், 'தொன்னெறி மரபின் கிளவி' என்றதனால், அவர் குலந்தோறும் கிளந்து வருகின்ற நெறியை உடையர் எனவும் கொள்க.

'பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனன் என்றனள்'
குறுந். 84

இது செவிலி கூற்று.

'பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனள்என வினவுதி' அகநா. 48

என்பதும் அது.

'கேளிர் வாழி கேளிர்' குறுந். 280

இது கிழவன் கூற்று.

'விளங்குதொடி முன்கை வளைந்துபுறம் சுற்றி
நின்மார்பு அடைதலின் இனிதா கின்றே.'
அகநா. 58

இது கிழத்தி கூற்று.

'ஆடலில் பயின்றனை என்னுது என்னுரை
ஊடலில் தெளிதல் வேண்டும்.' தொல். பொ. 502 எடு.

இது கூத்தன் கூற்று.

பிறவும் அன்ன. 190

## விளக்கம்

இந்நூற்பா தொல்காப்பியப் பொருட்படலச் செய்யுளியல் நூற்பாக்கள் இரண்டனைச் சேர்த்து அமைக்கப்பட்டதாகும். இதன் உரைவிளக்கம் உரையாசிரியர் சொற்றதாம்.

எடுத்துக்காட்டுக்கள் பேராசிரியர் குறிப்பிட்டுள்ளனவாம். கூற்றுக்கு உரியார் இன்னுர்என்று கூறியதன்கண் அமைந்த முறைவைப்பின் காரணத்தையும் பேராசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

'பார்ப்பான் என்பான், நன்றும் தீதும் ஆராய்ந்து உறுதி கூறுவான் எனப்படும். பாங்கன் என்பான். அவ்வாறு அன்றித் தலைமகன்வழிநின்று ஒழுகிவரும் ஆகலின், அவனை அவன்பின் வைத்தான். தோழி, அவன்போன்றும், பெண்பால் ஆகலின் அவளைப் பின்வைத்தான். செவிலி, மாற்றம் சிறுவரவிற்று ஆகலின், அவளை அவளின் பின்வைத்தான். அவரின் சிறந்தமையின் சீர்த்தகு சிறப்பின் கிழவனையும் கிழத்தியையும் அவர்பின் வைத்தான். அவ்விருவருள்ளும் தலைமகளது கூற்றே பெருவரவிற்று ஆகலின், அவளைக் களவிற்குரிய கூற்றுக்கு உரியோருள் இறுதிக்கண் வைத்தான் என்பது.

'இசையின் பின்னரது நாடகம் ஆதலின் பாணன் பின் கூத்தன் வைத்தும், பெண்பால் ஆகலான் விறல்பட ஆடும் விறலியைக் கூத்தன்பின் வைத்தும், அவ்வினைத்துப் பரத்தையரை அதன்பின்வைத்தும், பொருட்குச் சிறந்தார் ஆகலின் நற்பொருள் உணரும் அறிவரை அவர்பின் வைத்தும், ஏதிலாராகிய கண்டோரை அவர்க்குப்பின் வைத்தும் கூறினுன் என்பது.'

'பெயர்த்தனென் முயங்க'

மகட்போக்கிய செவிலித்தாய் உரைத்த இக் கூற்றில், 'என் மகள் உடல் தண்ணியளாயிருந்தும், முன்னொருகால் தழுவிக் கைநெகிழ்த்த பின்னர் யான் பின்னொரு கால்தழுவ, அத்தழுவுதலால் உடல் வியர்ப்பதாகக் கூறினுள். தலைவனது முயக்கத்தையே இன்பமாகக் கருதியவள் ஆதலின்,

என் முயக்கம் அவளுக்கு வெறுப்பைத் தத்தது' என்று அமைந்தவாறு காண்க.

'பாலும் உண்ணுள்'

தன் மகள் பால்குடிப்பதனையும் வெறுத்து மனத்தில் துயரங் கொண்டு உடல் பசந்த காரணத்தைச் செவிலி வின-விளுளாக, அவள் வினவியதைத் தோழி கொண்டுகூறுவ-தாக இப்பாடல் பகுதி அமைந்துள்ளது.

கேளிர் வாழியோ கேளிர்'

தலைவன், தன் நெஞ்சத்தைப் பிணித்துக் கொண்ட தலைவியின் ஆகத்தை ஒரு நாள் தழுவப் பெறுவதனையே தன் பிறவிப் பேருகக் கொண்டு அதற்கு ஆவன புரியுமாறு பாங்கனிடம் அவன் கூற்றிற்கு எதிர்மறுத்து விடைகூறு மாற்ருன் சொற்றது இது.

'வீளங்குதொடி முன்கை'

'இன்னிசை உருமொடு' என்ற, சேட்படுத்து வந்த தலைமகற்குத் தலைவி கூறிய பாடற்பகுதி இது. 'நாடனே! நின் வருகையை நாடிப் பலரும் உறங்கும் கங்குலில் வாடைக் காற்றில் யாம் துயிலின்றிக் காத்திருக்கும் நிலை, எம் இள நகில் ஞெமுங்கப் பலகால் எம் கைகளால் நின்னை மார்புறத் தழுவுதலின் இனியதாக உள்ளது' என்று குறிப்பால் வெறுப்பைக் காட்டித் தலைவி சொற்றது இது.

'ஆடலில் பயின்றனை'

'யான் நாடகம் ஆடுபவன் ஆதலின், அதன்கண் இல்லது புணர்த்து நடிப்பது போல நடிக்கும் என் கூற்ருகக் கருதாமல் என் சொற்களை உண்மை எனக்கொண்டு ஊடல் தீர்தல் வேண்டும்' என்று கூத்தன் தலைவியை வாயில் வேண்டியது.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொ. பொ. 501, 502. பே.

'தலைவன் தலைவி பார்ப்பான் பாங்கன்
பாங்கி செவிலிஎன்று ஈங்குஇவ் வறுவரும்
சாற்றிய களவின் கூற்றிற்கு உரியர்.' ந. அ. 213

'நற்றாய் கண்டோர் பாணன் கூத்தர்
விறலி பரத்தை அறிவர்என்று எழுவரும்
அறுவர் என்றவரும் ஆகிய அனைவரும்
குறைவுஅறு கற்பின் கூற்றிற்கு உரியர்.' ,, 214

190

## முகத்துரை நிகழ்த்தாதார்

563 ஊரும் அயலும் சேரி யோரும்
நோய்மருங்கு அறிநரும் தந்தையும் தன்னையும்
கொண்டெடுத்து மொழியப் படுவது அல்லது
கூற்றுஅவண் இன்மை யாப்புறத் தோன்றும்.

இஃது எய்தாதது எய்துவிப்பதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) ஊரில் உள்ளாரும் அயல்மனை உள்ளாரும் சேரியின் உள்ளாரும் நோய்ப்பக்கம் குறிப்பினால் அறிந்தோரும் தந்தையும் தமையனும் என இவ்வெண்ணப்பட்ட அறுவகையோரும் இருவகைக் கைகோளும் பற்றிச் செய்யுளகத்துக் கூற்று நிகழ்த்துங்கால், அந் நிகழ்ச்சி கொண்டெடுத்து மொழியப்படுவது அல்லது முகத்துரையாக நிகழ்த்தும் நிகழ்ச்சி ஆண்டு இல்லாமை வலியுறத் தோன்றும் என்றவாறு.

கொண்டெடுத்து மொழிதல் — இவர் கூற்றாகப் பிறர்கூறுதல்.

'ஊஉர் அலரெழச் சேரி கல்லென' குறுந். 262

எனவும்,

எந்தையும்,
நிலனுறப் பொருஅன் சீறடி சிவப்ப
எவனில குறுமகள் இயங்குதி என்னும். அகநா. 12

எனவும் வரும்.

'யாப்புறத் தோன்றும்' என்பதனுன், அகத்திணைக்கண் அவ்வாறு நிகழும் எனவும், புறத்திணைக்கண் அவர் கூறவும்பெறும் எனவும் கொள்க. 191

## விளக்கம்

இச்செய்தி களவு கற்பு என்ற இருவகைக் கைகோளுக்கும் பொதுவாகும். இவர் புறத்திணைக்கண் கூறவும் பெறுவர் என்பது நோக்கிப்போலும் நேர்முகக் கூற்றுக்கு உரியர் அல்லாதாரையும் நூற்பாவில் குறிப்பிட்டுள்ளார். 'நோய் மருங்கு அறிநரை இடைவைத்தார், முன்னைய மூன்றும் பெண்பால் எனவும், ஒழிந்தன ஆண்பால் எனவும் அறிவித்தற்கு. எனவே நோய் மருங்கு அறிநர் ஆண்பாலும் பெண்பாலும் ஆயினுர்.' தொல். பொ. 503. பே.

'ஊஉர் அலரெழ'—

உடன்போக்கு நேர்ந்த தோழி கிழத்திக்கு உடன் போக்கு உணர்த்திய இப்பாடலில், ஊரவர் அலர் தூற்றுவதனையும் சேரியிலுள்ளார் கல் என்று அலர் கூறுவதனையும் தோழி தலைவியிடம் கொண்டெடுத்து மொழிந்தது காண்க.

'எந்தையும் நிலனுற'—

களவின்கண் வந்து ஒழுகும் தலைமகனைத் தோழி குறி மறுத்து வரைவு கடாய 'யாயே கண்ணினும்' என்ற அகப் பாட்டில், எம் தலைவி வீட்டை விட்டு வெளியே நடந்து வரு

தலைப் பொருத தந்தை அவளை நோக்கி ' உன் சீறடி சிவப்ப எங்குச் செல்கின்றாய்? என்று வினவினானாகத் தோழி தலைவனிடம் கொண்டெடுத்து மொழிந்தது காண்க.

புறத்தின்கண் ஊரவர் முதலியோர் நேர்முகமாகப் பேசுதல் மணிமேகலை ஊர் அலர் உரைத்த காதை, பெருங்கதை இலாவாண காண்டக் கடிக்கம்பலை முதலியவற்றில் காண்க.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொல். பொ. 503

' பயந்தோன் தன்னை உயங்குநோய் அறிவோர்
ஊரவர் அயலோர் சேரியோர் என்றிவர்
முகத்துரை நிகழா அகப்பொருள் அகத்தே.'

ந. அ. 215

191

## நற்றாய் கூற்றின் திறம்

564 கிழவோன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்
நற்றாய் கூறல் முற்றத் தோன்றாது.

இது நற்றாய் கூற்றிற்கு உரிய மரபு விலக்கியல் வகையான் விதிப்பதாயதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) தலைவனோடும் தலைவியோடும் இடையிட்டு நற்றாய் கூறுதல் நிரம்பத் தோன்றாது என்றவாறு.

'நற்றாய்' என்று ஒருமை கூறிய அதனால், தலைமகள் தாயே கொள்ளப்படும். இதனானே, தந்தை தன்னை என்பன போல்வனவற்றுக்கும் இஃது ஒக்கும். 'முற்ற' என்றதனால், தானே தலைவன் ஆதலால் தலைவன்தமர் யாவரும் கூறார், முற்கூறப்பட்டார் அல்லார் என்பதூஉம் கொள்க. முற்றாது என்னாது 'தோன்றாது' என்றதனால், புறத்திணைக்கண் இவை வரைவின்றி வழக்கினொடு பொருந்துமாற்றான் கொள்ளப்

படும் என்பது. கிழவோன்தன்னொடும் கிழத்திதன்னொடும் கூறுள் எனவே, அல்லுழிச் சொல்லப்பெறும் நற்றாய் என்ப தாம்,

அஃது,

எம்வெம் காமம் இயைவது ஆயின்
மெய்ம்மலி பெரும்பூண் செம்மல் கோசர்
கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த
பாகல் ஆர்கை பறைக்கண் பீலித்
தோகைக் காவின் துளுநாட் டன்ன
வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பின்
செறிந்த சேரிச் செம்மல் மூதூர்
அறிந்த மாக்கட்டு ஆகுக தில்ல
தோழி மாரும் யானும் புலம்பச்
சூழி யானைச் சுடர்ப்பூண் நன்னன்
பாழி அன்ன கடியுடை வியல்நகர்
செறிந்த காப்புஇகந்து அவனொடு போகி
அத்த இருப்பை ஆர்கழல் புதுப்பூத்
துய்த்த வாய துகள்நிலம் பரப்பக்
கொன்றை அஞ்சினைக் குழற்பழம் கொழுதிய
வன்கை எண்கின் வயநிரை பரக்கும்
இன்துணைப் படர்ந்த கொள்கையொடு ஒராஅங்குக்
குன்ற வேயின் திரண்ட என்
மென்தோள் அஞ்ஞை சென்ற வாறே. அக நா. 15

எனவரும். 192

விளக்கம்

இது தொல்காப்பியப் பொருட்பட 504 ஆம் நூற்பா. இதன் உரை அந்நூற்பாவிற்குப் பேராசிரியர் உரைத்த உரையே. எடுத்துக்காட்டும் அதுவே.

தந்தை தன்னையர் என்று பொதுவாகக் கூறினும், ஒப்பற்றவனாகிய தலைவனுடைய திறத்து அவன் தந்தையோ

தன்னையரோ யாதும் கூறுர் ஆதலின், கூறுதற்கு அமைந்-தார் தலைவியின் தந்தையும் தன்னையரும், நற்றுயும் செவிலியும் போல்வாரேயாம் என்பது விளக்கப்பட்டது.

'எம்வெம் காமம்'—

இது மகட் போக்கிய தாய் தன்னுள் கூறியது :

எம் விருப்பம் ஈடேறுவதாயின், பசிய அணிகலன்களையும் தலைமையினையும் உடைய கோசர்களுக்கு உரிமையான, மரத்துச்சியில் திரண்டு விளைந்த பசிய பலாக்காய்களை உண்ணும் பறையின் அடிக்கும் இடம் போன்ற கண்களைக் கொண்ட பீலிகளை உடைய ஆண்மயில் செறிந்த சோலைகளை உடைய துளுநாட்டைப் போல, வறியராய் வரும் புதியவர்களை விருந்தோம்பும் பண்பினையுடைய மக்கள் செறிந்த சேரிகள் பல கொண்ட செழித்த மூதூர்களை உடைத்தாய், அவற்றின்கண்ணும் தனக்கு முன்னரே அறிமுகமான மக்களை உடையதாய், தோழிமார்களும் யானும் தனித்து வருந்த நன்னனுடைய பாழி என்ற ஊர் போன்ற காவலை உடைய பரந்த இல்லத்தின் காவலைக் கடந்து அவனொடு உடன் போகி, கீழே விழுந்த இருப்பைப் பூக்களைத் தின்ற மகிழ்வில் வழியில் தூசி பரக்கக் கொன்றைப்பழத்தை உண்ணுது கடித்து விட்டுக் கரடிக் கூட்டம் செல்லுவதாய்த் தன் துணைவனிடம் ஈடுபட்ட நெஞ்சத்தோடு வேய்த்தோளியாகிய என்-மகள் சென்ற ஆறு, அமைவதாகுக! யான் அதனையே விரும்புகிறேன் என்றவாறு.

'எம்வெம் காமம் இயைவதாயின்,
தோழிமாரும் யானும் புலம்ப
செறிந்த காப்பு இகந்து அவனொடு போகி
என் மென்தோள் அஞ்ஞை சென்ற ஆறு
அறிந்த மாக்கட்டு ஆகுக தில்ல' என்று முடிக்க.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொல். பொ. 504. பே

‘ தலைவன் தலைவியொடு நற்றாய் கூறுள்.’ ந. அ. 218

192

## நற்றாய், செவிலி கூற்று நிகழ்த்தும் திறம்

565 புணர்ந்துஉடன் போயது உணர்ந்த பின்றை
அந்தணர் தெய்வம் அயலோர் அறிஞர்
சிந்தைநோய் அறிவோர் செவிலி பாங்கியொடு
கண்டோர்க்கு உரைத்தல் பண்புடைத் தாய்க்கும்
தாயொடு பாங்கி தாம்முத லாரொடு
ஆயிடை உரைத்தல் சேயிழைச் செவிலிக்கும்
உரிய என்மனார் உணர்ந்திசி னோரே.

இது நற்றாயும் செவிலித்தாயும் கூற்று நிகழ்த்துங்கால், அக்கூற்று அவர்க்கு இன்னாரோடு இன்னுழி ஆம் என்பதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) தலைவன் புணர்ந்து உடன்போயவாறு தான் அறிந்தபின்னர் அந்தணர் முதலாகிய அனைவர்க்கும் கூறுதல் நற்றாய்க்கும், அங்ஙனம் புணர்ந்து உடன்போயவாறு தான் அறிந்தபின்னர் நற்றாய் முதலிய அனைவரோடும் கூறுதல் தலைமகள் செவிலித்தாய்க்கும் உரிய என்று கூறுவர் அறிந்தோர் என்றவாறு. 193

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — ந. அ. 219, 220

193

## கண்டோர் கூற்று

566 தாயர் பாங்கியர் தலைவன் தலைவியோடு
ஏயும் என்ப கண்டோர் கூற்றே.

இது கண்டோர் கூற்று நிகழ்த்துங்கால் அக்கூற்று இனையரோடு நிகழ்த்துவர் என்பதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) நற்றாயும் செவிலித்தாயும் அவள் மகளாகிய உயிர்ப்பாங்கியும் ஏனைப் பாங்கியரும் தலைவனும் தலைவியும் ஆகிய இவரோடு கண்டோர் கூறுதல் பொருந்தும் என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு.

தாயர் பாங்கியர் என்றாற்போல உய்த்து உணரக் கூறாது, தலைவன் தலைவி எனச் செவ்வனம் தோன்றக் கூறிய அதனால், அவ்விருவர் கூட்டத்துமன்றி அவர் தனித்துழிக் கண்டோர் கூற்று இல்லை எனக்கொள்க. 194

### விளக்கம்

உயர்ந்த ஆடவர் பிறர்மகளிரோடும் உயர்ந்த மகளிர் கணவர் அல்லாத ஆடவர் பிறரோடும் கூற்று நிகழ்த்தார் ஆதலின், தலைவனும் தலைவியும் சேர்ந்து இருப்புழி ஆடவர் தலைவனிடமும் மகளிர் தலைவியிடமும் கூற்று நிகழ்த்துவர் என்பதைத் தலைவன் தலைவி என்று புணர்த்துக்கூறி விளக்கினார். இது பேராசிரியர் குறிப்பிட்டது. தொல். பொ. 505

### ஒத்த நூற்பாக்கள்

'ஒண்டொடி மாதர் கிழவன் கிழத்தியொடு
கண்டோர் மொழிதல் கண்டது என்ப.'

தொல். பொ. 505

முழுதும் — ந. அ. 221

194

## கிழவோன் ஆணை கூறல்

567 தமர்வரின் இடைச்சுரம் தன்னில் கிழத்தியோடு
அமர்தரு கிழவோன் ஆணையும் கூறும்.

இதுவும் கூற்றுவிகற்பம் கூறுவதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) புணர்ந்து உடன்போகின்ற காலத்துத் தமர் பின் தொடர்ந்து வருவராயின், அவர் கேட்பச் சுரத்தின்கண் தலைமகளோடு இன்புற்றுச் செல்லும் தலைவன் அவளோடு ஆணையும் கூறும் என்றவாறு.

ஆணை ஆக்கினை என்னும் வடமொழித் திரிபு. மெல்லிய காமம் நிகழுமிடத்து ஆணை கூறுதல் மரபு அன்று ஆயினும், கூறுக்கால் இராக்கதம் போன்று காட்டுதலின், நீதி நூல் வழக்கால் அவ்விடத்துக் கூற வேண்டுதலின், 'ஆணையும் கூறும் என்றார்;

> 'இடைச்சுர மருங்கின் கிழவன் கிழத்தியொடு
> வழக்கியல் ஆணையின் கிளத்தற்கும் உரியன்.'
>
> கதால். பொ. 506

என்ப ஆகலின். ஏற்புழிக் கோடலான் தமர் தலைமகள்தமர் எனவே கொள்க.

வரலாறு :

> நீவிளை யாடுக சிறிதே யானே
> மழகளிறு உரிஞிய பராரை வேங்கை
> மணலிடு மருங்கின் இருபுறம் பொருந்தி
> அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவென்
> நுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே.
>
> நற். 362

எனவரும்.

உம்மையால், கிழத்தியொடு மருட்டிக் கூறவும்பெறும் என்றவாறு.

> 'அழிவிலர் முயலும் ஆர்வ மாக்கள்
> வழிபடு தெய்வம் கண்கண் டாஅங்கு
> அலமரல் வருத்தம் தீர யாழநின்
> நலம்மென் பணைத்தோள் எய்தினம் ஆயின்
> பொறிப்பூம் புன்கின் எழில்தகை ஒண்முறி

சுணங்குஅணி வனமுலை அணங்குபடத் திமிரி
நிழல்காண் தோறும் நெடிது வைகி
மணல்காண் தோறும் வண்டல் தைஇ
வருந்தாது ஏகுமதி வால்எயிற் றோயே
மாநனை கொழுதி மகிழ்குயில் ஆலும்
நறுந்தண் பொழில கானம்
குறும்பல் ஊரயாம் செல்லும் ஆறே.' நற். 9

எனவரும். 195

விளக்கம்

நூற்பா விளக்கம் பெரும்பாலும் எடுத்துக்காட்டுடன் தொல்காப்பியப் பொருட்படல 506 ஆம் நூற்பாவில் கூறப் பட்ட பேராசிரியர் உரையேயாம்.

' நீ விளையாடுக ' —

' தலைவியே ! சிறிது நேரம் நீ விளையாடியவாறு ஈண்-டுப் பொழுது போக்குதி; யான் இளைய களிறு தினவால் உடலைத் தேய்த்துக்கொண்ட பருத்த அடிமரத்தை உடைய வேங்கை மரத்தின் மணல் மேடிட்டுள்ள பெரிய பின்பகுதியில் மறைந்து காண்கிறேன். ஆறலைகள்வர் அமர்குறித்து வரின் அஞ்சாது அவர்களைப் புறங் காண்கிறேன். உன்தமர் வருகு-வராயின் அவரோடு அமர் செய்யின், அவர் உயிர்க்கு ஏதம் விளைவித்தலும் நிகழக் கூடின், நின்மனம் நோம் ஆதலின், நான் மறைந்தவாறே வாளா இருக்கிறேன்.'

இக்கருத்து மாறன் அலங்கார மேற்கோள்பாடல் ஒன் றில் மிக அருமையாக அமைக்கப்பட்டுள்ளது. தறுகண்மை பற்றிய பெருமிதத்திற்கு அப்பாடல் மேற்கோள் ஆகும்.

' கீலாலம் குளிறுதிரைக் கெழுகடல்முற்று அகன்ஞாலத்து
ஆலாலம் மிசைப்பவளா அருவரையும் கருவரையும்

தமிதமிளன் னதுஎனலாம் தவல்அருமாண் தொழில்தன்மை
எமதுளமதுஎன்று எதிருநரின் உயிர்செகுத்துஈந்து இருகோக்கின்
கடைசிவந்து கருமையவாய்க் கவின்பெறுவார் குழைபோழ்ந்த
வடிபுரைமாண் மதர்மலர்க்கண் மதிபுரைவாள் நறுநுதால்!

[இது தரவு]

இடம்தழுவும்குனிசிலைக்கைஇகல்மறவர்கொடுங்கணையோடு
உடன்றுஎழில்என்சுடர்வடிவேற்குஉணவுஆதல்ஒருதலையால்
தொடர்ந்துஎழு நின்தமரேல்சண் பகமாறன் துணைஅடிசேர்
திடம்தழுவு ததியர்எனத் தெருள்உறநன்கு அருளுவனே.

வாள்தானைத் துறுமறவர் வயிரஅழல் பிழம்புஉகுகண்
கோட்டுஆனை உடன்வரில்என் கூரிலைவேல் அவர்மார்பில்
தீட்டாறை விணைஅளிப்பன் நுமரேல்திவ் வியத்துளபத்
தோட்டானைத்தொழுமாறன்தொண்டரின்நன்கு அருளுவனே.

குளிர்மதிவான் அகடுஉரிஞ்சும் கொடித்தேரின் குழுவினொடும்
ஒளிதிகழ்வன் படைமறவர் உடங்குஎழில்வைந் நுதிவேலால்
களிபயில்வெந் தொழில்புரிவன் நுமரேல்வண் கருணைசன்
அளிதிகழ்தே மகிழ்மாறன் அடியரின்நன்கு அருளுவனே.

[இவை தாழிசை]

எனவாங்கு [தனிச் சொல்]

காணுதி, காணுதி, கனலி தெற்கு எழினும்,
தாணுவின் நிலைதவ றினும்தவ றுவுரை
குன்றுசூழ் கூர்ம்பரல் கொடுநெறிக்கு
ஒன்றும்நீ அழுங்குஅஞர் உறல்ஏ குதியே.’

[இது சுரிதகம்]

‘ அழிவிலர் முயலும் ’ —

‘நற்றவம் முயலும் சான்றோர் தம் வழிபடுதெய்வத்தை நேரில் கண்டாற்போன்ற மகிழ்வுடன், களவுக்காலத்து மனச் சுழற்சியும் வருத்தமும்தீர உன் மென்தோளை யான் பெற்று

விட்டேன் ஆதலின், புன்கந்தளிர்களை நின் வனநகிலில் வீற்றுத்தெய்வம் மகிழுமாறு சூடி, நிழலைக் காணுந்தோறும் நெடுநேரம் ஒய்வு எடுத்துக்கொண்டு, மணலைக் காணும் தோறும் விளையாட்டயர்ந்து, மாப்பூக்களைக் கொழுதி மகிழ்ச்சியால் குயில் கூவும் நறிய தண்ணிய பொழில்களை உடைய காட்டுவழியே யாம் உடன்போக்கு நிகழ்த்துங்காலை உள்ள ஊர்களில் வருத்தம் எதுவும் இன்றி என்னைத் தொடர்ந்து வருவாயாக.

'தலைவிதமரைக் கொல்லேன்' என்று தலைவன் கூறுக் கால், அது தலைவியை வலியக் கவர்ந்து தமரைக் கொன்று பெயரும் இராக்கதம் போல் ஆகிவிடும் ஆதலின், தலைவன் ஆணை கூறும் இன்றியமையாமை ஏற்பட்டது என அகத் திணை பற்றிய வழு அமைக்கப்பட்டது. [தொல்.பொ. 506பே]

தலைவிதமர் தொடராதவழி, தலைவியைச் செலவுபற்றி வருந்தாதவாறு தலைவன் மகிழ்வித்துக் கொண்டே செல் வான் என்பது.

ஒத்த நூற்பாக்கள்

'இடைச்சுரம் .... .... .... ... உரியன்.' தொல். பொ. 506
முழுதும் — ந. அ. 216

195

## தலைவி கூற்று நிகழும் இடம்

568 உடன்போய் மீண்ட கொடுங்குழை அரிவை
பிரிவுழித் தலைவனொடு சுரத்துஇயல்பு பேசலும்
பிரிந்துழி நெஞ்சொடும் பிறரொடும் வருந்திச்
சொல்லலும் உரியள் சொல்லுங் காலே.

இதுவும் அது.

(இ-ள்) தலைவனுடன் போய் மீண்ட தலைவி, தலைவன் பிரிவுழி அவனொடு சுரத்தின் தன்மை கூறலும், பிரிந்தவிடத்-துத் தன் நெஞ்சோடும் பிறரோடும் வருத்தமுற்றுச் சொல்லு தலும் உரியளாம் சொல்லுமிடத்து என்றவாறு.

தலைவன் பிரியுங் காலத்து அவனோடு சுரத்து இயல்பு கூறற்குச் செய்யுள் :

> நினைக்கினும் அரிதுஅரோ ஐய அன்றுநாம்
> பணைத்தாள் ஓமைப் படுசினை பயந்த
> பொருந்தாப் புகர்நிழல் இருந்தனம் ஆக
> நடுக்கம் செய்யா நண்ணுவழித் தோன்றி
> ஒடித்து மிசைக்கொள் .... .... சுரனே. நற். 318

எனவரும். இக் கூற்றுப் பகுதிக்கண் காட்டாது ஒழிந்தன வற்றிற்கு உதாரணம் மேல்காட்டியவிற்றுள்ளும் பிறவற்றுள் ளும் காண்க. 196

## விளக்கம்

தலைவன் கற்புக்காலத்தில் ஓதல், பொருள் முதலிய கருதிப் பிரியுமிடத்து, தலைவி தான் உடன்போய காலைக் கண்ட சுரத்து இயல்புபற்றித் தலைவனிடம் கூறி அத்தகைய கடும்பாலைச் செலவு தவிர்க்க முயலுதல் உண்டு.

‘ நினைக்கினும் அரிது ’—

ஐய ! யாம் உடன்போக்கு நிகழ்த்தியகாலை, பருத்த அடிமரத்தை உடைய ஓமை மரக்கிளையின் புள்ளிபுள்ளியாக அமைந்த நிழற்கண் சிறிது தங்கி இளைப்பாறி இருந்தேமாக, நமக்கு நடுக்கத்தை உண்டாக்கி நாம் இருந்த வழிக்கண் வந்து, அம்மரம் தளருமாறு வளைத்து ஒடித்துத் தலைமீது வைத்துக்கொண்ட நீண்ட கொம்புகளை உடைய யானை தன் துதிக்கையைச் சுருக்கிக்கொண்டு ஏதோ அறிவுறுத்தும் குர-லோடு பிளிறியதாக, அவ்வொலிக்குறிப்பை அறிந்து வெப்-பம் மிக்க பிளப்பிடத்தில் எதிர்ஒலி உண்டாகுமாறு சிவந்த தலையை உடைய மெல்லிய பெண்யானை தனிப்படரோடு ஒலித்த குரல் இன்று நினைத்தாலும் நடுக்கம் நீங்குதல் அரி-தாயுள்ளது.

இப்பாடலில் சிலஅடிகள் விடுபட்டுள்ளன. பாடலைப் பின்வருமாறு கொள்ளல் வேண்டும்.

நினைக்கினும் அரிதுஅரோ ஐய அன்றுநாம்
பணைத்தாள் ஓமைப் படுசினை பயந்த
பொருந்தாப் புகர்நிழல் இருந்தனம் ஆக
நடுக்கம் செய்யா நண்ணுவழித் தோன்றி
படுமரம் ஒசிய ஒற்றிய பின்னர்
ஒடித்துமிசைக் கொண்ட ஓங்குமருப்பு யானை
பொறிகிளர் தடக்கை சுருக்கிப் பிறிதோர்
அறியிடை யிட்ட அளவைக்கு வேறுணர்ந்து
என்றூழ் விடரகம் சிலம்பப்
புன்தலை மடப்பிடி புலம்பிய குரலே. நற். 318

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 217

196

## கூற்றிற்குப் புறனடை

569 சாற்று அனைவரும் தலைவன் தலைவியோடு
ஏற்றன கூறுப இடம்தோறும் இடம்தோறும்.

இதுமேல் விதந்து ஓதப்படாதார்க்கு உரியமரபு உணர்த்துகின்றது.

(இ-ள்) மேல் விதந்து ஓதப்படாத பார்ப்பானும் பாங்கனும் பாங்கியும் பாணனும் கூத்தனும் விறலியும் பரத்தையும் அறிவரும் ஆகிய அனைவரும் தலைவனோடும் தலைவியோடும் இடந்தொறும் இடந்தொறும் பொருந்துவனவற்றைக் கூறுவர் என்றவாறு. 197

ஒத்த நூற்பாக்கள்

'ஒழிந்தோர் கிளவி கிழவன் கிழத்தியொடு
மொழிந்தாங்கு உரியர் முன்னத்தின் எடுத்தே.'
தொல். பொ. 507

'சாற்று எழுவரும் தலைவன் தலைவியொடு
ஏற்றன கூறுப இடந்தொறும் இடந்தொறும்.'

ந. அ 222

197

## தலைவன் தலைவியர் கூற்று வழுவமைதி

570 **நோயும் இன்பமும் இருவகை நிலையின்**
**காமம் கண்ணிய மரபுஇடை தெரிய**
**எட்டன் பகுதியும் விளங்க ஒட்டிய**
**உறுப்புஉடை யதுபோல் உணர்வுஉடை யதுபோல்**
**மறுத்துஉரைப் பதுபோல் நெஞ்சொடு புணர்த்தும்**
**சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்**
**செய்யா மரபின் தொழில்படுத்து அடக்கியும்**
**அவர்அவர் உறுபிணி தமபோல் சேர்த்தியும்**
**அறிவும் புலனும் வேறுபட நிறீஇ**
**இருபெயர் மூன்றும் உரிய ஆக**
**உவம வாயில் படுத்தலும் உவமம்**
**ஒன்றுஇடத்து இருவர்க்கும் உரியபாற் கிளவி.**

இஃது ஒருசார் காமப்பொருண்மை பற்றித் தலைவன் மாட்டும் தலைவிமாட்டும் நிகழ்வது ஒரு கூற்றுவழுவமைதி கூறுகின்றது.

(இ-ள்) துன்பமும் இன்பமும் ஆகிய இருவகை நிலையினையும் உடைய காமத்தைக் குறித்தமரபு இடையிடுபடுதலாலே, நகை முதலிய மெய்ப்பாடு எட்டனுடைய கூறுபாடும் தோன்றப் பொருந்திய உறுப்பு உடையது போலவும் உணர்வு உடையதுபோலவும் மறுத்து உரைப்பது போலவும் கூறப்படும் செய்திகள் எல்லாம் தன் நெஞ்சொடு புணர்த்திச் சொல்லியும், வார்த்தை சொல்லாத முறைமையை உடையன ஆகிய புள்ளும் மாவும் மரனும் கடலும் கானலும் முதலியவற்றோடே அவை வார்த்தை சொல்லுவனவாகப் பொருந்தி அவை செய்தல் ஆற்றாத முறைமையைஉடைய தூதாகச்

செல்லலும் வருதலும் உளபோலக் கூறுபவை போல்வன தொழில்களை அவற்றின்மேலே ஏற்றிச் சொல்லியும், யாவர் சிலர் யாதொரு பிணிஉற்றார் அவர் உற்ற பிணியைத் தாம் உற்ற பிணிபோலச் சேர்த்திச் சொல்லியும், அறிவையும் அறியப்படும் பொருளையும் தத்தம் நிலைமை ஒழிய வேறுபட நிறுத்தி உவமப்பெயரும் உவமிக்கப்படும் பொருட்பெயரும், ஆகிய இருவகைப்பட்ட பெயரும் தொழிலும் பண்பும் பயனும் ஆகிய மூவகைப்பட்ட பொருட்கு உரியவாக. உவமம் பொருந்துமிடத்து உவமத்தின் வழியிலேபடுத்திச் சொல்லுதலும், தலைமகற்கும் தலைமகட்கும் உரிய இலக்கணத் தின் பக்கக் கூற்றும் எனறவாறு.

‘ இடை தெரிய ’ என்பதனை,

— இன்பம்

இடைதெரிந்(து) இன்னாமை நோக்கி மனையா(று)
அடை(வு)ஒழிந்தார் ஆன்றமைந் தார் நாலடி. 54

என்றாற் போலக்கொள்க. ‘ தெரிய ’ என்னும் செய என் எச்சம் ஏதுப்பொருண்மை குறித்து நின்றது. ‘ அவர் அவர் ’ என உயர்திணைப் பன்மையாகக் கூறினும், இருதிணை ஐம் பாலும் கொள்ளப்படும் ;

‘ ஒருபால் கிளவி எனைப்பாற் கண்ணும்
வருவன தாமே வழக்கென மொழிப.’
தொல் பொ. 218

என்ப ஆகலின்.

‘ ஒன்றிடத்து உவமம் ’ என்றதனை உவமம் ஒன்றி டத்து என்று மாறுக.

வரலாறு :

கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை அன்ன பின்னகம் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ

நாளொடு மிடைந்த கற்பின் வாள்நுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறல்நசைஇச் சென்றஎன் நெஞ்சே.

அகநா. 9

இஃது உவமை பற்றி நெஞ்சினை உறுப்புடையது போலக் கூறிய தலைவன் கூற்று.

உள்ளம் பிணிகொண் டோள்வயின் நெஞ்சம்
செல்லல் தீர்கம் செல்வாம் என்னும். நற். 284

இஃது இளிவரல் பற்றி நெஞ்சினை உணர்வு உடையது போலக் கூறிய தலைவன் கூற்று.

அவர்நெஞ்சு அவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
நீஎமக் காகா தது. குறள். 1291

இஃது இளிவரல் பற்றி நெஞ்சினை மறுத்து உரைப்பது போலக் கூறிய தலைவி கூற்று.

கானலும் கழறாது கழியும் கூறாது
தேன்இமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது
ஒருநீ அல்லது உறுதியாதும் இலனே
இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்
கமழ்இதழ் நாற்றம் அமிழ்துஎன நசைஇத்
தண்தாது ஊதிய வண்டினம் களிசிறந்து
பறைஇக் கிளரும் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால் அலவ! அகநா. 170

இஃது அழுகைபற்றிச் சொல்லா மரபினவற்றொடு கெழீஇச் செய்யா மரபின் தொழில்படுத்துக் கூறிய தலைவி கூற்று.

பாய்திரை பாடுஓவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்
தூஅறத் துறந்தனன் துறைவன்என்று அவன்திறம்

நோய்தெற உழப்பார்கண் இமிழ்தியோ எம்போலக்
காதல்செய்து அகன்றாரை உடையையோ நீ. கலி. 129

இஃது அவர்அவர் உறுபிணி தமபோலச் சேர்த்திய தலைவி கூற்று.

ஓங்கெழில் கொம்பர் நடுஇது எனப்புல்லும்
காந்தட்கு இவரும் கருவிளம் பூக்கொள்ளும்
மாந்தளிர் கையில் தடவரும் மாமயில்
பூம்பொழில் நோக்கிப் புகுவன பின்செலும்
தோள்எனச் சென்று துளங்குஒளி வேய்தொடும்
நீள்கதுப்பு இஃதுஎன நீர்அற லுட்புகும்
வாள்ஒளி முல்லை முகையை முறுவல்என்று
ஆள்வலி மிக்கான் அஃது அறி கல்லான்.

தொல். பொ- 194. உரை-எடு

இஃது அறிவும் புலனும் வேறுபட நிறீஇ உவம வாயில் படுத்துக் கூறியது. இதனுள் இடையும் கையும் முதலாகிய உறுப்புக்களைப் பற்றி உவமவாயில்படுத்து அறியும் அறிவையும் அறியப்படும் பொருளையும் வேறுபட நிறுத்தி உவமம் பொருந்தியவழிக் கூறியவாறு காண்க. வேயைத் தோள் போலும் என்னாது தோள் என்று தொட்டமையான் அறியப்படும் பொருள் வேறுபட்டது. அதனைத் திரியக் காண்டலான் அறிவு வேறுபட்டது. பித்தும் களியும் போல முலை எனச் சென்று வேயைத் தொடும் என்னாது தோள் எனச் சென்று வேயைத் தொடும் என்றமையான், உவமம் ஒன்றியவழி உவமவாயில் படுத்தது. ஏனையவற்றிற்கு இலக்கியம் வந்துழிக் காண்க. ஈண்டு உரைப்பின் பெருகும். 198

## விளக்கம்

இத் தொல்காப்பியப் பொருட்படல 194ஆம் நூற்பாவிற்கு உரையாசிரியர் உரைத்த உரையும் காட்டிய எடுத்துக் காட்டுக்களும் இவரால் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

நூற்பாச்செய்தி — காமம், கூடுங்கால் இன்பமும் பிரியுங்கால் துன்பமும் மிகுதியாகப் பயப்பது. இரண்டு நிலையின்கண்ணும் தலைவனுக்கும் தலைவிக்கும் உள்ள இயல்பான தன்மைக்கண் வேறுபாடு நிகழும். அவர்களிடை இயல்பாக உள்ள சாந்தநிலை நீங்கி நகை முதலிய எண்வகை மெய்ப்பாடுகளும் தோன்றும். அவர்கள் தம் மனத்தை உறுப்புஉடையது போலவும் உணர்வுஉடையது போலவும் மறுத்துஉரைப்பது போலவும் கற்பனை செய்துகொண்டு பேசுவர்; தம்மோடு உரையாடும் இயல்பின அல்லாத அஃறிணைப் பொருள்களையும் தம்மோடு உரையாடுவனபோலக் கற்பனை செய்து-கொண்டு அவை செய்தல் இயலாத தூதுபோதல் முதலிய செயல்களை அவை செய்யுமாறு குறிப்பிடுவர்; யாவராவது ஒரு துன்பம் உற்றால் அத்துன்பம் தம்மைப் போன்று பிரிதலினால் உண்டான துன்பமே என்று கற்பனை செய்துகொண்டு அவரோடு உரையாடத் தொடங்குவர்; இச் செயலை உரையாடுதல் இயலாத அஃறிணைப் பொருட்கண்ணும் நிகழ்த்துவர். உபமானப் பொருள்களை எல்லாம் உபமேயமாகக் கருதிக் காதல் செய்வர்.

இந் நிலைகள் உலகஇயலுக்கு மாறுபட்டன ஆதலின், இவை அகப்பொருட்கண் வழுவமைதியாகக் கொள்ளத் தக்கன.

இந் நூற்பாவின் சில பகுதிகளுக்கு நச்சினார்க்கினியர் வேறு உரை கூறுவர். அவர் உரை பின்வருமாறு :

‘துன்பம் இன்பம் ஆகிய இரண்டு நிலைக்களத்துக்காமம் கருதின வரலாற்று முறைமையிடம் விளங்க, நகைமுதலிய எட்டன் கூறுபாடும் தோன்ற, மன அறிவும் பொறி அறிவும் வேறுபட நிறுத்தி, அஃறிணை இருபாற்கண்ணும் உயர்திணை மூன்று பொருளும் உரியவாக, கூறுகின்ற அவரவர் தமக்குப் பொருந்திய உறுப்பெல்லாம் அது உடையது போலவும் உணர்வு உடையது போலவும் மறுமாற்றம் தரு-

வது போலவும் தம் நெஞ்சொடு புணர்த்துச் சொல்லியும், வார்த்தைசொல்லா முறைமை உடையனவாகிய புள்ளும் மாவும் முதலியவற்றோடே அவை வார்த்தை கூறுவனவாகப் பொருந்தி, அவை செய்தல் ஆற்றாத முறைமையினை உடைய தொழிலினை அவற்றின் மேலே ஏற்றியும், அச் சொல்லா மரபினவை உற்ற பிணிகளைத் தம் பிணிக்கு வருந்தின போலச் சார்த்திக் கூறியும், அம்மூவகைப் பொருளை உவமம் செய்தற்குப் பொருந்துமிடத்து உவமத்தின் வழியிலே சார்த்-திக் கூறுதலும் அத்தலைவர்க்கும் தலைவியர்க்கும் உரிய இலக் கணத்தின் பக்கச் சொல்லாம் என்றவாறு.

தெரிய விளங்க உரியவாகப் புணர்த்தும் அடக்கியும் சேர்த்தும் அவற்றைப் படுத்தலும் அவ்விருவருக்கும் உரிய பாற்கிளவி எனமுடிக்க. 'அவர்அவர்' என்கின்றார், அகத் திணையியலுள் பலராகக் கூறிய தலைவரையும் தலைவியரை யும். 'இருவர்' என்றதும் அவர் என்னும் சுட்டு. நெஞ்சு என்னும் அஃறிணை ஒருமையைத் தெரிய விளங்கத் தலைவன் கூறும்வழி உயர்திணை ஆண்பாலாகவும் தலைவி கூறும் வழி உயர்திணைப் பெண்பாலாகவும் அவற்றைத் தமபோலச் சேர்த்திக் கூறுபடுத்து உயர்திணை முப்பால் ஆக்கியும் கூறுப என்று வழு அமைத்தார்.

> இருவகை நிலைக்களத்து எட்டனையும் சேர்க்கப் பதினாறும்;
> அவற்றை நெஞ்சொடு சேர்க்கப் பலவாம் என்று உணர்க.'
>
> தொல். பொ. 196. நச்

இலக்கணத்தின் பக்கச்சொல் — வழுவமைதி.

இன்பம் இடையீடுபடுதலை அறிந்து அதன் இன்னாமை யைக் கருதிச் சான்றோர் இல்வாழ்க்கையைப் பொருந்துதலை நீத்தார் என்ற பகுதியில், இடை என்பது இடையீடு என்ற பொருளில் வந்துள்ளது.

ஒருபால் பற்றி ஓதினும் ஏனைய நான்கு பால்களையும் ஏற்ற பெற்றி கோடல்வேண்டும் ஆதலின், 'அவர் அவர்' என்று பலர்பால் பற்றிக் கூறினும், ஏனைய பால்களையும் கோடல்வேண்டும் என்பது.

'கைகவியாச் சென்று'—

வினைமுற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியதாக அமைந்த 'கொல்வினைப் பொலிந்த' என்ற அகநானூற்றுப் பகுதி இது.

'நாணொடு கூடிய கற்பினளாகிய ஒளி பொருந்திய நெற்றியை உடையளாகிய அழகிய இனியசொற்களை உடைய என் தலைவியின் மெல்லிய தோள்களைப் பெறுதலை விரும்பி எனக்குமுன் அவளை நோக்கிச்சென்ற என் நெஞ்சம் சென்று கைகளைக் கவித்துக்கொண்டு அவள் கண்களைப் பொத்திப் பெண்யானைக் கை போன்ற அவள் கூந்தலைப்பற்றி அவள் வளையல் அணிந்த கைகளால் தன்னை தடவுமாறு அவளைத் தழுவிற்றோ?'—என்ற இப்பகுதியில் தலைவன் தன்நெஞ்சினைத் தன்னைப்போலக் கை கால் முதலிய உறுப்பு உடையதாக உவகை பற்றிக் கூறியவாறு.

'உள்ளம் பிணிக்கொண்டோள்'—

பொருள் முடியாநின்ற தலைமகன் ஆற்றுறாகிச் சொற்ற 'புறந்தாழ்பு இருண்ட கூந்தல்' என்ற நற்றிணைப்பாடலில், நெஞ்சம் தன்னைப் பிணித்துக்கொண்ட தலைவியின் துயரைத் தீர்க்கச் செல்லுதல் வேண்டும் என்று வற்புறுப்பவும், அறிவு வினைமுற்றியே புறப்படல் வேண்டும் என்று வற்புறுத்தவும், களிறு இரண்டு இருபாலும் பற்றி ஈர்த்த தேய்புரிப் பழங்கயிறு போலத் தன்உடல் மெலிதலைத் தெரிவிக்கும் தலைவன், தன்நெஞ்சு தன்னிடம் பேசும் உணர்வு உடையது போல, தன் எளியனும் நிலையான் ஏற்பட்ட துன்பத்தில் சொற்றவாறு.

'அவர் நெஞ்சு'—

தலைவன் தலைவியை அருமைசெய்து அயர்த்தானாகத் தலைவி தன்நெஞ்சு தன் கூற்றைக் கேட்பதுபோலக் கற்பனை செய்து 'நெஞ்சே! தலைவனுடைய நெஞ்சு அவன் பக்கலி லேயே இருந்து அவன் செயல்களில் ஈடுபடுகிறதே! என் நெஞ்சமாகிய நீ என் பக்கல் இல்லாது அவன் பக்கல் சேரக் காரணம் என்ன?' என்று பிரிவுத்துன்ப மெலிவு பற்றி நெஞ் சொடு சொற்றவாறு.

> ஒருசிறை நெஞ்சமொடு உசாவுங்காலை
> உரியது ஆகலும் உண்டு என மொழிப.
>
> தொ. பொ. 204 ந.

என்பது இதற்குச் சிறப்புவிதி.

'கானலும் கழருது'—

இப்பாடல் காமம் இடையீடுபட்டகாலை, தலைவி நண்டி- னைத் தூது விடுதற்குத் துணிந்து பேசியது.

" கடற்கரைச் சோலையோ, உப்பங் கழியோ, வண்டொ- லிக்கும் நறுமலர்ப் புன்னையோ என் துயரம் பற்றித் தூது- பேசும் வாய்ப்பு இல்லை. உன்னைத் தவிர வேறு உறுதி செய் வார் யாரும் இல்லை. கழிகளில் மலர்ந்த நெய்தல் மலரது மணத்தை அமுதமாக விரும்பி அதன் மகரந்தத்தை ஊதிய வண்டினம், களிப்போடு பறந்து திரியும் என் தலைவனிடத்து, " சிறுகாக்கை பெடையோடு தான் பகலில் உண்ட இருமீன்- களையே இரவில் அமைதியாகக் கனவுகாணும் செறிந்த நடு- இரவில், நின் மிக்க துன்பத்தைப் போக்கிய தலைவி இப் பொழுது தனித்து இருந்து தன் மிக்க துயரைப் போக்கிக் கொள்ளற்கு வல்லளோ? என்று நீயே தூதுசொல்லுதல் வேண்டும்." - எடுத்துக்காட்டில் தூதுச்செய்தி குறிக்கப்பட வில்லை; அதனையும் கோடல்வேண்டும்.

‘பல்கால், கைதையம் படுசினை எவ்வமொடு அசாஅம்
கடல்சிறு காக்கை காமர் பெடையொடு
வெள்இருக் கனவும் நள்ளென் யாமத்து
நின்உறு விழுமம் களைந்தோள்
தன்உறு விழுமம் நீந்துமோ எனவே’ அகநா. 170

என்ற பகுதியையும் கொள்க.

‘பாய்திரை’ —

“பரவிய அலைகள் ஒலித்தல் நீங்காத பரவிய நீரை உடைய குளிர்ந்த கடலே! ‘தலைவன் எமக்குப் பற்றுக்கோடு இல்லையாம்படி துறந்துவிட்டானே’ என்று அவனால் ஏற்பட்ட காமநோய் வெதுப்புதலான் வருந்துவாரது துயரம கண்டு நீ வருந்தி ஒலிக்கின்றாயா? அல்லது எம்மைப்போல உன்மாட்டுக் காதல் செய்து பின் பிரிந்தவர் உனக்கும் உளரா?”

இது கடல்படும் துன்பத்தைத் தன்னை ஒத்த துன்பமாகக் கருதித் தலைவி கூறியது.

‘ஓங்கு இருங்கொம்பர்’ —

கொடியைத் தலைவியின் இடை என்று தழுவி, காந்தளை அவளது கை என்று விரும்பி, கருவிளையைக் கண் என்று கைக்கொண்டு, மாந்தளிரை அவளது மேனி என்று தடவி, மயிலை அவளது சாயல் என்று பின்சென்று கண்டு மகிழ்ந்து, மூங்கிலை அவளது தோள் என்று கருதித் தொட்டு, கருமணலை அவளது நெளிவுடைய மயிர்முடி என்று பற்றி முல்லையை அவளுடைய பற்கள் என்று தலைவன் கருதினான் — என்று உபமானங்களை உபமேயமாகவே தடுமாறிக் கொண்டமை காண்க.

உபமேயம் வேறு உபமானம் வேறு என்ற மனநிலை இல்லாது, உபமானத்தையே உபமேயமாகக் கொண்டது காமத்துக் கன்றிய அறிவான் நிகழ்ந்தது. உபமானத்தை

அன்றிப் பிறிதொன்றை உபமேயமாகக் கருதாமையின் காம வேறுபாடு பித்தும் களியும் உண்டாக்கவில்லை என்பதும் உணரப்படும்.

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் :— தொல். பொ. 196 நச்.

'ஒருசிறை நெஞ்சமொடு உசாவுங் காலை
உரியது ஆகலும் உண்டுஎன மொழிப.'

தொல். பொ. 204

'ஞாயிறு திங்கள் அறிவே நாணே
கடலே கானல் விலங்கே மரனே
புலம்புஉறு பொழுதே புள்ளே நெஞ்சே
அவைஅல பிறவும் நுவலிய நெறியான்
சொல்லுந போலவும் கேட்குந போலவும்
சொல்லியாங்கு அமையும் என்மனார் புலவர்.' 512

'நெஞ்சும் நாணும் நிறைசேர் அறிவும்
செஞ்சுடர்ப் பருதியும் திங்களும் மாலையும்
புள்ளும் மாவும் புணரியும் கானலும்
உள்ளுறுத்து இயன்றவும் ஒழிந்தவை பிறவும்
தன்சொல் கேட்குந போலவும் தனக்குஅவை
இன்சொல் சொல்லுந போலவும் ஏவல்
செய்குந போலவும் தேற்றுந போலவும்
மொய்குழல் கிழத்தி மொழிந்தாங்கு அமையும்.'

ந. அ. 223

198

## கனவு நிகழிடன்

571 கனவும் உரித்தால் அவ்விடத் தான.

இது மேற் கூறிய நிலைமை கனவின்கண்ணும் நிகழும் எனக் கூற்று வழுவமைதி கூறுகின்றது.

(இ-ள்) மேற்கூறியவாற்றான் காமம் இடையீடு-பட்டுழிக் கனக் காண்டலும் உரித்து என்றவாறு.

வரலாறு :

இன்னகை இனையம் ஆகவும் எம்வயின்
ஊடல் யாங்குவந் தன்றென யாழநின்
கோடுஏந்து புருவமொடு குவவுநுதல் நீவி
நறுங்கதுப்பு உளரிய நன்னர் அமையத்து
வறுங்கை காட்டிய வாய்அல் கனவின்
ஏற்றுஏக் கற்ற அலமரல்
போற்றாய் ஆகலின் புலத்தியால் எம்மே, அகநா. 39

இது தலைவன் கனாக்கண்டு கூறியது.

கேட்டிசின் வாழி தோழி அல்கல்
பொய்வ லாளன் மெய்யுற மரீஇ
வாய்த்தகை பொய்க்கனா மருட்ட ஏற்றுஎழுந்து
அமளி தைவந் தனனே குவளை
வண்டுபடு மலரின் சாஅய்த்
தமியேன் மன்ற அளியேன் யானே. குறுந். 30

து தலைவி கனாக்கண்டு கூறியது. 199

## விளக்கம்

இது தொல்காப்பியப் பொருட்படல 195-ஆம் நூற்பா வாக, இதற்கு உரையாசிரியர் உரையே எடுத்துக்காட்டுக்-களுடன் கொள்ளப்பட்டுள்ளது.

காமம் இடையீடுபட்டஇடத்துக் கனாக் காண்டல் தலைவன் தலைவி இருவருக்கும் உரித்து.

'இன்னகை இனையம்'—

பொருள் முற்றிய தலைமகன் தலைமகளைக்கண்டு சொல்லிய 'ஒழித்தது பழித்த நெஞ்சமொடு' என்ற அகப்பாடலில் 'பிரிந்த காலத்தில் எம்மை நீர் நினைத்ததும் உண்டோ?' என்று வினவிய தலைவிக்கு விடைகூறும் தலைவன் தான் தலைவிபற்றியே கனாக்கண்ட நிலையைச் சொற்றது இப்பகுதி.

"செல்லுதல் அரிய வழியில் யான் இரவிடைப் படுத்துக் கண்ணுறங்கினேனாக, நீ தோன்றி வளையல்களைச் செறித்துக் கொண்டு தாழ்ந்த பார்வையோடு நிலத்தைக் கால்விரலால் கீண்டியவாறு நின்றாயாக, உன்னைக்கண்டு 'இனிய நகையினை உடையாய்! உன்னிடம் யான் இத்தகைய அன்பினேன் ஆகவும், என்னிடம் ஊடல் கொள்ளக் காரணம் என்ன" என்று வினவி, உன் புருவத்தையும் நெற்றியையும் தடவிக்கொடுத்து நறிய தலைமயிரைக்கோதிய நேரத்தில் யான் கண்டது பொய்யாம்படிக் கண்ணைத் திறக்கவே அந் நிகழ்ச்சி மறைந்ததாக, அக்கனவை உட்கொண்டு, யான் பட்ட துயரை நீ அறிந்திலையாதலின், என்மாட்டு வெகுளுகின்றாய்" என்று பிரிவின்கண் கனவு கண்டவாற்றைத் தலைவன் கூறினான்.

'கேட்டிசின்'—

'தோழி! நேற்று இரவு நம் தலைவன் என்னைத் தழுவினானாக, உண்மையைப் போன்ற அக்கனவினை மெய்யாகக் கருதிக் கண்விழித்து என் படுக்கையைத் தடவினேனாக, வண்டு கிண்டிய குவளைமலர் போல அழகு கெட்டுத் தனியளாகிய யான் இரங்கத்தக்கவள் ஆயினேன்' என்று காமம் இடையீடுபட்டவழித் தலைவி கனாக்கண்டதைத் தோழியிடம் கூறியவாறு.

ஒத்த நூற்பா

'முழுதும்' — தொ. பொ. 197 நச்.

199

### தாமே கூறிக் கோடல்

572 எம்முறை யோரும் யாரோடும் இன்றித்
தம்மோடு தாமே சாற்றியும் அமைவர்.

இது கூற்றிற்கு உரியார் அனைவர்க்கும் ஆவது ஒரு மரபு கூறுகின்றது.

(இ-ள்) மேல் சொல்லப்பட்ட தலைவன் முதலாகிய அனைவரும் தாம்தாம் கூறப்படுவோர் எவரோடும் கூருது தம்மொடு தாமே கூறியும் அமைவர் என்றவாறு.

உம்மையால், அங்ஙனம் அமைதல் சிறுபான்மை என்று உணர்க. 200

### விளக்கம்

தம்மொடு தாமே கூறிக் கொள்வதால் பயன் 'மூடி வேவாநின்ற அக்கலத்தை மூய் திறந்தஇடத்து அகத்து நின்ற வெப்பம் குறைபடும்; அதுபோல அச் சொற்களைப் புறப்படுத்தலான் இவர்க்கும் அயா உயிர்ப்பாம் என்பது.' (இறை. அக. 30.)

### ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 224
200

## கேட்போர் திறம்

573 இறையோன் கூற்றும் இறைவி கூற்றும்
மறையோர் முதலாப் பதின்மரும் முறையான்
மறையோன் கூற்றும் அறிஞர் கூற்றும்
இறையோன் முதலா எனைவரும் கேட்ப.

இது நான்காம் எண்ணும் முறைமைக்கண் நின்ற கேட்போர் இவர் என வரையறுத்து உணர்த்துகின்றது.

(இ-ள்) தலைவன் கூற்றும் தலைவி கூற்றும் பார்ப்பான் முதலாகிய பதின்மரும், முறையானே பார்ப்பான் கூற்றும் அறிஞர் கூற்றும் தலைமகன் முதலாகிய எல்லாரும் கேட்பர் என்றவாறு.

தலைவன் கூற்றும் தலைவி கூற்றும் தாம் கேட்டல் விதந்து ஓதல் வேண்டுவதன்று, அவை தம் கூற்றாகலான் என்க.

'முறை' என்ற மிகையானே,

'ஊர்க பாக ஒருவினை கழிய' அகநா. 44

எனத் தலைமகன் கூறப் பாகன் கேட்டலும் கொள்க. 201

ஒத்த நூற்பாக்கள்

'மனையோள் கிளவியும் கிழவன் கிளவியும்
நினையுங் காலைக் கேட்குநர் அவரே.'
தொல். பொ. 508

'பார்ப்பார் அறிவர் என்றுஇவர் கிளவி
யார்க்கும் வரையார் யாப்பொடு புணர்ந்தே.' ,, 509
முழுதும் — ந. அ. 225, 226
201

## இடத்து இயல்

574 ஒருநெறிப் பட்டாங்கு ஓர்இயல் முடியும்
கருமம் நிகழ்ச்சி இடம்என மொழிப.

இஃது ஐந்தாம் எண்ணும் முறைமைக்கண் நின்ற இடம் இவ்வியல்பிற்று என்கின்றது.

(இ-ள்) பலவும் ஒருவழிப்பட்டு ஓர் இலக்கணத்தான் முடியும் கருமநிகழ்ச்சி இடம் என்று கூறப்படும் என்றவாறு.

ஒரு செய்யுள் கேட்டான் இஃது இன்ன இடத்து நிகழ்ந்தது என்று அறிதற்கு ஏதுவாயதோர் உறுப்பினை இடம் என்றார் என்பது. இடம் எனினும், களம் எனினும் ஒக்கும். ஒரு நெறிப்படுதல் என்பது ஒருவழிப் பலவும் தொகுத்தல். ஓர்இயல் என்பது அவற்றுக்கெல்லாம் இலக்கணம் ஒன்றுதல்.

எனவே, இயற்கைப்புணர்ச்சி வன்புறை முதலிய கிளவித் தொகைகளே ஈண்டு இடம் எனப்பட்டன என்ப தாயிற்று. இது வினைசெய் இடம். நிலம் முதலாயின முன் னர்த் திணை எனப்பட்டனவாம். காலம் முன்னர்ச் சொல் லுப. **202**

### விளக்கம்

இந்நூற்பா தொல்காப்பியப் பொருட்படல 513-ஆம் நூற்பாவாகும். இதன் உரை அந்நூற்பாவின் பேராசிரியர் உரையையே பெரும்பாலும் ஒட்டி வரையப்பட்டுள்ளது. பேராசிரியர் எடுத்துக்காட்டும் தந்து விளக்குகிறார்.

> எலுவ சிறுஅர் ஏமுறு நண்ப
> புலவர் தோழ கேளாய் அத்தை
> மாக்கடல் நடுவண் எண்ணாள் பக்கத்து
> நெடுவெண் திங்கள் தோன்றி யாங்குக்
> கதுப்புஅயல் விளங்கும் சிறுநுதல்
> புதுக்கோள் யானையின் பிணித்தன்றால் எம்மே.

குறுந். 129

என்னும் பாட்டும்,

> கேளிர் வாழியோ கேளிர் நாளும்என்
> நெஞ்சுபிணிக் கொண்ட அஞ்சில் ஓதி
> பெருந்தோள் குறுமகள் சிறுமெல் ஆகம்
> ஒருநாள் புணரப் புணரின்
> அரைநாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே.

குறுந். 280

என்னும் பாட்டும் பாங்கற்கூட்டமே இடனாக ஒருவழிப்பட் டன; என்னை ? 'நின் வேறுபாடு எற்றினான் ஆயிற்று ?' என்று வினவிய பாங்கற்கு 'இதனின் ஆயிற்று' என்று உரைத்ததூஉம், அதற்குப் பாங்கன் கழறினானை எதிர்மறுத்த- தூஉம் என இரண்டும் பாங்கற் கூட்டத்துப்பட்டு ஓரியலான் முடிந்தன. தொல். பொ. 513 பேரா

இடம் என்பது ஒருசெயல் நிகழும் சந்தர்ப்பம்.

நிலம் என்பது முல்லை முதலாக ஐவகைப்படுவது.

இடம் வேறு, நிலம் வேறு என்பதனை,

'ஏழாகுவதே,

கண்எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்
அனைவகைக் குறிப்பின் தோன்றும் அதுவே.'
தொல். சொல். 81

என்ற நூற்பாவில் இடமும் நிலமும் வேறுவேருகக் கூறப் பட்டதனுனும் அறியலாம்.

நிலம் என்பது முதற்பொருளின் ஒரு கூருய்த் திணை தோறும் வேறுபட்டுவரும் உலகப் பாகுபாடாம்.

இயற்கைப்புணர்ச்சி ஓர் இடம். அதன்கண் இரந்து பின்நிற்றற்கு எண்ணல் முதலிய பலவகைச் செயல்களும் அடக்கப்படுமாற்றை அந்நூற்பாத் துறைவிரி பற்றிக் கூற லான் முன்பே கண்டுள்ளனம்.

முன் என்பது ஈண்டுக் காலமுன்.

ஒத்த நூற்பா

முழுதும் — தொல். பொ. 513. பே.
'நெறிப்படு கருமம் நிகழ்வுழி இடனே.' ந அ. 227
202

## காலத்தின் இயல்

575 இறப்பே நிகழ்வே எதிரது என்னும்
திறத்துஇயல் மருங்கின் தெரிந்தனர் உணரப்
பொருள்நிகழ்வு உரைப்பது காலம் ஆகும்.

இஃது ஆறும் எண்ணும் முறைமைக்கண் நின்ற காலம் இவ்வியல்பிற்று என்கின்றது.

(இ-ள்) இறந்த காலமும் நிகழ்காலமும் எதிர்காலமும் என்னும் கூறுபாட்டான் நிகழும் பக்கத்தின் ஆராய்ந்து புலனுமாறு செய்யுளுள் தோன்றப் பொருள்நிகழ்ச்சியைக் கூறுவது காலம் என்னும் உறுப்பாம் என்றவாறு.

பொருள்நிகழ்ச்சியைக் காலம் என்றது என்னை, காலம் என வேறுபொருள் இல்லதுபோல எனின், அஃது ஈண்டு ஆராய்ச்சியின்று; நியாயநூல் ஆராய்ச்சி என்க.

'வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே' குறுந். 7

என்னும் பாட்டினுள் வில்லோனும் தொடியோளும் பொருள் எனப்படும்.

'வேய்பயில் அழுவம் முன்னியோர்' குறுந். 7
என்பது, அப்பொருள் நிகழ்ச்சியான் இறந்தகாலம் எனப் படும்.

அப்பாட்டிற்குச் சிறந்தார் அவராகலின், அவரே பொருள் ஆயினர் என்பது.

'மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே' குறுந். 71
என்பது நிகழ்காலமும்,

'பகலும் பெறுவைஇவள் தடமென் தோளே' கலி. 49

என்பது எதிர்காலமும் எனப்படும், அவ்வப் பொருள் நிகழ்ச் சியான் என்று உணர்க.

புறத்திற்கும் இவ்வாறே இன்றியமையாது என்பது. பெரும்பொழுது சிறுபொழுது என்பன ஈண்டுத் திணை எனப்பட்டு அடங்கின; என்னை? முதலும் கருவும் உரிப்பொரு ளும் கூட்டித் திணை ஆகலின். 203

### விளக்கம்

காலம் பொருள் நிகழ்ச்சியை உரைப்பது.

வினையாவது ஒரு பொருளின் புடைபெயர்ச்சி.

அப்பொருளின் புடைபெயர்ச்சி நிகழ்ந்த—நிகழ்கின்ற-நிகழுமாற்றை உரைப்பது காலமாகும். தனியே காலம் என்பதுஒன்றனை விளக்குதல் இயலாது. ஒரு பொருளின் தொழிலொடு படுத்தே காலத்தை உணர்த்துதல் வேண்டும். இது பற்றியே வினைச்சொல் காலத்தொடு வரும் என்று கூறப்பட்டது.

'வில்லோன் காலன' —

வில்லோனும் தொடியோளும் பொருள்.
முன்னுதல் – தொழில்.

முன்னியோர் எனத் தொழிலொடுபடுத்து இறந்தகாலம் உணர்த்தப்பட்டவாறு.

பெரும்பொழுது சிறுபொழுது என்பன முதற்பொருளின் கூறுகளாய்த் திணையுள் அடங்கும். உரை முழுதும் பேராசிரியர் உரையே.

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொல். பொ. 514 பே.

'சென்றது நிகழ்வது எதிர்வது எனமுறை
நின்று பொருள்உரை நிகழ்வது காலம்.' ந. அ 228
203

## பயன் என்பதன் இயல்

576 இதுநனி பயக்கும் இதனான் என்னும்
தொகைநிலைக் கிளவி பயன்எனப் படுமே.

இஃது ஏழாம் எண்ணும் முறைமைக்கண் நின்ற பயன் இவ்வியல்பிற்று என்கின்றது.

(இ-ள்) இது மிகவும் பயக்கும் இதனான் எனத்தொகுத்துச் சொல்லப்படும் பொருள் பயன் என்னும் உறுப்பாம் என்றவாறு.

மாறாக் காதலர் மலைமறந் தனரே
ஆறாக் கட்பனி வரல்ஆ னாவே
வேறா மென்றோள் வளைநெகி ழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே.

என்னும் பாடல் தோழி தூதுவிடுவாளாதல் பயன்பட வந்தது. இவ்வாறே எல்லாப்பாட்டும் பயன் உறுப்பாக அன்றி வாரா எனக்கொள்க. 204

விளக்கம்

இந்நூற்பாத் தொல். பொ. 515; உரைவிளக்கம் பேராசிரியருடையது.

'மாறாக்காதலர்'—

'தோழி! தலைவர் நம் மலைக்கண்வந்து நம்மைக் கூடுதலை மறந்தாராக, அதனால் கண்கள் ஆறுபோல நீர் உகுக்கத் தோள் வளைகள் நெகிழத் தொடங்கிவிட்டன ஆதலின், யான் வாழும் வழியை நீ கூறாய்' என்று தலைவி கூறுதலின் பயன் தோழி தூதுவிடல் வேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்துதலாம். இவ்வாறு ஒவ்வொருபாடலும் கூற்றானே குறிப்பானே ஒருபயன் உடையதாகியே வரும் என்பது.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொல். பொ. 515

'இப்பொருள் பயக்கும்இஃது என்பது பயனே.'

ந. அ. 229

204

## முன்னத்தின் இயல்

577 இவ்விடத்து இம்மொழி இவர்இவர்க்கு உரியஎன்று
அவ்விடத்து அவர்அவர்க்கு உரைப்பது முன்னம்.

இஃது எட்டாம் எண்ணும் முறைமைக்கண் நின்ற முன்னம் இவ்வியல்பிற்றாய் வரும் என்கின்றது.

(இ-ள்) யாதோர் இடத்தானும் ஒரு மொழி தோன்றியக்கால், அம்மொழி சொல்லுதற்கு உரியாரும் கேட்டற்கு உரியாரும் இன்னார் என்று அறியுமாற்றான், அங்ஙனம் அறிதற்கு ஓர் இடம் நாட்டிக் கூறுவார்க்கும் கேட்பார்க்கும் ஏற்ற உரை செய்யுட்கு ஈடாகச் சொல்லுவது முன்னம் என்றவாறு.

'யார்இவன் எம்கூந்தல் கொள்வான் இதுவுமோர்
ஊராண்மைக்கு ஒத்த படிறுஉடைத்து' கலி. 89

என்றக்கால், இம்மாற்றம் சொல்லுகின்றாள் தலைவி எனவும், சொல்லப்பட்டான் தலைமகன் எனவும் முன்னத்தான் அறியப் படுதலின் இது முன்னம் ஆயிற்று. பிறவும் அன்ன. 205

### விளக்கம்

இந் நூற்பாத் தொல். பொ. 519; உரை பேராசிரியருடையதே.

ஒரு தொடரைக் குறிப்பிடும்போது, அதனைக் கூறியவர் யாவர், கேட்டவர் யாவர் என்பது அத் தொடரில் வெளிப்படையாகக் குறிக்கப்படாது போயினும், அதனை நோக்குவார் அதனைக் கூறியவரும் கேட்டவரும் இன்னார் என்று உணர்தற்கு ஏதுவாகியதொரு வாய்ப்பு அதன்கண் குறிப்பாக அறியுமாறு செய்யுள் செய்வதே முன்னம் என்ற உறுப்பாம் என்பது.

இம்முன்னம் என்ற உறுப்புப்போல்வன அகம் புறம் என்ற இரண்டற்கும் ஒக்கும் என்பது பேராசிரியர் கருத்து.

'யார் இவன் .... .... .... படிறு உடைத்து'

தலைவன் காமத்தின் வலிமையால் ஆற்றுமை வாயிலாக வலிந்துபுக்கு நெருங்கிக் கூடும்இடத்து, அவனுடன் தலைவி ஊடிச் சில சொல்லி, அவன் ஆற்றுமை கூறுவதுகேட்டு ஊடல் தீர்ந்தது பற்றிய கலிப்பாப் பகுதி இது.

'இவன் யார் என்கூந்தலைத் தொடுவதற்கு? இவன் என்ன தொடர்பு உடையவன்' என நெஞ்சொடு கூறிப் பின் 'இங்ஙனம் கூந்தலைப் பிடிக்கின்ற இதுவும் நீ பாதுகாத்தலை இன்றிப் பாதுகாப்பாரைப் போலப் பண்ணிக்கொண்டு ஊரையாளும் தன்மைக்குப் பொருந்தினதொரு கொடுமை உடைத்து' எனத் தலைவனிடம் தலைவி கூறினுள்.

இப்பகுதியைக் கூறினவள் தலைவி எனவும் கேட்டவன் தலைவன் எனவும் அறியச் செய்யுட் பகுதியில் வெளிப்படையாகச் சொற்கள் இல்லை ஆயினும், கூறினவரும் கேட்டவரும் இன்னுர் என்று அறிதற்கு உரிய குறிப்பு அவ்வடிக்கண் இருத்தலே முன்னம் என்னும் உறுப்பாம்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொல். பொ. 519

'இன்னுர்க்கு இன்னுழி இதுபயக் கும்எனும்
முன்னம் தருவது முன்னம் ஆகும்.' ந. அ. 230

## மெய்ப்பாடும் அதன் பொது வகையும்

578 உய்த்துணர்வு இன்றித் தலைவரு பொருளின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடு அதுதான்
நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகைஎன்று

அப்பால் எட்டாம் அவ்வகை எட்டும்
எள்ளல்[1] இளமை[2] பேதைமை[3] மடமே[4]
இளிவே[5] இழவே[6] அசைவே[7] வறுமை[8]
மூப்பே[9] பிணியே[10] வருத்தம்[11] மென்மை[12]
புதுமை[13] பெருமை[14] சிறுமை[15] ஆக்கம்[16]
அணங்கே[17] விலங்கே[18] கள்வர்[19] தம் இறையே[20]
கல்வி[21] தறுகண்[22] இசைமை[23] கோடையே[24]
உறுப்பறை[25] குடிகோள்[26] அலை[27] கொலை[28] அவற்றொடு
செல்வம்[29] புலனே[30] புணர்வு[31] விளை யாட்டு[32] எனப்
புல்லித் தோன்றும் பொருள்வகை அவற்றான்
ஒன்று நான்குசெய்து உறழஎண் ணான்காம்
என்று கூறுப இயல்புணர்ந் தோரே.

இஃது ஒன்பதாம் எண்ணு முறைமைக்கண் நின்ற மெய்ப்-பாடு இவ்வியல்பிற்றாய் இத்துணைப் பகுதிப்பட்டுச் செய்யுட்கு உறுப்பாய் வரும் என்கின்றது.

(இ-ள்) உய்த்துணர்ச்சியின்றி அவ்விடத்து வந்த பொருளானே, சொல்லப்படும் பொருள் தானே வெளிப்பட்டாங்குக் கண்ணீர் அரும்பல் - மெய்மயிர் சிலிர்த்தல் – முதலாகிய சத்துவம் படுமாற்றான், வெளிப்படச் செய்வது மெய்ப்பாடு என்னும் உறுப்பாம். அம்மெய்ப்பாட்டு உறுப்புத் தான் வகையானே நகை முதலாக உவகை ஈறாகக் கிடந்த அப்பகுதி எட்டாம்; அப்பகுதி எட்டும் விரியானே எள்ளல் முதலாக விளையாட்டு ஈறாக இயைபுபடத் தோன்றாநின்ற பொருட்பகுதிகளான் ஒன்றை நான்காகச் செய்துமாற முப்-பத்திரண்டாம் என்று கூறுவர் அவற்றின் தன்மையை அறிந்தோர் என்றவாறு.

கவிப்பொருள் உணர்ந்த அதனானே சொல்லப்படும் பொருள் உய்த்து வேறு கண்டாங்கு அறிதலை மெய்ப்பாடு என்றார். அது தேவர் உலகம் கூறினும், அதனைக் கண்-டாங்கு அறியச்செய்தல் செய்யுள் உறுப்பாம் என்றவாறும். ஆகவே, மெய்ப்பாடு பொருட்பாடு ஆயிற்று என்பது. அது,

மையற விளங்கிய மணிமருள் அவ்வாய் தன்
மெய்பெரு மழலையின் விளங்குபூண் நனைத்தர ' கலி. 81

என்றுற்போல்வது.

### விளக்கம்

உய்த்துஉணர்வு இன்றித் தலைவரு பொருளின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடு ஆகும்
தொல், பொ. 516

என்ற நூற்பாவும், அதற்குப் பேராசிரியர் உரையும் ஈண்டு ஏற்ற பெற்றி கொள்ளப்பட்டுள்ளன.

உள்ளத்து உணர்ச்சியை உற்றவர் அறிவிக்காமலே உடம்பின்கண் நிகழும் வேறுபாட்டால் அறிவிக்கும் கருவி மெய்ப்பாடு ஆகும். செய்யுளின் மெய்ப்பாட்டு உறுப்பாவது சொற்களைக் கொண்டு பொருளைக் கண்முன் நிறுத்துவதாம்.

' குற்றமற விளங்கிய செம்மணி போன்ற வாயிலிருந்து மழலையோடு வரும் எச்சில்நீரிலே மார்பில் அணிந்த அணிகலம் நனைய ' என்ற தொடரால் மழலைமொழி பேசி எச்சில் ஊற, வரும் அழகிய குழந்தை நம் கண்முன் நிறுத்தப்பட்டது போன்ற எண்ணம் தோன்றுதல் காண்க.

மெய்ப்பாடு என்பது பொருளைப் புலப்படுத்தற்கு அமைந்ததொரு செய்யுள் உறுப்பு. அது நகை முதலாக எட்டுவகைப் படுத்திக் கூறப்படும். நகை முதலிய ஒவ்வொன்றற்கும் நிலைக்களம் நந்நான்காகவே மெய்ப்பாட்டின் விரி முப்பத்திரண்டாகும்.

இம்மெய்ப்பாடுகள் உலக வழக்கில் அகத்தும் புறத்தும் நிகழும் நிகழ்ச்சிபற்றித் தோன்றுவன ஆதலின், இவ்வெண்வகை மெய்ப்பாடுகளும் அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாக வருவன என்பதும் கொள்க.

இனி, மெய்ப்பாடுபற்றி வீரசோழிய நூலின் 76ஆம் காரிகை உரையுள் காணப்படுவன பின்வருமாறு :

'மெய்ப்பாட் டியல்வகை மேதக விரிப்பின்
மெய்க்கண் பட்டு விளங்கித் தோற்றம்
செவ்விதின் தெரிந்து செப்பல்;மற்று அதுவே,
சுப்பிர யோகம் விப்பிர யோகம்
சோகம் மோகம் மரணம் என்னும்
ஐவகைக் கணையுள் ஆக்கிய காமம்
பைய முறுகிடப் படூஉம்; அவற்றுள்,
சுப்பிர யோகம் சொல்லும் நினைப்பும்;
விப்பிர யோகம் வெய்துஉயிர்ப்பு உறுதல்;
சோகம் வெப்பும் சோறுஉண் ணாமையும்;
மோகம் மயக்கமும் மொழிபல பிதற்றலும் ;
மரணம் அணங்கலும் வருந்தலும் என்பர்
அரணம் சான்ற அறிவி னோரே.'

'பிற்கணை நீக்கி முற்கணை நான்கும்
மெய்ப்படப் பட்டு வருந்தி விளம்பல்
அகமெய்ப் பாடே புறமெய்ப் பாடெனத்
தகநனி உணர்ந்தோர் தந்துஉரைத் தனரே.'

'அகமெய்ப் பாடே அறியுங் காலை
விளர்ப்பே பசப்பே மெலிவே விதிர்ப்பே
துளக்கம் துயர்தல் தும்மல் சோர்தல்
வேர்த்தல் வெருவுதல் விம்முதல் விரும்புதல்
ஒப்பி லாமை உருகுதல் மயங்குதல்
மூரி உயிர்ப்பு மூர்ச்சனை முறுவல்
காரிகை கடத்தல் கழிகண் ணோட்டம்
இருந்துழி இராமை இராகம் இகழ்தல்
வருந்திக் காட்டுதல் வாய்நீர் ஊறுதல்
சிந்தனை கூர்தல் சேர்துயில் இன்மை
கண்டது மறுத்தல் காட்சி விரும்பல்

உண்டிவிருப் பாமை உரைத்தது மறுத்தல்
கண்ணீர் வழிதல் கனவுநனி காண்டல்என
எண்ணுற் றுறையும் என்மனூர் புலவர்.'

' புறமெய்ப் பாடே திறனுளிப் புகலின்
ஆரணங் காயஅக் காமம் தானே
காரணம் பற்றிக் கருத்துவேறு பட்டு
மற்றும்ஓர் ஏழாய் மெய்க்கண் டதனொடும்
எட்டாம் என்ப இயல்புணர்ந் தோரே.'

'அவைதாம்,

நற்சிருங் காரம் நகையே வியப்பே
அச்சம் வீரம் உட்கோள் இரக்கம்
இழிப்புஎனத் தோன்றின இவை; அவை தாமே,
விழுத்தக ஒன்றிற்கு ஒரோநான் காக
முப்பத் திரண்டென மொழிந்தனர் கண்டே.'

அவற்றுள்,

' இளமையும் வனப்பும் வளமையும் கல்வியும்
களனுகத் திரிதரும் சிருங்கா ரம்மே.'

' மயக்கம் பெயர்ப்பே இகழ்வே நோக்கம்
நயப்பத் தோன்றும் நகையது நலனே.'

' தறுகண்மை புலமை பொருளே பண்பே
பெறுவழித் தோன்றும் பெருந்தகு வியப்பே.'

' மாற்றலர் விலங்கல் மற்றவர் சேருதல்
ஆற்றத் தோன்றும் அச்சத்து விளைவே.'

' பகையே செருவே இகலே முனிவே
மிகுவழித் தோன்றும் வீரத்து விளைவே.'

' ஐவகைக் குரவர் தேவர் மன்னர்
எய்தாது எய்திய இயல்பவை உட்கோள்.'

'வருத்தம் இகழ்வே வலியின்மை பெருமை
இரக்கம் தோன்றும் இந்நா லிடத்தே.'

'நாற்றம் சுவையே தோற்றம் ஊறுஎன்று
இந்நால் வழித்தாம் இழிப்புஎனப் படுமே.'

'இற்றுஎன வகுத்தல் எண்ணுற் றுறையினும்
மற்றுப் பெயர்மயக்கு ஆயினும் வாய்ப்பது
அந்நெறிப் பெற்றுழித் துன்னினர் கொளலே.'
'உட்கோள் நிலைமை உணர உரைப்பின்
மெய்க்கொளத் தோன்றின் அவை மெய்ப்பாடு என்ப.'

இம்மெய்ப்பாட்டிற்கு முன்னர்த்தாவது குறிப்பாகும்.

'பெண்டிர் ஆயினும் மைந்தர் ஆயினும்
உண்ட வேட்கை உள்ளது கருதிக்
கொண்டுநனி செய்வது குறிப்புஎனப் படுமே.'

'அதுவே,

உற்றவன் ஒழுக்கமும் உருச்சிறு நோக்கமும்
பற்றிஉரை யாடலும் பாங்கிற் கேட்டலும்
ஊடலும் உணர்தலும் உவத்தலும் பரிதலும்
பாடலும் பரவலும் பணிதலும் பணித்தலும்
அணங்குகொண்டு அசைத்தலும் அழுங்குற்று உணர்த்தலும்
குணம்புகழ்ந்து உரைத்தலும் குற்றம் கூறலும்
செய்தது பொறுத்தலும் செய்வாய் திருத்தலும்
வைத்து மகிழ்தலும் வாட்டம் காட்டலும்
அணிந்தன களைஇ ஆடைபெயர்த்து உடுத்தலும்
நாணலும் நகுதலும் நயத்தலும் பார்த்தலும்
கானல் கழியே கடலே காற்றே
பானல் பற்றை பனிமதிப் பருவம்
மலையே புனமே மழையே பிறவும்
என்றிவை யிற்றொடு நின்றுஉரை யாடலும்
ஒன்றிய குறிப்புஎன உரைக்கல் வேண்டும்.']

நகை சிரிப்பு; அழுகை அவலம்; அது, தானே அவலித்தலும் பிறர் அவலம்கண்டு அவலித்தலும் என இருவகைப்பட்டு, ஒன்று கருணை எனவும் ஒன்று அவலம் எனவும் பெயர் பெற்றுச் சுவை ஒன்பதாதலும் உடைய என்பது. இளிவரல் இழிபு. மருட்கை வியப்பு; அற்புதம் எனினும் அமையும். அச்சம் பயம். பெருமிதம் வீரம். எல்லாரோடும் ஒப்பநில்லாது பேரெல்லையாகி நிற்றலின், அது பெருமிதம் எனப்பட்டது. வெகுளி உருத்திரம். உவகை காமம் முதலிய மகிழ்ச்சி. இம்மெய்ப்பாடு எட்டனையும் சுவை எனவும், குறிப்பு எனவும் வழங்கினும் அமையும். இவ்வெட்டன் கிடக்கைமுறைக் காரணங்களும் ஓர்ந்து உணர்க. ஈண்டு உரைப்பின் பெருகும்.

## விளக்கம்

‘ நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகைஎன்று
அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப ’ தொல். பொ. 251

என்ற நூற்பாவும், அதன் பேராசிரியர் உரையும் ஏற்ற பெற்றி கொள்ளப்பட்டுள்ளன.

தானே அவலித்தல் அவலம்;பிறர் துயரம் கண்டு வருந்துதல் கருணை என்று கொள்க. அழுகையை இரண்டாகப் பிரித்துக் கொண்டால் மெய்ப்பாட்டு வகை ஒன்பதாகிவிடும்.

இளிவரல் - அருவருப்பு. பெருமிதம் - மற்றவரின் மேம்பட்டுக் காணப்படுதற்குக் காரணமான வீரம்.

இவற்றின் கிடக்கை முறைபற்றிப் பேராசிரியர் ‘ மற்று, நகையை முன் வைத்தது என்னையோஎனின், பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருட்கும் இவை என்னும் இயைபு இல்லன அல்ல என்பதற்கு, விளையாட்டுப் பொருட்டாகிய நகையை முன்வைத்தான். அதற்கு மறுதலையாகிய அழுகையை அதன்பின் வைத்தான். இளிவரல் அதன்பின் வைத்தான், அழுகையும் இளிவரலோடு இயைபு உடைமை-

யின். தான் இளிவந்து பிறிது ஒரு பொருளை வியக்குமாதலின், இளிவரலின் பின் வியப்பு வைத்தான். வியப்புப் பற்றியும் அச்சம் பிறத்தலின், அ:ச்சத்தை அதன்பின் வைத்தான். அச்சத்திற்கு மறுதலையாகிய வீரத்தை அதன்பின் வைத்தான். அவ்-வீரத்தின் பயனுகிப் பிறக்கும் வெகுளியை அதன்பின்னே வைத்தான். வெகுளிக்கு மறுதலை ஆகலானும், எல்லாவற்-றினும் ஈண்டு ஓதல் சிறந்தது ஆகலானும் முதற்கண் ஓதிய நகைக்கு இயைபு உடைத்து ஆகலானும் உவகையை ஈற்றுக்-கண் வைத்தான் என்பது' என்று காரணம் காட்டியுள்ளார்.

வடமொழியில் நாட்டிய நூல் செய்த பரதமுனிவர் கருத்தே தொல்காப்பியர் கொண்டு, மெய்ப்பாடு எட்டு என்று ஓதியதனையே இவ்வாசிரியரும் கைக்கொண்டார் என்பது.

நகை முதலிய எட்டும் வடமொழியில் முறையே ஹாஸ்யம், சோகம், ஜுஹுப்ஸை, விஸ்மயம், பயம், வீரம், ரௌத்ரம், சிருங்காரம் என்று கூறப்படும்.]

மற்று இவ்வெட்டனோடும் சமநிலைகூட்டி ஒன்பது என்-றுமோ நாடகநூலுள் போல எனின், அதற்கு ஒரு விகாரம் இன்மையின் ஈண்டுக் கூறிற்றிலன் என்பது. அதற்கு விகாரம் உண்டு எனின், முன்னை எட்டினுள்ளும் சார்த்திக் கொள்ளப் படும்; அல்லதூஉம் அஃது உலகியல் நீங்கினர் பெற்றி ஆகலின் ஈண்டு உலக வழக்கினுள் சொல்லற்பாற்று அன்று என்பது.

### விளக்கம்

சமநிலை என்பது இன்பத்தையும் துன்பத்தையும் ஒன்ருகக் கருதும்நிலை. அது பொதுமக்களிடத்துக் காணப்படு-வது ஒன்று அன்று. சமநிலையில் உள்ளாரிடம் எந்தவித மெய்ப்பாடும் காணப்படாமையின், அதனைப்பற்றிக் கூறு

தல் மெய்ப்பாட்டிற்குப் பெரும்பயன் இன்று. இன்பக்காலத்தில் ஒருவன் இன்புறுது இருப்பதும், துன்பக்காலத்தில் துன்புறுதிருப்பதும் காண்பாருக்கு நகையும் மருட்கையும் போல்வன பயக்கும் மெய்ப்பாட்டுப் பொருளாகும். சமநிலை உலகியல் நீங்கினுரது பெற்றி எனினும், அவ்வப்போது சான்ருேர் வாழ்க்கையில் காணப்படும் என்பதனைச் சான்ருேர்தம் தொடர்நிலைச்செய்யுளகத்துக் காணலாம்.

'சீவகனிடத்துச் சமநிலை' —

'விலங்கிவில் உமிழும் பூணுன் விழுச்சிறைப் பட்ட போழ்தும்
அலங்கல்அந் தாரி ஞன்வந்து அஞ்சிறை வீடுத்த போழ்தும்
புலம்பலும் மகிழ்வும் நெஞ்சில் பொலிதலும் இன்றிப் பொன்ஆர்ந்து
உலங்கலந்துஉயர்ந்ததோளான்ஊழ்வினைஎன்றுவிட்டான்.'

எனத் திருத்தக்கதேவரால் சுட்டப்பெற்றுள்ளது.

சீவக. 1174

'மெய்த்தி ருப்பதம் மேவுஎன்ற போதினும்
இத்தி ருத்துறந்து ஏகுஎன்ற போதினும்
சித்தி ரத்தின் அலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருந்த முகத்தினை உள்ளுவாள்.' இரா. சுந். 3-20

என்று இராகவனைப்பற்றிக் கம்பரும்,

'நாட்டிடை எல்லை பொற்ருள் நறுமலர் சிவப்ப ஏகிக்
காட்டிடைப்புகுதும்போதுக் கலக்கம்அற்றுஉவகைகூர்ந்தான்
கூட்டிடைஇன்ப துன்பக் கொழும்பயன் துய்த்து மாறி
வீட்டிடைப் புகுதும்போது மெய்ம்மகிழ் விபுதர் போல்வான்.'

வில்லி பா. சபா. சூது 283

என்று தருமனைப்பற்றி வில்லிபுத்தூராரும் உரைத்தமை காண்க. சமநிலை—சாந்தம்.]

சத்துவமும் குறிப்பும் சுவையும் என்னும் மூன்றற்கும் முதற்கண்ண ஆகலான் அம் மூன்றனையும் அடக்கிய பொருட் பகுதியைப் 'புல்லித் தோன்றும் பொருள் வகை'

என்றார் என்பது. இஃது என் சொல்லியவாறோ எனின், சுவைக்கப்படும் பொருள் பற்றிப் பொருள் உணர்வாகிய சுவையும், அச்சுவைபற்றி உள்ளநிகழ்ச்சியாகிய குறிப்பும் அக்குறிப்புப் பற்றிப் புறத்துள் தோன்றும் மெய்மயிர் சிலிர்த்தல் கண்ணீர் அரும்பல் முதலிய விறலும் பிறத்தலின், இங்ஙனம் கூறிய முப்பத்திரண்டு சுவைப்பொருளும் அம் மூன்றனையும் உள்ளடக்கி அவை பிறத்தற்கு முறையே காரணமாய் நிற்கும் என்றவாறும் என்க. விறல் எனினும், சத்துவம் எனினும் ஒக்கும்.

## விளக்கம்

சுவைப்பொருளைக் கண்டவழிச் சுவைஉணர்வு தோன்றும். சுவை உணர்வால் மனத்தில் அச்சுவைப்பொருள் பற்றிய குறிப்பு உண்டாகும். அக்குறிப்பு மெய்ப்பாட்டானே புறத்தே புலனாகும். எடுத்துக்காட்டாக, சுவைப்பொருள்-சிற்றுண்டி; சுவைஉணர்வு - சிற்றுண்டியை உண்ணும் இயற்கைப்பண்பு; குறிப்பு - அச் சிற்றுண்டியை உண்ணல் வேண்டும் என்று மனத்துப்படும் ஆசை; சத்துவம் - நாவில் நீர் ஊறுதல், சிற்றுண்டியைப் பெற ஆவன செய்தல் போல்வன.

சுவைக்கப்படும் பொருள், சுவைஉணர்வு, குறிப்பு, சத்துவம் என்ற நான்கனையும் உள்அடக்கிச் சுவை என்று பொதுப்படக் கூறினார்.

தான் உட்கொண்டு நடிக்கும் மெய்ப்பாடு காண்பாருக்கும் பிறக்கும் வண்ணம் ஆடும் கூத்தி, விறல்பட ஆடலின், விறலி என வழங்கப்பட்டதும் காண்க.

இம் மெய்ப்பாட்டுப்பகுதிச் செய்திகள்யாவும் தொல்காப்பியத்தையும் பேராசிரியர் உரையையும் அடிஒற்றி அமைந்தவை.]

## நகை என்ற மெய்ப்பாடு

எள்ளல் இகழ்ச்சி. இளமை - குழத்தன்மை. பேதைமை - அறிவின்மை, மடம் - கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை.

எள்ளல் முதலாக ஆக்கம் ஈறுகக் கிடந்த நான்கும் ஒன்று இரண்டாகி நாலெட்டு ஆதலும் உடைய. அங்ஙனம் ஆதல் மேற்காட்டும் உதாரணங்களான் உணர்க.

**1 எள்ளல் :**

'எள்ளி நகினும் வரூஉம்' கலி. 61
எனத் தன்கண் கிடந்த எள்ளலும்,

தன்மகள் தன்னை மதியாது இகழ்ந்தாள் என்றலின்,
'நல்லை மன்னென நகூஉப் பெயர்ந்தோளே'
அகநா. 248
எனப் பிறர் எள்ளியதும்,

**2 இளமை :**

'நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே' கலி. 13
எனத்தன் இளமையும்,
'நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்' அகநா. 16
எனப் பிறர் இளமையும்,

**3 பேதைமை :**

தான் செய்த தவற்றுக்குத் தாய் தன்னை வெகுண்டது தனக்கு நகையாகக் கொண்டமையின்,
'நகைநீ கேளாய் தோழி' அகநா. 248
எனத் தன் பேதைமையும்,
'நகையாகின்றே தோழி, .... ....
மம்மர் நெஞ்சினேன் தொழுதுநின் றதுவே' அகநா. 56
எனப் பிறன் பேதைமையும்,

4 மடம் :

'நீயிர் கூறியதனையே மெய்யெனக் கொண்டு மகிழ்ந்து நக்கனம்' என்றமையின்,

'நும்மொடு நக்க வால்வெள் எயிறே' குறுந். 169

எனத் தன்மடமும்,

'நாம் நகை உடையம் நெஞ்சே நம்மொடு
தான்வரும் என்ப தடமென் தோளி.' அகநா. 121

எனப் பிறர் மடமும் பொருளாக நகை பிறந்தவாறு.

## விளக்கம்

மடம்—செவிலியர் முதலாயினர் கூறியதை மனத்துக் கொண்டு தான் அறிந்ததை வெளிப்படையாகக் கூறாது பின் பற்றுதல்.

நகை அழுகை இளிவரல் மருட்கை இவற்றின் நிலைக் களங்கள் ஆகிய பதினாறும், தன்கண் தோன்றுவது, பிறன் கண் தோன்றுவது, என்ற இருவகையால் முப்பத்திரண் டாகும்.

'எள்ளிநகினும் வருஉம்' —

தலைவற்குக் குறைநேர்ந்த தோழி அவனோடு உறழ்ந்து சொல்லி, அவனது நீக்கத்துக்கண், அவன் குறை மறுமைக்கு ஏற்பனசொல்லித் தலைமகளைக் குறை நயப்பித்த பாடற்பகுதி யாகிய இதன்கண், 'நான் தலைவன் குறை நயத்தல்பற்றி அவனைப்பரிகசித்துச் சிரித்தாலும் தவறாது வருகிறான்' என்ற கருத்தில், தான் எள்ளியது பொருளாக நகை பிறந்தது.

'நல்லைமன் என நகூஉப் பெயர்ந்தோளே'—

இரவுக்குறிக்கண் சிறைப்புறமாகத் தலைமகட்குச் சொல் லுவாளாய்த் தலைமகன் கேட்பத் தோழி சொல்லிய பாடல் பகுதிஇது.

'தலைவன் இல்வந்து நின்றவனைக் கண்ட அன்னை என் முகத்தை நோக்கிக் களவொழுக்கத்தை அறிந்து 'நீ நல்லை' என்று சிரித்துக்கொண்டு சென்றாள்' என்றகருத்தில் தன்னைத் தன்மகள் எள்ளிக் களவொழுக்கம் நிகழ்த்தியது காரணமாகச் செவிலிக்கு நகை பிறந்தது, பிறர் எள்ளியது பொருளாகப் பிறந்த நகையாம்.

'நடுங்குதல் காண்மார் நகை குறித்தனரே'—

தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்டு ஆற்றாள் ஆகிய தலைமகள், 'யான் நும்மோடு போதுவல்' என்றாட்குத் தலைமகன் அவளது மென்மையும் காட்டின் கடுமையும் கூறி உடன்படானாக, ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி 'அவர் நம்மோடு நகையாடிச் சொன்னார்; பிரிவார் அல்லர்' என வற்புறுத்திய பாடற் பகுதிஇது.

'தலைவன் தான் உன்னைவிட்டுப் பிரிவதாகக் கூறின் பெருவனப்பினளாகிய நீ மெய் நடுங்குவாய். அந்நடுக்கமும் காண்டற்கு இனிதாயிருக்கும். அதனைக்காணவே ஒரு விளையாட்டைக் குறித்துச் சொன்னான்' என்ற கருத்தில், தலைவன் தன் இளமையால் தலைவியோடு நகையாடல் பெறப் பட்டது.

'நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்'—

பரத்தையிற் பிரிந்த தலைவன் தன்மகனையே வாயிலாகக் கொண்டு புக்கதைத் தலைவி தோழிக்குச் சொல்லிய பாடற் பகுதிஇது.

தன் புதல்வனுடைய மழலைச்சொற்கள் கேட்டார்க்கு எல்லாம் சிரிப்பைத் தரும் என்றலின், இது பிறர் இளமைப் பொருட்டாகிய நகையாம். ]

'நகை நீ கேளாய் தோழி'—

இரவுக்குறிக்கண் சிறைப்புறமாகத் தலைமகட்குச்சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்பத் தொழி சொல்லிய பாடற்பகுதி இது.

தலைவனை இரவுக்குறிக்கண் செவிலிகண்டு அது காரணமாகத் தாய் தன்னை வெகுள, தக்கவாறு இரவுக்குறி அமைக்காது களவு வெளிப்படக் காரணமாயின தன் பேதைமை குறித்துத் தோழிக்கு நகை பிறந்தவாறு.

'நகை ஆகின்றே தோழி .... .... .... நின்றதுவே'—

பரத்தை மனைக்குச் செல்கின்ற பாணன் தன்மனைக்கு வந்தானாகத் தோழிக்குத் தலைவி சொல்லிய பாடற்பகுதி இது.

'தலைவனுக்குப் புதுப்பரத்தையைக் காட்டுவிக்கச் சென்ற பாணன், தெருவில் தன்னை மாடு முட்ட வந்ததாக, யாழை விட்டுவிட்டுப் பக்கத்தில் இருந்த வீட்டிற்குள் நுழைய, அவ் வீடு நம் வீடாக இருந்துவிட்டது' என்ற கூற்றின்கண், அறியாமையால் பாணன் நம்வீட்டிற்குள் நுழைந்துவிட்ட செய்தி நமக்குச் சிரிப்பைத் தருகிறது' என்ற பகுதியில், பிறன் பேதைமை காரணமாக நகை பிறந்தவாறு.

'நும்மொடு நக்க வால்வெள் எயிறே'—

தோழி வரைவு நீட்டித்தவழி, தலைவி வரைவுகடாய பாடற் பகுதி இது. 'எம்உயிர், பாணர் பச்சைமீனை இட்டு வைத்த கலம்போல எமக்கு வெறுப்பைத் தருவதாய், உம்மையும் பெறேமாய் அழிக. உம்மோடு சிரித்த எய்பற்கள் மலையைக் குத்திய யானைக்கொம்புபோல விரைவாக முறிக' என்ற செய்தியில், தலைவனை உள்ளவாறு அறியாமல் தன்மடம் காரணமாக அவனோடு சிரித்தமை சுட்டப்பட்டது.

'நாம் நகை உடையம் நெஞ்சே .......... நம்மொடு
தான்வரும் என்ப தடமென் தோளி.'—

தோழியால் ' தலைமகளும் உடன்வரும் ' எனக்கேட்ட தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லிய பாடல் பகுதிஇது.

பாலை நிலத்தின் கொடுமையைச் சிறிதும் அறியாது தலைவி தன்னுடன் வரக்கருதுதல்பற்றிய அவள் மடம் காரணமாகத் தலைவனுக்கு நகை ஏற்பட்டவாறு ]

அழுகை என்ற மெய்ப்பாடு

இளிவு - பிறரால் இகழப்பட்டு எளியனாதல், இழவு— தந்தையும் தாயும் முதலாகிய சுற்றத்தாரையும், இன்பம் பயக்கும் நுகர்ச்சி முதலாயவற்றையும் இழத்தல். அசைவு- பண்டை நிலைமை கெட்டு வேறொருவாராகி வருந்துதல். வறுமை-போகம் துய்க்கப் பெறாத பற்றுள்ளம்.

5 இளிவு :

பரத்தையை நீ எள்ளினை என்று அழுது வருகின்றாள் என்று தலைமகற்குச் சொல்லியதாகலின்,

எழுதுஎழில் சிதைய அழுதனள் ஏங்கி
அடித்தென உருத்த துத்திப் பல்லூழ்
நொடித்தெனச் சிவந்த மெல்விரல் திருகுபு
கூர்நுதி மழுங்கிய எயிற்றள்
ஊர்முழுதும் நுவலும்நிற் காணிய சென்மே.

அகநா. 176

எனத் தன் இளிவும்,

தலைவன் இளிவந்து ஒழுகுவது காரணமாக,
' சேயேன்மன் யானும் துயர் உழப்பேன் ' கலி. 37

என்றமையின், ' கயமலர் உண்கண்ணாய் காணாய் ' கலி. 37 என்னும் பாட்டினுள் ' தான் உற்றநோய் உரைக்கல்லான் பெயரும்மன் பன்னாளும் ' எனப் பிறன்கண் தோன்றிய இளிவும்,

(இது கருணைச் சுவைக்குப் பொருள் எனப்படும்.)

6 இழவு :

கணவனை இழந்தாள் அவற்குப் பலிக்கொடை கொடுத்தற்கு மெழுகுகின்றுளைக் கண்ணீரே நீராக மெழுகுகின்றுள் என்றமையின்,

'மெழுகும் ஆப்பிகண் கலுழ்நீ ரானே' புறநா. 249

எனத் தன்கண் தோன்றிய இழவும்,

தலைவன் பிரிவிற்குத் தோழி படர் கூர்ந்தாள் எனச் சொல்லினமையின்,

'பின்னொடு முடித்த மண்ணு முச்சி' அகநா. 73

என்னும் பாட்டினுள்,

'அணங்குறு கற்பொடு மடங்கொளச் சாஅய்
நின்னோய்த் தலையையும் அல்லை தெறுவர
என்னு குவள்கொல் அளியள் தானென
நின்னழிபு இரங்கும் நின்னொடு யானும்.'

எனப்பிறன்கண் தோன்றிய இழவும்,

7 அசைவு :

'துளியிடை மின்னுப்போல் தோன்றி ஒருத்தி
ஒளியோடு உருஎன்னைக் காட்டி அளியள்என்
நெஞ்சுஆறு கொண்டாள் அதற்கொண்டு துஞ்சேன்'
கலி. 139

எனத் தன்கண் தோன்றிய அசைவும்,

'அள்ளிலைத் தாளி கொய்யா நின்றுன் இது பொழுது' என்று அவலித்துச் சொன்னமையின்,

'இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே.'

புறநா. 252

எனப் பிறன்கண் தோன்றிய அசைவும்,

8 வறுமை :

‘ இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறும் அழூஉம்தன் மகத்துமுகம் நோக்கி.’
புறநா. 164

எனத் தன்கண் தோன்றிய வறுமையும்,

‘ நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கண்
மனையோள் எவ்வம் நோக்கி நினை இ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண.!’ புறம். 164

எனப் பிறன்கண் தோன்றிய வறுமையும் பொருளாக அவலம் பிறந்தவாறு.

விளக்கம்

வறுமை - பொருளை நுகருவதில் விருப்பம் இருந்தும் பொருள் கிடைக்கப் பெறுது மனம் தடுமாறுதல்.

பொருள் இல்லாமை வறுமை ஆகாது; பொருளிடத்து ஆசை வைத்தும், அது கிடைக்கப் பெருமையே வறுமையாம். ஆகவே, செல்வம் அற்றவர்களில் வறுமை யில்லாதவரையும், செல்வம் உடையவர்களில் வறுமை உற்றவர்களையும் காணலாம்.

‘ எழுதுஎழில் சிதைய .... .... சென்மே ’—

தோழி தலைவன் புறத்தொழுக்கம்கண்டு வாயில் மறுத்த பாடற்பகுதி இது. அவள் மற்றவர் தொடர்பு கோடலைத் தாம் பொறுத்திருப்பதுபோலப் பரத்தை பொறுக்க மாட்-டாள் எனவும், தலைவன் பரத்தையை வீடுத்து வேற்றவரோடு விழா அயர்ந்து தழுவியதுகண்டு பொருது தன் செயற்கை வனப்புக்கெட அழுது, பொன்னை உருக்கி வார்த்தாற்போன்ற தேமலை உடைய அவள் தன் சிவந்த விரல்களைக் கடித்தலான் நுதி மழுங்கிய பற்களை உடையளாய், ஊர் முழுதும் அலர் தூற்றப்பட்டிருக்கும் அவனைக் காணத் தேடிச் செல்கின்ருள்;

அவள்பால் சென்று அவள் ஊடலை அவன் தணிப்பானாக— எனவும் கூறும் இப்பகுதியில் தலைவன் தன்னை இகழ்ந்து வேற்றவர் தொடர்பு கொண்டமை காரணமாகப் பரத்தைக்கு அழுகை தோன்றியவாறு.

மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பல்வேறு கவர் பொருள் நாட்டத்தான் தோழி தலைவியின் களவொழுக்கத்தினை அறிந்த 'கயமலர் உண்கணாய்' என்ற பாடற்பகுதிகள்,

'சேயேன்மன் யானும் துயர் உழப்பேன்'
'தான் உற்றநோய் உரைக்கல்லான் பெயரும்மன் பன்னாளும்'

என்பன.

'தலைவன் யானை முதலியவை சென்ற சுவட்டைத் தேடி வருவான்போலக் கண்ணியனாய் வில்லனாய் வரும்; என்னை நோக்கிக் குறிப்பால் தன்கருத்தை உணர்த்துவானேயன்றி, வெளிப்படையாக ஏதும் கூறாமல் பலநாளும்வந்து செல்லும் அவன் அவலம் கண்டு உறக்கமின்றி யானும் வருந்துகிறேன்' என்ற தோழி கூற்றில், தலைவன் தன்பெருமைக்கு ஏலாது தாழ்ந்து வருதல் காரணமாகத் தோழிக்குத் துயரம் ஏற்பட்டது. இது பிறன் இளிவுபற்றிய அழுகையாம்.

'மெழுகும் ஆப்பிகண் கலுழ்நீ ரானே'—

தும்பிசொகினனார் பாடிய தாபதநிலைப் பாடல் பகுதிஇது. இதன்கண், நேற்றுவரை பலரோடும் சேர்ந்து உண்ட வீரன் இறந்தானாக, இன்று அவன்மனைவி அவனுக்கு உணவு கொடுத்தல் வேண்டிச் சிறிய இடத்தைத் தன் கண்ணீராலேயே சாணகம் இட்டு மெழுகிப் பிண்டம் வைக்கும் நிலை ஏற்பட்டது-என்றபகுதியில், கணவனைத் தான் இழந்த இழவு பற்றித் தலைவிக்கு அழுகை பிறந்தவாறு.

'அணங்குறு கற்பொடு ... .... ... யானும்' —

தலைவன் பொருள்வயின் பிரிந்தபோது குறித்த பருவ வரவுகண்டு அழிந்த தலைமகட்குத் தோழி சொல்லிய பாடற் பகுதிஇது.

' தலைவன் பிரிவான் என்று நீ வருந்தும் நிலை மட்டும் இல்லை; ' பிரிதல்துன்பம் தாக்குதலாலே நின் உடல்நிலை என்ன ஆகுமோ ?' என்று உன் துயருக்கு யானும் வருந்துகிறேன் '' என்று தோழி கூறிய இப்பகுதியில், தலைவியின் இன்பஇழவு காரணமாகத் தோழிக்கு அழுகை பிறந்தவாறு.

' துளியிடை .... .... துஞ்சேன் ' —

மடல் ஏறுகின்ற தலைவன் சான்றோருக்குக் கூறும் பாடல் பகுதி இது. இதன்கண், ' ஒருத்தி மயங்கின மழைக்கு நடுவில் மின்போல வந்து தோன்றித் தன் ஒளியோடு தன் உருவையும் என்னைக் காணப்பண்ணி என்னை அளிக்குந் தன்மையளாய் அளித்துப் பின்னர் என் நெஞ்சைத்தான் வரும் வழியாகக் கொண்டு விட்டாள் ' என்ற இப்பகுதியில், அத்துயரத்தால் தலைவன் உறக்கம் நீத்ததாகக் கூறும் செய்தி தன்கண் அசைவு பற்றித் தோன்றிய அழுகையாம்.

' இல்வழங்கு .... .... மூன்னே ' —

மாற்பித்தியார் பாடிய தாபதவாகைப் பாடற்பகுதி இது, இதன்கண், ' தன் மனைவியை வசீகரித்த சொல்லாகிய வலை வீசும் வேட்டுவனாக முன்பு இருந்தவன், இன்று இல்வாழ்க்கையை விடுத்துப் பலகாலும் அருவியில் மூழ்குதலால் பண்டை ஒளிகெட்டுத் தில்லந்தளிர் போன்ற பொலிவற்ற சடையோடு செறிந்த இலையை உடைய தாளியை உணவுக்குப் பறிக்கின்றான் ' என்ற கருத்தில், அத்தாபதன் பழைய நிலைநீங்கி வருந்தும் நிலைகண்டு காண்பாருக்கு ஏற்படும் அவலம், பிறன் அசைவு பொருளாக ஏற்பட்டவாறு.

'இல்லி தூர்ந்த .... .... குமண' —

தம்பியால் நாடு கடத்தப்பட்டுக் காடு பற்றி இருந்த குமணனிடம் தம் வறுமைநிலை கூறிப் பெருந்தலைச்சாத்தனார் பாடிய பரிசில் கடா நிலைப் பாடற்பகுதி இது.

தாயின் பாலில்லாத மார்பைச் சுவைத்து உண்ண வாய்ப்பு இன்மையால் குழந்தை அழுகின்றது என்பது குழந்தைக்குத் தன் வறுமை பொருளாக அழுகை பிறந்தவாறு.

'பாலின்றி அழும் குழந்தையது முகம் பார்த்துக் கண்ணீர் நிரம்பிய என் மனைவியின் துயர் நோக்கி அதனைப் போக்க வல்லாய் நீயே என்று நின்னை நினைத்து வந்தேன்' என்ற பகுதியில், குழந்தையது வறுமை நோக்கித் தாய் கண்ணீர் உகுத்தது பிறர் வறுமை பொருளாக அழுகை பிறந்தவாறு.]

இளிவரல் என்ற மெய்ப்பாடு

மூப்பு - கிழம். பிணி - நோய். வருத்தம் - முயற்சி. மென்மை - மெலிதாதல் தன்மை.

9 மூப்பு :

இளமைக் காலத்துச் செய்தன செய்யமாட்டாது இளிவந்தனம் இக்காலத்து என்றமையின்,

'தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி நடுக்குற்று
இரும்இடை மிடைந்த சில்சொல்
பெருமூ தாளரேம் ஆகிய எமக்கே.' புறநா. 243

எனத் தன்கண் தோன்றிய மூப்பும்,

'முத்துத்தலை இறைஞ்சிய நின்னொடு யானே
போர்த்தொழில் தொடங்க நாணுவல் அதனால்'
தொல். பொ. 254. உரை-மேற்

எனப் பிறன்கண் தோன்றிய மூப்பும்,

10 பிணி :

'மலையைத் துளக்கும் ஆற்றலை உடையாய் காமப்பிணி கூர்ந்தோரை அலைப்பது நினக்குத் தகுவது அன்று' என இளிவந்து வாடைக்குக் கூறினமையின்,

' இமயமும் துளக்கும் பண்பினை
துணையிலர் அளியர் பெண்டிர் இஃது எவனோ '
குறுந். 158

எனத் தன்கண் தோன்றிய பிணியும்,

நெஞ்சினை வேறு நிறீஇக் கூறினமையின்,
' குணகடல் திரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் தொண்டி முன்துறை
அயிரை ஆரிரைக்கு அணவந் தாங்குச்
சேயள் அரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே.' குறுந். 128

எனப் பிறன்கண் தோன்றிய பிணியும்,

11 வருத்தம் :

பின்நின்ற தலைமகன் கூறியதாகலின்,
' யான்தன் அறிவல் தான்அறி யலளே ' குறுந், 337
எனத் தன்கண் தோன்றிய வருத்தமும்,

அவன் இவ்வாறு ஒழுகுதல் நமக்கு இளிவரவாம் — என்னும் குறிப்பினால் கூறிக் குறை நயப்பித்தமையின்,
' ஒன்று, இரப்பான்போல் இளிவந்தும் சொல்லும் '
கலி: 47

எனப் பிறன்கண் தோன்றிய வருத்தமும்,

12 மென்மை :

மெலியார் இளிவந்தன கூறுவர் ஆயினும் வலியார் மீக்கூறுவர் ஆயினும் இவன் அவை செய்யான் என்றமையின்,

‘ வலிய ரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்’ புறநா. 239

எனத் தன்கண்ணும் பிறன்கண்ணும் தோன்றிய மென்மையும் பொருளாகவும்,

‘ யானை
ஒருகை உடையது எறிவலோ யானும்
இருகையும் சுமந்துவாழ் வேன் ’
தொல். பொ. 254. உரை. மேற்

என வீரம் பொருளாகவும் இளிவரல் பிறந்தவாறு.

**விளக்கம்**

வருத்தம் என்பது முயற்சி என்னும் பொருளது ஆதல்,

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும் — குறள்-468

என்னும் குறட்பா உரையில் பரிமேலழகர் ‘ஆற்றின் வருந்தா வருத்தம்’ என்ற தொடருக்கு ‘முடியும் உபாயத்தானே முயலாத முயற்சி’ என்று பொருள் கூறியவாற்றானும் உணரலாம்.

‘ தொடித்தலை .... .... எமக்கே ’ —

தொடித்தலை விழுத்தண்டுன்றினார் பாடிய கையறு-நிலைப் பாடற்பகுதி இது.

இளமையில் மகளிரைப் பற்றித் தழுவுவழித் தழுவித் தூங்குவழித் தூங்கி நெடுநீர்க் குட்டத்தில் துடும் எனப் பாய்ந்து குளித்து மணல்கொண்ட கல்லா இளமை கழியப் பெற்று, தண்டு ஊன்றி இருமலோடு சில சொல்லே பேசும் பெரிய மூப்பு உற்றது பற்றி வருந்தலின், இது தன்கண் பிறந்த மூப்புப் பொருளாக இளிவரல் பிறந்தவாறு.

'மூத்து .... .... நாணுதல்' —

வீரன் ஒருவன், வீரன் மற்றொருவன் தனது மூப்பினால் மேல்நோக்கும் தலை தாழ்ந்து நின்ற நிலையைச் சுட்டி, அவனைத் தனக்கு நிகராகக் கருதாது அவனோடு போரிடற்கு நாணுதலைக் குறித்தமையின், இது பிறன்கண் தோன்றிய மூப்புப் பொருளாக இளிவரல் பிறந்தவாறு.

'இமயமும் .... .... எவனோ' —

தலைமகன் இரவுக்குறி வந்துழி அவன் கேட்பத் தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொற்ற பாடற்பகுதி இது.

'காற்றோடு கலந்து வந்த நிறைந்த நீரை உடைய கார் மேகமே! உனக்கு இப்பொழுது கருணை இல்லையோ? இமய மலையையும் அசைக்கும் தன்மை உடையை நீ. உன்னால் அலைக்கப்படும் மகளிர் துணைவரைப் பெற்றிலர், ஆதலின் அன்னார் இரங்கத்தக்கார். நீ இங்ஙனம் செய்து துன்புறுத்தல் எதன்பொருட்டு?' என்று தலைவி தன்கண் தோன்றிய காமப்பிணி பற்றிய இளிவரல் சொற்றவாறு.

'குணகடல் .... .... நோய்ப்பா லோயே' —

அல்லகுறிப்பட்டு மீளும் தலைமகன் தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லிய பாடல் இது. இதன்கண் நெஞ்சைப் பிரித்துத் தன் முன் வேற்றவர் போல நிறுத்தி, 'கீழ்க்கடற் கரையிலுள்ள சிறகுகள் அற்ற நாரை மேல்கடற்கரைக்கண்-உள்ள சேரனுடைய ஊராகிய தொண்டியில் கிடைக்கும் அயிரைமீனை இரையாகக் கோடற்கு ஆசைப்படுவது போல, நமக்குச் சேயளாகவும் கிடைத்தற்கு அரியளாகவும் இருக்கும் தலைவியை அடைய நினைக்கும் நீ என்றும் துன்புறுவாய்' என்ற கருத்தில் நெஞ்சத்தில் ஏற்பட்ட காமப் பிணிபற்றித் தலைவன் வருந்துதல், பிறன்கண் தோன்றிய பிணி பொருளாக இளிவரல் பிறந்தவாறு.

'யான் தன் .... .... மகளே' —

தோழியை இரந்து பின்நின்ற கிழவன் தனது குறை அறியக் கூறிய பாடல் பகுதி இது.

'முலைமுகம் செய்யத் தலைமயிர் நீண்டு வளர, பற்கள் விழுந்து முளைத்து வீட்டனவாக, தேமலும் சிலவாகத் தோன்றினவாகத் தலைவி என்னை வருத்துதலால் யான் அவளை அறிவேன். அவள் அதனை அறிந்திலள். செல்வர் மகளாகிய அவள் எத்தன்மை உடையளோ?' என்ற பாடலில் தலைவியால் தலைவன் துன்புறுதல் தன்கண் தோன்றிய வருத்தம் பற்றிய இளிவரலாம். வருத்தம் என்பதற்கு முயற்சி என்று பொருள் செய்தவர், ஈண்டுத் துன்பம் என்ற பொருளில் எடுத்துக்காட்டு வழங்கி இருப்பினும், இத்துன்பம் பின் முயற்சிக்கு அடிகோலுவது உளம்கொளத் தக்கது.

'ஒன்று இரப்பான் .... .... சொல்லும்' —

தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி, அவன் தன்மையும் அவன் தனக்குக் கூறுவனவும் அக் கூற்றுத் தன்னால் பொறுக்க ஒண்ணாதவாறும் அவன் கருத்தும் தலைவிக்குக் கூறி, அவன் குறை நயப்பத் தன்னுள்ளே கூறிய பாடற் பகுதி இது.

'மேம்பட்ட தலைவன் தன் தகுதிக்கு மாறுக ஒன்றனைப் பிச்சை கேட்க வருவாரைப் போலப் பிறரால் இகழப்பட்டு எளியனும்தன்மை தோன்றச் சில கூறுகிறான்' என்று கூறித் தோழி தலைவியைக் குறை நயப்பித்தலின், தலைவன்கண் தோன்றிய வருத்தம் பற்றித் தோழிக்கு இளிவரல் பிறந்தவாறு.

'வலியர்என வழிமொழியலன்
மெலியர்என மீக்கூறலன்'

நம்பி நெடுஞ்செழியனைப் பேரெயில் முறுவலார் பாடிய கையறுநிலைப் பாடற் பகுதி இது. அவன் குண நலன்களை எடுத்துப் பேசும் போது, 'அவன், பகைவர் தன்னின் வலிமை உடையவர் என்று கருதி அவர்களுக்கு வழிபாடு கூறி அறியான்; சிலர் தன்னின் மெலியவர் என்று கருதி அவரின் மிகுத்துச் சொல்லுதல் அறியான்' என்ற இப்பகுதியில், மெய்ப்பாடு கொள்ளுதற்கு எடுத்துக்காட்டு உள்ளது.

வலியர் என வழி மொழியாது, மெலியர் என மீக்கூறுது இருப்பது சாந்தம் என்ற நடுவு நிலையாம். அஃது ஈண்டு எடுத்துக்காட்டு ஆகாது. அதனால் அதிலிருந்து பெறப்படும் செய்திகள் ஈண்டு எடுத்துக்காட்டாகும். பொதுவாக மக்கள்-பண்பு வலியரை வழிமொழிதலும், மெலியரை மீக்கூறலும் ஆம். ஆகவே,

வலியர் என வழிமொழிதல் - தன் கண் தோன்றிய மென்மை பொருளாக இளிவரல் பிறப்பதாம்.

மெலியர் என மீக்கூறுதல் – பிறன்கண் தோன்றிய மென்மை பொருளாக இளிவரல் பிறப்பதாம்.

'யானை .... .... வாழ்வேன்' —

இப்பாடல் யானையை எறியாது விடுத்த வீரன் கூறிய உரையாகும். 'யானை விலங்கு; தனித்து இருப்பது; பாகனுக்கு அடங்கியது; மேலும் ஒரே கையை உடையது; யானோ இருகைகளை உடையவன்; ஆதலின் யானையைக் கொல்லுவது இளிவரலாகும்' என்ற கருத்துடைய இப்பாடலில், வீரம் பொருளாக இளிவரல் பிறந்தவாறு.]

மருட்கை என்ற மெய்ப்பாடு :

புதுமை—புதிதாதல் தன்மை; அது காணாதன கண்டவற்றின்மேல் நிகழ்வது. பெருமை—பெரிதாதல் தன்மை; அது பண்டு கண்ட பொருள்கள் போலாது கழியப் பெரிய-

ஆயினவற்றின்மேல் நிகழ்வது, சிறுமை-சிறிதாதல் தன்மை; அது கடுகின்கண் பலதுளைபோல இறப்பச் சிறியஆயினவற்-றின்மேல் நிகழ்வது. ஆக்கம்—ஒன்று ஒன்ருய்த்திரிதல்.

*13* புதுமை :

தன் கருத்து வெளிப்படாது தன்மெய்க்கண் தோன்றிய புதுமையை வியந்தாள்போலத் தோழிக்கு அறத்தொடு நின்றமையின்,

'மலர்தார் மார்பன் நின்ருேற் கண்டோர்
பலர்தில் வாழி தோழி அவருள்
ஆரிருள் கங்குல் அணையொடு பொருந்தி
ஓர்யான் ஆகுவது எவன்கொல்
நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே.'

அகநா. 82

எனத் தன்கண் தோன்றிய புதுமையும்,
பண்டொருகாலும் கண்டறியாதபடி மயில் ஆடிற்று-என்றமையின்,

'மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத்து இயலி ஆடுமயில்
விழவுக்கள விறலியின் தோன்றும் நாடன்.'

அகநா. 82

எனப் பிறபொருட்கண் தோன்றிய புதுமையும்,

*14* பெருமை :

கருங்கோல்குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன் இழைத்-தாற்போல வழிமுறையால் பெருகற்பாலதாகிய நட்பு மற்று அவனைக் கண்ணுற்றஞான்றே நிலத்தினது அகலம் போலவும் விசும்பின் ஒக்கம்போலவும் கடலின் ஆழம்போலவும் ஒருகாலே பெருகிற்று என்றமையின்,

‘ நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவு இன்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சி பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே’

குறுந் 3

எனத் தன்கண் தோன்றிய பெருமையும்,

(இது தலைமகன் கருத்தினை நட்பிற்குக் கொள்ளுங்கால் பிறன்கண்தோன்றிய பெருமையும் ஆம்.)

15 சிறுமை :

‘ மைம்மலர் ஓதி மணிநகைப் பேதைதன்
கொம்மை வரிமுலை ஏந்தினும் - அம்ம
கடையில் சிவந்த கருநெடுங்கண் பேதை
இடையில் சிறியதொன்று இல்.’ தொல். பொ. 255
உரை - எடு

எனப் பிறன்கண் தோன்றிய சிறுமையும்,

(தன்கண் தோன்றிய சிறுமை வந்துழிக் காண்க.)

16 ஆக்கம் :

நரி வெரூஉத்தலையார் தம் உடம்பு பெற்று வியந்து கூறிய பாட்டாகலின்,

‘ எருமை அன்ன கருங்கல் இடைதோறு
ஆனின் பரக்கும் யானைய முன்பின்
கானக நாடனை நீயோ பெரும.’ புறநா 5

எனத் தன்கண் தோன்றிய ஆக்கமும்,

‘ உறக்கும் துணையதோர் ஆலம்வித்து ஈண்டி
இறப்ப நிழல்பயந் தாஅங்கு.’ நாலடி. 38

எனப் பிறபொருட்கண் தோன்றிய ஆக்கமும்,

'கிண்கிணி களைந்த கால் ஒண்கழல் தொட்டு' புறநா. 87

எனவும்,

' அன்னான் ஒருவன் தன் ஆண்தகை விட்டென்னைச்
சொல்லும் சொல்கேட்டி சுடரிழாய் பன்மாணும்.'கலி. 47

எனவும், முறையே சிறியோன் பெருந்தொழில்செய்ததூஉம், பெரியோன் சிறுதொழில் செய்ததூஉம் பொருளாகவும் வியப்புச் சுவை பிறந்தவாறு.

விளக்கம்

' மலர்தார் .... .... தோளேனே ' —

தலைமகள் தோழிக்கு அறத்தொடு நின்ற பாடற்பகுதி இது.

' ஏனல்புனத்து வாயிலிலே தலைவன் நின்றானாக அவனைக் கண்டோர் பலராக அவருள்ளும் யான் ஒருத்தியே இரவில் தலையணைகொண்டு படுத்தும் கண்ணீரோடு உறக்கம் இன்றி உள்ளேன் ' என்ற இப்பகுதியில், தலைவிக்குத் தன்கண் தோன்றிய புதுமை பற்றி மருட்கை பிறந்தவாறு.

' மந்தி .... .... நாடன் ' —

மூங்கில் துளை வழியே காற்றுப் புகும் ஓசையைக் குழல்ஒலியாகவும், அருவிஒலியை முழவொலியாகவும், கலை ஒலியை வங்கியஒலியாகவும், வண்டுஒலியை யாழ்ஒலியாகவும் கொண்டு, மந்திகளாகிய அரங்கத்தினர் நோக்க, மூங்கில் வளர்ந்த பக்கமலையில் நடந்து வந்து ஆடும் மயில், களத்தில் ஆடும் கூத்தி போலக் காட்சி வழங்குகிறது — எனப் பிறிதின்கண் தோன்றிய புதுமை பொருளாக மருட்கை பிறந்தவாறு, இத்தகைய மயில் ஆடுதலை இதற்கு முன் தலைவி கண்டிராமையான்.

'நிலத்தினும் பெரிதே' —

தலைவன் சிறைப்புறமாக அவன் வரைந்துகொள்வது வேண்டித் தோழி இயற்பழித்தவழித் தலைவி இயற்பட மொழிந்த இப்பாடலில் தலைவன் நட்பின் திறம் தன்கண் வளர்ந்த பெருமைபற்றித் தலைவியிடம் மருட்கை காணப் படுகிறது. தலைவி தலைவனோடு கொண்ட நட்பின் திறம் அவன்கண் வளர்ந்த பெருமை பற்றிய மருட்கையாம்.

'மைம்மலர் ... இல்' —

'கரிய பூச்சூடிய மயிர்முடியினை உடையாளுடைய திரண்ட தேமல் படர்ந்த நகில்களைத் தான் தாங்கி இருப் பினும், கடை சிவந்த கருங்கண்ணளாகிய அவளது இடையை விடச் சிறிய பொருள் பிறிது ஒன்றும் இல்லை' என்ற இப்பாடலில், இடையாகிய பிறபொருட்கண் தோன் றிய சிறுமைபற்றி மருட்கை பிறந்தவாறு.

தன்கண் தோன்றிய சிறுமைக்கு எடுத்துக் காட்டுத் தரப்படவில்லை.

'எருமை .... .... பெரும' —

'சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ் சேரல் இரும்பொறையைக் கண்டஞான்று நின் உடம்பு பெறுவா யாக' எனச் சென்று கண்டு தம் உடம்பு பெற்ற நரி வெரூஉத்தலையார் பாடிய இப்பாடலில், தம் உடம்பு பண்டைநிலை அடைந்தது பற்றிய மருட்கையோடு அரசனைக் 'கானக நாடனை நீயோ?' என்று வினவிய அப்புலவரிடம் தம்கண் தோன்றிய ஆக்கம் பற்றிய மருட்கைக் குறிப்புப் புலப்பட்டவாறு.

'உறக்கும் .... .... ஆங்கு'

சிறிய ஆலம்விதை பெரிய மரமாகிச் சிறந்த பரந்த நிழலை அளிப்பது பிறபொருட்கண்தோன்றிய ஆக்கம்பற்றிய மருட்கையாம்.

'*கிண்கிணி ... .... தொட்டு.*'

நெடுஞ்செழியன் கிண்கிணியைக் களைந்து கழல் அணியத் தொடங்கின அன்றே பகைமன்னர் எழுவரை முறியடித்த செயல், சிறுபொருள் பெருந்தொழில் செய்தலான் ஏற்பட்ட மருட்கைக்கு எடுத்துக்காட்டாகும்.

'*அன்னான் .... ... பன்மாணும்*'

தலைவனைத் தலைவியிடம் குறை நயப்பிக்கும் தோழி கூற்றாக அமைந்த பாடற்பகுதி இது.

'நன்கு கற்றவனும், கற்றதற்கேற்ப அடக்கம் உடையவனும், இல்லோர் துயர் துடைக்கும் ஈகையானும் ஆகிய தலைவன் தன் ஆண்தகைமையை விட்டுவிட்டு என்னிடம் இரப்பவரைப் போலப் பேசுகிறான்' என்பதன்கண், பெரும் பொருள் சிறுதொழில் செய்தலான் ஏற்பட்ட மருட்கை தோன்றியவாறு ]

அச்சம் என்ற மெய்ப்பாடு :

அணங்கு—அணங்குதல் தொழிலவாகிய பேய், பூதம், பாம்பு, நிரயபாலர், சவம் தின்பெண்டிர், உரும்இசை இத்-தொடக்கத்தன. விலங்கு—யாளி, புலி இத்தொடக்கத்தன. கள்வர்—பிறர் உடைமையை அவரை வஞ்சித்துக்கொள்ளும் பொருட்டுத் தீத்தொழில் புரிவார். இறை—அரசனும் தந்தையும் ஆசானும் முதலியோர்.

*17, 18* அணங்கு, விலங்கு :

'*யானை தாக்கினும் அரவுமேல் செலினும்*
*நீல்நிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும்*
*சூல்மகள் மாறா மறம்பூண் வாழ்க்கை*'

பெரும்பாண் *134—6*

இதனுள் அணங்கும், விலங்கும்,

*19* கள்வர் :

> ‘ ஒரூஉ நீ எம்கூந்தல் கொள்ளல் யாம்நின்னை
> வெரூஉதும் காணுங் கடை’ கலி. 87

இதனுள் தலைவனைக் கள்வன்பால் சார்த்தி உரைத்தமையின் கள்வரும்,

*20* இறை :

> ‘ எருத்துமேல் நோக்குறின் வாழலேம் என்னும்
> கருத்தினால் கை கூப்பிப் பழகி—எருத்திறைஞ்சிக்
> கால்வண்ணம் அல்லால் கடுமான்தேர்க் கோதையை
> மேல்வண்ணம் கண்டறியா வேந்து.’
>
> தொல். பொ. 256 உரை. எடு

இதனுள் இறையும் பொருளாக அச்சம் பிறிதுபொருள் பற்றியே வந்தவாறு.

### விளக்கம்

அணங்குதல்—துன்புறுத்துதல். நிரயபாலர் — நரகத்தைப் பாதுகாத்து நடத்துவோர்; அவர் தருமதேவதையின் ஏவலர் ஆகிய இயமன் முதலோர். சவம் தின்பெண்டிர்—இடாகினிப் பேய் முதலியன; உரும்இசை—இடியோசை.

‘ யானை தாக்கினும் ... .... வாழ்க்கை ’

யானை தன் எதிரே செல்லினும், பாம்பு தன்மேலே செல்லினும் நீலநிறத்தை உடைய மேகத்தினிடத்தே வலிய உரும் ஏறு இடிப்பினும் கருக்கொண்ட இளம்பெண் அவற்றிற்கு அஞ்சி மீளா மறத்தைப் பூண்ட வாழ்க்கை-என்பதுபொருள்.

இடிஇடித்தல் அணங்கு பொருளாகவரும் அச்சத்திற்கும், யானை தாக்குதலும் அரவு மேற்செல்லுதலும் விலங்குபொருளாக வரும் அச்சத்திற்கும் எடுத்துக்காட்டு.

'ஒரூஉ ... ... கடை'—

'பரத்தையர்சேரிச் சென்றமை அறிந்திலள்' எனத் தலைவி மாட்டுச் சென்றவனோடு அவள் உறழ்ந்து கூறித் தோழி வாயிலாகத் தன் ஊடல் தீர்வாள், தன்நெஞ்சொடு கூறிய பாடல் பகுதி இது. தன்னை நோக்கிவந்த தலைவனிடம் தலைவி, 'யான் நின்னைக் காணும்இடத்து அஞ்சுவேன்; ஆதலின் என் கூந்தலைத் தீண்டாதே! நீ என்னை விடுத்து நீங்கு' என்று கூறிய கூற்றில், தலைவனைக் கள்வன்பால் சார்த்திக் கூறினமையின், இது கள்வர் பொருளாக அச்சம் பிறத்தற்கு எடுத்துக்காட்டு.

'எருத்து ... ... வேந்து'—

'கழுத்தை நிமிர்த்திச் சேரமன்னன் முகத்தை நோக்கின் அவன் தம்மை நோக்குதலும், அதன்கண் வெகுளியும் புலனாகும் ஆதலின் தம் வாழ்விற்கு ஊறுநேரும்' என்ற எண்ணத்தான் கைகூப்பி வழிபட்டே பழகிய வேற்று வேந்தர், விரையச் செல்லும் குதிரை கட்டப்பட்ட தேரினை உடைய சேரனுடைய கால்களின் அழகைத் தவிர மேல் பகுதியின் வனப்பைக் கண்டு அறியாதவர் ஆயினார் - என்ற இப்பாடலில், அரசன் பொருளாக அச்சம் பிறந்தவாறு.

நகை அழுகை இளிவரல் மருட்கை என்ற நான்கும் மெய்ப்பாடு உறும் தன்னையும் பிற பொருளையும் நிலைக்களனாகக் கொண்டு தோன்றுவன. அவை போல் அன்றி, அச்சம் தன்னை நிலைக்களனாகக் கொண்டு தோன்றாது, பிறபொருள்களையே நிலைக்களனாகக் கொண்டு தோன்றும் என்பது உணரப்படும்.]

பெருமிதம் என்ற மெய்ப்பாடு

கல்வி - நூல் முதலியன பயிறல். தறுகண் - அஞ்சத்தக்கன கண்டுழி அஞ்சாமை. இசைமை—இன்பமும் பொரு

ளும் இறப்பப் பயப்பினும் பழியொடு வருவன செய்யாமை, கொடை - உயிரும் உடம்பும் உறுப்பும் முதலிய எல்லாப் பொருளும் கொடுத்தல்.

**21 கல்வி :**

‘ வல்லார்முன் சொலல்வல்லேன் என்னைப் பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டி யவள்.’ கலி. 141

இதனுள் என்னையும் கல்லாமை காட்டினள் எனத் தன்பெருமிதம் கூறினமையின் கல்வியும்,

**22 தறுகண் :**

‘ அடல்மாமேல் ஆற்றுவேன் என்னை மடல்மாமேல்
மன்றம் படர்வித் தவள்.’ கலி. 141

இதனுள் தறுகண்ணும்,

**23 இசைமை :**

‘ கழியாக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்.’ அகநா. 112

இதனுள் புகழும்,

**24 கோடை :**

‘வையம் புரவு ஊக்கும் உள்ளத்தேன் என்னை இரவூக்கும்
இன்னு இடும்பை செய்தாள்.’ கலி. 141

எனக் கொடையும் பொருளாகப் பெருமிதம் தன்கண் தோன்றிய பொருள்பற்றியே வந்தவாறு.

### விளக்கம்

கல்வி என்பதற்குத் தவம் முதலாகிய விச்சை என்றே பேராசிரியர் பொருள் கூறுவார். சினேந்திரனைத் திருத்தக்க தேவர்,

'ஆர்வ வேர்அறுத்து அச்ச ணந்திபோய்
வீரன் தாளிணை விளங்க நோற்றபின்.' சிந்தா. 409

என வீரன் எனவும்,

சிவனடியார்களைச் சேக்கிழார் பெருமான்,

'ஈர மனத்தினர் யாதும் குறைவுஇலர்
வீரம் என்னால் விளம்பும் தகையதோ' பெரிய. 4-9

என வீரர் எனவும் குறிப்பிடுவது காண்க.

'வல்லார் .... .... காட்டியவள்' —

'வழுவின சொற்கள் சொல்லாதபடி தெள்ளிய நாவி னாலே வார்த்தை சொல்ல வல்லேனாகிய என்னைப் பிறர் முன்னே ஒன்றையும் கல்லாத தன்மையனாக் காட்டியவள்'— என்ற இப்பகுதி, இரந்து பின்நின்ற தலைவன் மடல் ஏறிய-வழித் தலைவிதமர் அஞ்சி அவளைக் கொண்டுவந்து கொடுத் தலைக் கண்டோர் கூறிய பாடலின் பகுதியாகும். இதன்கண் 'வடிநாவின் வல்லார் முன் சொலல் வல்லேன்' என்ற பகுதி தலைவன் கல்விப் பொருட்டாய பெருமிதத்தோடு இருந்த தைச் சுட்டுகிறது.

'போருள் அடல்மா .... .... படர்வித்தவள்' —

இதுவும் மேலைப் பாடற்பகுதியாம். 'போரிடத்து வெற்றி யினை உடைய குதிரைமேலே இருந்து போர்த்தொழில் நடத்துவேன் ஆகிய என்னை, அம்மா அல்லாத மடல்-மாவிலே ஏறி, அக்களத்தே அன்றி மன்றின்கண்ணே, தன்னை நினைக்கச் செய்தவள்' என்ற இதன்கண், 'போருள், அடல் மாமேல் ஆற்றுவேன்' என்பது தலைவன் தன்கண் தோன்றிய தறுகண் பொருட்டாய பெருமிதத்தோடு இருந்த தனைச் சுட்டுகிறது.

' கழியாக் .... .... வெஃகார் ' —

இரவுக்குறி வந்த தலைவனைத் தோழி எதிர்ப்பட்டு நின்று வரைவு கடாய அகநானூற்றுப் பாடற் பகுதி இது.

' மிகுந்த அன்புடையராயினும் சான்றோர் பழியோடு வரும் இன்பத்தை விரும்பார் ' என்று களவு அலர் ஆதல் முதலியன கூறித் தலைவனை வரையுமாறு தோழி வேண்டும் இப்பகுதியில், சான்றோர் இசைப்பொருட்டாய பெருமிதத்தோடு இருப்பர் என்பது உணர்த்தப்படுகிறது.

' வையம் புரவூக்கும் .... .... செய்தான் ' —

இதுவும் முதற்பாடற் பகுதியாம். ' உலகத்தை எல்லாம் பாதுகாத்தலை முயலும் உள்ளத்தை உடையேனாகிய என்னை ஒருவர்பால் ஒன்றனை இரத்தலை முயலும் வருத்தத்தை உடையேனாகச் செய்தவள் ' என்ற பகுதியில், வையம் புரவு ஊக்குதற்கண் கொடைப் பொருட்டாய பெருமிதம் உணர்த்தப் படுகிறது.

பெருமிதம் தன்கண் தோன்றிய பொருள் பற்றியே வரும்.]

வெகுளி என்ற மெய்ப்பாடு :

உறுப்பறை—கையும் கண்ணும் முதலிய உறுப்புக்களை அறுத்தல். குடிகோள்—தாரமும் சுற்றமும் குடிப்பிறப்பும் முதலாயவற்றுக்கண் கேடு சூழ்தல். அலை—கோல்கொண்டு அலைத்தல் முதலாயின. கொலை—அறிவும் புகழும் முதலாயவற்றைக் கொன்று உரைத்தல்.

25 உறுப்பறை :

' முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று '
கலி. 52

இதனுள் உறுப்பறையும்,

26 குடிகோள் :

நின்மகன், படை அழிந்து மாறினன் என்று பலர்கூற,

‘ மண்டுஅமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்
முலைஅறுத் திடுவன் யான்எனச் சினைஇ’

புற நா. 278

இதனுள் தன்மகன் மறக்குடிக்குக் கேடு சூழ்ந்தான் என்று சினங் கொண்டாள் ஆகலின் குடிகோளும்,

27 அலை :

‘ வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும் மாறாது சினனே’ புற நா. 100

இதனுள், புலியான் அலைக்கப்பட்ட யானை பொருது போந்தும் அவ்வலைப்புஉண்டலை நினைந்து சினங்கொள்ளாநின்றது என்றமையின் அலையும்,

28 கொலை :

‘ உறுதுப்பு அஞ்சாது உடல்சினம் செருக்கிச்
சிறுசொல் சொல்லிய சினம்கெழு வேந்தரை.’

புற நா. 72

இதனுள், சிறுசொல் சொல்லுதல் என்பது புகழ்கொன்று உரைத்தல் ஆதலின் கொலையும் பொருளாக வெகுளி பிறிது பொருள்பற்றி வந்தவாறு.

**விளக்கம்**

‘ முறம் ....... செற்று ’ —

தன் காதுப்புறமாகப் பாய்ந்து துன்புறுத்திய புலியை யானை வெகுளியான் அழித்தது என்புழி, தன் உறுப்புக்களுக்குத் தீது செய்தல் பொருளாக யானைக்குப் புலியிடம் வெகுளி பிறந்தது.

‘ மண்டு அமர்க்கு .... .... சினைஇ ’ —

மறக்குடி மகள் ஒருத்தியின் மகன் போரில் புறமுதுகு இட்டு ஓடினான் என்று பலர் கூறிய அளவில், தன்மகன் தன் மறக்குடி மரபுக்குக் கேடு செய்துவிட்டான் என்ற வெகுளி அவளுக்கு ஏற்பட, அவன் போரில் புறமுதுகுகாட்டி ஓடியிருப்பின் அவன் பால் உண்ட தன் மார்பை அறுத்து விடுவதாகச் சூள் உரைத்த அவள் கூற்றில், குடிகோள் நிலைக்-களனாக வெகுளி தோன்றியவாறு.

‘ வரிவயம் .... .... சினனே ’ —

அதியமான் நெடுமான்அஞ்சியின் போர்வீரம் பற்றிப் பாடிய ஔவையார்தம் பாடற் பகுதி இது. பகைவரோடு பொருது வென்று ஊர் திரும்பிய பின்னும் அவனுக்குப் பகைவர்மாட்டு ஏற்பட்ட கோபம் தணியாமைக்குப் புலியான் துன்புறுத்தப்பட்ட யானை புலியொடு பொருது அதனை அழித்து மீண்ட பின்னரும் அப்போரை நினைத்துச் சினம் கொள்ளுதல் உவமமாகக் கூறப்பட்டுள்ளது. இதன்கண், கோல்கொண்டு அலைத்தல் நிலைக்களனாக வெகுளி பிறந்தவாறு. கோல்—அம்பு.

‘ உறுதுப்பு .... .... வேந்தரை ’—

தன்னை இளையவன் என்று எள்ளி நகையாடிய பகைவர் திறம் கண்டு வெகுண்டு தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் உரைத்த வஞ்சினப் பாடலின் பகுதிஇது.

‘ தனது மிக்கவலிமைக்கு அஞ்சாது மாறுபடும் சினம் பெருகித் தான் இளையவன் என்று புல்லிய வார்த்தை கூறிய சினம் பொருந்திய அரசர்’ என்ற இப்பகுதியில், பாண்டியர் பரம்பரையில் வந்த தன் அறிவையும் புகழையும் கொன்று தன்னை இளையவன் என்று பகைமன்னர் இழித்துப்பேசியது நிலைக்களனாக வெகுளி தோன்றியது.

வெகுளி பிறன்கண் தோன்றிய பொருள்பற்றியே வரும்.]

### உவகை என்ற மெய்ப்பாடு

செல்வம் - நுகர்தற்கு உரியனவற்றின் நுகர்ச்சி. புலன்—கல்விப் பயனாகிய அறிவுடைமை. புணர்வு - காமப் புணர்ச்சி முதலாயின. விளையாட்டு - பதி இகந்து யாறும் குளனும் காவும் ஆடி வருதல் முதலாயின.

**29** செல்வம் :

'உரன்உடை உள்ளத்தை செய்பொருள் முற்றிய
வளமையான் ஆகும் பொருள்இது என்பாய்.' கலி. 12

இதனுள் வளமையான் ஆகும் மனமகிழ்ச்சி இது எனக் கூறினமையின் செல்வமும்,

(' நன்கலம் பெற்ற உவகையர் ' என்பதும் அது.)

*30* புலன் :

'பெண்டிர் நலம் வௌவித் தண்சாரல் தாதுஉண்ணும்
வண்டின் துறப்பான் மலை' கலி. 40

இதனுள் முகைப்பதம் பார்க்கும் வண்டு போலத் தலைவியரை நகைப்பதம் பார்க்கும் அறிவுடைமை காமத்திற்கு ஏதுவாம் ஆகலின் புலனும்,

(' இகலிலர் எஃகுடையார் தம்முள் குழீஇ
நகலின் இனிதாயின் காண்பாம் ' நாலடி. 137

என்பதும் அது.)

**31** புணர்வு :

' இலவமலரன்ன அஞ்செந் நாவின் '

என்னும் மணிமிடைபவளத்துள், - (142)

'தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்
வடிப்புறு நரம்பின் தீவிய மொழிந்தே'

என்று அவள் இவ்வாறு முயங்கினமையால்,

'உவஇனி வாழிய நெஞ்சே'

என்றமையின் புணர்வும்,

32 விளையாட்டு :

'துயிலின்றி யாம்நீந்தத் தொழுவையம் புனலாடி
மயிலியலார் மருவுண்டு மறந்துஅமைகு வான்மன்னோ.'
கலி 30

இதனுள், 'ஆருடி விளையாடி மயிலியலார் மருவுண்டு மறந்து அமைகுவான் மன்' என்றமையின் விளையாட்டும் பொருளாக உவகை பிறந்தமை கண்டுகொள்க.

இது பிறன்கண் தோன்றிய இன்பம் பொருளாகவும் வரும்.

பிறவும் அன்ன.

## விளக்கம்

'உரன்உடை .... .... என்பாய்' —

தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தோழி காட்டது கடுமையும் தலைவியது மென்மையும் நாளது சின்மையும் இளமையது அருமையும் தாளாண்பக்கமும் தகுதியது அமைதியும் அன்பினது அகலமும் அகற்சியது அருமையும் கூறிச் செலவு அழுங்குவித்த பாடற் பகுதிஇது.

இதன்கண், தலைவன் கூறியன தோழியால் கொண்டு கூறப்பட்டன. 'நீதான் வலியுடைத்தாகிய மனத்தை உடையை. தேடும் பொருளைத் தேடிமுடித்த செல்வத்தாலே

உண்டாகும் பொருள்தான் இவ்வின்பம் என்று கூறுகின்ற வனே ' என்ற இப்பகுதியில், இன்பம் நுகர்வதற்குச் செல் வம் நிலைக்களம் என்பது குறிப்பிடப்பட்டவாறு.

' நன்கலம் பெற்ற ' —

நல்ல அணிகலன்களைப் பெறுதலான் ஏற்படும் உவகை யும் செல்வம் நிலைக்களனாகப் பிறந்த உவகையாம்.

' பெண்டிர் .... .... மலை ' —

தோழியும் தலைமகளும் தலைமகனது மலையை வாழ்த்திப் பாடுகின்ற வள்ளைப்பாட்டில், தோழி இயற்பட மொழியத் தலைவி இயல் பழித்தமையைத் தலைமகன் சிறைப்புறமாகக் கேட்டு வரைய வருகின்றமை தோழிதலைமகட்கு உணர்த்தும் பாடற் பகுதி இது. தலைவி தலைவனை இயற்பழித்து உரைக் கும் இப்பகுதியில், தலைவன் மலை ' பெண்டிருடைய நலத்தை நுகர்ந்து தண்ணிய மலைச்சாரல் இடத்துத் தாதை உண் ணும் வண்டு அப்பூவைத் துறக்குமாறு போல அவரைத் துறக்கின்றவன் மலை '—என்ற பகுதியில், பூமலரும் செவ்வி யைப் பார்க்கும் அறிவு வண்டிற்கு இருப்பது போலத் தாம் விரும்பும் மகளிரின் முறுவற் குறிப்பு உணரும் அறிவு காமத் திற்கு ஏதுவாகும் என்பது ' தண் சாரல் தாது உண்ணும் வண்டின், பெண்டிர் நலம் வௌவுதல் ' என்னுமிடத்து உணர்த்தப்பட்டுள்ளது.

' முகைப்பதம் பார்க்கும் வண்டினம் போலத்
தகைப்பருங் காமத்துத் தாம்வீழ் மகளிர்
நகைப்பதம் பார்க்கும் நனிநாக ரிகத்து
நகர நம்பியர் '

என்ற பெருங்கதை அடிகளையும், (உஞ்சை 35 : 212-214)

'தவத்தோ ராயினும் தகைமலர் வண்டின்
நகைப்பதம் பார்க்கும் இளையோ ராயினும்'
(14-162, 163)

என்ற சிலப்பதிகார அடிகளையும் நோக்குக.

'இகலிலர் .... .... காண்பாம்' —

'நீங்குதலில்லாத சிறந்த கேள்வி அறிவும் பண்பாடும் உடைய சான்றோர்கள் மாறுபாடின்றி அறிவின் கூர்மை-யோடு தம்முள் கூடி அறிவுச் செய்திகள் பேசி நகையாடும் இன்பம், தேவர் உலக இன்பத்திலும் மேதக்கது' என்ற இப் பாடலில், அறிவின் பயனாகிய இன்பம் புலப்படுமாறு விளக்-கப்பட்டுள்ளது.

'தொடிக்கண் .... .... மொழிந்தே' —

இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகன் தன்நெஞ்சிற்குச் சொல்லிய பாடற் பகுதி இது.

'நெஞ்சே! தலைவி, இரவுக்குறி பிறழாமை, ஒலியாத படி தன் வளையல்களைக் கடுக்கி மீன் துஞ்சும் யாமத்து, உருவு கிளர் ஏர்வினைப் பொலிந்த பாவை இயல் கற்றன்ன நடையின ளாய் வந்து, யாழ் போல இனிய சொற்பேசித் தன்வளைத் தழும்பு என்கண் உண்டாம்படி தழுவினள் ஆதலின், இனிப் பெரிதும் மகிழ்வாயாக' - என்ற இப்பகுதியில், தலை-மகள் தன்னைக் கூடியமை காரணமாகத் தலைமகனுக்கு உவகை பிறந்தமை சுட்டப்பட்டவாறு.

'துயிலின்றி .... .... மன்னே'—

பருவ வரவின்கண் ஆற்றாத தலைமகள் இறந்தது சிந்-தித்து 'நம்மாட்டு அன்பிலர் ஆயினும், இக்காலத்து இவ் வூரின்கண் பண்டு தாம் விளையாடியவாறு நினைத்து வருவர், இக்கால வரவு சொல்லுவார் உளராயின்' எனக்கேட்

பாணன், பாசறைக்கண் சென்று தலைமகனைக் கண்டு கூறிய பாடற்பகுதி இது. 'யாம் துயிலின்றி யாமக்கடலை நீந்த, தான் மயில் போலும் இயலினை உடைய பரத்தையரை மருவு-தலை நுகர்ந்து அவருடனே அழகிய புனலைஉடைய மடுக்களை ஆடி, நம்மை மறந்து அவரிடத்தே தலைவன் அமைந்திருப் பானே' - என்று தலைவி கூறியதைப் பாணன் கொண்-டெடுத்து மொழிந்த இப்பகுதியில், பரத்தையரோடு கூடி விளையாடுதல் நிலைக்களனாகத் தலைவனுக்கு உவகை பிறக்கு-மாறு குறிக்கப்பெற்றவாறு.

உவகை என்ற மெய்ப்பாட்டுக்கு நிலைக்களம் பிற பொருள்களேயாம்.

இவற்றால், நகை அழுகை இளிவரல் மருட்கை என்பன தன்கண்ணும் பிறன்கண்ணும் தோன்றும் பொருள்களை நிலைக்களனாக உடையன என்பதும், அச்சம் பிறபொருளை நிலைக்களனாகவும், பெருமிதம் தன்னையே நிலைக்களனாகவும், வெகுளியும் உவகையும் பிறபொருளை நிலைக்களனாகவும் கொண்டு தோன்றும் என்பதும் உணரப்படும்.

பேராசிரியர் இவ்வெண்மெய்ப்பாட்டின்கண்ணும் மிகையால் ஒவ்வொன்றற்கும் நிலைக்களம் கொண்டாராக, இவர் அவற்றுள் பெரும்பாலானவற்றை விடுத்துச் சிலவே கொண்டுள்ளார். அவை பின்வருமாறு.

'உள்ளப்பட்ட நகை' தொ. பொ. 252 என்றமிகையானே,

'வறிதகத் தெழுந்த வாயல் முறுவலள்' அகநா. 5

என்ற உள்ளத்தொடு பிறவாத நகையையும்,

'விளிவில் கொள்கை' தொ. பொ. 253 என்றமிகையானே,

'இன்ன விறலும் உளகொல் நமக்கென
மூதிற் பெண்டிர் கசிந்தழ நாணிக்
கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை' புறநா. 19

என்ற உவகைக் கலுழ்ச்சியையும்,

'பிணங்கல் சாலா' தொ. பொ 256 என்றமிகையானே,

'சேய்நின்று செய்யாத சொல்லிச் சினவல்நின்
ஆணை கடக்கிற்பார் யார்' கலி. 81

முதலாகிய புலவி பொருளாக வரும் அச்சத்தையும்,

'சொல்லப்பட்ட பெருமிதம்' 257 என்ற மிகையானே,

'பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே' புறநா. 73

என்ற காமம் பற்றிய பெருமிதத்தையும்,

'வெறுப்பின் வந்த வெகுளி' 258 என்றமிகையானே,
'செய்தவறு இல்வழி யாங்குச் சினவுவாய்' கலி 87

என்ற ஊடல்பற்றிய தலைமகள் வெகுட்சியையும்,

'அல்லல் நீத்த உவகை' 259 என்றமிகையானே,

பிறன்கண் தோன்றிய இன்பம் பற்றிய உவகையையும் பேராசிரியர் கொண்டுள்ளாராக, அச்செய்திகள் இவரால் விடுக்கப்பட்டன.

அவர் 'யாப்புற வந்த இளிவரல்' தொ. பொ. 254
'மதிமை சாலா மருட்கை' ,, 255

என்ற மிகைகளுக்குக் கொண்ட வீரம்பற்றிய இளிவரலும், சிறுமைப் பொருள் பெருந்தொழில் செய்தலும், பெருமைப் பொருள் சிறுதொழில் செய்தலும் ஆகிய மருட்கையுமே இவ் வாசிரியரால் கொள்ளப்பட்டன என்பதும் காண்க.]

'பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்
கண்ணிய திறனே நானான்கு என்ப.' தொல். பொ 249

எனவும்,

'நாலிரண்டு ஆகும் பாலுமா ருண்டே.' ,, ,, 250

எனவும்,

ஆசிரியர் தொல்காப்பியனார் மெய்ப்பாட்டியல் தொடங்குதற்கண்ணே ஓதிய இவற்றை ஒழித்து ஒழிந்தனவற்றிற்கே இவர் இலக்கணம் கூறியது என்னை எனின், நன்று சொன்னாய் ; முடியுடை வேந்தரும் குறுநிலமன்னரும் முதலாயினார் நாடக மகளிர் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் காமம் நுகரும் இன்ப விளையாட்டினுள் தோன்றிய முப்பத்திரண்டு பொருளும் கருதிய பொருட்பகுதி பதினாறாகி அடங்கும் எனவும், அம்முப்பத்திரண்டு மெய்ப்பாடும் பதினாறு ஆதலே அன்றி எட்டாதலும் உண்டு எனவும், பிறன்கோள் கூறல என்னும் உத்திவகையான் கூறியது அல்லது தம் துணிபு உரைத்தது அன்மையின், ஈண்டு இவர் கூறிற்றிலர் என்க.

சுவைக்கப்படும்பொருளும்அதனை நுகர்ந்தபொறி உணர்வும் அது மனத்துட்பட்டவழி உள்ளத்து நிகழும் குறிப்பும் அவை பிறந்த உள்ளத்தால் கண்ணீர் அரும்பலும் மெய்மயிர் சிலிர்த்தலும் முதலாக உடம்பின்கண் வரும் வேறுபாடாகிய சத்துவங்களும் ஆகிய நான்கனையும் சுவை எட்டோடும் கூட்டி ஒன்று நான்கு செய்து உறழ முப்பத்திரண்டாம் எனவும், சுவைப் பொருளும் பொறியும் வேறு வேறு நின்ற வழிச் சுவை பிறவாமையானும், அவ்விரண்டும் கூடியவழிச் சுவை பிறத்தலானும் அச்சுவைப் பொருளும் பொறிஉணர்வும் ஆகிய ஈரெண்பகுதியும் எட்டாம் எனப்படும் எனவும், குறிப்பும் சத்துவமும் உள்ள நிகழ்ச்சியும் உடம்பின் வேறுபாடும் ஆகலின் அவ்வுள்ள நிகழ்ச்சியை வெளிப்படுப்பது சத்துவம் ஆகலின் அவ்வீரெண்பகுதியும் எட்டெனப்படும் எனவும், இங்ஙனம் அடக்கிப் பதினாறும் எனவும், சுவை உணர்வும் பொருளும் ஒன்றாக அடக்கிச் சுவையும் குறிப்பும் சத்துவமும் என மூன்றாக்கி வெவ்வேறு இலக்கணம் கூறி, அவற்றை,

'எண்ணிய மூன்றும் ஒருங்கு பெறும்என
நுண்ணிதின் உணர்ந்தோர் நுவன்றனர் என்ப.'

செயிற்றியம்

என நாடக நூலின் வழிநூல் செய்த செயிற்றியனுர் ஓதுப ஆகலின் அவை பதினாறும், வீரம் அச்சம் வியப்பு இழிப்பு காமம் அவலம் நகை நடுவுநிலை என எட்டாய் அடங்கும் எனவும், இவற்றின் விகற்பம் எல்லாம் செயிற்றியம் முதலிய நூல்களான் ஓர்ந்து உணர்க, ஈண்டு உரைப்பின் பெருகும் ஆதலான் என்பது. 206

**விளக்கம்**

‘பண்ணை ... .... என்ப.’ தொல் பொ. 249

‘நாலிரண்டு .... .... உண்டே.’ ,, 250

இவை நாடக நூலார் கருத்து ஆதலின், பிறன்கோட் கூற லாத ஆசிரியர் தொல்காப்பியனுர் கூறினமையின் அதனை விடுத்து, இயற்றமிழுக்கு உரியவற்றையே இவ்வாசிரியர் கொண்டார். சுவைக்கப்படும் பொருள், சுவை உணர்வு, குறிப்பு, சத்துவம், இவற்றை எட்டுச்சுவையோடும் பொருத்த முப்பத்திரண்டாம். சுவைக்கப்படும் பொருளையும் சுவை உணர்வையும் ஒன்ருகவும், குறிப்பையும் சத்துவத்தையும் ஒன்ருகவும் கொண்டு எண் சுவையோடும் பெருக்கப் பதி-ஞரும். இவை நான்கும் நிலைக்களனுகப் பிறக்கும் சுவை களையே கணக்கிட அவை எட்டாம். சுவைக்கப்படும் பொரு ளையும் சுவை உணர்வையும் ஒன்ருகக்கொண்டு, அவற்ருேடு மனத்துட்படும் குறிப்பையும் உடலின்கண்படும் சத்துவத்-தையும் இணைத்து மூன்ருக்கிச் சுவைதோறும் கொள்வர் செயிற்றியனுர்.

நாடக நூலார் வெகுளியை விடுத்து நடுவுநிலையைக் கொண்டு சுவை எட்டு என்றனர். வெகுளியின் பயனுக நகையோ அழுகையோ மருட்கையோ வீரமோ உவகையோ தோன்றும் ஆதலின், அஃது அவ்வந்நிலையில் அச்சுவையின் கண் அடங்கும் என்பதே நாடக நூலார் கருத்து.

இவையாவும் மெய்ப்பாட்டியல் பேராசிரியர் உரையின்-கண் உள்ளனவாம்.

ஒத்த நூற்பாக்கள்

'உய்த்துணர்வு இன்றித் தலைவரு பொருளின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பாடு ஆகும்.'
தொல். பொ. 516

'நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப.' ,, 251

'எள்ளல் இளமை பேதைமை மடம் என
உள்ளப் பட்ட நகைநான்கு என்ப.' ,, 252

'இளிவே இழவே அசைவே வறுமை என
விளிவுஇல் கொள்கை அழுகை நான்கே.' ,, 253

'மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு
யாப்புற வந்த இளிவரல் நான்கே.' ,, 254

'புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே.' ,, 255

'அணங்கே விலங்கே கள்வர்தம் இறைஎனப்
பிணங்கல் சாலா அச்சம் நான்கே.' ,, 256

'கல்வி தறுகண் இசைமை கொடைஎனச்
சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே.' ,, 257

'உறுப்பறை குடிகோள் அலைகொலை என்ற
வெறுப்பின் வந்த வெகுளி நான்கே.' ,, 258

'செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டென
அல்லல் நீத்த உவகை நான்கே.' ,, 259
206

## சிறப்பில்லா மெய்ப்பாடுகள்

579 ஆங்கவை ஒருபால் ஆக ஒருபால்
உடைமை[1] இன்புறல்[2] நடுவுநிலை[3] அருளல்[4]
தன்மை[5] அடக்கம்[6] வரைதல்[7] அன்பு[8] எனாக்
கைம்மிகல்[9] நலிதல்[10] சூழ்ச்சி[11] வாழ்த்தல்[12]
நாணுதல்[13] துஞ்சல்[14] அரற்றுக்[15] கனவு[16] எனாஅ
முனிதல்[17] நினைதல்[18] வெரூஉதல்[19] மடிமை[20]
கருதல்[21] ஆராய்ச்சி[22] விரைவு[23] உயிர்ப்பு[24] எனாஅக்
கையாறு[25] இடுக்கண்[26] பொச்சாப்புப்[27] பொறாமை[28]
வியர்த்தல்[29] ஐயம்[30] மிகை[31] நடுக்கு[32] எனாஅ
இவையும் உளவே அவையலங் கடையே.

இதுமேல் கூறிவந்த எண்ணான்கும் அன்றி இவை முப்பத்திரண்டும் அவைபோல மெய்ப்பாடு எனப்படும் என்றவாறு.

(இ-ள்) நகைமுதலாக விளையாட்டு ஈறுகச் சொல்லப்பட்ட முப்பத்திரண்டும் ஒருகூறாக, இனிச்சொல்கின்ற ஒரு கூறு உடைமை முதலாக நடுக்கு ஈறுகக்கிடந்த அம்முப்பத் திரண்டும் ஈண்டு மெய்ப்பாடு எனப்படும்; ஈண்டு எண்ணப்பட்டவையே ஆண்டு அடங்குவனவும் உள ஆகலின் அப்பொருண்மைய அல்லாத இடத்து என்றவாறு.

**1** உடைமை :

செல்வம். அது நுகர்ச்சியாயின் உவகைப் பொருளாம். இஃது அன்னதன்றி, நுகராதே அச்செல்வம் தன்னை நினைந்து இன்புறுதற்கு ஏதுவாகிய பற்றுள்ளம்; அஃதாவது நதிமேல் நின்ற மரம் போலச் செல்வம் உடைமையான் வரும் மெய்வேறுபாடு.

**2** இன்புறல் :

அவ்வுடைமையை நினையுந்தோறும் இடையிட்டுப் பிறக்கும் மனமகிழ்ச்சி.

3 நடுவுநிலை :

ஒன்பது சுவைகளுள் ஒன்றெனா நாடகநிலையுள் வேண்டப்படும் சமநிலை; அஃதாவது 'செஞ்சாந்து எறியினும் செத்தினும் போழினும்-நெஞ்சுஓர்ந்து ஓடா நிலைமை' (பழமொழி. 95) அது காமம் வெகுளி மயக்கம் நீங்கினோர் கண்ணே நிகழ்வது. இது சிறுவரவிற்று ஆக-லான் இவற்றோடு கூறினர்.

4 அருளல் :

மக்கள் முதலிய சுற்றத்தாரை அருளுதல். அது 'அரிதாய அறன்எய்தி அருளியோர்க்கு அளித்தலும்' கலி. 11. என்றாற்போல வருவது. ஆண்டை, (206) கருணையினை அழுகை என்றமையின், இஃது அதனோடு அடங்காது.

5 தன்மை :

சாதித்தன்மை; அவையாவன—பார்ப்பாராயின் குந்தி மிதித்துக் குறுநடை கொண்டு வந்து தோன்றலும், அரசராயின் எடுத்த கழுத்தோடும் அடுத்த மார்போடும் நடந்து சேறலும், இடையராயின் கோல்கையும் கொடு-மடி உடையும் விளித்த விளையும் வெண்பல்லுமாகித் தோன்றுதலும் என்று இன்னோரன்ன வழக்கு நோக்கிக் கொள்க.

6 அடக்கம் :

உயர்ந்தோர் முன் அடங்கி ஒழுகும் ஒழுக்கம். அவை பணிந்த மொழியும் தணிந்த நடையும் தானை மடக்க-லும் வாய்புதைத்தலும் முதலாயின.

7 **வரைதல் :**

காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம். அவை பார்ப்பாராயின் முத்தீ வேட்டலும், புலவும் கள்ளும் முதலாயின கடிதலும் என்று இன்னோரன்ன கொள்க. வரைதல் தொழிலாகலான், இது தன்மை எனப்படாது.

8 **அன்பு :**

அருட்கு முதலாகி மனத்து நிகழும் நேயம். அஃது உடையார்க்குப் பிறன்கண் துன்பம் கண்ட வழிக் கண்ணீர் விழும் ஆதலின், அவ்வருளானே அன்புடைமை விளங்கும் என்பது.

இவை எல்லாம் தத்தம் மனத்தின் நிகழ்ச்சியை வெளிப் படுப்பன ஆதலின் மெய்ப்பாடு எனப்பட்டன. இனி வருகின்றவற்றிற்கும் இஃது ஒக்கும்.

9 **கைம்மிகல் :**

ஒழுக்கக்கேடு. அது சாதித்தருமத்தினை நீங்கினமை தன் உள்ளநிகழ்ச்சியானே பிறர் அறியுமாற்றால் ஒழுகுதல்.

10 **நலிதல் :**

பிறருக்கு இன்னா செய்து நெருங்குதல். அது தீவினைமாக்கள்கண் நிகழும். அவரைக் கண்டு அச்சம் எழுந்த தாயின் அஃது அச்சத்தினுள் அடங்கும் ஆதலின், அஃதன்று இது என்பது.

11 **சூழ்ச்சி :**

சுழற்சி; சூழ்வருவானைச் சுழல்வரும் என்ப ஆகலின். அது வெளிப்படுவதொரு குறிப்பு அவன்கண் தோன்றின் அதுவும் மெய்ப்பாடு; அஃதாவது மனத் தடுமாற்றம்.

12 வாழ்த்தல் :

பிறரால் வாழ்த்தப்படுதல். வாழ்த்தல் பிறன்வினை அன்றோ எனின், ஒருவனை ' நீடு வாழ்க ' என்று வாழ்த்தல் பிறன்வினை ஆயினும், அதனால் வாழ்விக்கப்படுதலின் அவ்வாறு கூறல் அமையும் என்பது.

13 நாணுதல் :

நாண் உள்ளம் பிறருக்கு வெளிப்பட நிகழும் நிகழ்ச்சி.

14 துஞ்சல் :

உறக்கம். அது நடந்து வருகின்றான்கண்ணும் விளங்கித் தோன்றலின் அதுவும் மெய்ப்பாடு எனப்பட்டது.

15 அரற்றல் :

அழுகை அன்றிப் பலவும் சொல்லித் தன்குறை கூறுதல். அது காடு கெழு செல்விக்குப் பேய் கூறும் அல்லல் போல, வழக்கினுள்ளார் கூறுவன.

16 கனவு :

வாய் வெருவுதல்; அதனானும் அவன் உள்ளத்து நிகழ்கின்றது ஒன்று உண்டு என்பது அறியப்படும்.

17 முனிதல் :

வெறுத்தல்; அஃது அருளும் சினமும் இன்றி இடைநிகர்த்தாதல். ' வாழ்க்கை முனிந்தான் ' எனவும்,

' உறையுள் முனியும்அவன் செல்லும் ஊரே.'
புறநா 96

எனவும் சொல்லுப ஆகலின்.

18 நினைதல் :

விருப்புற்று நினைதல்; நின்னை மிகவும் நினைத்தேன் என்பது வழக்காதலின். அந்நினைவுள்ளம் பிறருக்குப் புலனாதலின் மெய்ப்பாடாயிற்று.

19 வெரூஉதல் :

விலங்கும் புள்ளும்போல வெருவிநிகழும் உள்ள நிகழ்ச்சி. அஃது அஞ்ச வேண்டாதன கண்ட வழியும் கடிதின் பிறந்து மாறுவது ஒருவெறி.

20 மடிமை : —சோம்பு.

21 கருதல் : —மறந்ததனை நினைத்தல்.

22 ஆராய்ச்சி :

ஒரு பொருளை நன்று தீது என்று ஆராய்தல்.

23 விரைவு :

இயற்கைவகையான் அன்றி ஒரு பொருட்கண் விரைவு தொழில்பட உள்ளம் நிகழும் கருத்து.

24 உயிர்ப்பு :

வேண்டிய பொருளைப் பெறுதவழிக் கையறவு எய்திய கருத்து. அது நெட்டுயிர்ப்புக்கு முதலாகலின், அதனை யும் உயிர்ப்பு என்றார் என்பது.

25 கையாறு :

அவ்வுயிர்ப்பும் இன்றி வினை ஒழிந்து அயர்தல்.

26 இடுக்கண் :

மலர்ந்த நோக்கம் இன்றி, மையல் நோக்கம் படவரும் இரக்கம்.

27 பொச்சாப்பு :

அற்றப்படுதல்; அஃதாவது பாதுகாத்துச் செல்கின்ற பொருட்கண் யாதானும் ஓர் இகழ்ச்சியான் இடையறவு படுதல்.

28 பொறாமை :

அழுக்காறு; அஃதாவது பிறர் செல்வம் கண்டவழி வேண்டாதிருத்தல்.

29 **வியர்த்தல் :**

பொறுமை முதலாயின பற்றி மனம் புழுங்குதல்.

30 **ஐயம் :**

ஒரு பொருள் மேல் இருபொருள்தன்மை கருதி வரும் மனத்தடுமாற்றம்.

31 **மிகை :**

கல்லாமையும் செல்வமும் இளமையும் முதலாக வரும் உள்ள மிகுதி.

32 **நடுக்கம் :**

அன்பும் அச்சமும் முதலாயின உடம்பில் புலப்படுமாற்றுன் உள்ளம் நடுங்குதல். புதல்வற்குப் பிணி இல்வழியும் எவனுங்கொல் என்று நடுங்குதல் அன்பால் நடுங்குதலாம்; அச்சம் என்னும் சுவை பிறந்ததன் பின்னர் அதன்வழித் தோன்றிய நடுக்கம் அச்சத்தால் தோன்றிய நடுக்கமாம் என்று உணர்க.

மற்று, இவற்றை எண்ணிய மாத்திரை அல்லது இலக்கணம் கூறிற்றிலர், சொல்லின் முடியும் இலக்கணத்த ஆகலின். உதாரணம் இக் கூறியவாற்றுன் வழக்கு நோக்கியும் செய்யுள் நோக்கியும் கண்டு கொள்க.

207

**விளக்கம்**

இந் நூற்பா தொல்காப்பியப் பொருட்படல 260 ஆம் நூற்பா, உரை பேராசிரியர் உரைத்த உரையே.

நதிக்கரையில் நின்ற மரம் தன்னை ஒட்டி நீர் நிரம்ப இருப்பினும் தான் நுகரும் அளவே நுகர்தல் அன்றி மிகுதியாக நுகர்தல் இயலாதது ஆயினும் நதிக்கரையில் நிற்கும் சிறப்புடையது; அதுபோலத் தன்னிடத்து உள்ள மிகுந்த

செல்வத்தால் தான் நுகரலாம் அளவே நுகர்ந்து, மிகுதியான செல்வம் இருக்கிறது என்ற உள்ள நிலையே ' நதிமேல் நின்ற மரம் போல ' என்பதன் விளக்கமாம்.

' செஞ்சாந்து .... .... நிலை ' —

சந்தனம் பூசியதனால் மகிழ்ச்சியும் வெட்டிச் செதுக்கியதனால் துன்பமும் கொள்ளாது எப்பொழுதும் ஒரே பெற்றியராய் இருக்கும் நிலை.

அருளியோர் — நம்மால் அருள்செய்யத் தக்கார்.

தன்மை - குந்தி மிதித்து - நெடுந்தொலைவு செல்லுங்கால் இடையிடைத் தங்கி மெல்லநடந்து; அழுந்த மிதியாது மெல்ல மிதித்து என்பதும் ஆம்.

கோற்கை- நிரைகளை ஓட்டுதற்குரிய கோலை வைத்திருக்கும் கை.

கொடுமடி - இலை முதலியன இடுதற்கு விடும் வளைந்த மடி.

வீளை - நிரைகளை அழைப்பதற்கு ஒலிக்கும் சீழ்க்கை.
வெண்பல் - தம்பலம் சுவைக்காத பற்கள்.

தானை மடக்கல்—ஆடையை அலைய விடாது மடக்கிக் கொள்ளுதல்.

காடுகெழு செல்விக்குப் பேய் கூறுவன பரணிநூல்களில் ' பேய் முறைப்பாடு ' என்ற பகுதியான் அறியலாம்.

' உறையுள் .... .... ஊரே ' —

அதியமான் படையெடுத்துச் செல்லும் ஊர்களில் தங்கி இருத்தலை ஊர்மக்கள் வெறுப்பர்.

உயிர்ப்பு — செயலற்று மூச்சுவிடுதல்.
மலர்ந்த நோக்கம் — தெளிந்த பார்வை.

மையல் நோக்கம் — மயக்கம்கொண்ட பார்வை.

சொல்லின் ....... முடித்தல் - கூறிய அளவிலேயே பொருள் புலனாகுமாறு அமைத்தல்.

வியபசாரிபாவம் எனப்படும் நிலையில்லாத மெய்ப்பாடு-கள் முப்பத்துமூன்று என்று பரதநூலார் கூறினர். அவர் கூறியவற்றுள் ஸ்மிருதி, விபோதம் என்ற இரண்டனையும் நினைதல் என ஒன்றாக அடக்கித் தொல்காப்பியனார் நிலையில்லா மெய்ப்பாடுகள் முப்பத்திரண்டு என்று குறிப்பிட்டதை இந்நூலாசிரியரும் கொண்டுள்ளார். இவற்றின் பொருள் வேறுபாடுகள் சிலசில உள.

உடைமை — ஔத்சுக்யம்.

இன்புறல் — ஹர்ஷம்.

நடுவுநிலை — த்ருதி.

அருளல்—அருளால் விளையும் துக்கமாகிய விஷாதம்.

தண்மை—தைன்யம்—எளிமை. சாதித்தன்மை என்று பொருள்கொள்வது ஆசாரம் ஆவது அல்லது மெய்ப்பாடு ஆகாது.

அடக்கம்—நிர்வேதம்; தன் அறிவு அடங்கி ஒடுங்கும் நிலை. உயர்ந்தோர் முன் அடங்கி ஒழுகுதல் தேசாசாரம் ஆவது அல்லது மெய்ப்பாடு ஆகாது.

வரைதல்—அவகித்தம்; வெளிப்படுவது புலப்படாது நீங்கி ஒளித்தல்.

அன்பு —சபலதை.

கைம்மிகல்—வெறிகொண்டார் செயலாகிய உன்மாதம்.

நலிதல்—நோயால் வருந்துதலாகும் வியாதி.

சூழ்ச்சி—கள் முதலிய உண்டார் செயலாகும் மதம்.

வாழ்த்தல்—பெருவலி உள்ள இடத்து நிகழும் உக்ரதை.

நாணுதல்—வரீடை.

துஞ்சல்-நித்திரை. அரற்று-க்லானி. கனவு-ஸ்வப்னம்.

முனிதல்—அமர்ஷம்.

நினைதல்—ஸ்மிருதி.

வெரூஉதல்—சங்கை.

மடிமை—ஆலஸ்யம்.

ஆராய்ச்சி—மதி.

விரைவு—ஆவேகம்.

உயிர்ப்பு—ஜடதை.

கையாறு—மரணம்.

இடுக்கண்—சிரமம்.

பொச்சாப்பு—அபஸ்மாரம்.

பொறாமை—அசூயை.

ஐயம்—விதர்க்கம்.

மிகை—கருவம்.

நடுக்கம்—திராஸம்.

இவ்வாறு பரத நூலார் கூறியன இவருக்கும் உடன்பாடாதல் அறிக.

ஒத்த நூற்பா

முழுதும் — தொல். பொ. 260

207

## அகப்பொருள் மெய்ப்பாடுகள்

580 புகுமுகம் புரிதல்[1] பொறிநுதல் வியர்த்தல்[2]
நகுநயம் மறைத்தல்[3] சிதைவுபிறர்க்கு இன்மை[4]
கூழை விரித்தல்[5] காதுஒன்று களைதல்[6]
ஊழ்அணி தைவரல்[7] உடைபெயர்த்து உடுத்தல்[8]
அல்குல் தைவரல் அணிந்தவை திருத்தல்[10]
இல்வலி உறுத்தல்[11] இருகையும் எடுத்தலோடு[12]

பாராட்டு எடுத்தல்[13] மடம்தப உரைத்தல்[14]
ஈரம்இல் கூற்றம் ஏற்றுஅலர் நாணல்[15]
கொடுப்பவை கோடல்[16] உளப்படத் தொகைஇத்
தெரிந்துடம் படுதல்[17] திளைப்புவினை மறுத்தல்[18]
கரந்திடத்து ஒழிதல்[19] கண்டவழி உவத்தல்[20]
புறம்செயச் சிதைதல்[21] புலம்பித் தோன்றல்[22]
கலங்கி மொழிதல்[23] கையறவு உரைத்தல்[24] எனக்
காட்சிமுதல் ஆறையும் கண்ணிஒன்று ஈரிரண்டு
ஆட்சிபெற வருநா லாறுமெய்ப் பாடும்
அன்ன பிறவும் அகன்ஐந் திணைக்கண்
துன்னும் என்ப துணிந்திசி னோரே.

இஃது அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவாகி வரும் மெய்ப்பாடு எல்லாம் கூறி, இனி அகத்தின் ஐந் திணைக்கண் பெரும்பான்மையும் களவிற்குச் சிறந்து காட்சி முதலிய அவத்தை ஆறினையும் பற்றி ஒன்றற்கு நான்கு நான்காகி வரும் மெய்ப்பாடு இருபத்து நான்கு உள என்கின்றது.

(இ-ள்) புகுமுகம் புரிதல் முதலாகக் கையறவு உரைத்-தல் ஈறாகக் காட்சி முதலிய ஆறு அவத்தையினையும் பற்றி ஒரோர் அவத்தை நான்கு நான்கு பொருந்துதல் உளவாக வரும் இருபத்துநான்கு மெய்ப்பாடும் அவைபோல்வன பிறவும் அகன் ஐந்திணைக்கண் பொருந்தும் என்று கூறுவர் தெளிந்தோர் என்றவாறு.

'ஆட்சிபெற' என்றமையான், ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழிக் கரந்து ஒழுகும் உள்ளநிகழ்ச்சி பெண்-பாலது ஆகலான் ஈண்டுக் கூறுகின்ற மெய்ப்பாடு தலைமகள் கண்ணே சிறந்தன என்பதூஉம், அவற்றுள் புகுமுகம் புரிதல் முதலிய பன்னிரண்டும் புணர்ச்சி நிகழ்வதற்கு முன்

னும், பாராட்டெடுத்தல் முதலிய பன்னிரண்டும் புணர்ச்சி நிகழ்ந்த பின்னும் நிகழும் என்பதூஉம், அவைதாம் ஒன்றற்கு ஒன்று நிமித்தமாய்த் தொடர்ந்து வரும் என்பதூஉம், அங்ஙனம் ஒன்றன்பின் ஒன்று தொடர்ந்து வருங்கால், உயிர்மெலிவிடத்து இடையறவு படவும் நிகழும் என்பதூஉம் கொள்க.

இன்னும் அதனானே, கைக்கிளை பெருந்திணைக்கும் இவை வைத்த முறையானே வரையறுத்துக் கூறப்படாது, வருதற்கு உரியன வந்துழிக் கொள்ளப்படும் என்பதூஉம் கொள்க.

## விளக்கம்

காட்சி, வேட்கை, உள்ளுதல், மெலிதல், ஆக்கம்செப்பல், நாணுவரைஇறத்தல் என்ற ஆறு அவத்தைகளுக்கும் புகுமுகம் புரிதல் முதலிய இருபத்துநான்கும் ஒவ்வொன்றற்கும் நந்நான்காகக் கோடல் இவர் கருத்து என்பது. நாணுவரை இறத்தலைக் கடந்த நான்கு அவத்தைகளும் தலைவிக்கு அகன் ஐந்திணைக்கண் ஆகா என்பது.

'வினை உயிர் மெலிவிடத்து இன்மையும் உரித்தே.' (தொல். பொ. 268) என்பதனான். ஆற்றாமை வருங்கால் இம் மெய்ப்பாடுகள் இடையறவு படவும் நிகழும் என்பது.

> 'அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
> மன்னிய வினைய நிமித்தம் என்ப.' தொல். பொ. 267

என்பதன் உரையில் இவை கைக்கிளை பெருந்திணைக்கண் ஏற்ற பெற்றி வருதலைப் பேராசிரியர் குறிப்பிட்டுள்ளார்.]
அவற்றுள்,

**1 புகுமுகம் புரிதல் :**

ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழித் தன்னை அவன் நோக்குதற்கண் விரும்பும் உள்ள நிகழ்ச்சி.

புகுதல் - தலைமகன் நோக்கிய நோக்கு எதிர் தான் சென்று புகுதல்; முகம் - அங்ஙனம் தான் புகுதற்கு இடமாகிய நோக்கு; நோக்கெதிர் நோக்குதலை முகம் நோக்குதல் என்ப ஆகலின் நோக்கினை முகம் என்றார் என்பது. புரிதல் - மேவுதல். அஃதாவது தலைமகன் காண்டலைத் தலைமகள் வேட்டல் என்றவாறும். மற்று, இது தலைமகற்கு உரித்து அன்றோ எனின், அவன் தான் காண்பின் அல்லது, தற்காண்டலை நயவான், அது தலைமை அன்று ஆகலின். அது,

'யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்.' குறள். 1094

என வரும்,

2 பொறிநுதல் வியர்த்தல் :

தலைமகன் தன்னை நோக்கியவழி உட்கும் நாணும் ஒருங்கு வந்து அடைதலின், வியர்ப் பொறித்த நுதலாள் ஆதல். அது,

'பெரும்புழுக்கு உற்றநின் பிறைநுதல் பொறிவியர்
உறுவளி ஆற்றச் சிறுவரை திறவென' அகநா. 136

என வரும்.

இம்மெய்ப்பாடும் தலைமகற்கு உரித்தன்று, உட்கும் நாணும் அவற்கு இன்மையின்.

3 நகுநயம் மறைத்தல் :

அதன்பின்னர்த் தலைமகன்கண் தோன்றிய குறிப்புக்களான் நகுதற்கு ஏதுவாகிய நயனுடைமை மனத்தின்கண் பிறந்தவழியும் நகாது நிற்றல். அது,

'முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதொன் றுண்டு.' குறள் 1274

எனவரும். இது மடமையால் தோன்றிய நகை ஆகலின் இது மறைத்தலும் தலைமகற்கு உரித்தன்று. எனவே, அவற்காயின் நகை தோன்றப்பெறும் என்பதாம்.

4 சிதைவு பிறர்க்கு இன்மை :

அங்ஙனம் நகுநயம் மறைத்தவழியும் உள்ளம் சிதைந்து நிறை அழியும் ஆகலின், அச்சிதைவு புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினை நிறுத்துதல். அது,

‘ அகம்மலி உவகையள் ஆகி முகன்இகுத்து
ஒய்யென இறைஞ்சி யோளே.’ அகநா. 86

எனத் தலைமகன் அறிய மெய்ப்பட்டது என்பது. இதுவும் தலைமகற்கு உரித்தன்று, தன் சிதைவு உணர்த்தின் அல்லது மறைக்குந்துணை சிதைவு இன்மையின்; என்னை ?

‘ பெருமையும் உரனும் ஆடூஉமேன.’ தொல் பொ. 93

என்ப ஆகலின்.

இனி, இவை நான்கும் முறையானே ஒருங்கு வந்த செய்யுள் வருமாறு :

‘ யான்தற் காண்டொறும் தான்பெரிது மகிழாள்
வாணுதல் வியர்ப்ப நாணினள் இறைஞ்சி
மிகைவெளிப் படாது நகைமுகம் கரந்த
நன்னுதல் அரிவை தன்மனம் சிதைந்ததை
நீஅறிந் திலையால் நெஞ்சே
யான்அறிந் தேன்அது வாயா குதலே.’

எனவரும்.

இவை நான்கும் முதல் அவத்தைக்கண் நிகழ்வன.

விளக்கம்

புகுமுகம் புரிதல் — தலைவன் பார்வைக்குஎதிர் தலைவி சென்று நிற்றல். நோக்கினை முகம் என்பது,

'தாம்உகக்கும் தம்கையில் சங்கமே போலாவோ
யாம்உகக்கும் எம்கையில் சங்கமும் ஏந்திழையீர்
தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்
ஆமுகத்து நோக்காரால் அம்மனே அம்மனே.'

என்ற நாச்சியார் திருமொழியானும் உணர்க.

தலைவன் தான் தலைவியைக் காண விரும்புவது சிறப்பே யன்றித் தன்னைத் தலைவி காணவிரும்புவது சிறப்பன்று.

'யான் .... .... நகும்' —

'யான் தன்னை நோக்குங் காலத்துத் தலைவி நாணத்தால் தலைகுனிந்திருப்பாள். யான் நோக்காத போது அவள் என்னை நோக்கி முறுவலிப்பாள்' என்று தலைவன் தான் காண்பதைத் தலைவி உணராதவாறு அவள் செயல் கண்டு கூறியது.

'பெரும்புழுக்கு .... .... திற என' —

மிகவும் காற்றின்மையால் புழுங்குதலை உற்ற உனது பிறை போன்ற நெற்றியில் பொறித்த வியர்வையைப்போக்க யான் காற்றை விசிறுமாறு சிறிதளவு முகத்தைப் புதைத்த துணியை நீக்குவாயாக' என்று, திருமணம் நிகழ்ந்தபின் முதல்நாள் இரவில், வெட்கத்தால் உடல் முழுதும் போர்த்துப் படுக்கையில் தலைவி கிடந்தபோது தலைவன் கூறியது இது.

இதன்கண், நெற்றியில் புழுக்கத்தால் வியர்வை தோன்றுவதாகவே கூறப்பட்டுள்ளது. புழுக்கத்தால் உடல் முழுதும் வியர்க்கும்; அவ்வாறாக நெற்றியை மட்டும் சுட்டியது, பண்டு தன்னை அவள் புகுமுகம் புரிந்தவழிப் பொறி நுதல் வியர்த்தலைக் கண்டான் ஆதலின், அதனை உட்கொண்டு மறைத்த வாய்பாட்டானே சொன்னான் எனினும், அவள் நுதலைச் சுட்டிக் கூறற்குப் பொறிநுதல் வியர்த்தலே காரணமாம் என்பது குறித்து உணரப்படும்.

நுதல் வியர்ப்பொறித்தல் என்பது பொறிநுதல் வியர்த்-தல் என்று கூறப்பட்டுள்ளது.

' முகை .... .... உண்டு '—

' மொட்டிற்குள் மணம் பொதிந்திருப்பதுபோல, இவள் முறுவலுக்குள்ளும் உடன்பாட்டுக் குறிப்பு பொதிந்துள்ளது.' தன் உடன்பாட்டுக் குறிப்பைத் தலைவன் உணராதவாறு மறைக்க முயலும் தலைவி தன் முறுவலையும் அடக்கிக்கொள்ள முயல்வாள் என்பது.

' அகம்மலி .... .... இறைஞ்சியோளே '—

முதல்நாள் இரவில் உடல் முழுதும் போர்த்துக்கொண்டு தலைவி படுக்கையில் கிடக்கத் தலைவன் முகத்தை மூடிய துணியை நீக்க, அவள் அஞ்சி உயிர்க்க, அவன் ' நின் உள்-ளத்துப் பட்டதனை மறையாது உரை ' என்றுனுக, மனத்தில் உவகைமிக முகத்தைத் தாழ்த்தி வணங்கினுள் என்பது. தன் மனத்துப்பட்ட சிதைவை முகம் காட்டுமாதலின் அதனை அவன் நன்கு காணுதவாறு தலை குனிந்து கொண்டாள் என்பது. தலைவன் ஒருவன் மாத்திரம் தலைவியது மனம் சிதைந்ததை உணர்தல் இயலும்.

தலைவன் தனக்கு ஏற்பட்ட சிதைவை மறைக்காது வெளிப் படையாகக் கூறிவிடுவான், அஃது ஆண்பாற்கு இயல்பு ஆதலின்.

' யான்தன் ... .... வாயாகுதலே ' —

' யான் தன்னைக் காணும்தோறும் தான் மகிழ்ச்சியைப் பெரிதாக வெளிக்காட்டாது, ஒளி பொருந்திய நெற்றியில் வியர்வை துளித்து எழ, நாணி இறைஞ்சி, தன் முறுவலை வெளிப்படுத்தாது மறைத்துக் கொண்ட நல்ல நெற்றியை உடைய தலைவியின் மனம் சிதைந்த நிலையை, மனமே ! நீ அறிந்தாய் அல்லை. அஃது உண்மையாக ஏற்பட்டதை யான் அறிவேன் ' என்றவாறு.

இஃது இயற்கைப் புணர்ச்சியால் தலைவியைக் கூடி நீங்கிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொற்றது.

'தான் பெரிது மகிழாள்' எனவே, சிறிது மகிழும் என்பது புகுமுகம் புரிதல். 'வாள் நுதல் வியர்ப்ப' என்பது பொறிநுதல் வியர்த்தல். 'நகை முகம் கரந்த' என்பது நகு நயம் மறைத்தல். 'அரிவை தன் மனம் சிதைந்தது' என்பது சிதைவு பிறர்க்கு இன்மை—எனக் கொள்க.

ஒத்த நூற்பா

'புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்
நகுநயம் மறைத்தல் சிதைவு பிறர்க்கு இன்மை
தகுமுறை நான்கே ஒன்றுஎன மொழிப.'

தொல். பொ. 261 ]

5 கூழை விரித்தல் :

தன் உள்ளத்து நிகழ்ந்த வேறுபாட்டினை, அக்காலத்துத் தலைமகள் நிறை உடையள் ஆதலால் கரந்து ஒழுகற் பாலளே; அங்ஙனம் கரக்குங்கால், தன் வயத்தது ஆகிய உடம்பு பற்றி வரும் வேறுபாட்டினைத் தாங்கும்; அங்ஙனம் தாங்குங்கால், உடம்பொடு தொடர்பு உடையதாகி வேறுபட்ட தலைமயிரினதுமுடி உள்ள நெகிழ்ச்சியானே தன் வயத்தது அன்றி நெகிழ்தல். அக் கூழைவிரிதற்கு ஏதுவாயினுள் இவள் ஆகலின், அதனைச் சினை வினையான் அன்றி முதல் வினையால் கூறினர் என்பது.

6 காது ஒன்று களைதல் :

உறுப்பிடைப் பூட்டுறப் புனையாது பெய்து வைத்தன ஆதலான், தோடு முதலாயின எளிதின் வீழ்வன ஆயின. மற்று, அவை வீழ்தற்கு ஏதுவாகிய நெகிழ்ச்சி நிரம்பத் தோன்றாது இடை நிகர்த்தது ஆதலின், ஒன்று நிற்ப ஒன்று வீழ்தல் எனப்பட்டது. இது கூழை

போலாது ஊறுஉணர்வு உடைய உறுப்பு ஆகலின், காதின் வேறுபாட்டினைக் கூழை வேறுபாட்டின் பின் வைத்தார்; என்னை ? கூழையின் காது தனக்கு உறவு உடைமையின்.

7 ஊழ்அணிதைவரல் :

அக் கூழையும் தோடும் போலாது பெய்யப்படும் முறைமைய ஆகிய வளைகளை முன்கைமேல் இறுகச் செறித்தலும் விரல் செறியினைத் திருத்தலும் முதலாயின. இவை தோடுபோலச் செறிவு இல்லன அன்மையின், அவற்றுப் பின் வைத்தார்,

8 உடைபெயர்த்து உடுத்தல் :

உடுத்த உடையினைப் பலகாலும் அழித்து உடுத்தல். அது கழல்தொடி போலாது செறிவு உடைமையின் அவ்வுடைநெகிழ்ச்சியைத் தொடி நெகிழ்ச்சிக்குப் பின் வைத்தார். மற்று,

‘ தொடி நெகிழ்ந் தனவே தோள்சா யினவே ’
குறுந். 239

எனப் பிரிவின்கண் வந்த வேறுபாட்டினை ஈண்டுக்கூறுர்; அவை,

‘ வினைஉயிர் மெலிவிடத்து இன்மையும் உரித்தே ’
தொல். பொ. 268

என்ப ஆகலின், உயிர் மெலிவிடத்து இடையறவுபட நிகழ்ந்தன ஆகலான் என்பது.

இவற்றிற்குச் செய்யுள் :

‘ விண்உயர் விறல்வரைக் கவாஅன் ஒருவன்
கண்ணின் நோக்கியது அல்லது தண்ணென

உரைத்தலும் இல்லை மாதோ அவனே
வரைப்பால் கடவுளும் அல்லன் அதற்கே
ஓதி முந்துறக் காதுஒன்று நெகிழ
நிழல்அவிர் மணிப்பூண் நெஞ்சொடு சழலத்
துகிலும் பன்முறை நெடிதுநிமிர்ந் தனவே
நீஅறி குவைஅதன் முதலே
யாதோ தோழிஅது கூறுமாறு எமக்கே.'

எனவரும். கவாஅன் - கள்வன்.

இவை நான்கும் இரண்டாம் அவத்தைக்கண் நிகழ்வன.

## விளக்கம்

கூழை — மயிர்முடி. மயிர்முடி அடிப்புறம் உடலோடு தொடர்புடைத்தாயினும் நுனிப்புறம் தொடர்பு இன்றி இருத்தலின், அதன்நெகிழ்ச்சியைப் போற்றுதல் அத்துணை எளியதன்று. தலைவியின் உள்ளநெகிழ்ச்சியானே கூந்தல் நெகிழ்ந்தமையின் கூழை விரிதலாகிய சினைவினையை விரித்-தல் எனத் தலைவிமேல் ஏற்றிக் கூறினார்.

காதில் செருகப்படும் குழைகளில் ஒன்று, பின் உள்ள-நெகிழ்ச்சியானே நெகிழ்ந்தது; பின்னர் நன்கு பொருத்தமாகப் பெய்யப்படும் வளையல்களும் மோதிரங்களும் கழலத் தொடங்கின; பின்னர் செறிவாகப் புனையப்பட்ட ஆடை நெகிழ்வதாயிற்று. அம் முறைபற்றி இம் மெய்ப்பாடுகள் வைக்கப்பட்டன.

தொடி நெகிழ்தல் கற்புக்காலத்தும் உண்டேனும் இன்ன மெய்ப்பாட்டின்பின் இன்னது நிகழும் என்ற வரையறை கற்புக்காலத்து இன்மையின் இம் மெய்ப்பாடுகள் களவிற்கே பெரிதும் உரிமை உடையவாயின.

'விண் உயர் .... .... கூறுமாறு எமக்கே' —

'வானளாவிய சிறந்த மலையில் கள்வன் ஒருவன், என்னைக் கண்ணால் நோக்கினானேயன்றி, மனங்குளிர ஒரு சொல்லும் உரைக்கவில்லை. அவன் இம்மலையகத்து விரும்பி வீற்றிருக்கும் கடவுளும் அல்லன். அதற்கே என் மயிர்முடி முதலில் நெகிழ, காதுகளில் அணிந்துள்ள தோடுகளில் ஒன்று நெகிழ, பின் ஒளி பொருந்திய அணிகலன்களும் மனத்தோடு கழல, ஆடையும் பன்முறை நெகிழத் தொடங்கிவிட்டது. அதன் காரணம் உனக்கே தெரியும். ஆதலின், அஃது யாது என்பதை எனக்கே கூறுவாயாக' என்ற இப்பாடல், தோழிக்குத் தலைமகள் அறத்தொடுநின்றது. இதன்கண் 'ஓதிமுந்துற நெகிழ' என்பது கூழை விரித்தல். 'காது ஒன்று நெகிழ' என்பது காது ஒன்று களைதல். 'நிழல் அவிர் மணிப்பூண் நெஞ்சொடு கழல' என்பது ஊழ் அணி தைவரல். 'துகிலும் பன்முறை நெடிது நிமிர்ந்தன' என்பது உடை பெயர்த்து உடுத்தல்.

ஒத்த நூற்பா

'கூழை விரித்தல் காதுஒன்று களைதல்
ஊழ்அணி தைவரல் உடைபெயர்த்து உடுத்தலோடு
ஊழி நான்கே இரண்டுஎன மொழிப.'

தொல். பொ, 210 ]

**9 அல்குல் தைவரல் :**

மேல் உடைபெயர்த்து உடுத்தவள் அது பெரிதும் நெகிழ்ந்து காட்டியதனைப் பாதுகாத்தல்.

**10 அணிந்தவை திருத்தல் :**

அங்ஙனம் பாதுகாத்தவள் உடை நெகிழ்ச்சியைப் போற்றிக் கடிசூத்திரம் முதலாயின திருத்தல்.

**11 இல்வலி உறுத்தல் ;**

அங்ஙனம் திருத்தினவள் புணர்ச்சியை வேண்டாதாள் போல வன்மை படைத்துக்கொண்டு செய்தல்; இல்வலி உறுத்தல்என்பதற்கு இற்பிறத்தலான தன்வலி தோன்ற நிற்றல் எனவும் சொல்லுப.

**12 இருகையும் எடுத்தல் :**

அங்ஙனம் படைத்துக்கொண்ட வலியானும் தடுக்கப் படாது, நிறை அழிதலின் கைகள் தாமே முயங்கல் விருப்பத்தரன் எழுவன போல்வதொரு குறிப்பு

இவை நான்கும் மூன்றும் அவத்தைக்கண் நிகழ்வன.

எடுத்துக்காட்டு :

'ஓதியும் நுதலும் நீவி யான்தன்
மாதர் மென்முலை வருடலின் கலங்கி
உள்ளத்து உகுநள் போல அல்குலின்
நெகிழ்நூல் கலிங்கமொடு புகும்இடன் அறியாது
மெலிந்திலள் ஆகி வலிந்துபொய்த்து ஒடுங்கவும்
யாம்எடுத்து அணைத்தொறும் தாம்இயைந்து எழுதலின்
இம்மை உலகத்து அன்றியும் நம்மை
நீள்அரி நெடுங்கண் பேதையொடு
கேள்அறிந் தனகொல்இவள் வேய்மென் தோளே.'

எனவரும்.

**விளக்கம்**

அல்குல் தைவரல் - உடை நெகிழ்ச்சியைப் போற்ற வயிற்றின் அடிப்பகுதியில் அதனைப் பிடித்துக்கொள்ளுதல்.

கடிசூத்திரம் - ஆடைமேல் அதன் நெகிழ்ச்சி போற்றி அணியும் அணிகலம்.

இல்வலி - இற்பிறத்தலான் உரிய வலிமை என்று பொருள் கூறுதல் இவ்விடத்துக்கு ஏலாது எனவும், சிதைவு பிறர்க்கு இன்மையின் முன்பே அது பயன்பட்டிருத்தல் வேண்டும் எனவும் பேராசிரியர் கொள்வர்.

'ஓதியும் நுதலும்' —

இஃது இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைமகன் தன்நிலை உரைத்தது.

'தலைவியின் மயிர்முடியையும் நெற்றியையும் தடவிக் கொடுத்து யான் அவள் காதல்தரும் மெல்லிய நகிற்காம்பு களை நெருடுதலினாலே மனம் நெகிழ்ந்தது போல இடையில் கட்டிய ஆடையும் நெகிழ வேற்றிடம் புகுதல் அறியாது, மன மெலிவை மறைத்துப் பொய்யாக வலிமை படைத்துக் கொண்டு தான் ஒடுங்கவும், யான் சென்று அணைக்குந் தோறும் இவள் மூங்கில் போன்ற மெல்லிய தோள்கள் தாமும் என்னைத் தழுவுதற்குப் பொருந்துதலின், இப்பிறப்-பில் மட்டும் அன்றிச் சென்ற பிறப்புக்களிலும் தலைவியோடு யான் தொடர்ந்து கொண்டுள்ள தொடர்பை அத்தோள்கள் அறிந்தன போலும்!'

இதனுள் 'உடம்பும் உள்ளத்து உகுநள்போன்றனள்' என்பது அல்குல்தைவரல்; அவ்வேறுபாட்டானே உடை சோருமாறு உடல்நிலை மாறுதலின்.

'அல்குலின் நெகிழ்நூல் கலிங்கம்' என்பது அணிந் தவை திருத்தல்; அல்குலில் யாத்த நூலிற்கு நெகிழ்ச்சி கூறினமையின்.

'மெலிந்திலள் ஆகி வலிந்து பொய்த்து ஒடுங்கவும்' என்பது இல்வலி உறுத்தல்.

'யாம் எடுத்து அணைத்தொறும் தோள்தாம் எழுந்து இயைதலின்' என்பது இருகையும் எடுத்தல்.

'இம்மை உலகத்து அன்றியும் கேள் அறிந்தன' என்பது இருவர் அன்பும் எழுமையும் தொடர்ந்த அன்பு என்று கூறியவாறு.

ஒத்த நூற்பா

'அல்குல் தைவரல் அணிந்தவை திருத்தல்
இல்வலி உறுத்தல் இருகையும் எடுத்தலொடு
சொல்லிய நான்கே மூன்றுஎன மொழிப.'
தொல். பொ. 263 ]

**13 பாராட்டு எடுத்தல் :**

அங்ஙனம் பன்னிருவகை மெய்ப்பாடும் நிகழ்ந்தவழிப் புணர்ச்சி நிகழும் அன்றே. அதன்பின்னர்த் தலைமகனை இயற்பட நினையும் குறிப்பு. பாராட்டு என்னாது 'எடுத்தல்' என்றதனால், இதனை உள்ளம் எடுத்தல் மேற்கொள்க.

**14 மடம்தப உரைத்தல் :**

விளையாடும் பருவத்து நிகழ்ந்த அறிமடம் நீங்கிக் காமப்பொருட்கண்ணே சிறிது அறிவு தோன்றப் பாங்கிக்குச் சில கூற்றுமொழி கூறல்; மடந்தப உரைத்தற்கு ஏதுவாகிய கருத்து ஈண்டு மெய்ப்பாடு எனப்படும்.

**15 ஈரம் இல்கூற்றம் ஏற்று அலர் நாணல் :**

அங்ஙனம் அறிமடம் கெடச் சொல் பிறந்தவழி இன்றளவும் தமரால் கூறப்படாத கடுஞ்சொல் உளவாம் அன்றே! அவற்றை முனியாது ஏற்றுக்கொண்டு, 'புறத்தார்க்கு இது புலனாங்கொல்?' என்று நாணுதல்.

**16 கொடுப்பவை கோடல் :**

தலைமகனால் கொடுக்கப்பட்ட தழையும் கோதையும் தாரும் கண்ணியும் தோள்மாலையும் முதலாயின கொண்டு கையுறை பாராட்டுதல்.

இவை நான்காம் அவத்தைக்கண் நிகழ்வன.

இவற்றிற்குச் செய்யுள் :

‘ ஒருநாள் வந்து பலநாள் வருத்தும்
நின்னே போலும் நின்தழை என்வயின்
நிற்பா ராட்டியும் சொற்கொளல் இன்றியும்
யாய்எதிர் கழறலின் பேர்அலர் நாணியும்
மயல்கூர் மாதர்க்குத் துயர்மருந்து ஆயினும்
நோய்செய் தன்றால் தானே
நீதொடக் கரிதலின் ஓரிடத் தானே.’

எனவரும்.

### விளக்கம்

இவை புணர்ச்சிக்குப்பின் நிகழும் மெய்ப்பாடுகளாம்.

தலைவன் பெருமையைத் தலைவி தன் மனத்துக் கொள்வாளேயன்றித் தோழி முதலிய யாரிடத்தும் கூறாள். தலைவனுயின், தன் பாங்கனிடம் கூறவும் படும் என்பது.

மடம்தப உரைத்தல்-பிறை தொழ மறுத்தல் போல்வன-

‘ ஒருநாள் வந்து ’ —

இது தோழி கையுறை மறுத்தது.

‘ ஒரு நாள் வருதலினாலேயே நீ வாராத பலநாளும் எங்களைத் துன்புறுத்தும் உன்னைப் போலவே உன் தழையைக் கருதுதலால் என்னிடம் உன்னை இயற்பட மொழிந்தும், என் சொற்களைப் பண்டு போலக் கொள்ளாமலும், தாயின் வெகுளிச் சொற்களைப் பொறுத்து அலருக்கு நாணியும் மயக்கம் மிகும் தலைவிக்கு உன் தழை துயர் தீர்க்கும் மருந்து ஆயினும், நீ தொட்ட இடத்தில் உன் காமத்தீயால் அது கரிந்து காட்டுதலின் நோய் தருகின்றது ’ — இது முன்னொருகால் கையுறை ஏற்ற தோழி பின் ஒருகால் காரணம் காட்டி மறுத்தது.

'நிற்பாராட்டி' - பாராட்டெடுத்தல் 'சொற்கொளல் இன்றி' - மடந்தப உரைத்தல் 'பேர் அலர் நாணி, - அலர் நாணல். 'தழைதுயர் மருந்து, - கொடுப்பவை கோடல்.

ஒத்த நூற்பா

'பாராட் டெடுத்தல் மடந்தப உரைத்தல்
ஈரமில் கூற்றம் ஏற்றுஅலர் நாணல்
கொடுப்பவை கோடல் உளப்படத் தொகைஇ
எடுத்த நான்கே நான்குஎன மொழிப.'
தொல். பொ. 264 ]

17 **தெரிந்துடம்படுதல் :**

அங்ஙனம் கொடுப்பவை கோடல் நிகழ்ந்தவழி அவ்வொழுகலாறு புறத்தார்க்கு எல்லாம் ஐயமாகலின் அதன்வழித் தலைமகனைத் தலைமகள் கூடி ஒழுகும் இவ்வொழுகலாறு நிகழ்த்தவாற்றைப் பட்டாங்கு உணராதார், 'தலைமை செய்தனள் இவள்' எனவும், 'தகாத ஒழுக்கத்தினள் இவள்' எனவும் பல்லாற்றுனும் இவள்கண்ணே ஏதமிட்டுத் துணிந்தும் துணியாதும் உரைப்பார் ஆகலான், அதற்கு நாணி, 'இனி யாது கொல்லோ செயற்பாலது ?' என்று ஆராய்ந்து 'இவ்வொழுக லாற்றினை அறிவிப்பேங்கொல்? அறிவியேங் கொல் ?' எனத் தடுமாறிப் பின் ஒருவகையான், முழுவதூஉம் சொல்லாது, தன்குலத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பெண் தன்மைக்கும் ஏற்றவகையான் வேண்டுவன தெரிந்து கொண்டு, இன்னவாறுபட்டது என்று தோழிக்கு உடன் படுதலும், தோழியால் செவிலிக்கு உடன்படுதலும் என இன்னோரன்ன குறிப்பினைத் தெரிந்து உடன்படுதல்.

18 **திளைப்பு வினைமறுத்தல் :**

அங்ஙனம் தமர்க்குத் தான் உடன்பட்டதன் பின்னர்த் தலைமகனோடு பகலும் இரவும் பண்டு திளைத்தவாறு திளைத்தலை அச்சமும் நாணும் காரணமாக மறுத்தல்.

19 கரந்திடத்து ஒழிதல் :

அக்காலத்து இற்செறிக்கப்படுதலான் தான் அவனை மறுத்த ஏதத்திற்கு நாணியும், அஞ்சியும் அவற்கு வெளிப்படாது ஒழுகுதல். தன் இடத்தே தங்குதலை ' இடத்து ஒழிதல் ' என்றார்.

20 கண்டவழி உவத்தல் :

அங்ஙனம் கரந்து ஒழுகும் காலத்து அவனை ஒரு ஞான்று கண்டவழிக் கழிஉவகை மீதூர்தல்.

இவை நான்கும் ஐந்தாம் அவத்தைக்கண் நிகழ்வன.

இவற்றிற்குச் செய்யுள் :

' அறியாய் கொல்லோ நீயேதெறுவர
நோக்குதொறும் பனிக்கும் நெஞ்சமொடு இவளே
யாய்க்குஅறி வுறுஅலின் நின்எதிர் நாணி
மனைவயின் பிரியலள் மன்னே அதற்கே
நினைவிலள் இவள்என உரைத்தி
புனைதார் மார்ப காண்டியோ அதுவே.'

எனவரும்.

விளக்கம்

பட்டாங்கு - நிகழ்ந்தவாறு.

' அறியாய் கொல்லோ ' —

பகற்குறிக்கண் தலைமகளை இடத்து உய்த்துவந்து, தலைமகனை எதிர்ப்பட்டு நின்று தோழி வரைவுகடாய பாடல் இது.

' தலைவனே ! நீ அறியாயோ ! அஞ்சுதல் தோன்றத் தாய் பார்க்குந்தொறும் நடுங்கும் மனத்தோடு, தலைவி தாய்க்கு அறத்தொடு நின்றமையின், நின் எதிர் வருதற்கு

நாணங்கொண்டு, வீட்டைவிட்டு நீங்காது இற்செறிக்கப் பட்ட நிலையில் உள்ளாள். அதனை நோக்காது நீ ‘ தலைவி உன்னை விருப்புற்று நினைக்கவில்லை ’ என்கின்றாய். உன்னைக் காணுங்கால் அவள் உள்ளமகிழ்ச்சியை நோக்கிக்காண்.’ என்றவாறு.

‘யாய்க்கு அறிவுறலின்’ என்பது தெரிந்து உடம்படுதல்; என்னை ? அவள் நோக்குதொறும் பனித்தலின், அறிவுறுத் தாள் என்றமையின். ‘ நின் எதிர்நாணி ’ என்பது திளைப்பு வினைமறுத்தல்; என்னை ? ‘தமர்க்கு இம்மறையினை உரைத் தாள் ’ என்று நீ பேசுவாயே என்று நாணம் உற்றாள் என்றமையின். ‘மனைவயின் பிரியலள்’ என்பது கரந்திடத்து ஒழிதல். ‘புனைதார் மார்ப ! காண்டியோ அதுவே’ என்பது கண்டவழி உவத்தல்; என்னை ? ‘ நிற்கண்டவிடத்து நுதலும் தோளும் பசலை நீங்கியவாறு கண்டிலையோ ?’ என்னும் குறிப் பினால் கூறினமையின்.

ஒத்த நூற்பாக்கள்

‘ தெரிந்துடம் படுதல் திளைப்புவினை மறுத்தல்
கரந்திடத்து ஒழிதல் கண்டவழி உவத்தலொடு
பொருந்திய நான்கே ஐந்துஎன மொழிப ’

தொல். பொ. 215]

21 புறம் செயச் சிதைத்தல் :

பூவும் சாந்தும் பூணும் துகிலும் முதலாயின கொண்டு புறத்தே கோலம் செய்ய, அகத்தே சிதைவு உண்டாதல். மேல்நின்றது கண்டவழி உவத்தல் ஆகலானும், இது காணாதவழி நிகழ்கின்றது ஆகலானும் அதற்கு இனம் இன்றியும் அதன்வழித் தோன்றியது எனப்படும் ஆக லின் இஃது அதன்வழித்து ஆயிற்று என்பது.

22 புலம்பித் தோன்றல் :

அங்ஙனம் புனைந்த கோலம் துணையொடு கழியப் பெருமையின் புல்லென்று அழிந்த நெஞ்சினள் ஆகலான், எல்லாச் சுற்றத்தார்க்கும் இடைநின்றேயும், தனியள் என்று அறிவியா நிற்றல்.

23 கலங்கி மொழிதல் :

கையொடுபட்ட கள்வரைப் போலச் சொல்லுவனவற்றைத் தடுமாற்றம் தோன்றச் சொல்லுதல். அஃதாவது தன் மனத்து நிகழாநின்றன தன்னை அறியாமல் சில புலப்படச் சொல்லுதல் ஆயிற்று.

24 கையறவு உரைத்தல் :

கலங்காது சொல்லுங்கால் செயலறவு தோன்றச் சொல்லுதல்; அஃதாவது வன்புறை எதிரழிந்து சொல்லுவன போல்வன.

இவை நான்கும் ஆறும் அவத்தைக்கண் நிகழ்வன.

புறஞ்செயச் சிதைதல் முதலிய நான்கற்குச் செய்யுள் :

'இவளே, அணியினும் பூசினும் பிணிஉழந்து அசைஇப்
பல்கிளை நாப்பண் இல்கிளை போல
மொழிவகை அறியாள் பொழிகண் நீர்துடைத்து
யானே கையற அலமரும்
கூறுய் பெரும நிற்றேறு மாறே.'

எனவரும்.

விளக்கம்

தனியள் என்று அறிவியாநிற்றல் - தான் தலைவன் தொடர்புஅன்றித் தோழி முதலிய பிறர் தொடர்பை வெறுத்தமையின், தனித்திருப்பாளாக நெஞ்சத்துக் கருதுதல்.

‘ இவளே அணியினும் ’ —

இது தோழி தலைமகனை நெருங்கி வரைவு கடாயது.

பெரும ! தலைவிக்கு அணிகலன்களை அணிவித்தாலும் சாந்து முதலிய பூசினாலும் அவ்வனப்பைக் காண்டற்கு நீ இல்லையே என்று மனம் மெலிந்து, சுற்றத்தார் பலரிடைத் தான் இருப்பினும் ஒருவரும் இல்லாத தனியளைப் போலத் தன்னைக் கருதிக்கொண்டு, தடுமாற்றம் இல்லாது உரையாடும் நிலையை அறியாளாய், தான்உகுக்கும் கண்ணீரைத் தன்னோடு ஒன்றுபட்ட யானே துடைத்துச் செயலறவுபட அவள் மனம் சுழலுகிறாள். உன்னைத் தெளியும் வழிதான் யாதோ ?’ என்றவாறு.

‘அணியினும் பூசினும் பிணிஉழந்து அசைஇ’—புறம் செயச் சிதைதல். ‘ பல்கிளை நாப்பண் இல்கிளை போல ’ — புலம்பித்தோன்றல். ‘ மொழி வகை அறியாள் ’ — கலங்கி மொழிதல். ‘ யானே கையற அலம் வரும் ’ — கையறவு உரைத்தல்; என்னை ? தன் கண்ணீர் துடைத்தலும் ஆற்றாள் என்றமையின்.

ஒத்த நூற்பா

‘ புறம்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையறவு உரைத்தலொடு
புலம்பிய நான்கே ஆறுஎன மொழிப.’

தொல். பொ. 266

இனி, பேராசிரியர் “புகுமுகம் புரிதல் முதலிய நான்கும் தலைமகளனவே ஆகி ஓர் இனத்தவாயின. தலைவியைத் தலைமகன் பொருந்தியவழிக் கூழை விரித்தல் முதலிய நான்கும் நிகழ்ந்தமையின், அவை மேலனவற்றோடு சிறிது இடையறவுபட்டு நிகழ்ந்தன. அல்குல் தைவரல் முதலிய நான்கும் புணர்ச்சிக்கு மிகவும் இயையு உடைமையின் மேலனவற்றோடு ஒன்றாது வேறாயின. பாராட்டெடுத்தல் முதலிய நான்கும்

புணர்ந்து நீங்கியபின் நிகழ்ந்தமையின் அவையும் அவற்றின் சிறிது வேற்றுமைஉடைய. தெரிந்துடன்படுதல் முதலிய நான்கும் களவு வெளிப்படுத்தற்குறிப்பின் ஆதலின், மேலனவற்றோடு தழுவாது வேறாயின. காணாதவழி நிகழ்வன புறஞ்செயச் சிதைதல் முதலிய நான்கும் ஆதலின், இறுதியில் வைக்கப்பட்டன' என 24 மெய்ப்பாடுகளும் நந்நான்காக ஆறு நூற்பாக்களில் அமைக்கப்பட்டதன் காரணத்தைக் கூறியுள்ளார்.

இவையாவும் களவுக்காலத்து நிகழற்பாலன என்பதனையும், இவற்றிடைப் பெரிதும் இடையறவுபடாத தொடர்பையும் உட்கொண்டு இவர் இவற்றை ஒரே நூற்பாவில் அமைத்தார்.]

கையறவு உரைத்தலை ஈற்றுவைத்தார், களவொழுக்கத்தினுள் இதனின் ஊங்கு மெய்ப்பாடு கூறப்படாது என்றற்கு; என்னை ? கையறவுரை தோன்றியதன்பின் நிகழ்வன கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் மெய்ப்பாடு ஆகும்அன்றி, நற்காமத்திற்கு ஆகாமையின்; என்னை ? கையறவுரைத்தல் என்பது 'சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச் —செய்யா மரபின் தொழில்படுத்து அடக்குதலை ' எல்லையாக உடைமையின் அதனின் உம்பர்த் தோன்றுவன, மன்றத்து இருந்த சான்றவர் அறியத் தன் துணைவன் பெயரும் பெற்றியும் கூறி அழுதும் அரற்றியும் பொழுதொடு புலம்பியும், புள்ளொடு சொல்லியும் நிகழும் மெய்ப்பாடு ஆகலான், அவை நடுவண் ஐந்திணை எனப்பட்ட நற்காமத்திற்கு இலக்கணவகையான் ஏலா ஆகலின் என்பது. இக்கருத்தான் அன்றே அவத்தை பத்தும்பற்றி மெய்ப்பாடு கூறாது,

> 'காட்சிமுதல் ஆறையும் கண்ணிஒன்று ஈரிரண்டு
> ஆட்சி பெறவரும் நாலாறு மெய்ப்பாடும்
> அகன்ஐந் திணைக்கண் துன்னும்.' இ. வி. பொ. 33

என்றதூஉம் எனக் கொள்க.

[ஆறும் அவத்தையின் மேம்பட்ட பெருந்திணைத் தலைவி நிலையை 'ஏறிய மடல் திறம்' (இ. வி. பொ. 219) என்ற நூற்பா உரை விளக்கத்துள் காண்க.]

இனி, அன்னபிறவாவன, புகுமுகம்புரிதற்கண் தலைமகன் நோக்கியவழி ஒருவல்லிப் பொதும்பாரானும் மற்றொன்றானும் சார்பு பெற்று மறைதலும், அவை இல்லாதவழி இடர்ப்படுதலும் என்றாற்போல்வன அடங்குதலும்,

நகுநயம் மறைக்குங்கால் இதழ்மொக்குளுள் தோன்றுவது நகை எனப்படாது அதன்பாற் படுதலும்,

அமர்த்து நோக்காது அலமர நோக்குதலும் நிலங்கிளைத்தலும் சிதைவுபிறர்க்கு இன்மைக்கண் அடங்குதலும் முதலியனவாம்.

## விளக்கம்

'அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
மன்னிய வினைய நிமித்தம் என்ப,' தொல். பொ- 267

என்ற நூற்பாவிற்குப் பேராசிரியர் உரைத்தனவற்றுள் சில இவை.

புகுமுகம் புரிதல் முதலிய மெய்ப்பாடுகளில் சிலவற்றைச் சார்ந்து தொடர்புடைய சில நிலைகள் ஏற்படும் என்பது விளக்கப்படுகிறது.

தலைவன் நோக்கியவழித் தலைவி நாணத்தால் ஒரு கொடியைச் சார்தலும், சார்பு இல்வழி இடர்ப்படுதலும் போல்வன இயற்கைப்புணர்ச்சி விரியில் விளக்கப்பட்டுள்ளன.

சிரிப்பைத் தலைவி அடக்கிக் கொண்டாலும், அவள் சிரிப்பது கண்ணும் முகனும் கொண்டு உணரப்படும் ஆயி

னும், அவள் மறைத்தாளாகக் கருதுதலின், உள் அடங்கிய சிரிப்பு நகுநயம் மறைத்தலாகவே கொள்ளப்படும் என்பது.

தன் மனச்சிதைவைத் தலைவி புலப்படுத்தாளாயினும் அவள் பார்வையின் சுழற்சியும் நாணத்தால் நிலம் கிளைத்த லும் சிதைவை வெளிப்படுத்துமாயினும், அவள் மறைத்தா ளாகக் கருதுதலின், அவையும் சிதைவு பிறர்க்கின்மையின் பாற்படும் என்பது- ]

இம் மெய்ப்பாட்டினுள் கைக்கிளை பெருந்திணைக்கு வருவன வருமாறு :

‘ ஒருக்குநாம் ஆடும் குரவையுள் நம்மை
அருக்கினன் போல்நோக்கி அல்லல்நோய் செய்தல்
குரூஉக்கண் கொலையேறு கொண்டேன்யான் என்னும்
தருக்கன்றோ ஆயர் மகன்.’ கலி. 104

எனப் புகுமுகம்புரிதல் கைக்கிளைக்கண் வந்தது.

தொன்மையும் தோலும் முதலிய வனப்புக்களுள் புகு முகம் புரிதல் முதலாயின பெருந்திணைப் பொருள்பற்றி வருவன வருமாறு அறிந்துகொள்க.

முற்று இவ்விருபத்துநான்கு மெய்ப்பாடும் கற்பினுள் இம்முறையானே வரல் வேண்டுவது இன்மையின், களவிற்கே விதந்து ஓதினர். இனி, இங்ஙனம் அன்றிக் கற்பினுள் வருமாறு :

‘ இனிதுஎனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே.’
குறுந். 167

என நகுநயம் மறைத்தல் வந்தது. பிறவும்அன்ன.

## விளக்கம்

'ஒருக்குநாம் ஆடும்' —

தலைவன் ஏறு தழுவியவாற்றைத் தோழி தலைவிக்குக் காட்டிக் கூறி, 'இக்குரவையுள் அவனைப் பாடுகம் வா' என்றுட்கு, அவள் உடம்பாட்டினுள் தான் அலர்அச்சம் நீங்கினமையும் அவன் தன்னை வருத்தினமையும் கூறிப் பாடிய பின்னர்த் தோழி 'நமர் அவற்கு நின்னைக் கொடை நேர்ந்தார்' எனக் கூறிய பாடற்பகுதி இது.

"ஆயர்மகன், ஆயத்தோடு நாம் ஆடும் குரவைக் கூத்திலே நம்மை அருமை செய்தான் போல நோக்கி நமக்கு வருத்தத்தைத் தரும் நோயைச் செய்தல் 'நிறத்தை உடைய கண்ணை உடைய கொலை ஏற்றை யான் கொண்டேன்' என்னும் மனச்செருக்கு அன்றோ! அது வேறொன்று அன்றே" என்பது.

ஏறு தழுவல் அசுரம் என்ற கைக்கிளை ஆதலின், கைக்கிளைக்கண் புகுமுகம் புரிதல் கூறப்பட்டது.

பெருந்திணைக்கண் புகுமுகம் புரிதல் முதலாயின வருதல் பழமையும் புதுமையும் பற்றி எழும் காப்பியங்களில் காணப் படும் என்பது.

> 'மெய்பெரு எழுத்துயிர்க்கும் மழலைவாய் இன்முறுவல்
> தையலாள் நெடுந்தடங்கண் வலைப்பட்டுச் சச்சந்தன்
> ஐயுறான் அணங்கெனவே அகத்தடக்கிச் செல்கின்றான்
> பொய்அறுக் களியானை முரித்தேன் இமிர்தாரான்.'
>
> சீவக. 181

எனச் சச்சந்தன் விசயையைப் புகுமுகம்புரிதல் கூறி, பின், அவளை அவன் பிரசாபத்திய மணத்தால் மணந்தான் என்று கூறுவது பெருந்திணைக்கண் புகுமுகம்புரிதல் வந்தமைக்கு எடுத்துக்காட்டு.

'இனிது .... .... முகனே' —

கற்புக்காலத்துத் தலைவி தலைவனோடு இல்லறம் நடத்தியகாலை அவள் சமைத்த உணவை அவள் கணவன் 'இனிது' என்று கூறிச் சுவைத்து உண்டமையின், தனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிச் சிரிப்பை வெளிக்காட்டாது முகவேறுபாட்டால் குறிப்பாக அவள் காட்டியமை நகுநயம் மறைத்தற்கு எடுத்துக்காட்டாகும். ]

இன்னும் அதனானே,

இன்பத்தை வெறுத்தல்[1] துன்பத்துப் புலம்பல்[2]
எதிர்பெய்து பரிதல்[3] ஏதம் ஆய்தல்[4]
பசிஅட நிற்றல்[5] பசலை பாய்தல்[6]
உண்டியின் குறைதல்[7] உடம்புநனி சுருங்கல்[8]
கண்துயில் மறுத்தல்[9] கனவொடு மயங்கல்[10]
பொய்யாக் கோடல்[11] மெய்யே என்றல்[12]
ஐயம் செய்தல்[13] அவன்தமர் உவத்தல்[14]
அறன்அளித்து உரைத்தல்[15] ஆங்குநெஞ்சு அழிதல்[16]
எம்மெய் ஆயினும் ஒப்புமை கோடல்[17]
ஒப்புவழி உவத்தல்[18] உறுபெயர் கேட்டல்[19]
நலத்தக நாடின் கலக்கமும்[20] அதுவே.

எனவும்,

*1* இன்பத்தை வெறுத்தல் :

யாழும் குழலும் சாந்தும் முதலாக இன்பத்திற்கு ஏதுவாகிய பொருள் கண்டவழி அவற்றின்மேல் வெறுப்புத் தோன்றுதல். அது,

'கல்லாக் கோவலர் ஊதும்
வல்லாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே.' அகநா. 74

எனவரும்.

[தலைமகன் பிரிவின்கண் அழிந்த கிழத்தி வற்புறுத்தும் தோழிக்கு உரைத்த பாடற்பகுதி இது. பொருள் வருமாறு :

'தோழி! பொருள்வயின் பிரிந்த தலைவன் கார்காலத்தில் ஆண்மான்கள் பெண்மான்களோடு கூடித் திளைக்கும் வழியில் உன்னை நினைத்துப் பாகனைக்கொண்டு திண்ணிய தேரைச்செலுத்தி இன்றே வந்து விடுவான்; ஆதலின், கண்ணீர் உகுத்தலை நீக்குவாயாக-என்று வற்புறுத்தும் உன்கூற்றினை ஏற்று ஆற்றி இருப்பேன். தலைவன் உடன் உறைந்த காலத்தில் இன்பம் தந்தன இன்று என் துயரத்தை மிகுக்கின்றனவே! துன்பந் தரும் மாலைக்காலத்தில் வளைந்த கோலை ஏந்தி வரும் மேய்த்தல், குழல் ஊதுதல் இவற்றையன்றிப் பிறதொழிலைக் கற்காத இடையர்கள் ஊதும் கொடிய வாயினை உடைய சிறிய குழல் தன் ஓசையால் என்னை வருத்தாவிடின், நின் விருப்பப்படி ஆற்றுதல்கூடும்.'

இத்தலைவி கூற்றில் தலைவன் பிரிவின்கண் வேய்ங்குழல் இசையாகிய இன்பத்தைத் தலைவி வெறுத்தமை போதருதல் காண்க. ]

2 துன்பத்துப் புலம்பல் :

பிரிவு ஆற்றாது துன்புறுங்கால் அவ்வாற்றாமை தலைமகற்கு இன்றித் தானே துன்புறுகின்றாளாகச் சொல்லுதல். அது,

'நின்னுறு விழுமம் களைந்தோள்
தன்னுறு விழுமம் நீந்துமோ எனவே.' அகநா. 170

எனவரும்.

[ தலைமகள் காமம் மிக்க கழிபடர் கிளவியால் அலவனைத் தூதுவிட நினைந்து சொற்ற பாடற்பகுதி இது.

"அலவனே! கானலோ, கழியோ, புன்னையோ, என் துயரைத் தலைவனிடம் கூறு. உன்னையன்றி என் துயர் தீர்க்கும் துணை இல்லை. வண்டினம் பறந்து கிளரும் தலைவனிடம் சென்று 'கடல் சிறு காக்கை தன் விருப்பத்திற்கு உரிய பெடையோடு சுருமீன் வழங்கும் வேட்டை நீங்கிய கடற் பகுதியில் வெள்ளிய இருமீனைக் கனவு காணும் செறிந்த இடையாமத்தில் உன்னுடைய மிக்க துயரத்தை இரவுக் குறிக்கண் வந்து நீக்கிய தலைவி, இன்று நீ பிரிந்து மறந் திருத்தலால், தனக்கு ஏற்பட்டுள்ள பெருந்துன்பத்தைக் கடத்தல் இயலுமோ?' என்று நீயே சொல்லுதல் வேண்டும்."

தலைவன், பிரிவை வரவேற்பதாகவும், தானே பிரிவால் துயர் உறுவதாகவும் தலைவி கூறுவது இதன்கண் உணரப் படும். ]

3 எதிர்பெய்து பரிதல் :

உருவெளிப்பாடு. அது தலைமகனையும் அவன் தேர் முதலாயினவற்றையும் தன் எதிர் பெய்துகொண்டு பரிந்து உரைத்தல் அது,

'வாரா தாயினும் வருவது போலச்
செவிமுதல் இசைக்கும் அரவமொடு
துயில்மறந் தனவால் தோழிஎன் கண்ணே.'

குறுந். 301

எனவரும்.

['வரைவிடை வைப்ப ஆற்றுகிற்றியோ ?' என்ற தோழிக்குத் தலைவி சொல்லிய பாடற்பகுதி இது.

'முழாப் போன்ற அடிமரத்தை உடைய வளைந்த நிலையை உடைய பனையின் கொழுவிய மடலிடை அமைத்த கூட்டில் தன் விருப்பத்திற்குரிய முதற்சூலான் வேட்கையுற்ற அன்றி லின்பெடை ஆண் அன்றிலைக் கூவி அழைக்கும் நடுஇரவிலே

தன் சக்கரத்தால் மன்றத்தைப் பிளந்துகொண்டு விரைந்து வரும் தலைவனுடைய நெடிய தேர் உண்மையில் வாராதாயினும் என் கலக்கத்தால் வருவதுபோல எனக்குக் காட்டி என் காதுகளில் ஒலிக்கும் ஒலியினால் என்கண்கள் உறங்குதலை மறந்தன.'

இதன்கண், தலைவி தன் காதல்மிகுதிபற்றிய எண்ணத்தால் தலைவனது தேர் வருவதுபோலக் கருதிக்கொண்டு வருந்தியவாறு காண்க.]

**4** ஏதம் ஆய்தல் ;

கூட்டத்திற்கு வரும் இடையூறு உண்டு என்று பலவும் ஆராய்தல். அது 'நொதுமலர் வரையக் கருதுவர் கொல்?' எனவும், 'பிரிந்தோர் மறந்து இனிவாரார் கொல்?' எனவும் தோன்றும் உள்ளநெகிழ்ச்சி. அது,

'வாரர் கொல்எனப் பருவரும்
தாரார் மார்பநீ தணந்த ஞான்றே.' அகநா. 150

எனவரும்.

[பகற்குறி வந்து கண்ணுற்று நீக்கும் தலைமகனைத் தோழி, தலைமகளை இடத்து உய்த்து வந்து செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாய பாடற்பகுதி இது.

"தலைவ! தலைவியின் கூந்தலும், சுணங்கும், நகிலும் நோக்கி அவள் பெருவனப்பினள் ஆகியதைப் பலபடியாகக் கூறித் தழுவி இற்செறித்துவிட்டாள் யாய். சுறுமீன் வழங்கும் பெருந்துறையில் மாலையில் கூம்பிய நெய்தலும் குவளையும் செருந்தியும் காலையில் மலரும் கழிகளையும், கடற்கரைச் சோலைகளையும் காணுந்தோறும் பலவும் எண்ணி வெறுத்துத் 'தலைவர் இனிவாராரோ?' என்று நின் சிறுபிரிவிற்கே வருந்தும் தலைவி இற்செறிக்கப்பட்டமையான் எந்நிலையள் ஆவளோ?"

'தலைவனை இனிக்காணும் வாய்ப்பே இல்லாது போய் விடுமோ ?' என்று தலைவி எண்ணமிட்டமை இப்பாடலால் புலனும்.]

5 பசிஅட நிற்றல் :

பசி வருத்தவும் அதற்குத் தளராது உணவு மறுத்தல். அது,

'அன்னாய் வாழிவேண்டு அன்னை நின்மகள்
பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு
நனிபசந் தனள்என வினவுதி.' அகநா- 48

எனவரும்.

[செவிலிக்குத் தோழி அறத்தொடு நிற்குமாற்றான் தலைவனும் தலைவியும் சோலையில் சந்தித்த வாய்ப்பையும் தலைவனைப்பற்றித் தலைவி கொண்ட எண்ணத்தையும் வெளியிடப் புகுந்த தோழி, தன்தாய் முதலில் வினவியதைக் கொண்டெடுத்து மொழியுமாற்றான், 'தாயே! உன்மகள் பால் கூடப் பருகாது, துன்பங்கொண்டு உடல் பசலையுற்றதன் காரணம்பற்றி என்னை வினவுகின்றாய்; யானும் அதன் காரணத்தை தெளிவாக உணரேன். ஆயினும் நிகழ்ந்த நிகழ்ச்சி இது' என்று கூறிய கூற்றில், தலைவி தலைவன் பிரிவால் பால்உணவைக் கூட வெறுத்த செய்தி உரைக்கப் பட்டவாறு.]

6 பசலை பாய்தல் :

பசலை பரத்தல். அது,

'கன்றும் உண்ணாது கலத்தினும் படாஅது
நல்லான் தீம்பால் நிலத்துஉக் காஅங்கு
எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது
பசலை உணீஇயர் வேண்டும்
திதலை அல்குல்எம் மாமைக் கவினே.' குறுந். 27

எனவரும்.

[ ‘ ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள ’ தொல் பொ. 361. ஆதலின், பாய்தல் - பரத்தல் என்று பொருள் செய்யப்பட்டது.

பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குத் தலைவி உரைத்தது இது.

‘ நல்ல பசுவின் இனிய பால் கன்றும் குடித்தற்கு வாய்ப்பு இன்றிக் கலத்தினும் கறந்து பயன்படுத்த வாய்ப்பு இன்றித் தரையில் சோர்ந்து வீணாவது போல, எனக்கும் வனப்புச் செய்தல் இன்றி, என் தலைவனுக்கும் உவகை செய் தல் இன்றி, தேமல் படர்ந்த அல்குல், என் மாமைநிற வனப்பு இவற்றைப் பசலை உண்ணுதலை விரும்புகிறதே ’ என்ற தலைவி கூற்றில் தலைவன்பிரிவால் அவள் உடலில் பசலை பரவிய செய்தி உணரப்படுகிறது. ]

7 உண்டியில் குறைதல் :

பசிஅட நிற்றலே அன்றிச் சிறிது உண்டி ஊட்டியவழிப் பண்டு போலாது கழியவும் சிறிது உண்டல். அது,

‘ தீம்பால் ஊட்டினும் வேம்பினும் கைக்கும்
வாராய் எனினும் ஆர்வமொடு நோக்கும்
நின்னின் சிறந்ததொன்று இலளே
என்னினும் படாஅள் என்இதற் படலே.’

எனவரும்.

[தலைவியின் ஆற்றாமை கூறித் தோழி தலைவனைக் கடிதில் வரைந்து தலைவியின் துயரம் தீர்த்தல் வேண்டும் என்று வேண்டும் இப்பாடலில், ‘ தலைவிக்கு இனிய பாலை உண்ணத் தரினும் அதனை வேப்பங்காயைவிடக் கசப்பதாகக் கூறிப் பருகுதலை மறுக்கிறாள்; நீ வாராது ஒழியினும் நின் வழிமேல் விழிவைத்துப் பேரார்வத்தோடு வழியையே நோக் கிக் கொண்டிருக்கிறாள். அவளுக்கு உன்னைப்போலச் சிறந்த

பொருள் இவ்வுலகில் வேறு ஒன்றும் இல்லை. அவளோடு பிரிவின்று இயைந்த துவரா நட்பினை உடைய என்சொற்களையும் அவள் கேட்டலை மறுக்கிறாள். இந்நிலையால் பின் நிகழப் போவது யாதோ?' என்ற தோழி கூற்றில், தலைவி உணவு உண்டலை வெறுப்பால் குறைத்துக்கொண்டமை அறிவுறுத்தப்பட்டவாறு.]

8 உடம்பு நனி சுருங்கல்

அவ்வுண்ணாமை உயிரில் செல்லாது உடம்பில் காட்டுதல்.

'தொடி நிலை நெகிழச் சாஅய் தோள்அவர்
கொடுமை கூறிய ஆயினும் கொடுமை
நல்வரை நாடற்கு இல்லை தோழி
நெஞ்சில் பிரிந்ததும் இலரே
குன்ற நேரக்கம் கடிந்ததும் இலரே.'

என வரும்,

['உடம்பும் உயிரும் வாடியக் காலும்
என்உற் றனகொல் இவைஎனின் அல்லதைக்
கிழவோற் சேர்தல் கிழத்திக்கு இல்லை'

தொல். பொ. 203

என்ற பண்பினளாகிய தலைவி தான் வாடியக்காலும் தலைவனைத் தோழியிடம் இயற்பட மொழிகிறாள்.

'தொடி தான் அணியப்பட்ட நிலையினின்றும் நெகிழுமாறு தோள்கள் நுணுகித் தலைவர் பிரிவால் தமக்கு ஏற்பட்ட கொடுமையைக் குறிப்பால் தெரிவிக்கின்றன எனினும், என் கருத்தில் தலைவரிடம் கொடுஞ்செயல் ஏதும் இன்று என்பதே உறுதியாகிறது. தம் மலையைக் கண்டு ஆறுதல் அடையும் நிலையைத் தந்திருக்கும் அவர் என் நெஞ்சின் உள் இருந்து பிரியாது, யான் ஆற்றி இருத்தலைச் செய்கிறார்' என்ற தலைவி கூற்றில், தோள்கள் தொடி நெகிழ நுணுகின

என்பதனால் தலைவன் பிரிவின்கண் தலைவியின் உடம்பு நனி சுருங்கியது புலப்படுத்தப்பட்டவாறு. ]

9 கண்துயில் மறுத்தல் :

இரவும் பகலும் துஞ்சாமை. அது,

'புலர்குரல் ஏனல் புழையுடை ஒருசிறை
மலர்தார் மார்பன் நின்றோற் கண்டோர்
பலர்தில் வாழி தோழி அவருள்
ஆர்இருள் கங்குல் அணையொடு பொருந்தி
ஓர்யான் ஆகுவது எவன்கொல்
நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே.'

அகநா. 82

எனவரும்.

[தலைவி தோழிக்கு அறத்தொடு நின்ற இப்பாடலில் 'மயில் ஆடு களம் புக்க விறலிபோலக் காட்சியளிக்கும் மலை நாட்டுத் தலைவன் ஏனற்புனத்து வாயிற்புறம் வந்து நின்றானாக, அவனைக் கண்டவர் பலராவர். அவருள்ளும், செறிந்த இருளை உடைய இரவிலே தலையணைகொண்டு படுக்கவும், நீர் நிரம்பிய கண்ணோடு யான் ஒருத்திமாத்திரம் தோள்கள் நெகிழ உறக்கம் அற்றவளாய் உள்ளேனே' - என்ற தலைவி கூற்றில், அவள் பிரிவுத்துயர் ஆற்றாது உறக்கம் நீத்துக் கிடந்த பெற்றி உணர்த்தப்பட்டது.]

10 கனவொடு மயங்கல் :

அரிதினில் துயில் எய்தியவழித் தலைமகனைக் கனவில் கண்டு பின்னர் அவன் அன்மையின் மயங்கும் மயக்கம். அது,

'அலந்தாங்கு அமையலேன் என்றானைப் பற்றிஎன்
நலந்தாரா யோஎனத் தொடுப்பேன் போலவும்

கலந்தாங் கேஎன் கவின்பெற முயங்கிப்
புலம்பல் ஓம்புஎன அளிப்பான் போலவும்.' கலி. 128

எனவரும்.

[வரைவு இடை ஆற்றாளாய்ச் செல்கின்ற தலைவியது கவின் கண்டு வினவிய தோழிக்கு அவள் தான் கண்ட கனவு நிலை உரைத்த இப்பாடலில், தலைவி பிரிவின்கண் கனவு கண்டது ஒன்றே கொள்ளற்பாலது. கனவில் கண்ட தலைவன் நனவில் இன்மையின் மயங்கிய மயக்கம் இப்பாடற்கண் இன்று.

"நின்னைப் பிரிந்தஇடத்து வருந்தி உயிர் வாழேன்' என்று கூறினவனைப் பிடித்துக் கொண்டு ' நீ கொண்ட என் நலத்தை இனித்தாராய்' என்று வளைத்துக் கொள்வேன் போலவும், அவ்விடத்தே என்னுடைய கழிந்த அழகை யான் பெறும்படி புல்லிக் கூடி 'இனி வருந்தாதேகொள்' என்று கூறி என்னையும் அளிப்பான் போலவும் நான் கனவில் கண்டேன்" என்று தலைவி தோழிக்குத் தலைவன்பிரிவிடை அவன் வருகையைக் கனவில் கண்டமையைச் சொற்றவாறு]

11 பொய்யாக் கோடல் :

மெய்யைப் பொய்யாக் கோடல். அது,
'கனவினான் எய்திய செல்வத்து அனையதே
ஐய எமக்குநின் மார்பு.' கலி. 68

எனவரும்.

[பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைவனோடு ஊடிய காமக்கிழத்தி தன் காதல் மிகுதி கூறி ஊடியவாறு கண்டு சென்று சேர்ந்த தலைமகனுடன் ஊடல் தீர்கின்றாள் கூறிய பாடலின் சுரிதகப்பகுதி இது.

"புனல் ஊர ! நின் பரத்தையர் நின் இருக்கை காண எம் வீட்டு வாயிற் கதவைப் புடைக்கின்றனர். இற்பரத்தை

யரை ஊடவிட்டுச் சேரிப்பரத்தையர் தொடர்பு கொள்கின்ருய்' என்ற அலர் பரவியுள்ளது. சேரியில் நீ சென்ற வீட்டை வினவி நின் பாகன் தடுமாறுகிருன்.

எம்மனையின்கண்ணே நீ ஒரு காலத்து வந்தாயாயின் நின்னைப் பெற்று மகிழ்ந்து நீ நீங்கிய பின் எம்மெலிவு கண்டு ஊரவர் நின்னை அலர்தூற்ற, யாம் பழைய வனப்பைப் பெறுதற்கு மீண்டும் ஒருகால் நின்னைத் தழுவும் வாய்ப் புக்கிட்டினும், உண்மையில் மனம் ஒன்றுது வேருயிருக்கும் நீ விரும்பாத நின் மார்பிடத்து எம் தழுவுதல் எமக்குக் கனவின்கண் வரப்பட்ட செல்வத்தை ஒப்பதேயாகும்" என்ற கூற்றில்,

உண்மையில் தலைவனை முயங்கப் பெறினும் அதனைக் கனவு போலக் கூறுதல் பொய்யாக் கோடலாம். ]

12 மெய்யே என்றல் :

பொய்யை மெய் என்று துணிதல். அது,

'கழங்குஆடு ஆயத்து அன்றுநம் அருளிய
பழங்கண் ணேட்டமும் நலிதர
அழுங்கினன் அல்லனே அயர்ந்ததன் மணனே.'

அகநா. 66

எனவரும்.

[ தலைவன் புதல்வனை வாயிலாகக்கொண்டு தலைவியின் ஊடல் தீர்த்து அவளைச் சேர்ந்தான் ஆயினும், அவன் பரத்தையரை வதுவை செய்தற்குத் தேர் ஏறிப் புத்தணியுடன் வீதிவழியே சென்றகாலைத் தன்புதல்வன் தன் செலவைத் தடுத்தலால் தான் பரத்தையை வதுவை செய்யச் சேறலை விடுத்து வீட்டிற்குள் புதல்வனோடு வந்துவிட்டான் எனவும்,

இயற்கைப்புணர்ச்சிக் காலத்தில் 'நின்னிற் பிரியேன்; பிரியின் ஆற்றேன்' என்று கூறிய சொற்களைப் பொய்த்துப் பரத்தையரை வதுவை அயர்தற்கண் ஈடுபட்டு விட்டான் எனவும், தலைவி கற்பனை செய்துகொண்டு, தலைவன் தன்னிடத்து விருப்பான் மகனை வாயிலாகப் பெற்றுத் தன்னைச் சார்ந்த உண்மையைப் பொய்யாகக் கருதுதல் பொய்யை மெய் என்று கோடலாம். ]

**13** **ஐயம் செய்தல் :** அது,

> 'தூது அவர் விடுத்தரார் துறப்பார்கொல் நோதக
> இருங்குயில் ஆலும் அரோ.' கலி. 33

எனவரும்.

[பருவவரவின்கண் வன்புறை எதிர் அழிந்து ஆற்றாள் ஆயினளைத் தோழி தலைவனது வரவு உணர்ந்து கூறி ஆற்றுவித்த பாடலில், தலைவி வன்புறை எதிரழிந்து சொற்ற பகுதியுள் இதுவும் ஒன்று.

'நம் வருத்தங்கண்டு சிரிப்பனபோலக் கொம்புகள் பூ மிக்கன. அதனைக்கண்டு என்நெஞ்சம் வருந்துகின்றது. மயில்கள் நம்மை இகழ்ந்து ஆடுகின்றன. அதுகண்டு என் கைவளைகள் கழலுகின்றன. என் கண்களைப் போல ஆற்று நீர் அறுதலையுடையதாய் இற்று ஒழுகும் இளவேனிற் காலத்தும் தலைவன் வந்திலன். அதனால் எனக்குப் பிரிதல் துன்பம் மிகுகிறது. யாழ்இசை போல ஞிமிறும் தும்பியும் ஒலிக்கக் குயில்கள் நமக்கு நோவு உண்டாகும்படி கூவுகின்றன. இவ்வளவிலும் தலைவன் நம்மாட்டுத் தூது ஒன்றனையும் அனுப்பினான்அல்லன். நம்மை இப்பிறப்பில் துறந்து விடுவானோ?' என்று தலைவன் பிரிவைப் பொறாது, அவன் தன்னைத் துறந்து விடுவானோ என்று தலைவி வாளா ஐயுற்றவாறு ]

14 **அவன் தமர் உவத்தல் :** அஃது,

> ' ஊரன் ஊரன் போலும்
> தேரும் பாணன் தெருவி னானே.'

எனவரும்.

[ தலைவன் ஊர்மக்களையாவது ஊர்ப்பொருளையாவது கண்டக்கால் தலைவனிடத்துக் கொண்ட பாசத்தால் அவன் தொடர்புஉண்மை பற்றி மகிழ்ந்து கூறிச் செயற்படுவது.

' தெருவில் பலரையும் ஆராய்ந்து கொண்டு திரியும் பாணன் நம் தலைவனுடைய ஊரினன் போலும் ' என்று தெருவில் போகும் பாணனிடத்தும் பரிவு காட்டுதற்கு உரிய மெய்ப்பாடு இது.

> ' அம்ம வாழி தோழி அன்னைக்கு
> உயர்நிலை உலகமும் சிறிதால் அவர்மலை
> மாலை தந்த மணம் கமழ் உந்தியொடு
> காலை வந்த காந்தள் முழுமுதல்
> மெல்லிலை குழைய முயங்கலும்
> இல்உய்த்து நடுதலும் கடியா தோளே.' குறுந். 361

' தலைவனுடைய மலையிலே மாலையில் பெய்த மழையால் நறுமணம் கமழும் ஆற்றோடு காலையில் இங்கு வந்த காந்தளினது மெல்லிய இலை குழையும்படி தழுவுதலையும் வீட்டில் கொணர்ந்து அதன் கிழங்கை நடுதலையும் தடுக்காதவளாகிய நம் தாய் செய்த நன்றிக்குத் தேவர் உலகமும் கைம்மாறு ஆகாது.' — இப்பாடலில் தலைவன் மலையினது தொடர்பு கொண்ட காந்தள்செடியிடத்துத் தலைவி கொண்ட விருப்பம் புலனாகும். இதனையும் அவன்தமர் உவத்தலுக்குப் பேராசிரியர் எடுத்துக்காட்டாகத் தந்துள்ளார். ]

15 **அறன்அளித்து உரைத்தல் :**

அறக்கிழவனை அன்பு செய்தல். அது,

' பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்
கன்றுபுகு மாலை நின்றோள் எய்தி' அகநா. 9

எனவரும்.

[வினைமுற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லிய இப்பாடலில், 'நாம் தலைவியைக் காணும் வேட்கையில் கதிரவன் மறைவதாயினும் கவலாது, ஊர் சேணிடையது என்றும் நினையாது, விரைந்து செல்லும் குதிரைகளை இன்னும் விரைவித்தவாறு ஊர்சேரும்போது, தலைவி பல வளங்களும் பொருந்திய நம் வீட்டில் ஒருபக்கலில் தங்கிக் கன்றுகளை உன்னிப் பசுக்கள் வீட்டை நோக்கிவரும் மாலையில் தெய்வத்தை நம் வரவு குறித்து வழிபட்டவாறு நின்று, பல்லி நல்ல பக்கத்தில் ஒலிக்குந்தோறும் அந்நன்னிமித்தத்தைக் காட்டிய தெய்வத்தைப் போற்றிக்கொண்டிருப்பாள்' என்ற பகுதியில் தலைவி அறன் அளித்து உரைத்தல் பெறப்பட்டவாறு ]

16 ஆங்கு நெஞ்சு அழிதல் :

அங்ஙனம் உரைக்குங்கால் நெஞ்சு அழிந்து உரைத்தல். அது,

' பழிதபு ஞாயிறே பாடுஅறியா தார்கண்
கழியக் கதழ்வை எனக்கேட்டு நின்னை
வழிபட்டு இரக்குவென் வந்தனென் என்நெஞ்சு
அழியத் துறந்தானைச் சீறுங்கால் என்னை
ஒழிய விடாதீமோ என்று.' கலி. 143

எனவரும்.

[ தலைவன் களவொழுக்கத்திடையே நண்பனுக்கு உற்றுழி உதவ வாளான் எதிரும் பிரிவு கருதிப் பிரிந்து பன்னாள் அருமை செய்து அயர்த்தானாக, தலைவி கையறவு உரைக்கும் நிலையையும் கடந்து, மன்றத்து இருந்த சான்றவர் அறியத்

தன் தலைவன் பெயரும் பெற்றியும் பிறவும் கூறியும் அழுதும் அரற்றியும் பொழுதொடு புலம்பியும் அறிவு அழிகுணன் உடையளாயின பெருந்திணை நிலையில் ஞாயிற்றை நோக்கிக் கூறுவது இது.

“ குற்றமற்ற சூரியனே ! ‘ உலகியல் அறியாதார் இடத்துக் கழியச் சீறுதற்கு விரைந்து செல்வை ’ என்று இவர்கள் கூறக்கேட்டு நின்னை வழிபட்டு நீ என் தலைவனை மிகச் சீறுதபடி இரந்து கொள்வேனாக வந்தேன். நீ என் நெஞ்சம் கெடும்படி என்னைக் கைவிட்டவனைச் சீறுமிடத்து என்னை நீங்கவிடாதேகொள் ” — என்று தலைவி பிரிவுத்துயர் தாங்காமல் நெஞ்சு ஒடிந்து இறத்தலை வரவேற்றவாறு. ]

17 எம்மெய் ஆயினும் ஒப்புமைகோடல் :

யாதானும் ஒருபொருள் கண்ட இடத்துத் தலைமகனோடு ஒப்புமை கோடல். அது,

‘ கணைகழி கல்லாக் கல்பிறங்கு ஆரிடைப்
பணைஎருத்து எழிலேற்றின் பின்னர்ப்
பிணையும் காணிரோ பிரியுமோ அவையே.’ கலி. 20

எனவரும்.

[பிரிவு உணர்த்திய தலைமகனுக்குத் தலைவி ‘எம்மையும் உடன்கொண்டு சென்மின்’ என்றாளை நோக்கித் தலைவன் கானின் கடுமையும் அவள் மென்மையும் கூற, அதுகேட்ட அவள் நாளது சின்மையும் இளமையது அருமையும் கூறி ‘ எம்மையும் உடன்கொண்டு சென்மின் ’ என்று வேண்டிய இப்பாடல் சுரிதகத்தில்,

‘ காடு நீ அணைவதற்கு அரிய வெம்மையை உடையது என்று என்னிடம் கூறும் தலைவரே ! பெருக்கும் கல்லின் நெருக்கத்தால் எய்த அம்பு ஓடாத அரிய வழியிடத்துப் பெருமையை உடைய கழுத்தினையும் அழகையும் உடைய

ஏற்றின் பின் நீங்காமல் திரியும் பிணையைக்காணாது இருக்க வல்லிரோ? அவை நீர் அறியப் பிரியாவே; ஆதலின் எம்மையும் உடன்கொண்டு சென்மின்;'

என்று தலைவி தலைவனை வேண்டுதற்கண், அஃறிணைப் பொருள்களை உவமம் கூறித் தன்னையும் அவைபோலக் கருதுமாறு வேண்டுதல் எம்மெய் ஆயினும் ஒப்புமை கோடலாம்.]

18 ஒப்புவழி உவத்தல் :

ஒப்புமை உண்டாகிய வழியே உவமை கொண்டதனானே உவகை தோன்றுவது. அது,

' காமரு நோக்கினை அத்தத்தா என்னும்நின்
தேமொழி கேட்டல் இனிதுமற்று இன்னாதே ' கலி. 80

எனவரும்.

[ பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி தன் மகனுக்கு உரைக்கும் இப்பாடற் பகுதியில், " ஐய ! விருப்பம் மருவுகின்ற அழகினை உடையாய் ! ' அத்தா ! அத்தா!' என்று கூறும் நினது இனிய மொழியைக் கேட்டு மகிழ்ந்திருத்தல் இனிது. அஃது ஒழிந்து நுந்தை மகளிர் நலம் சாய்தற்கு அவர் நலத்தை உண்மையினாலே உய்வின்றிச் சாய்ந்துற்ற எவ்வத்தைத் தரும் நோயை யாம் காணுமிடத்து அக்காட்சி இன்னாது " என்று கூறும் கூற்றில், தன் மகன் அவன் தந்தையைப் போல அழகனாக இருப்பது ஆகிய ஒப்பினைக் கண்டு தலைவி உவந்தவாறு. ]

19 உறுபெயர் கேட்டல் :

தலைமகன் பெரும்புகழ் கேட்டு மகிழ்தல். அது,

' பலவின் பழத்துள் தங்கும்
மலைகெழு வெற்பனைப் பாடுகம்வா வாழி தோழி.'
கலி. 41

எனவரும்.

['இடியோடு இரவில் மழை பெய்த நடுஇரவிலே மின்னல் ஒளியிலே பெண்யானையோடு மேயும் ஆண்யானையின் அடி ஓசை கேட்ட கானவன் பலாமரத்துமேல் அமைந்த பரண் மீது ஏறி விசையாகக் கவண் கற்களை வீச, அக்கவண்கற்கள் வேங்கைப் பூக்களைச் சிதறி, பழுத்த பலாக்கனிகளை உதிர்த்து, தேன் கூடுகளைத் துளைத்து, மாந்துணர்களைக் கலக்கி வாழைமடலைக் கிழித்துப் பலாப்பழத்தினுள் சென்று தங்கும் பக்கமலைகள் பொருந்திய நம்தலைவனைப் பாடுவோம்' என்ற பகுதியில், 'தலைவன் வளஞ்சான்ற நாட்டுத் தலைவன்' என்று அவன் புகழ்பாடித் தலைவி மகிழ்தல் புலனுயவாறு.]

20 **கலக்கம் :**

சொல்லத்தகாதன சொல்லுதல். அது,

> 'பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய
> கையுளே மாய்ந்தான் கரந்து.' கலி. 142

எனவும்,

> 'பிறங்குஇரு முந்நீர் வெறுமணல் ஆகப்
> புறங்காலில் போக இறைப்பேன் முயலின்
> அறம்புணை ஆகலும் உண்டு.' கலி. 144

எனவும் வரும்.

[அறிவு அழி குணன் உடையளாய்க் களவுக்காலத்தில் தலைவன் அருமை செய்து அயர்த்தலை ஆற்றுத தேறுதல் ஒழித்த காமத்து மிகுதிறத்துப் பெருந்திணைத் தலைவி கூற்றின் பகுதிகள் இவை.

'தலைவன் கனவில் வந்தானுக அவனைக் கையால் பற்றிப் பின் அவனைக் காண என் கண்களைத் திறக்க அவன் என் கைக்குள்ளே மறைந்துவிட்டான்.'

'அறக்கடவுளையே துணையாகக் கொண்டு இக் கடல்முழுவதும் மணல் பரப்பாகும்படி கடல்நீரை எல்லாம் என் புறங்கால்களாலேயே இறைத்து விடுவேன்.'

இவை கலக்கம் எய்திய தலைவியரின் கூற்றுக்கள் ஆதலை அறிக.]

இங்ஙனம் ஓதிய இருபது மெய்ப்பாடும் தலைமகற்கும் ஏற்ற வகையானே கொள்ளப்படும்.

'எவ்வி இழந்த வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்று
இனையல் வாழிய நெஞ்சே மனைமரத்து
எல்லுறு மௌவல் நாறும்
பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே.' குறுந். 19

இது துன்பத்துப் புலம்பல், தானே துன்புறுகின்றுகைத் தலைமகன் உரைத்தமையின். ஒழிந்தனவும் தலைமகற்கு உரியவாகி வருவன வந்தவழிக்கண்டு கொள்க. இவ்வெண்ணப் பட்டன எல்லாம் உள்ளத்து நிகழ்ந்தனவற்றை வெளிப் படுப்பன ஆகலான், மெய்ப்பாடு எனப்பட்டன. மேல் வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும்.

['எவ்வி இழந்த' —

உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைவன் சொற்றது இது. நெஞ்சே! வீட்டுக்கொல்லையிலுள்ள மரத்தில் படரும் முல்லைப்பூவை அணிந்த நறுமணம் கமழும் கூந்தலை உடையாளாகிய இவள் நமக்கு எத்தகைய உறவினை உடையள்? ஆதலின், எவ்வி என்ற வள்ளலை இழந்ததால் உண்டாகிய வறுமையை உடைய பாணருடைய பூ இல்லாத வறிய தலையைப்போல, நீ பொலிவு அழிந்து வருந்துவாயாக'— என்று தலைவன் தலைவியின் கூட்டம் பெறாது துன்பத்தில் தானே புலம்பியவாறு.]

முட்டுவயின் கழறல்[1] முனிவுமெய் நிறுத்தல்[2]
அச்சத்தின் அகறல்[3] அவன்புணர்வு மறுத்தல்[4]
தூதுமுனிவு இன்மை[5] துஞ்சிச் சேர்தல்[6]
காதல் கைம்மிகல்[7] கட்டுரை யின்மை[8] என்று
ஆயிரு நான்கே அழிவில் கூட்டம்.

எனவும்,

[எனவும் என்ற எண்ணும்மை 'இன்பத்தை வெறுத்தல்' (பக்கம் 832) என்ற நூற்பாவினோடு இதனை எண்ணிக் கொள்கிறது.]

*1* முட்டுவயின் கழறல் :

தலைக்கூட்டத்திற்கு முட்டுப்பாடு ஆகியவழிக் கழறி உரைத்தல். அது,

'நொச்சி வேலித் தித்தன் உறந்தை
கல்முதிர் புறங்காட் டன்ன
பன்முட் டின்றால் தோழிநம் களவே.' அகநா. 122

எனவரும்.

[தலைக்கூட்டம் - பகற்குறி இரவுக்குறி ஆகிய இடத்து நிகழும் கூட்டம்.

தலைமகன் சிறைப்புறத்தானாக தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைமகள் சொற்ற பாடற்பகுதி இது.

தோழி! ஊர்துஞ்சாமை, தாய்துஞ்சாமை, காவலர் கடுகுதல், நாய்குரைத்தல், நிலவு வெளிப்படுதல், கூகைகுழறல், கோழி குரல்காட்டல், இம் முட்டுப்பாடுகள் இல்லாத அன்று தலைவன் வாராதிருத்தல் ஆகிய காரணங்களால் நம் களவு ஒழுக்கம் தித்தன் என்பானது மதிலை வேலியாகவுடைய

உறையூரைச் சூழ்ந்திருக்கும் காவற் புறங்காட்டைப் போன்ற பல முட்டுப்பாடுகளை உடையதாய் உள்ளது' என்ற கூற்றில் முட்டுவயின் கழறல் வந்தவாறு.

அழிவுஇல் கூட்டம் — என்றைக்கும் இன்பம் அழிதல் இல்லாது செய்யும் வரைதலின்கண் உள்ள வேட்கையால் புலப்படுத்தும் மெய்ப்பாடுகளைச் சுட்டுகிறது.]

2 முனிவு மெய்நிறுத்தல் :

தலைமகள் உள்ளத்து வெறுப்பு வெளிப்பட நிற்கும் நிலைமை. அது,

'இன்னுயிர் கழிவ தாயினும் நின்மகள்
ஆய்மலர் உண்கண் பசலை
காம நோயெனச் செப்பா தீமே.' அகநா. 52

எனவரும்.

[தான் (தலைவி) வேறுபட்டமை அறிந்த செவிலித் தாய்க்குத் தோழி அறத்தொடுநிற்கும் என்பதைக் குறிப் பான் அறிந்த தலைவி தோழிக்குச் சொல்லிய பாடற்பகுதி இது.

'மலைச்சாரலிலே வேங்கைப்பூக்களை விரும்பிய குறவர் மகளிர் புலிபுலி என்று கூக்குரலிடப் பசுக்களைக் கவரப் புலியே வந்துவிட்டதாகக் கருதிய கானவர், கையில் வில் ஏந்திப் பேரொலியோடு புறப்படும் மலைநாடனாகிய தலைவ னுடைய மார்பு பற்றியதாக இந்நோய் உள்ளது' என்ற செய்தியைத் தாய்க்கு அறிவிப்பேமா? அறிவியேமா? என்று ஐயுற்றுக் கருதிய எண்ணம் இப்பொழுது ஒருமுடிவு அடைந்துவிட்டது. என் உயிரே போவதாயினும் என் தாயிடம் எனக்கு ஏற்பட்டுள்ள இப்பசலைநோய் காமநோ யின் செயலே என்று கூறாதீர்கள்' — என்ற செய்தியில்,

தலைவி களவொழுக்கத்தை வெறுத்தலான் உயிர் துறப்பதற்கும் துணிந்து வாழ்க்கையை முனிந்த கருத்துப் புலப்படுத்தப்பட்டவாறு.]

3 அச்சத்தின் அகறல் :

தலைமகன்கண் வரும் ஏதம் அஞ்சி அவனை நீங்கும் குறிப்பு. அது,

‘ மன்றுபாடு அவிந்து மனைமடிந் தன்றே
கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே
யாமம் கொளவரின் கனைஇக் காமம்
கடலினும் உரைஇக் கரைபொழி யும்மே
இன்னம் ஆகவும் நன்னர் நெஞ்சம்
என்னொடும் நின்னொடும் சூழாது கைம்மிக்கு
இறும்புபட்டு இருளிய இட்டருஞ் சிலம்பின்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கானக நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப்புறத் தன்ன கல்மிசைச் சிறுநெறி
மாரி வானம் தலைஇ நீர்வார்பு
இட்டருங் கண்ண படுகுழி இயவின்
இருளிடை மிதிப்புழி நோக்கி அவர்
தளர்அடி தாங்கிய சென்றது இன்றே.’ அகநா. 128

எனவரும்.

[இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாக தலைமகள் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லிய பாடல்இது.

‘ அம்பலங்களில் ஒலி அடங்கியது. இல்லோர் துயின்றனர். கொலை செய்வது போன்ற கொடுமையுடன் இரவுக் காலம் சிறத்தலினாலே காமம் கடலைவிடப் பெருகிக் கரை கடந்து செல்கிறது. நாம் இவ்விரவிடைக் காமக்கடலில் மூழ்கி உயிர் ஊசலாடுகின்ற இந்நிலையில் நம் நல்ல நெஞ்சம் என்னொடும் நின்னொடும் கலந்து ஆலோசனை செய்யாது,

சிறுகாடுகளாய் இருண்ட சிறிய செல்லுதற்கு அரிய பக்க மலையின்கண் உள்ள குறிய சுனைகளில் பூத்த குவளைமலர்களை வண்டுகள் மொய்க்கும்படிச் சூடிக் காட்டுநாட்டை உடைய நம் தலைவன் இரவுக்குறி நோக்கி வருகின்ற, யானையின் முதுகில் காணப்படும் கயிறு இடுதலான் ஏற்பட்ட தழும்பை ஒத்த மலைமீது உள்ள சிறிய வழியாகிய, மேகம் மழை பெய்த லால் நீர் இடையறுது பொருந்திய, செல்லுதற்கு அரிய சிறு இடங்களில் உள்ள படுகுழிகளைக் கொண்ட வழியில், தலை வன் இருட்டில் நடந்து வரும்போது குழியில் அவன் கால் கள் அகப்பட்டு வருந்தாதவாறு அவனுடைய தளராநின்ற அடிகளைத் தாங்கும் பொருட்டு இன்று சென்று விட்டது' என்ற கூற்றில்,

தலைவன் இரவுக்குறியிடை வரும் நெறியின் ஏதம் அஞ்சித் தலைமகள் இரவுக் குறியை வெறுத்து, அவனைப் பிரியாது உடன் வாழ்தற்குரிய வரைவு வேட்டமை புலப்படுத்தப்பட்ட வாறு.]

**4 அவன்புணர்வு மறுத்தல் :**

இரவுக்குறியும் பகற்குறியும் விலக்குதற்கு எழுந்த உள்ள நிகழ்ச்சி. அது தமரை அஞ்சி மறுத்தமையானும், இது வரைவு கடாதல் கருத்திற்று ஆகலானும் திளைப்புவினை மறுத்தலோடு இது வேற்றுமை உடைத்து. இது,

' நல்வரை நாட நீவரின்
மெல்லியல் ஒரும் தான்வா ழலளே.' அகநா. 12

எனவரும்.

[திளைப்புவினைமறுத்தலும் அவன் புணர்வு மறுத்தலும் முடிந்த முடிபில் ஒன்றுமேனும், அவற்றின் காரணங்கள் வேறுவேருக உள்ளன. திளைப்புவினை மறுத்தல் ஊரவர் தூற்றும் அலருக்கு அஞ்சிச் செய்தது. அவன் புணர்வு மறுத்தல் களவு ஒழுக்கம் தவிர்த்து வரைதல் வேண்டும் என்ற வேட்கையால் செய்தது.

பகற்குறி வாரா நின்ற தலைமகன் தோழியால் செறிப்பு அறிவுறுக்கப்பட்டு ' இரவுக்குறி வாரா வரைவல் ' என்றாற்குத் தோழி அதுவும் மறுத்து வரைவுகடாய பாடற்பகுதி இது.

' தாய் கண்ணைவிட அன்போடு தலைவியைப் பாது காக்கத் தொடங்கி விட்டாள். தந்தையும் தலைவி புறத்தே புறப்பட்டால் 'எங்குப் புறப்படுகிறாய்?' என்று வினவுகிறான். நாங்கள் இருவேமும் பிரிவுஇன்றி இயைந்த உவர்த்தல் இல்லாத நட்பினை உடைய இருதலைகளை உடைய பறவையைப் போல ஈருடல் ஓருயிரேமாக உள்ளோம். குறவர் குடிசைகளில் வேங்கைப் பூ விழுந்து புலிபோலக் காட்சி வழங்குவதனைக் கண்ட யானை, மலையிலே மூங்கிலை முறித்துக் கொண்டு செல்லும் பெரிய மலை நாடனே ! நீ தொடர்ந்து களவொழுக்கம் நிகழ்த்தவேண்டிக் குறிவயின் வரின், அச்செயலால் அவள் மகிழாது வருந்தி உயிர் நீத்துவிடுவாள்' என்பதன்கண் அவன் புணர்வு மறுத்தல் புலப்படுத்தப் பட்டவாறு.]

5 தூது முனிவின்மை :

புள்ளும் மேகமும் போல்வன கண்டு ' சொல்லுமின் அவர்க்கு ' என்று தூது இரந்து பன்முறையானும் சொல்லுதல். அது,

' கானலும் கழறாது கழியும் கூறாது
தேன்இமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது
ஒருநீ அல்லது பிறிதுயாதும் இலனே
இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்
கமழ்இதழ் நாற்றம் அமிழ்துஎன நசைஇத்
தண்தாது ஊதிய வண்டினம் களிசிறந்து
பறைஇக் கிளரும் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால் அலவ.' அகநா. 170

எனவரும்.

[களவுக்காலத்துத் தலைவன் வாராதுபோகப் பிரிவாற்றுதல் தாங்காத தலைவி காமம் மிக்க கழிபடர்கிளவியால் நண்டினை நோக்கி, " அலவ! ' கடல் சிறுகாக்கை காமர் பெடையொடு வெள்இருக் கனவும் நள்ளென் யாமத்து நின் மிக்க காமநோயைப் போக்கிய தலைவி இன்று தன்னுடைய மிக்க துயரை நின்துணை இன்றித் தனியே நீந்துதல் கூடுமோ ?' என்ற செய்தியை அவனிடம் தூது சென்று கானலோ கழியோ புன்னையோ மொழியாது ஆதலின், எனக்கு உற்ற துணையாகிய நீ அச் செய்தியைத் தலைவனிடம் சென்று தூதாக உரைத்தல் வேண்டும்." என்று தலைவி தன் பிரிவு ஆற்றுமை பற்றித் தூது விடுவதன் மூலம், பிரிதல் இல்லா வரைந்து எய்தும் கூட்டத்து வேட்கையைப் புலப்படுத்தியவாறு,]

6 துஞ்சிச் சேர்தல் :

மனையகத்துப் பொய்த்துயிலோடு மடிந்து வைகுதல். அஃது,

' என்மலைந் தனன்கொல் தானே தன்மலை
ஆரம் நாறும் மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றனனே.' குறுந். 161

எனவரும்.

[இரவுக்குறிக்கண் வந்த தலைமகனைக் காப்பு மிகுதியான் எதிர்ப்படப் பெறுத தலைமகள், பிற்றைஞான்று தலைமகன் சிறைப்புறத்தானுகத் தோழிக்குச் சொல்லுவாளாகச் சொல்லிய பாடற்பகுதி இது.

'தோழியே! சூரியனும் மறைந்து விட்டான். மழையும் இடைவிடாமல் பேய்களும் கண்களை அடிக்கடிக் கொட்டி நடுங்கும்படி விடாமல் வேகமாகப் பெய்துகொண்டிருக்கிறது. அதற்குமேல் தாயும் புலிப்பல் தாலியை அணிந்த தன் புதல்வனைத் தழுவிக்கொண்டு ' அன்னையே!' என்று என்னை

அழைக்கிறாள். அத்தகைய நேரத்தில் தன் மலையிலுள்ள சந்தனம் மணம் வீசும் மார்பினன் ஆகிய தலைவன் மழையில் நனைந்த யானையைப்போல இவ்வீட்டுப் புறத்தேவந்து நின்றான். அந்தோ ! இந்நள்ளிருளில் ஓயாத மழையில் என்ன காரியத்தை மேற்கொண்டு வந்தானோ ?' என்ற பகுதியில், இரவுக்குறிக்கண் தலைவன் வந்திருப்பதை அவன் சந்தனத்தின் மணத்தால் அறிந்துப், அவன் தன்மாட்டுக் காதலால் இருளில் பெருமழையிடை வந்திருப்பதை உணர்ந்தும், தான் இரவுக்குறியை வேண்டாளாய்த் தாய்பக்கலில் விழித்திருப்பதாகக் காரணம் காட்டியதோடு, 'தலைவன் என்ன காரியத்தை மேற்கொண்டு வந்தான் ?' என்ற கூற்றில், தலைவி தான் இரவுக்குறியை எதிர்நோக்கிக் காத்திராமல் மனையகத்துத் துயிலோடு வைகியசெய்தி புலப்படுத்தப்பட்டவாறு. தாய் 'அன்னையே !' என்று விளித்த அளவில் தான் விழித்தாளாக, அப்பொழுது இருளையும் செறிந்த மழையையும் கண்ணில்கண்டு, தலைவன் வருகையை அவன் சந்தன மணத்தால் ஓர்ந்து சொற்றாள் என்பதும் அறிக.]

7 **காதல் கைம்மிதல் :**

காமம் கைஇகந்தவழி நிகழும் உள்ளக் குறிப்பு. அஃது,

> ' உள்ளின் உள்ளம் வேமே உள்ளாது
> இருப்பின்எம் அளவைத்து அன்றே வருத்தி
> வான்தோய்வு அற்றே காமம்
> சான்றோர் அல்லர்யாம் மரீஇ யோரே ' குறுந். 102

எனவரும்.

['ஆற்றாள்' எனக் கவன்ற தோழிக்கு, 'யான் எங்ஙனம் ஆற்றுவேன் ?' என்று தலைமகள் கூறிய பாடல் இது.

'தலைவன் இங்ஙனம் அருமை செய்து அயர்த்தலை நினைத்தால் என் உள்ளம் வேவாநிற்கும். உள்ளத்தை வேவச் செய்வதால், 'அவனை நினையாது இருப்போம்' எனின்,

நினையாது இருப்பது என் ஆற்றல் அளவிற்கு உட்பட்ட தன்று. காமம் என்னை வருத்தி வானத்தைத் தோய்வது போன்ற பெருமையை உடையது. நம்மால் தழுவப்பட்ட தலைவன் இவ்வாறு வரைதல் வேண்டாது களவு ஒழுக்கம் கருதித் துயரம் தருதலின், தக்கவன் அல்லன்' — என்ற தலைவி கூற்றில், களவுக் காலத்துப் பிரிவு கருதித் தன்னைக் காதல்நோய் துன்புறுத்துவதனைக் கூறும் வாயிலாக அவள் வரைதல்வேட்கையைப் புலப்படுத்தவாறு.]

8 கட்டுரை யின்மை :

உரை மறுத்திருத்தல் அஃது,

'யான்தன் அறிவல் தான்அறி யலளே
யாங்கா குவள்கொல் தானே
பெருமுது செல்வர் ஒருமட மகளே.' குறுந். 337

எனவரும்.

[தோழியை இரந்து பின்நின்ற கிழவன் தனது குறை அறியக் கூறிய பாடற் பகுதி இது.

'தலைவியின் நகில்கள் அரும்பின. தலைமயிர் பிடரியை விட்டு இறங்கும் அளவு வளர்ந்துவிட்டது, பற்களும் விழுந்து முளைத்துவிட்டன. தேமலும் சில தோன்றிவிட்டன. அவள் என்னை வருத்துதலை யான் அறிவேன். அவள் அதனை அறிந்திலள். செல்வரின் மகளாகிய அவள் எத்தன்மையை உடையள் ஆவளோ?' — என்ற தலைவன் கூற்றில், தலைவி தலைவனுடன் எதுவும் உரையாடாமல் தன்னை அவன் அடைதல் வேண்டின் தன்தமரை வேண்டி வரைந்து எய்துதல் வேண்டும் என்பதைக் குறிப்பால் தெரிவித்தமையின், கட்டுரையின்மை என்ற மெய்ப்பாடு புலப்பட்டவாறு.

இப் பொருளுக்கு இது களவுக் காலத்துத் தலைவி தலைவனிடம் வரைதல் வேட்கையான் உரையாதிருத்தல் என்று துறை கொள்ளுதல் சிறக்கும்.]

ஒத்த நூற்பா

முழுதும் — தொல், பொ. 271

தெய்வம் அஞ்சல்[1] புரைஅறம் தெளிதல்[2]
இல்லது காய்தல்[3] உள்ளது உவர்த்தல்[4]
புணர்ந்துழி உண்மை[5] பொழுதுமறுப்பு ஆக்கம்[6]
அருள்மிக உடைமை[7] அன்புதொக நிற்றல்[8]
பிரிவுஆற் றுமை[9] மறைந்தவை உரைத்தல்[10]
புறஞ்சொல் மாணுக் கிளவியொடு தொகைஇச்[11]
சிறந்த பத்தும் செப்பிய பொருளே. தொல். பொ. 272

எனவும், ஓதுவன ஒத்தாகலின், முறையே இன்பத்தை வெறுத்தல் முதலாகக் கலக்கம் ஈருகக் கிடந்த இருபதும் புணர்ச்சிக்கு நிமித்தம் ஆகாதன போன்று காட்டினும் அவற்றை மிகவும் ஆராய்ந்து உணரின் புணர்ச்சி நிமித்த மாய் மெய்ப்பாடாம் என்றும், முட்டுவயின் கழறல் முதலா கக் கட்டுரை இன்மை ஈருகக் கிடந்த எட்டும் பின் ஒரு காலும் அழியாத வரைந்து எய்தும் கூட்டத்திற்கு ஏதுவா கிய மெய்ப்பாடு என்றும், தெய்வம் அஞ்சல் முதலாகப் புறஞ்சொல் மாணுக் கிளவி ஈருகக் கிடந்த பதினென்றும் அழிவில் கூட்டம் நிகழ்ந்த பின்னர்க் கற்பின்கண் நிகழும் மெய்ப்பாடாம் என்றும் கொள்க.

*1* தெய்வம் அஞ்சல் :

தலைமகற்குத் தொழுகுலமாகிய தெய்வமும் அவற்கு ஆசிரியர் ஆகிய தாபதரும் இன்னூர் என்பது அவனால் உணர்த்தப்பட்டு உணர்ந்த தலைமகள் அத்தெய்வத்தினை அஞ்சி ஒழுகும் ஒழுக்கம் அவள்கண் தோன்றுதல். அது,

*‘சினைவாடச் சிறக்கும்நின் சினந்தணிந் தீகெனக்*
*கனைகதிர்க் கனலியைக் காமுறல் இயைவதோ,’* கலி. 16

எனவும்,

'அச்சா றுக உணரிய வருபவன்
பொய்ச்சூள் அஞ்சிப் புலவேன் ஆகுவல்.'
கலி. 75

எனவும் வரும்.

[தலைமகள் தன் குலதெய்வத்தையே வணங்குவாள் என்பது.

'பண்கெழு மெல்விர லால்பணைத் தோளிதன்
கண்கழூஉச் செய்து கலைநலம் தாங்கி
விண்பொழி பூமழை வெல்கதிர் நேமிய
வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள்.' சீவக 200

என்ற பாடல் உரையில் நச்சினார்க்கினியர், 'தெய்வம் அஞ்சல் என்ற மெய்ப்பாட்டியல் சூத்திரம் தன்குலதெய்வத்தை வணங்குதற்கு விதி ஆமாறு உணர்க' என்று சுட்டியது காண்க.

'சினைவாட'—

தலைமகன் பொருள்வயின் பிரிந்தஇடத்து அவன்போகிய காட்டது நிலைமைநினைத்து ஆற்றாளாகிய தலைமகள் 'அவன் பொருட்டாக நாம் இவ்வகைப்பட்ட தெய்வங்களைப் பரவுதல் நம் கற்புக்கு இயைவதோ?' என்று கூற, அதுகேட்ட தோழி 'அவ்வாற்றானே மீண்டனர்; நீ கவலல் வேண்டா' எனக் கூறிய பாடற்பகுதி இது.

சூரியன் எல்லோருக்கும் பொதுவான தெய்வம் என்று கொள்ளும் கொள்கையும், பாலைநிலத்திற்கே உரிய தெய்வம் என்று கொள்ளும் கொள்கையும் என இருதிறத்துக் கொள்கையும் உண்டு. பாலைநிலத் தெய்வம் என்றுகொள்ளும் கொள்கையள் இத்தலைவி ஆதலின், "நாம் நம் குலதெய்வத்தை விடுத்து அயல் தெய்வமாகிய சூரியனை நோக்கி, 'மரக்கொம்புகள் வாடும்படியாகச் சிறக்கும் நின் சினம் தணிவதாகுக' என்று பரவிச் செறிந்த கதிரை உடைய

ஞாயிற்றை வேண்டிக்கோடலும் நம் கற்பிற்கு இயைவது ஒரு காரியமோ?" என்று கூறும் கூற்றில், குலதெய்வத்தைத் தலைமகள் தலைவன் நலம் கருதி வழிபடும் இயல்பு உண்மை குறிப்பான் அறிவுறுக்கப்பட்டவாறு.

'அச்சாறுக' —

'தலைவன் நாள்தோறும் வதுவை அயர்ந்து வந்தால் நான் அதற்கு பொறேனாக, நீ ஊடல் இன்றி அவன் வந்த-பொழுதே எதிர் கொள்ளுதி' என்ற தோழிக்குத் தலைமகள் அதற்குக் காரணம் கூறியதாக அமைந்த பாடல் இது-

'முயக்கத்தால் வாடிய பூவோடே எம்மனையிடத்து வாராதேகொள்' என்று கூறி யான் ஊடி இருப்பேனாயின், நீடியாமல், தன் பொய்ச்சூளுக்கு நாம் அஞ்சும் அச்சமே தான் ஊடல் உணர்த்தும் வழியாக ஊடல் உணர்த்துதற்கு வருபவனுடைய பொய்யாகிய சூளுக்கு அஞ்சிப் புலவேனாய் இருப்பேன்' என்ற தலைவி கூற்றில், தலைவன் பொய் உரைத்தால் அதற்குத் தன் குலதெய்வம் அவனை வருத்தும் என்று தெய்வம் அஞ்சுதல் பெறப்பட்டவாறு.]

2 புரை அறம் தெளிதல் :

தனக்கு ஒத்த இல்லறம் இன்னது என்று தலைமகள் மனத்துப் படுதல். அது,

'விரியுளைக் கலிமான் தேரொடும் வந்த
விருந்தெதிர் கோடலின் மறப்பல் என்றும்.'

கலி. 75

எனவரும். இஃது அவனோடு சொல்லாடாது ஊடி இருப்பேன் ஆயின், விருந்துகொண்டு புகுதரும்; அதனால் ஊடலை மறப்பேன்' என்றமையின், புரைஅறம் தெளிதல் ஆயிற்று.

[தலைவன் நாடோறும் வதுவை அயர்ந்து வருதலைத் தோழி பொருளாகவும், தலைவி ஊடல் இன்றி அவன் வந்த

பொழுதே எதிர்கொள்வதன் காரணத்தைத் தோழி கேட்பத் தலைவி சொல்லிய பாடற்பகுதியே இதுவும் ஆகும்.

"தலைவன் என்னை நோக்கி வந்தவுடன் 'வதுவை அயர்ந்த பின்பு விளக்கத்தினை உடையையாய் வாராநின்றாய், எம்மை எத்தன்மையாகக் கருதினாய் ?' எனப் புலந்து கூறிப் பின்னர் ஒருமொழியைக் கூறாது இருப்பேனாயின், அது நீங்கப் பரந்த கழுத்தின் மயிரினையும் மனச்செருக்கினையும் உடைய குதிரை பூண்ட தேரிலே ஆரவாரிப்பக் கொண்டுவந்த விருந்தினரை எதிர்கொள்கையினானே, எந்நாளும் புலவியை மறப்பேன்" என்ற தலைவி கூற்றில், தலைவனுடைய தவற்றை மறந்து வந்த விருந்தினரை எதிர்ஏற்று உபசரித்தலே இல்லறத்தின் கடப்பாடு என்று தலைவி கற்புக்காலத்தில் மனங்கொண்டமை பெறப்படுகிறது.]

3 இல்லது காய்தல் :

களவின்கண் போலாது தலைமகற்கு இல்லாததனை உண்டாக்கிக் கொண்டு காய்தல். அது,

' நற்றார் அகலத்துக்கு ஓர்சார் மேவிய
நெட்டிருங் கூந்தல் கடவுளர் எல்லார்க்கும்
முட்டுப்பாடு ஆகலும் உண்டு.' கலி. 63

எனவரும்.

[' காவற்பாங்கின் ஆங்கோர் பக்கமும்' தொல். பொ. 41 என்புழி, ' ஆங்கோர் பக்கமான கடவுளரைக் கண்டு தங்கினேன் ' என்ற தலைவனிடம் ' நீ கண்ட கடவுளர் இவர் ' என்று கூறித் தலைவி புலந்த செய்தி கூறும் பாடற்பகுதி இது.

' நீ கண்ட கடவுளர், பற்கள் விழுந்தெழுந்த பருவத்தினர். அவர்கள் உன்னையே கூடவந்தவர். நோக்கத்தால் மற்றவர் மனத்தைப் பிணிக்கும் கண்ணோடு, முன்னொரு

நாள் நீ பூப்பலிவிட்ட கடவுளர் அவர். அவர் திருப்பரங்குன் றத்தில் நின்னோடு மாரிக்காலத்துப் பல நாளும் தங்கிய கட வுளர். நீ கண்ட கடவுளருள் நின் மார்பில் குறிகள் செய்த கடவுள் யார்? இங்கு நீ தங்கின் அக்கடவுளர் வெகுள்வர். நீ செல்லாதிருப்பின், நின் மாலை அணிந்தமார்பிற்குப் பயன் கோடல் இல்லையாக, நின்னைத் தழுவிய நெடிய கரிய கூந்தலை உடைய கடவுளராகிய பரத்தையர் எல்லோருக்கும் காமம் நுகர்தலின் இடையீடு ஏற்படும். ஆதலின் விரைந்து அவர்பாற் செல்க' — என்று, தலைவனுக்குப் புறத்தொழுக்கம் இன்று எனினும், உள்ளது போலக் கொண்டு அவனைத் தலைவி வெகுளுதல் சுட்டப்பட்டவாறு. ]

4 உள்ளது உவர்த்தல் :

> தலைமகனால் பெற்ற தலையளி உள்ளதே ஆயினும், அதனை உண்மை என்றே தெளியாது அருவருத்து நிற்கும் உள்ள நிகழ்ச்சி. அது,

'கடல்கண் டன்ன கண்ணகல் பரப்பின்' என்ற பாட்டினுள்,

> 'வேப்புநனை அன்ன நெடுங்கண் நீர்ஞெண்டு
> இரைதேர் வெண்குருகு அஞ்சி அயல
> ஒலித்த பகன்றை இருஞ்சேற்று அள்ளல்
> திதலையின் வரிப்ப ஓடி விரைபுதன்
> நீர்மலி மண்அளைச் செறியும் ஊர.' அகநா. 176

என்புழித் தலைமகன் வாயில் வேண்டச் சென்றானைப் பிறர் கூறும் பழிக்கு வந்தாய் என்றமையின், இஃது உள்ளது உவர்த்தல் ஆயிற்று.

['வேம்பின் அரும்பினை ஒத்த நீண்ட கண்களை உடைய நீர் நண்டு இரையை ஆராய்ந்து பார்க்கும் நாரைக்கு அஞ்சிப் பக்கலில் உள்ள தழைத்த பகன்றை படர்ந்த கரிய சேற்றில்

தேமல்போல வரி உண்டாக ஒடிச்சென்று விரைந்து தனது ஈரம்மிக்க மணல் அளையுள் பதுங்கும் ஊரனே !' — என்று விளித்து,

'பரத்தையர் சேரிக்கண் அவர்நலம் நுகர்ந்திருந்த நீ ஊரவர் அலர் தூற்றுதலை அஞ்சி அப்பரத்தையர் செய்த குறி உன்மார்பில் கிடப்ப உன்மனைக்கு விரைந்து வரலாயினுய்' என்று உள்ளுறைபடக் கூறி, தலைவன் உண்மையாகவே அன்புகொண்டு தலைவியை நோக்கி வந்ததை 'ஊரவர் கூறும் பழிக்கு அஞ்சி வந்தாய்' என்று சொல்வது உள்ளது உவர்த்தலாம்.]

5 புணர்ந்துழி உண்மை :

முற்கூறிய இல்லது காய்தலும் உள்ளது உவர்த்தலும் ஆகிய விகாரம் இன்றிப் புணர்ச்சிக் காலத்துச் செய்வன சென்ற உள்ள நிகழ்ச்சி. அது,

> 'குளிரும் பருவத்தே ஆயினும் தென்றல்
> வளிஎறியின் மெய்யிற்கு இனிதாம் - ஒளியிழாய்
> ஊடி இருப்பினும் ஊரன் நறுமேனி
> கூடலின் இனிதாம் எனக்கு.' ஐந். ஐம். 30

எனவரும்.

[குளிர் காலமாக இருந்தாலும் தென்றல் காற்று வீசுவது உடலுக்கு இன்பம் தரும். அது போலத் தலைவன் தவறு கண்டு ஊடியிருக்கும் நேரத்தும், அவன் நறுமேனியைக் கூடும் வாய்ப்புப் பெறுதல் எனக்கு என்றும் இனிது' என்று தலைவன்பால் தான் ஊடியும் கூடியும் இன்பம் நுகரும் பேரின்பத்தைத் தலைவி சொற்றவாறு.]

6 பொழுது மறுப்பு ஆக்கம் :

களவின்கண் பகற்குறியும் இரவுக்குறியும் என வரையறுத்தாற் போல்வதொரு வரையறை இன்மையின்

அப்பொழுதினை மறுத்தலாகிய ஆக்கம். எனவே, களவுக்காலத்துப் பொழுது வரைந்துபட்ட இடர்ப்பாட்டின் நீங்கிய மனமகிழ்ச்சி ஆக்கம். அஃது,

'அயிரை பரந்த அந்தண் பழனத்து
ஏந்தெழில் மலர்ந்த தூம்புடைத் திரள்கால்
ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்குஇவள்
இடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்
தொழுதுகாண் பிறையின் தோன்றி யான்நுமக்கு
அரியம் ஆகிய காலைப்
பெரிதும் நோன்றனிர் நோகோ யானே.'

குறுந். 178

எனவரும்.

[கடிநகர்ப் புக்க தோழி தலைமகன் புணர்ச்சி விதும்பல் கண்டு, முன்னர்க் களவுக் காலத்து ஒழுகலாற்றை நினைந்து அறிந்து கூறியது இது.

'அயிரைமீன் மேய்தற்குப் பரந்த அழகிய தண்ணிய பொய்கையில் அழகைக் கொண்ட மலரை மேற்கொண்ட ஆம்பல் தண்டினைப் பறிப்பவர் நீர்வேட்கையை அடைந்தாற்போல, இத்தலைவியின் முலையிடையே துயிலப் பெற்றும் நடுங்குதலை ஒழிந்தீர் அல்லீர். யாம் பிறைபோலத் தோன்றி நுமக்கு அரியமாயிருந்த காலத்துப் பெரிய வருத்தங்களைப் பொறுத்தீர் போலும்! யான் அதற்காக வருந்துகிறேன்.'

'ஆம்பலைப் பறிப்போர் நீர் வேட்கையைத் தணித்தற்கு நீர் பக்கலில் இருந்தும் அவர் நீரைவேட்டு விரைவது போல்வது, நின் வேட்கையை முற்றுவிக்கும் தலைவி பக்கலில் இருக்கும் வாய்ப்பைப் பெற்றும், நீ காமம் நுகர விரைவது' என்ற கூற்றில் இடையீடு இன்றிக் காமம் நுகரும் வாய்ப்பு உணர்த்தப்பட்டவாறு. ]

7 அருள்மிக உடைமை :

களவுக்காலத்துப் போலத் துன்பம் மிகுதலின்றி அருள் மிகத் தோன்றிய நெஞ்சினளாதல். அது,

‘ நின்ற சொல்லர் நீடுதோன்று இனியர்
என்றும் என்தோள் பிரிபுஅறி யலரே.’ நற். 1

எனவரும்.

[தலைவனுடைய பிரிவைத் தோழி உணர்த்த உணர்ந்த தலைவி தலைவனைப்பற்றி ‘ அவர் நட்பு மிக மேதக்கது. நீர் இன்றி உலகு வாழாது; அதுபோல அவர் இன்றி நாம் வாழோம். அவர் நம் நுதல் பசத்தலை அறிந்து நம் ஆற்றுமையை உணர்ந்து அத்தகைய சிறுசெயல் செய்யார்; அவர் நிலைபெற்ற சொல்லை உடையவர் ஆதலின், ‘நின்னிற் பிரியேன்; பிரியின் ஆற்றேன்’ என்று தாம் கூறிய சொல்லைப் பிறழார். தம் செயல்களால் நமக்கு எப்பொழுதும் இனிமை செய்யும் அவர் என்றும் என்தோள்களைப் பிரிய மாட்டார்— என மனத்தில் தலைவனைப்பற்றி உயர்ந்த எண்ணம் கொண்டிருத்தல் புலப்படுத்தப் பட்டவாறு ]

8 அன்பு தொக நிற்றல் :

களவுக்காலத்துப் பிரிந்த அன்புஎல்லாம் இல்லறத்து மேல் பெருகிய விருப்பினுனே ஒருங்கு தொகநிற்றல். அஃது,

‘ எம்போல், புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து
நெல்லுடை நெடுநகர் நின்இன்று உறைவாள்
என்ன கடத்தளோ மற்றே’ அகநா. 176

என்புழி, ‘ புதல்வற் பயந்து நின் இன்று உறையும் கடத்தினம் யாம் ’ என்றமையின் இஃது அன்பு தொக நிற்றல் ஆயிற்று.

[தோழி தலைமகனுக்கு வாயில் மறுத்த இப்பாடலில்,

'நீ உண்மையான அன்பு எம்மாட்டு இன்றி ஊரவர் கூறும் பழிச்சொற்களுக்கு அஞ்சி எம் இல்லத்திற்கு வருகின்றாய் நீ ஏனைய பரத்தையரோடு விழா அயர்ந்தது கேட்டு மனம் தாங்காது தன் செயற்கை வனப்புக்களை அழித்துக் கொண்டு உன் காதற்பரத்தை உன்னைக் காண்டற்குத் தேடிச் செல்வாள். அவள் போல்பவர் அல்லேம் யாம். புதல்வனைப் பயந்து நெல் முதலிய வளம் சான்ற மனையில் நின்னை இன்றியும் இல்லறம் நடத்தும் கடப்பாடு எமக்கு உண்டு. அவளுக்குக் காமநுகர்ச்சியன்றி வேற்றுக் கடமை ஏதும் இன்று' என்ற தலைவி கூற்றில் இல்லறம் நடத்தும் கடமைக்கண் அவள் கொண்ட அன்பு வெளிப்படுத்தப்பட்டவாறு.]

9 பிரிவு ஆற்றாமை :

களவில் பிரிவு ஆற்றுதல் வேண்டுமாறு போலக் கற்பினுள் பிரிவு ஆற்றுதல் வேண்டாமை. அஃது,

'இடன்இன்றி இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இளிவுஎனக்
கடன்இறந்து செயல்சூழ்ந்த பொருள்பொருள் ஆகுமோ
வடமீன்போல் தொழுதுஏத்த வயங்கிய கற்பினுள்
தடமென்தோள் பிரியாமை பொருளாயின் அல்லதை.'

கலி. 2

எனவரும்.

[தலைவன் கற்புக்காலத்தில் பொருள்வயிற் பிரிதலை அறிந்த தோழி அவனைச் செலவு அழுங்குவிக்கும் பாடற் பகுதி இது.

"தம்முடைய இல்வாழ்க்கைக்கு வேண்டும் பொருள் இல்லை என்று கூறிவந்து இரந்தவர்க்குச் சிறிதும் கொடா

திருத்தல் இளிவாம்' என்று கூறிக் காட்டைக் கடந்துபோய்த் தேடுதலைக் கருதின பொருள் நன்கு மதிக்கப்படும் பொருள் ஆயினும், அருந்ததிபோல எல்லாரும் தொழுது வாழ்த்தும் படி விளங்கிய கற்பனையை முன்பு உடையவளுடைய காமச் செல்வியால் பெருமையை உடையவாகிய மெல்லியவாய தோள்களைப் பிரியாதிருத்தல் நின் மனத்திற்குப் பொருளாய் இருக்குமாயின், அதுவே பொருளாவது அல்லது பிரிகின்றது பொருளாகுமோ ?'' என்ற கூற்றில், தலைவி தலைவன் பிரிவைச் சிறிதும் ஆற்றுளாந்தன்மை புலப்படுத்தப்பட்டவாறு.]

10 மறைந்தவை உரைத்தல் :

களவுக் காலத்து நிகழ்ந்தனவற்றைக் கற்புக் காலத்துக் கூறுதல். அது,

'முயங்கல் விடாஅல் இவைஎன மயங்கி
யான்ஓம் என்னவும் ஒல்லார் தாம்மற்று
இவைபா ராட்டிய பருவமும் உளவே
இனியே, புதல்வன் தடுத்த பாலொடு தடைஇத்
திதலை அணிந்த தேங்கொள் மென்முலை
நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் அகலம்
வீங்க முயங்கல் யாம்வேண் டினமே
தீம்பால் படுதல் தாம்அஞ் சினரே' அகநா. 26

எனவரும்.

[தோழியை வாயில் வேண்டி அவளால் தான் வாயில் பெறாது பின் ஆற்றாமையே வாயிலாகப் புக்குக் கூடிய தலைமகன் நீக்கத்துக்கண் புக்க தோழியிடம் தலைமகள் கூறிய பாடற்பகுதி இது.

"தோழி! தலைவனைப் புலத்தல் கூடுமோ? மழை பெய்தலைப் பெற்ற, முன்பு பல முறை உழப்பட்ட வயல்மண் போல என் நெஞ்சம் அவனிடம் நெகிழ்ந்து விடுகிறது.

யான் இளையளாய் இருந்த களவுக் காலத்தில் என் மார்பைப் பலவாறு பாராட்டி விடாது அவன் தழுவ, யான் தழுவுதலை விடுக்குமாறு வேண்டியும் தழுவிய கை நீக்காமல் என் வனப்பை அவன் பாராட்டினுன். ஆனுல் இப்பொழுது கற்புக் காலத்தில் புதல்வனைப் பெற்ற முதியளாகிய நான், புதல்வன் பருகும் பாலை உட்கொண்டமையாலே பருத்துள்ள தேமல் படர்ந்த என் மென்னகிலால் சந்தனம் பூசிய அவன் மார் பத்தைத் தழுவ விரும்பும் காலத்தில் 'பால் பட்டுவிடுமே ?' என்று அவன் அஞ்சுகிருன்" என்று கூறிய கூற்றில், களவுக்கால நிகழ்ச்சியைக் கற்புக்காலத்துத் தலைவி சொற்ற வாறு.]

*11* புறஞ்சோல் மாணுக் கிளவி :

தலைமகற்கு வந்த புறஞ்சொல்லின் பொல்லாங்கு குறித்து எழுந்த கிளவி. அது,

'களிறுகவர் கம்பலை போல
அலரா கின்றது பலர்வாய்ப் பட்டே.'

அகநா. 96

எனவரும். பிறவும் அன்ன.

[பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்குத் தோழி வாயில் மறுத்த பாடற்பகுதி இது.

'ஊரனே ! பரத்தையர் பலருள்ளும் நீ குறுமகள் ஒருத்தியை விரும்பிக் கொண்டாய் என்று கூறுப. அஃது, அஃதை தந்தை அண்ணல் யானை அடுபோர்ச் சேரழர், வெண்ணெல் விளையும் பருவூரை ஒட்டி அமைந்த போர்க்களத்தே, ஏனைய சேரரும் பாண்டியருமாகிய இருபெருவேந்தரும் போரிட்டுக் களத்து ஒழியுமாறு, தம் வாட்படையால் பெரிய போரைச் செய்து வென்ற பொழுது, பகைவர்தம் யானைப் படையைக் கவர்ந்த பேராரவாரச் செய்தி பலராலும் பேசப்பட்டது

போல, இன்று பலராலும் பேசப்பட ஊர் முழுதும் நின் பழி பரவியுள்ளது' — என்ற தோழி கூற்றில், தலைவனுக்கு ஏற்படும் பழி கருதித் தலைவி மனம் நோகும் திறம் சொற்ற வாறு.]

இன்னும்,

> நிம்பிரி[1] கொடுமை[2] வியப்பொடு[3] புறமொழி[4]
> வன்சொல்[5] பொச்சாப்பு[6] மடிமையொடு[7] குடிமை[8]
> இன்புறல்[9] ஏழைமை[10] மறப்பொடு[11] ஒப்புமை[12]
> என்றிவை இன்மை என்மனார் புலவர்.
>
> தொல். பொ. 274

என்றமையான், காமக்குறிப்பு ஆகாத இவை எல்லாம் இன்றி வருதலைத் தலைமகன்கண் நிகழும் மெய்ப்பாடு என அவை தம்மை வரையறுத்துக் கூறுது அவற்கு ஆகாதன வரை யறுத்துக் கூறியவாறும், தலைமகட்கு உரிய மெய்ப்பாடு ஆயின வரையறுத்துக் கூறினமையின் அவட்கு ஆகாதன கூறல் வேண்டாதவாறும் கண்டு கொள்க. ஆகாதனவற் றிற்கு உதாரணம் காட்டலாவதில்லை.

1 நிம்பிரி :

பொருமை தோன்றும் குறிப்பு. அவை ' இந்நாள் சிறிது பொறுத்தாய் ' என்றுற்போல்வன.

2 கொடுமை

கேடு சூழநினையும் தீவினை உள்ளம்.

3 வியப்பு :

தலைமகள்பால் தெய்வத்தன்மை கண்டான்போல் வியந்து ஒழுகுதல்.

4 புறமொழி :

புறங்கூற்று.

5 வன் சொல் :

கண்ணோட்டம் இன்றிச் சொல்லும் சொற்கள்.

6 போச்சாப்பு :

கடைப்பிடியின்றி நெகிழ்ந்திருத்தல்.

7 மடிமை :
சோம்புள்ளம்.

8 குடிமை :

'இவள் இழிந்த பிறப்பினள்' எனத் தன்னை நன்கு மதித்து ஒழுகுதல்.

9 இன்புறல் :

ஒருவர் ஒருவரின் தாமே இன்புறுகின்றாராக நினைத்தல்.

10 ஏழைமை :

நுழைந்த உணர்வினர் அன்றி வரும் வெண்மை.

11 மறப்பு :
மறவி.

12 ஒப்புமை :

'இன்னானை ஒக்கும் இவள்' என்று அன்பு செய்தல்.
என உணர்க. 208

## விளக்கம்

நிம்பிரி—சகிப்புத்தன்மை இன்றி இருத்தல்.

வியப்பு—தலைமகள்பால் தெய்வத்தன்மை காணில் இல்லறம் சிறவாது என்பதனைக் காரைக்கால் அம்மையார் புராணத்து,

'வணிகனும் தன்கைப் புக்க மாங்கனி பின்னைக் காணான்
தணிவறும் பயமேற்கொண்டு உள்ளமும் தடுமாறு எய்தி
அணிகுழ லவரை வேறோர் அணங்கெனக் கருதி நீங்கும்
துணிவுகொண்டு எவர்க்கும் சொல்லான் தொடர்பின்றி
ஒழுகும் நாளுள்'

முதலிய பாடல்களான் அறிக. 208

புறமொழி—இல்லத்து நிகழும் செய்தி புறத்தார் அறியப் புலப்படச் செய்தல்.

பொச்சாப்பு—உறுதியின்றி எச்செயலிலும் ஈடுபடல்.

ஏழைமை — எதன்கண்ணும் மேம்போக்கான அறிவு. ஆழ்ந்து அறியாமையால் எதன் உண்மையும் உள்ளவாறு உணரப்படாது என்பது.

## எச்சத்தின் இயல்

531 **சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை**
**புல்லிய கிளவி எச்சம் ஆகும்.**

இது பத்தாம் எண்ணும் முறைமைக்கண் நின்ற எச்சம் இவ்வியல்பிற்றுய்ச் செய்யுட்கு உறுப்பாய் வரும் என்பதோர் ஒழிபு கூறுகின்றது,

(இ-ள்) கூற்றினானும் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தோடு பொருந்திய கிளவி எச்சம் என்னும் உறுப்பாம் என்றவாறு.

ஈண்டுச் சொல் என்றது, சொல்லோத்தினுள் சொல்-இசை - குறிப்பு- -என்ற மூன்றனுள் சொல் என்றது என உணர்க.

'முடிவுகொள் இயற்கை' எனவே, செய்யுளின்கண்ணது அன்றிப் பின்கொணர்ந்து முடிக்கப்படும் என்பதூஉம் பெற்றும்.

உதாரணம் சொல்லோத்தினுள் குறிப்பெச்சம் உணர்த்திய வழிக்காட்டினும். அற்றேல் அஃதாக, மாட்டேற்றான் எய்துவியாது இதனை எடுத்தோதி விதந்தது என்னையெனின், ஆண்டு எச்சம் என்ற துணைஅல்லது, அகப்பொருள் உறுப்பாய்ச் செய்யுட்கு உறுப்பாம் என்னும் விசேடவிதி ஆண்டுப் பெறப்படாமையின், விதந்து ஓதல் வேண்டும் என்க.

இனி,

'செங்களம் படக்கொன்று அவுணர்த் தேய்த்த
செங்கோல் அம்பின் செங்கோட்டு யானைக்
கழல்தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே.' குறுந். 1

என இதனையே செய்யுள் முடிந்தவழியும், 'இவற்றால் யாம் குறை உடையம் அல்லம்' என்று தலைமகற்குச் சொன்னாளேல் கூற்றெச்சத்திற்கும், 'காண்பாயாகின் காண்' எனத் தலைமகட்குச் சொன்னாளேல் குறிப்பெச்சத்திற்கும் உதாரணமாகக் காட்டினும் அமையும். 209

## விளக்கம்

நூற்பா - தொல். பொ. 573. உரை பேராசிரியர் உரையைப் பெரிதும் தழுவியது.

இவ்வெச்சம் என்னும் உறுப்பு சொல்லதிகாரத்தில் சொல்லெச்சம் இசையெச்சம் குறிப்பெச்சம் என்ற மூன்று திறத்ததாகப் பொதுவியலில் (இ. வி. 350) விளக்கப்பட்டுள்ளது. அவ்வெச்சம் அகப்பாட்டு உறுப்பாக வரும் என்பதனை விளக்க ஈண்டும் கூறினர்.

கூற்றெச்சமாவது செய்யுளில் கூறாது விடுக்கப்பட்ட செய்தியைக் கூறினாலும் தவறின்றாக அமைவது

குறிப்பெச்சமாவது செய்யுளில் கூறாது விடுக்கப்பட வேண்டியதாய் வெளிப்படையாகக் கூறத்தகாததாய் அமைவது.

'செங்களம்பட'—

'அவுணரைப் போரிடை அழித்த அம்பினையும், யானையினையும், உழலவிட்ட வீரவளையையும் உடைய முருகனுக்கு உரிய இக்குன்றம் காந்தட்பூ நிறைய உடையது.' — இது தோழி கூற்று.

தலைவன் காந்தட்பூக்களைக் கையுறையாகக்கொண்டு வரத் தோழி கையுறை மறுத்து இவ்வாறு கூறினாள் என்பதைத் துறைச்செய்தியாகக் கொள்ளின், 'ஐய! நீ காந்தட் பூக்களைக் கொண்டு வந்துள்ளாய்; எம் குன்றத்தில் காந்தட் பூக்களுக்குக் குறைவுஇன்று; ஆதலின் இக்கையுறைப்பொருள் எமக்கு அருமை உடையதன்று. இவை எமக்கு வேண்டா' என்ற செய்திகளைக் கூறாமல், வாளா எம்குன்றத்தில் காந்தட்பூ மிகுதியும் உண்டு என்று கூறி, இவற்றைப் பெறப்பட வைத்த செய்தி எச்சமாகும். இவ்வெச்சமான செய்தியை மறைமுகமாக விளக்காமல் நேரே சொல்லினும் இழுக்கு இன்று; ஆதலின் கூறவேண்டிய செய்தி கூறப்படாமல் விடுக்கப்பட்டதனால் இது கூற்றெச்சமாகும்.

தலைவியைத் தோழி குறிக்கண் தலைமகனுடைய இருப்பிடத்திற்கு அழைத்துச்சென்று 'முருகனுடைய இக்குன்றத்தில் காந்தட்பூக்கள் பலவாக உள்ளன' என்று வெளிப்படையாகக் கூறி, 'அவற்றைக் காண்பது விருப்பம் உண்டாயின் காண்' என்று கூறுவாள்போலத் தான் வெளிப்படையாகக் கூறமுடியாத இரவுக்குறிக்கண் தலைவன் இருக்கும் இடம் இஃது என்பதனைக் குறிப்பாகக் கொள்ளவைத்தது குறிப்பு எச்சமாம். பிறவும் இவ்வாறு கொள்ளப்படும்.

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொல். பொ. 518

'சொல்லே ஆயினும் குறிப்பே ஆயினும்
சொல்லி முடித்தல் வேண்டுவது எச்சம்.' ந அ. 232

209

## பொருள்வகை இயல்

582 **இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்று இவை இழுக்குநெறி இன்றி
இதுவாகி இத்திணைக்கு உரிப்பொருள் என்னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப.**

இது பதினொராம் எண்ணுமுறைமைக்கண் நின்ற பொருள்வகை இவ்வியல்பிற்றாய்ச் செய்யுட்கு உறுப்பாய் வரும் என்பதோர் ஒழிபு கூறுகின்றது,

(இ-ள்) இன்பமும் துன்பமும் புணர்தலும் பிரிதலும் ஒழுக்கமும் என்னப்பட்ட இவை இழுக்காதவாற்ருன் இத் திணைக்கு இது பொருள் என்று ஆசிரியன் ஓதிய உரிப் பொருள் அன்றி, அவற்றுக்கு எல்லாம் பொதுவாகப் புலவ ஞல் செய்யப்படுவது பொருட்கூற்று எனப்படும் என்றவாறு.

அது,

'பிடிக்கை அன்ன பின்னகம் தீண்டித்தன்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ'

அகநா. 9

என்ருற் போலச் செய்யுள் செய்வான் தான் வகுப்பன எல் லாம் கோடல். இது பாலைப்பாட்டினுள் வந்ததாயினும் குறிஞ்சி முதலாயினவற்றிற்கும் பொதுவாம் என்பது. பொதுமை எல்லா உரிப்பொருட்கும் ஏற்பப் பல்வேறு வகை யான் செய்தல். 210

## விளக்கம்

நூற்பா. தொல். பொ. 520. உரை பேராசிரியர் உரை யைத் தழுவியது.

ஒவ்வொரு திணைக்கும் தனியே சிறப்பான உரிப்பொருள் வகுக்கப்பட்டிருக்கிறது. ஆயினும் அப்பொருள் ஒன்றனையே கொண்டு திணைச் செய்யுள் அமைத்தல் இயலாது. இன்பம் துன்பம் புணர்தல் பிரிதல் நடைமுறை இவற்றில் சில எல் லாத் திணைகளுக்கும் பொதுவாகக் கொள்ளப்பட வேண்டி யன. அவற்றைச் செய்யுள் செய்யும் புலவன் தான் பாடும்

திணைப்பாட்டின் உரிப்பொருளொடு பொருந்தாவாயினும் அமைப்பதற்கு உரிய அகப்பாட்டு உறுப்பு பொருள்வகை என்பது.

'கொல்வினைப்பொலிந்த' என்ற அகநானூற்றுப் பாலைப் பாட்டில் 'என் நெஞ்சு தலைவியின் கூந்தலைத் தீண்டித் தன்னைத் தடவுமாறு அவளைத் தழுவிற்றே' என்ற புணர்ச்சி பற்றிய செய்தியைத் தலைவன் கூறினானகப் பாலைப்பாட்டில் அமைத்தற்குக் காரணம், இன்னோரன்ன செய்திகள்பல ஐந்திணைகளுக்கும் பொதுவாகக் கொள்ளப்படும் என்பது கருதியே. இச் செய்தியைக் குறிப்பிடும் உறுப்பே பொருள்வகையாம்.

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொல். பொ. 520

'ஒருதிணைக்கு உரிமை பூணு நிலைமை
பொருள்வகை என்மனார் புலமை யோரே.' ந. அ. 233
210

## துறையின் இயல்

583 அவ்வம் மாக்களும் விலங்கும் அன்றிப்
பிறஅவண் வரினும் திறவதின் நாடித்
தத்தம் இயல்பின் மரபொடு முடியின்
அத்திறம் தானே துறைஎனப் படுமே.

இது பன்னிரண்டாம் எண்ணு முறைமைக்கண் நின்ற துறை இவ்வியல்பிற்றாய்ச் செய்யுட்கு உறுப்பாய் வரும் என்பதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) ஐவகை நிலத்திற்கு உரியர் எனப்படும் பல் வேறு வகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதிவந்தவாறு அன்றிப் படைத்துச் செய்யினும், அவ்வந்நிலத்திற்கு ஏற்ற இலக்கணமும் வரலாற்று முறைமையும் பிறழாமல் செய்யின் அது மார்க்கம் எனப்படும் என்றவாறு.

மார்க்கம் எனினும் துறை எனினும் ஒக்கும்.

'ஊர்க்கால் நிவந்த பொதும்பருள் நீர்க்கால்'
என்னும் கலியுள், (56)
' கொழுநிழல் ஞாழல் முதிர்இணர் கொண்டு
கழுமு முடித்துக் கண்கூடு கூழை.'

என நெய்தல் தலைமகள்போலக் கூறி, அவளை மருதநிலத்துக் கண்டான் போல,

'ஊர்க்கால் நிவந்த பொதும்பருள்'

எனவும் சொல்லிப் பின் குறிஞ்சிப்பொருளாகிய புணர்தல் உரிப்பொருளான் முடித்தான்; அவ்வாறு மயங்கச்செய்யினும், குறிஞ்சித்துறைப்பாற்படச் செய்தமையின் அத்துறை உறுப்பான் வந்தது என்பது.

இதுவும் மேலைப்பொருள்வகைபோலப் புலவரால் செய்து கொள்ளப்படுவது ஆகலின், அதற்குப்பின் வைக்கப்பட்டது.

இங்ஙனம் கூறியவாற்றான், உரைப்போர் கேட்போர் உண்மைஇன்றி, உரைக்கும் கவியே உரைப்பதூஉம் துறை என்னும் உறுப்பாதல் பெற்றும்.

' எறிதேன் அலம்பும் சிலம்பின்எப் போதும் இரந்திவள்பின்
வெறிதே திரிந்து மெலிந்தனம் யாம்உள்ளம் மெல்லியற்குப்
பிறிதேகொல் என்னும் பெருந்தகை தேறப் பெரிதுயிர்த்து
வறிதேமுறுவல்செய்தாள் தஞ்சைவாணன்வரை அணங்கே.'

தஞ்சை 15

இதனுள் கூற்றிற்கு உரியன் அல்லாத கவிக்கூற்றும் அதற்கு உரியார் கூற்றின்பால் படுத்து அடக்கப்பட்டவாறு காண்க.

' முத்திறப் பொருளும் தத்தம் திணையொடு
மரபின் வாராது மயங்கலும் உரிய.'

இ. வி. அ 22

என்றதனால் அடங்குதலின் இச்சூத்திரம் வேண்டா எனின், அதனான் மயங்கும் என்னும் துணை அல்லது அகப்பொருள் ஒழிபாய்ச் செய்யுட்கு உறுப்பாம் என்னும் விசேடவிதி ஆண்டுப் பெறப்படாமையின், வேண்டும் என்பது என்க.

**211**

### விளக்கம்

நூற்பா தொல். பொ. 521. உரை பேராசிரியர் உரையைத் தழுவியது.

ஒவ்வொரு நிலத்திற்கும் முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் என்பன வரையறுக்கப்பட்டுள்ளன. அங்ஙனம் வரையறுத்த வரையறையைக் கடந்தும் சான்றோர் சுவை—படல் கருதிச் செய்யுள் செய்தலும் உண்டு. அவை தத்தம் திணையொடு வாராவாயினும், எத்திணை கருதிச் செய்யப்பட்டனவோ அத்திணைப் பொருளாகக் கொள்ளத்தக்கன என்று வரையறுத்துக் கூறும் அகப்பாட்டு உறுப்புத் துறை எனப்படும்.

‘ ஊர்க்கால் நிவந்த ’ —

என்ற கலிப்பா காமம் சாலா இளமையோள் வயின் முதியவன் ஒருவன் ஏமம் சாலா இடும்பை எய்திக் கூறிய கைக்கிளைச் செய்யுள். இஃது அவன் மனத்தால் புணர்ச்சியை வேண்டிய உரிப்பொருள் உடையது பற்றிக் குறிஞ்சிக் கலியாயிற்று. இப்பாடலில் தலைவி ஞாழல் என்ற நெய்தல் நிலப் பூவைச் சூடி மருத நிலத்துச் சோலையில் தலைவனால் காணப் பட்டாளாகக் கூறப்படினும், தலைவன் அவளைக் கூடுதலை விரும்பிய கருத்தான் குறிஞ்சிப் பாடலாக இது கொள்ளப் பட்டது. இங்ஙனம் பாடும் வாய்ப்புப் புலவருக்கு வழங்கப் பட்டமையான், அவர் செயல் நேரிதே என்பதைக் குறிக்கத் துறை என்ற உறுப்பு அமைக்கப்படல் வேண்டுவதாயிற்று.

'எறிதேன்' —

'இம்மலையில் பல்கால் இவளை இரந்து பயனின்றி யான் திரிந்தேன்; இவள் கருத்து என் கருத்துக்கு வேறுபட்டது போலும்' என்ற தலைவன் தெளிவடையுமாறு பெருமூச் செறிந்து தஞ்சைவாணன் மலைத்தலைவி முறுவலித்தாள்.

இஃது உரைப்போரோ கேட்போரோ இன்றிக் கவியே கூறியதாம்.

### ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொல். பொ. 521

'சொல்லிய அல்ல ஒன்றினும் அவற்றோடு
ஒல்லும் வகைதெரிந்து உணர்த்தியல் வழாமல்
உரைப்போர் கேட்போர் உண்மை இன்றி
உரைக்கும் கவியே உரைப்பது துறையே.' ந. அ. 234

211

## அகப்பொருள் ஒழிபு வகை

584 உவமப் பொருளும் இறைச்சிப் பொருளும்
திணைஉணர் வகையான் அணையும் பாட்டினுள்.

இன்னும் ஒருவாற்றுள் அகப்பொருள் ஒழிபு கூறுவான் புகுந்தவற்றுள், இது திணை உணர்தல் கருவி ஆவன சில பொருள் செய்யுட்கண் வருமாறு கூறுகின்றது.

(இ-ள்) உவமப்பொருளும் கருப்பொருட்கு நேயம் ஆகிய இறைச்சிப்பொருளும் என்று இருபகுதிப்பட்ட பொருளும் திணை உணரும் கூற்றான் பொருந்தும் செய்யுட்கண் என்றவாறு. 212

### விளக்கம்

அகத்திணையை உணர்வதற்கு உவமங்களும், இறைச்சி என்ற உள்ளுறைப்பொருளும் பெரிதும் பயன்படும் என்பது

உள்ளுறைப் பொருள் தருவன ஐந்து. அவையாவன-இறைச்சி, உவமம், சுட்டு, நகை, சிறப்பு என்பனவாம்;

'உடனுறை உவமம் சுட்டுநகை சிறப்பெனக்
கெடல்அரு மரபின் உள்ளுறை ஐந்தே'
தொல். பொ. 242

என்பஆகலின்.

உபமானத்தைக் கூறி உபமேயத்தைப் பெறப்பட வைப்பது உள்ளுறை உவமம். இறைச்சி அன்னதன்றிச் சொல்லப்பட்ட செய்தியைக்கொண்டு அதன்குறிப்பாகப் பிறிதொன்று கொள்வது.

ஒத்த நூற்பா
முழுதும் — ந. அ. 236

### உவம வகை 212

**585** உள்ளுறை உவமம் வெளிப்படை உவமம்என
எள்ளரு உவமம் இருவகை உடைத்தே.

இது மேற்கூறிய உவமப்பொருள் இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) உள்ளுறை உவமமும் வெளிப்படை உவமமும் என முன்னர்க் கூறிய இகழ்தற்பாடுஇல்லாத உவமப் பொருள் இருவகையினை உடைத்தாம் என்றவாறு. 213

விளக்கம்

உவமமாவது உள்ளுறை உவமம் எனவும், வெளிப்படை உவமம் எனவும் இருவகைப்படும்.

தொல்காப்பியனார் யாண்டும் உவமம் என்ற சொல்லையே கையாண்டுள்ளார். உவமம் பொருள் புலப்பாடு செய்யும் கருவிகளில் ஒன்று என்பதே அவர் கருத்து. உவமம் ஓர் அணி என்பது இந்நூலாசிரியர் கருத்து. இவர் உபமா என்ற

ஆரியச்சொல் வடசொல்லாகிய உவமை என்ற சொல்லையும் உவமம் என்ற சொல்லையும் கையாளுவதனை இவர் நூற்பா, உரை இவற்றில் காணலாம்.

### ஒத்த நூற்பாக்கள்

'உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத்
தள்ளாது ஆகும் திணைஉணர் வகையே'.
தொ. பொ. 46

முழுதும் — ந. அ. 237

213

## உள்ளுறை உவம இலக்கணம்

அவற்றுள்,

586 உள்ளுறை உவமம் உய்த்துணர் வகைத்தாய்ப்
புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்.

இது, முறையானே உள்ளுறை உவமம் இவ்வியல்பிற்று என்கின்றது.

(இ-ள்) மேல்கூறிய இரண்டனுள் உள்ளுறை உவமமாவது ஆராய்ந்து அறியும் பகுதியினை உடைத்தாய்ப் புள்ளு முதலிய கருப்பொருள்களை தனக்குத் தோன்றும் நிலனாகக்கொண்டு அவற்றானே புலப்படும் என்றவாறு.

எனவே, புள்ளு முதலிய பற்றி வரும் அப்பொருள் நிகழ்ச்சி பிறிது ஒன்றற்கு உவமமாகச் செய்தலும், அங்ஙனம் செய்யுங்கால் பவளவாய் என்றாற் போல உவமையும் உவமிக்கப்படும் பொருளும் புலப்படக் கூறாது உள்ளத்தான் உணரும்திறத்தான் உவமம் மாத்திரமே கூறுதலும் உள்ளுறை உவமத்திற்கு இலக்கணம் ஆயிற்று என்பது.

உள்ளுறை — உள்ளுறுத்தல்.

'வீங்குநீர் அவிழ்நீலம் பகர்பவர் வயல்கொண்ட
ஞாங்கர்மலர் சூழ்தந்து ஊர்புகுந்த வரிவண்டு

ஓங்குயர் எழில்யானைக் கனைகடாம் கமழ்நாற்றம்
ஆங்கவை விருந்தாற்றப் பகல்அல்கிக் கங்குலான்
வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்
தேங்கமழ் கதுப்பினுள் அரும்பவிழ் நறுமுல்லைப்
பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதாம் மரீஇய
பூம்பொய்கை மறந்துள்ளாப் புனல்அணி நல்லூர!'
கலி. 66

இதனுள், வீங்குநீர் பரத்தையர் சேரியாகவும், அதன் கண் வீழ்ந்த நீலம் காமச்செவ்வி நிகழ்ந்த பரத்தையராக வும், பகர்வர் பரத்தையரைத் தேர் ஏற்றிக்கொண்டு வரும் பாணர் முதலிய வாயில்களாகவும், அம்மலரைச் சூழ்ந்த வண்டு தலைவனாகவும், யானையின் கடாத்தை ஆண்டு உறைந்த வண்டுகள் வந்த வண்டிற்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப்பரத்தையர் தமது நலத்தை அத்தலைவனை நுகர்வித்தலாகவும், கங்குலில் வண்டு முல்லையை ஊதுதல் இற்பரத்தையருடன் இரவு துயிலுதலாக வும், பண்டு மருவிய பொய்கையை மறத்தல் தலைவியை மறத்தலாகவும் பொருள்தந்து ஆண்டுப் புலப்படக் கூறிய கருப்பொருள்கள் புலப்படக் கூறாத மருதத்திணைப் பொருட்கு உள்ளுறை உவமமாய்க் கேட்டோன் உள்ளத்தே விளங்கி நின்றவாறு காண்க. பிறவும் அன்ன. 214

## விளக்கம்

உள்ளுறை உவமத்தில் உபமானமாகிய கருப்பொருள் களே உண்டு. அவையும் தெய்வம் நீங்கலாகக் காணப்படும். அவ்வுவமானங்களைக் கொண்டு உபமேயமாகக் கவி கருது கின்ற பொருள்களைத் தெளிந்த அறிவினர் உணர்தற்கு ஏது வாகிய வாய்ப்பு அத்தொடரில் அமைந்திருக்கும். அஃது அகத்திணையிலேயே வரும்; இன்பம் பற்றியும் துன்பம் பற்றி யும் வரும்; தலைவன் தலைவி தோழி செவிலி பாங்கன் பாணன் என்பவராலேயே கூறப்படும்.

'வீங்குநீர்' —

'நீரில் மலர்ந்த நீலப்பூக்களைப் பறித்துக்கொண்டு விலைக்கு விற்பார் தலையில் சூடிய பூக்களில் தங்கி ஊருக்கு வந்துசேர்ந்த வண்டு, யானையின் மதநீரில் முன்பு படிந்திருந்த வண்டுகளோடு மதநீரை உண்டு பகலைக்கழித்து, இரவிலே கணவரோடு கூடியிருக்கும் மகளிர் சூடிய முல்லைப் பூக்களில் படிந்து வேறுசில பூக்களை நுகரவேண்டும் என்ற விருப்பம் இன்றி, தாம் பண்டு விரும்பின பூக்களை உடைய குளத்தை மறந்து பின் ஒருகாலும் நினையாத நீர்வளம் மிக்க நல்ல ஊரனே!'

இம் மருதக்கலித் தரவில் கூறப்பட்டுள்ள கருப்பொருள்களைக் கொண்டே கவி குறித்த உட்பொருள் இது என்பதனை நச்சினார்க்கினியர் உரைத்தவாறே இவரும் கூறியுள்ளார்.

| உபமானம் (வெளிப்பட இருப்பது) | | உபமேயம் (குறித்து உணரப்படுவது) |
|---|---|---|
| நீரில் மலர்ந்த நீலம் | — | பரத்தையர் சேரியில் வாழும் பரத்தையர் |
| பூ விற்பவர் | — | பரத்தையரைத் தேர்ஏற்றிக் கொண்டு வரும் பாணர் |
| வண்டு | — | தலைவன் |
| யானைமதம் | — | சேரிப்பரத்தையர் நலம் |
| முல்லையை ஊதுதல் | — | இற்பரத்தையரை நுகர்தல் |
| பொய்கை | — | தலைவன் இல்லம் |
| பொய்கை மலர் | — | தலைவி |
| பொய்கையை மறத்தல் | — | தலைவன் தன் இல்லத்தை மறத்தல் |

என உபமானத்தைக் கொண்டு உபமேயத்தை உணர வைப்பது உள்ளுறைஉவமமாம். இவ்வுள்ளுறைஉவமம் உவமப்போலி எனவும் கூறப்படும்.

தலைவி தான் பழகிய பொருள்பற்றியே உள்ளுறை உவமம் கூறலாம். தோழி தன் நிலத்துப் பொருள் எல்லாவற்றையும் கொண்டு கூறலாம். தலைவன் தன் ஆற்றல் தோன்ற உள்ளுறை உவமம் கூறுவான். பாங்கன் பாணன் முதலாயினர் தாம்தாம் அறிந்த செய்திகளைக் கொண்டு உள்ளுறைஉவமம் கூறுவர். தலைவி மருதத்துள்ளும் நெய்தலுள்ளும் பெரும்பாலும் உள்ளுறைஉவமம் கூறுவாள். தலைவனுக்கு உள்ளுறைஉவமம் கூற நிலம் வரையறை இல்லை. தோழியும் செவிலியும் ஏற்றபெற்றி உள்ளுறைஉவமம் கூறலாம்.

இவ்வுள்ளுறைஉவமம்-வினை - பயன்-மெய் - உரு-பிறப்பு என்று ஐந்து வகைப்படும் இத்திறம் எல்லாம் தொல்காப்பியம் முதலியவற்றான் உணரப்படும். இஃது ஒட்டு அணியுள் அடங்கும் என்ப.

### ஒத்த நூற்பாக்கள்

‘ உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன்எனக்
கொள்ளும் என்ப குறிஅறிந்தோரே.’ தொ. பொ, 47

‘ உள்ளுறுத்து இதனோடு ஒத்துப்பொருள் முடிகஎன
‘ உள்ளுறுத்து இறுவது உள்ளுறை உவமம்.’ 48

‘ பிறிதொடு படாஅது பிறப்பொடு நோக்கி
முன்னை மரபின் கூறுங் காலைத்
துணிவொடு வருஉம் துணிவினோர் கொளினே.’ 298

‘ உவமப் போலி ஐந்துஎன மொழிப.’ 299

‘ தவலருஞ் சிறப்பின்அத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்
பிறப்பினும் வருஉம் திறத்தியல் என்ப.’ 300

'கிழவி சொல்லின் அவள் அறி கிளவி
தோழிக்கு ஆயின் நிலம்பெயர்ந்து உரையாது.' **301**

'கிழவோற்கு ஆயின் உரனொடு கிளக்கும்
ஏனோர்க்கு எல்லாம் இடம்வரைவு இன்றே.' **302**

'இனிதுஉறு கிளவியும் துனிஉறு கிளவியும்
உவமம் மருங்கின் தோன்றும் என்ப.' 303

'கிழவோட்கு உவமம் ஈரிடத்து உரித்தே.' 304

'கிழவோற்கு ஆயின் இடம்வரைவு இன்றே.' 305

'தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற்கு உரியர் கொள்வழி யான.' 306

முழுதும் — ந. அ. 238

'உணர்வதற்கு அரிதாம் உவமப் போலி
புணர்திறம் வினையே பொருள்மெய் உருஎனப்
பிறப்பொடும் ஐந்தாம் பெற்றித்து ஆகிச்
சிறப்புறு திணைகளின் தெய்வதம் ஒழிந்த
கருப்பொருள் களனுக் கட்டுரை பயின்று
உவமையோடு எதிர்உள் ளுறுத்தலுற்று அயலாம்
உவமச் சொல்தொக ஒருதலை ஆகியும்
அன்பினது அளவாம் அகத்திணை இருவயின்
இன்பதுன் பத்து இசைதிரிந்து இசையாத்
துணைவன் துணைவி தோழி செவிலி
இணைபெறும் பாங்கன் பாணன்என்று இவரால்
கொள்கையின் வரூஉம் குறிப்புஉடைத்து ஆகும்.'
மா. அ. 123

214

## வெளிப்படை உவமவகை

587 வெளிப்படை உவமம் வினைபயன் மெய்உரு
வெளிப்படு கின்று விளங்குவ தாகும்.

இது முறையானே வெளிப்படை உவமம் இவ்வியல் பிற்று என்கின்றது.

(இ-ள்) வெளிப்படை உவமமாவது தொழிலும் பயனும் வடிவும் வண்ணமும் தம்மோடு உவமிக்கப்படும் பொருளோடு அடுத்து உள்ளத்தான் உணர வேண்டாது சொல்லிய சொற்றொடரே பற்றுக்கோடாகத் தாமே புலப்படநின்று விளங்குவதாம் என்றவாறு.

அஃது அங்ஙனமாமாறு அணிஇயலுள் காண்க. 215

விளக்கம்

வெளிப்படை உவமமாவது உபமானமும் உபமேயமும் வெளிப்படையாக இருப்பதாம். உவமஉருபும் பொதுத் தன்மையும் வெளிப்படையாகவும் இருக்கலாம்; மறைந்தும் இருக்கலாம்.

பால்போலும் இன்மொழி: பால்-உபமானம்; மொழி-உபமேயம்; போலும் - உவமஉருபு; இனிமை - பொதுத்தன்மை. பால் போலும் மொழி என்ற தொடரில் பொதுத்தன்மை மறைந்துள்ளது.

பால் இன்மொழி என்ற தொடரில் உவமஉருபு மறைந்துள்ளது. பால்மொழி என்ற தொடரில் உவமஉருபும் பொதுத்தன்மையும் மறைந்துள்ளன. இவையாவும் வெளிப்படை உவமமே.

அணியியலில் பண்பு என்றதனை ஈண்டு இவர் மெய்உரு-எனத் தொல்காப்பியர் கருத்துப்படி பிரித்துக் கூறியுள்ளார். மெய்—வடிவு; உரு—நிறம். இவ்விரண்டும் பண்பு என அணியியலுள் ஒன்றாக அடக்குவார். புலிப்பாய்ச்சல்—வினை; மழை வண்கை—பண்பு; துடிஇடை—மெய்; பொன்னிறம்—உரு.

ஒத்த நூற்பாக்கள்

‘ஏனை உவமம் தான்உணர் வகைத்தே.’

தொல் பொ. 49

முழுதும் — ந. அ. 239

215

## இறைச்சியின் இயல்

588 இறைச்சி தானே பொருள்புறத் ததுவே.

இது முறையானே இறைச்சிப்பொருள் இவ்வியல்பிற்று என்கின்றது.

(இ-ள்) கருப்பொருளுக்கு நேயமாகிய இறைச்சிப் பொருள்தான் கூறவேண்டுவதொரு பொருளின் புறத்தே புலப்பட்டு அதற்கு உபகாரப்படும் பொருள்தன்மையை உடையதாம் என்றவாறு.

‘இலங்கும் அருவித்தே இலங்கும் அருவித்தே
வானின் இலங்கும் அருவித்தே தான்உற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை.’ கலி. 41

‘சூளைப் பொய்த்தான்’ என்பதே கூறவேண்டும் பொருள். அதன் புறத்தே ‘இங்ஙனம் பொய்த்தான் மலையகத்து நீர் திகழ் வான் என்?’ என இறைச்சிப் பொருள் தோன்றியவாறு காண்க.

.... .... .... .... ‘சாரல்
கருங்கோல் குறிஞ்சி பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே.’
குறுந். 3

இதில் நாட்டிற்கு அடையாகி வந்த குறிஞ்சிப்பூவும் தேனும் இறைச்சிப்பொருள் என்று கொள்க. 216

### விளக்கம்

இறைச்சி என்ற சொல்லே கருப்பொருள் என்னும் பொருளது.

உபமானத்தைக்கொண்டு இதன்கண் உபமேயத்தைக் காண்பது இயலாது.

'இலங்கும் அருவித்து'—

தான் சொல்லிய சொல்லைக் காப்பாற்றாது பொய் கூறியவன் மலை விளங்கும் அருவியை உடையது; மழை பெய்தலான் விளங்கும் அருவியை உடையது.

'தலைவனை தான் சொன்ன சொல்லைத் தவறியவன் என்று கருதுகிறோம். சொன்னசொல் தவறியவன் வாழுமிடத்தில், இயற்கை வளம் தாராது பொய்த்துவிடும். ஆனால் அவன் மலையிலோ மழைபெய்தலான் அருவிநீர் ஓடி வருகிறது. இதனை நோக்க, அவன் பொய்த்திலன்போலும். அவனைப் பொய்யனாக் கருதியது நம்தவறே' என்று இறைச்சி போந்த பொருளாகக் கொள்ளக்கிடக்கிறது.

நீர் திகழ்வான் என்—கார்மேகம் தங்கி மழை பெய்வது எதனால்?

'சாரல் கருங்கோல்'—

பக்கமலையிலே கரிய கிளைகளை உடைய குறிஞ்சிச்செடியின் பூக்களைத் துய்த்துத் தேன் நுகர்ந்து தேனீக்கள் பெரிய தேன் கூடு கட்டும் நாடனுடைய நட்பு.

'பலபூக்களைப் பலகாலும் ஊதிப் பலதேனீக்கள் பலநாள் கூடித் தேன்கூட்டைப் பெரிதாக அமைக்கும் நாடனாயிருந்தும், அவனிடத்தில் பலநாளும் பலகாலும் பழகி முதிர வேண்டிய நட்பு, அவனைக் கண்ட ஞான்றே நிலத்தினது அகலம் போலவும் வானினது ஓக்கம் போலவும் கடலினது ஆழம் போலவும் ஆழ்ந்து அகன்று உயர்ந்துவிட்டமை வியப்பிற்கு உரியது' என்று கொள்வது இறைச்சி.

ஒத்த நூற்பாக்கள்

'இறைச்சி தானே பொருட்புறத் ததுவே.'

தொல். பொ. 229

‘ இறைச்சியில் பிறக்கும் பொருளுமார் உளவே
திறத்துஇயல் மருங்கின் தெரியு மோர்க்கே.’ 230

‘ அன்புறு தகுந இறைச்சியுள் சுட்டலும்
வன்புறை ஆகும் வருந்திய பொழுதே ’ 231

‘ கருப்பொருள் பிறக்கும் இறைச்சிப் பொருளே.’
ந. அ. 240

‘ கருப்பொருள் களனும் கட்டுரை பயின்ற
பொருட்புறத் தனவாம் இறைச்சிப் பொருள் அணி.’
மா. அ. 176

216

## சிறப்புடைய கைக்கிளை

589 **காமம் சாலா இளமை யோள்வயின்**
**ஏமம் சாலா இடும்பை எய்தி**
**நன்மையும் தீமையும என்றுஇரு திறத்தான்**
**தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்**
**சொல்லெதிர் பெறுஅன் சொல்லிஇன் புறுதல்**
**புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே.**

இஃது ஒருதலைக்காமப் பொருண்மைத்தாக மேல் கூறிப் போந்த கைக்கிளைக்குச் சிறந்த பொருள் இஃது என்பதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) காமக் குறிப்பிற்கு அமைதியில்லாத இளமைப் பிராயத்தாள் ஒருத்திகண்ணே ஒருதலைவன் ‘ இவள் எனக்கு மனைக் கிழத்தியாக யான் கோடல்வேண்டும் ’ எனக்கருதி, மருந்து பிறிது இல்லாப் பெருந்துயர் எய்தி, நன்மையும் தீமையும் என்கின்ற இரண்டு கூற்றான் மிகப் பெருக்கிய சொற்களைத் தன்னோடும் அவளோடும் கூட்டிச் சொல்லி, அச் சொல்லிற்கு எதிர்மொழி பெறாதே பின்னும் தான் சொல்லி இன்புறுதல் பொருந்தித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பு என்றவாறு.

அவளும் தமரும் தீங்கு செய்தாராக அவளோடு தீங்கைப் புணர்த்தும், தான் ஏதம் செய்யாது தீங்கு பட்டானைத் தன்னோடு நன்மையைப் புணர்த்தும் என நிரல்நிறையாக உரைக்க. இரு திறத்தால் தருக்கிய எனக் கூட்டுக.

எடுத்துக்காட்டு :

வாருறு வணர்ஐம்பால் வணங்குஇறை நெடுமென்தோள்
பேர்எழில் மலர்உண்கண் பிணைஎழில் மான்நோக்கின்
கார்எதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதல்
கூர்எயிற்று முகைவெண்பல் கொடிபுரை நுசுப்பினாய்!
நேர்சிலம்பு அரிஆர்ப்ப நிரைதொடிக்கை வீசினை
ஆருயிர்வௌவிக்கொண்டு அறிந்துஈயாது இரப்பாய்கேள்;

(இது தரவு)

உளனாஎன் உயிரைஉண்டு உயவுநோய் கைம்மிக
இளமையான் உணராதாய் நின்தவறு இல்லானும்
களைநர்இல் நோய்செய்யும் கவின்அறிந்து அணிந்துதம்
வளமையால் போத்தந்த நுமர்தவறு இல்என்பாய்;

நடைமெலிந்து அயர்வுறீஇ நாளும்என் னலியும்நோய்
மடமையான் உணராதாய் நின்தவறு இல்லானும்
இடைநில்லாது எய்க்கும்நின் உருஅறிந்து அணிந்துதம்
உடைமையால் போத்தந்த நுமர்தவறு இல்என்பாய்;

அல்லல்கூர்ந்து அழிவுற அணங்காகி அடரும்நோய்
சொல்லினும் அறியாதாய் நின்தவறு இல்லானும்
ஒல்லையே உயிர்வௌவும் உருஅறிந்து அணிந்துதம்
செல்வத்தால் போத்தந்த நுமர்தவறு இல்என்பாய்;

(இவை மூன்றும் தாழிசை)

என ஆங்கு (தனிச்சொல்)

ஒறுப்பின்யான் ஒறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
பொறுக்கலாம்வரைத்தன்றிப்பெரிதாயின், பொலங்குழாய்!

மறுத்து இவ்வூர் மன்றத்து மடலேறி
நிறுக்குவென் போல்வென்யான் நீபடு பழியே.

(இது சுரிதகம்)

எனவரும். கலி. 51

அவளைச் சொல்லுதலே தனக்கு இன்பம் ஆகலின் 'சொல்லி இன்புறல்' என்றார். இது 'புல்லித் தோன்றும் கைக்கிளை' எனவே, காமஞ்சான்ற இளமையோள்கண் நிகழும் கைக்கிளை இத்துணைச் சிறப்பின்று ஆயிற்று. அஃது அசுரம் முதலிய மூன்றும் ஆம். இயற்கைப்புணர்ச்சிக்கு முன் நிகழும் காட்சி முதலிய நான்கும் காமம் சான்ற இளமையோள்வயின் கைக்கிளை ஆமேனும் நற்காமத்துக்கு இன்றியமையாது வருதலின், ஈண்டுக் கூறிய, சிறப்புடைக் கைக்கிளையாதற்கு உரிமை உடையவாயின; என்னை ?

'முன்னைய நான்கும் முன்னதற்கு என்ப' தொல். பொ. 55 என்ப ஆகலின்.

'குறிப்பு' என்றதனால், சொல்லி இன்புறினும், தலைவன் குறிப்பு நிகழ்ந்தது புறத்தார்க்குப் புலனாகாது என்பதூஉம், அகத்து நிகழ்ச்சி அறியும் மனைவியர்க்காயின் புலனாம் என்பதூஉம் கொள்க. 217

### விளக்கம்

நூற்பா தொல், பொ. 50. உரை விளக்கம் நச்சினார்க்கினியர் ஆண்டுச் சொற்றனவே.

முதியவன் பேதைமாட்டுக் காதல் கொள்வது என்றும் கைக்கிளையாகவே போதலின், இது சிறப்புடைய கைக்கிளை ஆயிற்று. இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழும் கைக்கிளை

சிறப்புடைய ஐந்திணை இன்பத்துக்கு வழி கோலுதலின், அதுவும் சிறப்பிற்கு வழி கோலும் சிறப்புடைக் கைக்கிளை ஆயிற்று. ஆகவே, அசுரம்-இராக்கதம்-பைசாசம் என்ற மூன்றும், இயற்கைப்புணர்ச்சிக்கு வாய்ப்பு இல்லாது ஒருவன் ஒருத்தியை விரும்பும் கைக்கிளை ஆதலின், சிறப்பு உடையன அல்ல என்பது.

இக் கைக்கிளைத் தலைவன், தன்னிடத்துக் குறை ஏதும் இலது போலவும், தலைவி மாட்டும் அவள் தமர் மாட்டுமே குறை பல உண்டு போலவும் பேசுவதனையே இன்பமாகக் கொண்டு நிறைவு எய்துபவன். இதனை அகப்புறக்கைக்கிளை என்னும் நம்பி அகப்பொருள்.

'வாருறு வணர் ஐம்பால்' —

'நன்கு சீவப்பட்ட கடைகுழன்ற மயிர்முடி, வளைந்த முன்கை, நெடிய மெல்லிய தோள், மலர்க்கண்ணின் மான்-பார்வை, கார்காலத் தளிர்மேனி, ஒளிபெறும்நுதல், விழுந்தெழுந்த கூரிய பற்கள், விழுந்து எழாத முல்லைமுகை போன்ற பற்கள், கொடிஇடை இவற்றை உடையையாய்ச் சிலம்பு ஒலிப்பத் தொடி அணிந்த கைகளை வீசி என் உயிரைக் கைப்பற்றிக் கொண்டு, அஃது அறிந்தும் மீண்டும் தாராமல் போகின்றவளே! யான் கூறுவதனைக் கேட்பாயாக.

'காம நோய் மிக யான் சிறிது உயிருடனே இருக்கும் படி என் உயிரைக் கைப்பற்றி இளமையான் உணராது செல்வோய்! உன் தவறு இல்லை ஆனாலும், காம நோய் செய்யும் உன் இயற்கை அழகுக்கு மேல் செயற்கை அழகைத் தம் செல்வச் செருக்கால் செய்து அனுப்பிய நுமர்மேல் தவறு இல்லை என்று கூறல் இயலுமா ?

ஒழுக்கம் தேய்ந்து யான் மறதியை அடைய எனக்குக் காமநோயை உறுத்தி, இளமையான் அதனை உணராது

செல்பவளே ! நின் மெல்லிடைகண்டும் அதற்குமேல் வனப் புறுத்தித் தம் செல்வச்செருக்கால் உன்னைப் புறம் போக விட்ட நுமர்மேல் தவறு இல்லையா ?

துயரம் மிக்கு யான் வருந்துமாறு செய்வித்த காம நோயை யான் வெளிப்படையாகக் கூறினும் அறியாதவளே! உன் தவறு இல்லாமலிருக்கலாம். உயிரை வாங்கும் இயற்கை அழகுக்கு மேலே உனக்கு அணிசெய்து புறம்போக வைத்த நுமர் தவறு அற்றவர் என்று கூறல் இயலுமா ?

எனவே, யான் நுமரையே ஒறுத்தல் வேண்டும். ஆனால் அக்காமநோய் மிகின், யான் இவ்வூர் மன்றத்தில் மடல்ஏறி நினக்குப் பழியை நிலைநிறுத்தும் நிலையும் ஏற்படலாம்.'

ஒத்த நூற்பாக்கள்

முழுதும் — தொல். பொ. 50

'காமம் சாலா இளமை யோள்வயின்
குறிப்புஅறி வுறுது குறுகிஆங்கு அவளோடு
இறப்பக் கூறுவது அகப்புறக் கைக்கிளை.' ந. அ. 241

217

## சிறப்புடைய கைக்கிளைக்கு உரியார்

அதுவே,

590 இறைமையி லோர்க்கும் இழிகுலத் தோர்க்கும்
முறைமையின் உரித்தே முன்னுங் காலை.

இஃது அஃது இத்தன்மையோர்க்கு உரித்து என் கின்றது.

(இ-ள்) மேற்கூறிய கைக்கிளைதான் தலைமைப்பாடு இல்லாதார்க்கும் இழிகுலத்தார்க்கும் முறைமையான் உரித் தாம் ஆராயுங்காலத்து என்றவாறு.

'முன்னுங்காலை' என்றதனுன் இது பயின்று வாராது எனக்கொள்க. 218

விளக்கம் :

காமம் சாலா இளமையோள்வயின் முதியோன் காமப் பிணி கூர்தல் பொதுவான உலகியலுக்கு மாருனது ஆதலின் இத்தகைய கைக்கிளை சிறுபான்மையது என்பதும், இது மக்க ளிடை மதிப்பு இல்லாதாருக்கும் பரம்பரையாக இழிவுபட்ட குடும்பத்தைச் சார்ந்தாருக்குமே உரித்து என்பதும் கொள் ளப்பட்டன. பொதுவாகக் கைக்கிளை பெருந்திணைகள் அடி யோர்களுக்கும், கூலிவேலை செய்பவருக்குமே உரியன என்பது தொல்காப்பியனுர் கருத்து ஆதல்,

'அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
கடிவரை இலபுறத்து என்மனுர் புலவர்.'
தொல். பொ. 23

என்பதனுல் உணரப்படும்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 242

218

சிறவாத பெருந்திணை வகை

591 ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே.

இது பொருந்தாக்காமப் பொருண்மைத்தாக மேல் கூறிப் போந்த பெருந்திணைக்குப் பொருள் இவை என்ப தோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) மடன்மாக் கூறுதலன்றி மடலேறுதலும், தலைவற்கு இளையள் ஆகாது ஒத்த பருவத்தாள் ஆதலும், இருபத்து நான்காம் மெய்ப்பாட்டின் இகந்து ஏழாம்

அவத்தை முதலாக வரும் அறிவு அழி குணன் உடையள் ஆதலும், காமமிகுதியானே எதிர்ப்பட்டுழி வலிதின் புணர்ந்த இன்பத்தோடே கூட்டப்பட்டுக் கந்தருவத்துட் பட்டு வழீஇயிற்றுகச் செப்பிய இந்நான்கும் பெருந்திணைக் குறிப்பாம் என்றவாறு,

மடன்மாக் கூறுதல் கைக்கிளையாம். 'மடல்திறம்' என்றதனுன், அதன் திறமாகிய வரைபாய்தலும் கொள்க. 'இளமைதீர்திறம்' என்றதனுல், தலைவன் முதிர்ச்சியும் இருவரும் முதிர்ந்த பருவத்தும் துறவில் சேறலன்றிக் காமம் நுகர்தலும் கொள்க.

எடுத்துக்காட்டு :

'சான்றவிர்! வாழியோ சான்றவிர்! என்றும்
பிறர்நோயும் தம்நோய்போல் போற்றி அறனறிதல்
சான்றவர்க்கு எல்லாம் கடன்ஆனல், இவ்விருந்த
சான்றீர்! உமக்குஒன்று அறிவுறுப்பென்; மான்ற
துளியிடை மின்னுப்போல் தோன்றி ஒருத்தி,
ஒளியோடு உருஎன்னைக் காட்டி, அளியஎன்
நெஞ்சுஆறு கொண்டாள் அதற்கொண்டு துஞ்சேன்
அணிஅலங்கு ஆவிரைப் பூவோடு எருக்கின்
பிணியலங் கண்ணி மிலைந்து மணிஆர்ப்ப
ஓங்கிரும் பெண்ணை மடல்ஊர்ந்துஎன் எவ்வநோய்
தாங்குதல் தேற்று இடும்பைக்கு உயிர்ப்பாக,
வீங்குஇழை மாதர் திறத்துஒன்று, நீங்காது
பாடுவென், பாய்மா நிறுத்து.

'யாமத்தும் எல்லையும் எவ்வத் திரைஅலைப்ப
மாமேலேன் என்று மடல்புணையா நீந்துவேன்;
தேமொழி மாதர் உறுஅது உறீஇய
காமக் கடலகப் பட்டு;

உய்யா அருநோய்க்கு உயலாகும்; மையல்
உறீஇயாள் ஈத்தஇம் மா.

காணுநர் எள்ளக் கலங்கித் தலைவந்துஎன்
ஆண்எயில் முற்றி உடைத்துஉள் அழித்தரும்
மாண்இழை மாதராள் ஏஎர்எனக் காமனது
ஆணையால் வந்த படை;

காமக் கடும்பகையின் தோன்றினேற்கு ஏமம்
எழில்நுதல் ஈத்தஇம் மா;

அகைஎரி ஆனாதுஎன் ஆர்உயிர் எஞ்சும்
வகையினால் உள்ளம் சுடுதரும் மன்னோ;
முகைஏர் இலங்குஎயிற்று இன்னகை மாதர்
தகையால் தலைக்கொண்ட நெஞ்சு;

அழல்மன்ற காம அருநோய்; நிழல்மன்ற
நேரிழை ஈத்தஇம் மா;

ஆங்கதை

அறிந்தனிர் ஆயின், சான்றவிர்! தான்தவம்
ஒரீஇத் துறக்கத்தின் வழீஇ ஆன்றோர்
உள்ளிடப் பட்ட அரசனைப் பெயர்த்துஅவர்
உயர்நிலை உலகம் உறீஇ யாங்குஎன்
துயர்நிலை தீர்த்தல் நும்தலைக் கடனே. கலி. 139

எனவும்,

உளைத்தவர் கூறும் உரையெல்லாம் நிற்க,
முளைத்த முறுவலார்க்கு எல்லாம் — விளைத்த
பழங்கள் அனைத்தாய்ப் படுகளி செய்யும்;
முழங்கு புனலூரன் மூப்பு. பு. வெ. பெ. 14

எனவும்,

அரும்பிற்கும் உண்டோ அலரது நாற்றம்
பெருந்தோள் விறலி! பிணங்கல் — சுரும்போடு
அதிரும் புனலூரற்கு, ஆரமுதம் அன்றோ?
முதிரும் முலையாள் முயக்கு. பு. வெ. பெ. 13

எனவும் வருவனவும்,

புரிவுண்ட புணர்ச்சியுள் புல்லாரா மாத்திரை
அருகுவித்து ஒருவரை அகற்றலின், தெரிவார்கண்
செயல்நின்ற பண்ணினுள் செவிசுவை கொள்ளாது,
நயம்நின்ற பொருள்கெடப் புரிஅறு நரம்பினும்,
பயனின்று மன்றம்ம காமம், இவள், மன்னும்
ஒண்ணுதல் ஆயத்தார் ஓராங்குத் திளைப்பினும்,
முள்நுனை தோன்றாமை முறுவல்கொண்டு அடக்கித்தன்
கண்ணினும் முகத்தினும் நகுபவள், பெண் இன்றி,
யாவரும் தண்குரல் கேட்ப, நிரைவெண்பல்
மியுயர் தோன்ற நகாஅ, நக்காங்கே,
பூஉயிர்த் தன்ன புகழ்சால் எழில்உண்கண்
ஆயிதழ் மல்க அழும்.

ஓஒ, அழிதகப் பாராதே, அல்லல் குறுகினம்
காண்பாம் கனங்குழை பண்பு;

என்று, எல்லிரும் என்செய்தீர் ? என்னை நகுதிரோ ?
நல்ல நகாஅலிர் மன்கொலோ ! யானுற்ற
அல்லல் உறீஇயான் மாய மலர்மார்பு
புல்லிப் புணரப் பெறின்;

எல்லாநீ, உற்றது எவனோ மற்றுஎன்றிரேல், எற்சிதை
செய்தான் இவனென, உற்றது இதுவென,
எய்த உரைக்கும் உரன்அகத்து உண்டாயின்,
பைதல ஆகிப் பசக்குவ மன்னோ ? என்
நெய்தல் மலரன்ன கண்.

கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று
நாடுவேன் கண்டனென் சிற்றிலுள், கண்டாங்கே
ஆடையான் மூஉய் அகப்படுப்பேன், சூடிய,
காணான் திரிதருங் கொல்லோ ? மணிமிடற்று
மாண்மலர்க் கொன்றை யவன்,

தெள்ளியேம் என்றுரைத்து, தேராது ஒருநிலையே
வள்ளியை யாகென நெஞ்சை வலியுறீஇ,
உள்ளி வருகுவர் கொல்லோ? உளைந்தியான்
எள்ளி இருக்குவென் மன்கொலோ? நள்ளிருள்
மாந்தர் கடிகொண்ட கங்குல் கனவினான்
தோன்றினன் ஆகத், தொடுத்தேன்மன்; யான் தன்னைப்
பையெனக் காண்கு விழிப்ப, யான் பற்றிய
கையுளே மாய்ந்தான் கரந்து.

கதிர்பகா ஞாயிறே ! கல்சேர்தி யாயின்,
அவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்
தருகுவை யாயின், தவிரும்;என் நெஞ்சத்து
உயிர்திரியா மாட்டிய தீ.

மையில் சுடரே ! மலைசேர்தி நீயாயின்,
பௌவநீர்த் தோன்றிப் பகல்செய்யும் மாத்திரை,
கைவிளக் காகக் கதிர்சில தாராய்;என்
தொய்யில் சிதைத்தானைத் தேர்கு.

சிதைத்தானைச் செய்வது எவன்கொலோ ? எம்மை
நயந்து நலஞ்சிதைத் தான்.

மன்றப் பனைமேல் மலைமாந் தளிரே ! நீ
தொன்றிவ் வுலகத்துக் கேட்டும் அறிதியோ ?
மென்தோள நெகிழ்த்தான் தகையல்லால்,யான்காணேன்
நன்றுதீது என்று பிற,

நோய்எரி யாகச்சுடினும், சுழற்றி, என்
ஆயிதழ் உள்ளே கரப்பன் ; கரந்தாங்கே
நோய்உறு வெந்நீர் தெளிப்பின், தலைக்கொண்டு
வேவது அளித்துஇவ் வுலகு.

மெலியப் பொறுத்தேன் ; களைந்தீமின்; சான்றீர் !
நலிதரும் காமமும் கௌவையும் என்றிவ்

வலிதின் உயிர்காவாத் தூங்கி, ஆங்கென்னை
நலியும் விழுமம் இரண்டு.

எனப்பாடி

இனைந்துநொந்து அழுதனள்; நினைந்து நீடு உயிர்த்தனள்;
எல்லையும் இரவும் கழிந்தன என்றெண்ணி, எல்லிரா
நல்கிய கேள்வன் இவன்மன்ற ! மெல்ல
மணியுள் பரந்த நீர்போலத் துணிவாம் ;
கலஞ்சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தெளிந்து, நலம்பெற்றாள் ;
நல்லெழில் மார்பனைச் சார்ந்து. கலி. 142

எனவும்,

ஏஏ ! இஃதொத்தன் நாணிலன்; தன்னொடு
மேவேம்என் பாரையும் மேவினன் கைப்பற்றும்
மேவினும் மேவாக் கடையும், அஃதெல்லா !
நீஅறிதி; யான்அஃ தறிகல்லேன்; பூஅமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய்! நின்னையான்
புல்லினி தாகலின் புல்லினென்; எல்லா!
தமக்கினி தென்று வலிதின் பிறர்க்கு இன்னா
செய்வது நன் றாமோ மற்று?

சுடர்த்தொடீஇ,
போற்றாய் களைநின் முதுக்குறைமை போற்றிக்கேள்,
வேட்டார்க்கு இனிதாயின் அல்லது, நீர்க்கினிதென்று
உண்பவோ நீர்உண் பவர் ?

செய்வ தறிகல்லேன்; யாதுசெய் வேன்கொலோ ?
ஐவாய் அரவின் இடைப்பட்டு நைவாரா;
மையில் மதியின் விளங்கு முகத்தாரை
வெளவிக் கொளலும் அறன்எனக் கண்டன்று.

அறனும் அதுகண்டற் றாயின், திறனின்றிக்
கூறும்சொல் கேளான் நலிதரும், பண்டுநாம்
வேறல்லம் என்பதொன்று உண்டால்; அவனொடு
மாறுண்டோ நெஞ்சே நமக்கு ? கலி. 42

எனவும் ஏறிய மடல்திறம் முதலிய நான்கற்கும் முறையே காண்க.

'செப்பிய நான்கு' எனவே செப்பாதனவும் அத்துணைக் கந்தருவமாகக் கூறுகின்ற 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறும்' என்ற பெருந்திணை நான்கு உள என்று கொள்க. 'குறிப்பு' என்றதனான் அந்நான்கும் பெருந்திணைக்குச் சிறந்த என்றும் ஈண்டுக் கூறியன கைக்கிளைக்குச் சிறந்த என்றும் கொள்க. **219**

விளக்கம்

நூற்பா. தொ. பொ. 51. உரைவிளக்கம் நச்சினார்க்கினியர் உரைத்ததே.

இந்நூற்பாச் செய்தியை விடுத்து அகப்பொருள் விளக்க ஆசிரியர்.

' அகன்றுழிக் கலங்கலும் புகன்றமடல் கூற்றும்
குறியிடை யீடும் தெளிவிடை விலங்கலும்
வெறிகோள் வகையும் விழைந்து உடன் போக்கும்
பூப்புஇயல் உரைத்தலும் பொய்ச்சூ ளுரையும்
தீர்ப்புஇல் ஊடலும் போக்குஅழுங்கு இயல்பும்
பாசறைப் புலம்பலும் பருவம்மாறு படுதலும்
வன்புறை எதிர்அழிந்து மொழிதலும் அன்புறு
மனைவியும் தானும் வனம்அடைந்து நோற்றலும்
பிறவும் அகப்பொருள் பெருந்திணைக்கு உரிய.' 243

' மடல்ஏ றுதலொடு விடைதழாஅல் என்று
குற்றிசை தன்னொடு குறுங்கலி என்று
சுரநடை தன்னொடு முதுபாலை என்று

*தாபத நிலையொடு தபுதார நிலைஎனப்*
*புகன்றவை இயற்பெயர் பொருந்தா வாயின்*
*அகன்ற அகப்புறப் பெருந்திணை ஆகும்.'* **244.**

என்று கூறியன இவ்வாசிரியருக்கு உடன்பாடல்ல என்பது கொள்க.

பிரமம் முதலிய நான்கு மணங்களும் பெருந்திணைக்குச் சிறந்தன; மடலேறுதல் முதலிய நான்கும் பெருந்திணைக்குச் சிறந்தன அல்ல என்பதும் கொள்க.

*' சான்றவிர் வாழியோ சான்றவிர் '*—

"சான்றோர்களே ! உங்கள் கடமை பிறர் நோயினையும் தம்நோய்போல் கருதிப் பரிகாரம் தேடுதல் ஆகும். இப் பெண் மின்னலைப்போலக் காட்சியளித்து என் உள்ளம் புகுந்துவிட்டாள். அதுமுதல் உறக்கமில்லாத நான் அவளைத் தவறாது அடையவேண்டி ஆவிரை எருக்கு இவற்றைச் சூடி பனைமாமேல் ஏறி அவளைப் பற்றிப் பாடுதற்குத் தொடங்கி விட்டேன்.

அப்பெண் என்னைக் கூடாமையால் காமக் கடலில் அகப்பட்டு, பகலும் இரவும் துன்ப அலைகள் தாக்க, இம்மடல் மாவைத் தெப்பமாகக் கொண்டு அக்கடலை நீந்துவேன்.

இந்நோய்க்கு மருந்தாவது இவளால் உண்டான இம் மடல்மாவே.

இவள் அழகாகிய மன்மதன்படை என் ஆண்மை யாகிய மதிலைத் தகர்த்துக் காண்போர் எள்ளிநகையாடுமாறு அதனை அழித்து உட்புக்குவிட்டது. காமப் பகையிலிருந்து பாதுகாவல் தருவது இம்மடல்மாவே.

இவள், அழகில் என்மனம் ஈடுபட்டதால், உயிருக்கு ஆபத்து நேரும் அளவிற்கு என் உள்ளம் சுடுகிறது. காம நோய் நெருப்பாகும். இம்மடல்மா அவ்வெப்பம் தணிக்கும் நிழலாகும்.

என்நிலையைக் கூறிவிட்டேன் சான்றோர்களே! நன்னிலையிலிருந்து வழுவிய அரசனைச் சான்றோர் மீண்டும் நன்னிலைக்கு உயர்த்துவதுபோல என்னைத் துயர் தீர்த்து மற்றவரைப் போலச் செய்வது உங்கள் கடமை ஆகும்''. இப்பாடல் மடல் ஏறியவன் கூறியது.

'உளைத்தவர் கூறும்'—

'வருந்துவார் யாதாயினும் கூறுக. இளைய மகளிருக்கு நம் தலைவன் முப்புப் பழங்களைப் போன்ற களிப்புத் தரும்' —இது தலைவன் மூத்த பின்னும் துறவின்கண் மனம் செலுத்தாது அதனைக் காமத்தின்கண் செலுத்தியது.

'அரும்பிற்கும் உண்டோ'—

''விறலியே! கோபிக்காதே! அரும்பிற்கு மலர்ந்த பூவின் நறுமணம் வருமா? தலைவனுக்கு வயது முதிர்ந்த மகளிரின் தழுவுதல் அமுதம் போன்ற சுவை தருவதாம்'' — இது தலைவனை வயது மூத்த மகளிர் கூடுதல் கூறுதலின், பெருந்திணை ஆயிற்று. — இவை இரண்டும் இளமை தீர்திறம்.

புகுமுகம் புரிதல் முதல் இருகையும் எடுத்தல் ஈறுகிய 12 மெய்ப்பாடும் புணர்ச்சிக்கு முன்னும், பாராட்டெடுத்தல் முதல் கையறவு உரைத்தல் ஈறுகிய 12 மெய்ப்பாடும் புணர்ச்சிக்குப் பின்னும் நிகழ்வனவாய் அகத்திணைத் தலைவிக்கு உரியன, இவை ஒவ்வோரவத்தைக்கும் நந்நான்காய் ஆறு அவத்தைகளுக்கு உரியன.

கையறவு உரைத்தலுக்கு மேல் உள்ள நிலை—மன்றத்து இருந்த சான்றவர் அறியத் தன் துணைவன் பெயரும் பெற்றியும் பிறவும் கூறியும் அழுதும் அரற்றியும் பொழுதொடு புலம்பியும் ஞாயிறு முதலியவற்றோடு கூறத்தகாதன கூறலாம். அந்நிலையே தேறுதல் ஒழிந்த காமத்து மிகு திறமாம்.

களவுப் புணர்ச்சி நிகழும் காலத்தே தலைவன் நண்ப னுக்கு உதவி செய்வதற்குப் போர்மேல் செல்லும் நிலை ஏற்படலும் கூடும். அக்காலை தன் பிரிவுபற்றியோ வருகை பற்றியோ எதுவும் கூறாது தலைவன் தலைவியைப் பிரிந்து பன்னாள் வெளியிடத்தில் தங்கியிருக்கும் நிலையும் ஏற்படும. நிகழ்ந்ததை உணராத தலைவி தலைவன் பன்னாளும் வாராததனால் தன்னை அன்பின்றி மறந்துவிட்டான் என்று கருதத் தொடங்கிவிடுவாள், அப்பொழுது அவள் மனநிலைக் கண் பெண்மை நலன்கள் மடங்கிவிடும். அவள் நிலையைத் தொல்காப்பியனார்,

‘ பொழுதுதலை வைத்த கையறு காலை
இறந்த போலக் கிளக்கும் கிளவி
மடனே வருத்தம் மருட்கை மிகுதியோடு
அனைநாற் பொருட்கண் நிகழும் என்ப’
தொல். பொ, 206

என்ற நூற்பாவில் விளக்குவார். அத்தகைய தலைவி நிலையை விளக்கும் பாடல் ‘ புரிவுண்ட புணர்ச்சி ’ என்பது.

‘ புரிவுண்ட புணர்ச்சி ’—

“ களவுப் புணர்ச்சியிடை தலைவன் அருமை செய்து அயர்த்ததனாலே யாழை மீட்டிக்கொண்டிருக்கும்போது அதன் நரம்பு அறுந்தாற்போன்ற நிலை இவள் மனத்தில் ஏற்பட்டதனால் இவள் பெண்மையை மறந்து சிரித்தும் அழு தும் கலங்குகிறாள் என்று என்னைப்பார்த்துச் சிரிக்கிறீர்களா! என் தலைவன் எனக்குக் கிடைத்த பின்பு நன்கு சிரியுங்கள்.

உன் துன்பம் என்னஎன்று கேட்கிறீர்களா? என் தலைவன் செய்ததை வெளிப்படையாகக் கூறும் ஆற்றல் எனக்கு இருந்தால் என்கண்களில் இப்படிப் பசலை பாயுமா?

‘ கூடல் சுழி இழைத்தபோது என் சிற்றிலில் பிறையைக் கண்டேன். ஆடையால் மூடி அதைக் கைப்பற்றக் கருதி

னேன். ஆனால் சூடிக்கொள்ளச் சிவபெருமான் தேடுவானே; நாம் களவு செய்தல் வேண்டா என்று அதனை விட்டுவிட்டேன். பின் தலைவன் வருவானோ என்ற எண்ணத்திலே கண்அயர, அவள் கனவில் தோன்ற, அவனைக் கையால் பற்றிக்கொண்டு பின் காணக் கண்ணைத் திறந்தபோது அவன் என் கைக்குள் மறைந்துவிட்டான்.

'சூரியனே! நீ மலையில் மறையும்முன் என் தலைவனைக் கண்டுபிடித்து என்னிடம் ஒப்படைத்தால் என் துயர் தீரும்.

சூரியனே! நீ மறையும்முன் என்னிடம் உன் கிரணங்களில் சிலவற்றைக் கொடுத்தால், நான் நீ நாளைக் காலை வெளிப்படும் வரை அக்கதிர்களைக்கொண்டு என் தலைவனைத் தேடுவேன்.

என்னை விரும்பி என் அழகைக் கெடுத்த தலைவனைக் கண்டுபிடித்தால் பெண்ணாகிய நான் என்ன செய்யமுடியும்?

மாலை ஞாயிறே! என் தலைவன் செய்தியைத் தவிர வேற்றுச்செய்தியில் எனக்கு ஈடுபாடு இல்லை. இத்தகைய தலைவனும் உலகில் இருக்கிறான் என்பது இதற்குமுன் அறிந்துள்ளாயோ?

இந்நோய் நெருப்பாகச் சுட்டாலும் என் கண்ணீரைக் கண்ணுக்குள்ளேயே அடக்கிக்கொண்டிருக்கிறேன். என் கண்ணீர் தரையில் பட்டால் அதன் வெப்பத்தால் உலகமே வெந்துவிடும்.

சான்றோர்களே! நான் பொறுத்துக்கொண்டிருக்கிறேன். என் உயிரைக் காத்தண்டாகக்கொண்டு ஒருபுறம் காமமும் ஒருபுறம் பழியும் தொங்கி என்னை வருத்துகின்றன' என்று, நாள்கள் பல கழிந்தமைக்காக இனைந்து நொந்து அழுது நினைத்துப் பெருமூச்சுவிட்ட தலைவி, தலைவன் போர்க்களத்தினின்றும் மீண்டு வந்தானாக, தேற்றாங்கொட்டையால்

தெளிய வைக்கப்பட்ட கலத்துநீர்போல மனம் தெளிந்து தலைவனைச் சார்ந்து, மணியும் அதன் ஒளியும்போல இரு வரும் பிரிக்கமுடியாத இயல்பினர் ஆயினமையால், பண்டை அழகையும் பண்பையும் மீளப்பெற்றாள் என்பது.

மிக்க காமத்துமிடல் : ' ஏஎ இஃது ஒத்தன் ' —

இத்தலைவன் கருமத்தால் நாணம் இல்லாதவன். தன்னை விரும்பாதவரையும் தான் விரும்பி வலியக் கையைப் பிடித்து இழுக்கின்றான்.

' பூங்கொடியே ! உனக்கு விருப்பம் உண்டு என்பதனை யும் இல்லை என்பதனையும் நீயே அறிவாய்; யான் அறியேன். உன்னைத் தழுவுதல் இனிதாக இருந்தமையால் உன்னைத் தழுவினேன்.'

' எல்லா ! தமக்கு இனிதாக இருக்கிறது என்று கருதிப் பிறர் விரும்பாமலேயே அவருக்குத் தீங்கு செய்தல் தக்கதா ?'

'சுடர்த்தொடி ! உன் அறியாமையைப் போக்கிக்கொள். நீர் வேட்கை உற்றவர் தமக்கு நீர் பருகுதல் இனிது என்று நீரைப் பருகுகின்றாரே ஒழிய, நீருக்கு அஃது இனிதா என்று பார்த்துப் பருகுவதில்லை.'

'ஐந்தலைப் பாம்பினிடம் அகப்பட்டுச் செய்வது அறி யாது தடுமாறுகின்றேனே.'

'பெண்களை வலியக் கைப்பற்றும் இராக்கதமும் மணங்க ளில் ஒன்றாகச் சான்றோரால் கூறப்பட்டுள்ளது.'

' ஓ! அறமும் அப்படி உள்ளது; நம் கூற்றைக் கேளாது இவனும் துன்புறுத்துகிறான். யாம் இருவரும் வேறுபட்டவர் அல்லர் என்ற கருத்தும் உண்டு. ஆதலின், மனமே! இவன் எண்ணத்துக்கு மாறாத நடத்தல் நமக்கு விருப்பம் அன்று.' என வலியப்பற்றிய தலைவனோடு பாறுமட்டு உரையாடி இறு தியில் தலைவி கூட்டத்திற்கு இயைந்தவாறு.

இங்ஙனம் உள்ளக் கருத்தை மறைத்து முதலில் கூறிப் பின் உடன்படுதல் பற்றி,

‘வேட்கை மறுத்துக் கிளந்தாங்கு உரைத்தல்
மரீஇய மருங்கின் உரித்தென மொழிப.’

தொல். பொ. 211

என்றார் தொல்காப்பியனார்.

ஒத்த நூற்பா

முழுதும் — தொல். பொ. 51

219

## பாடப் படுவோர் இருவர்

582 பாட்டுடைத் தலைவன் கிளவித் தலைவன்எனப்
பாட்டினுள் பாடப் படுவோர் இருவர்.

இஃது அகப்பாட்டிற்கு உரியதோர் ஒழிபு கூறுகின்றது.

(இ-ள்) பாட்டிற்கு உரிமை பூண்ட தலைவனும், கிளவிக்கு உரிமைபூண்ட தலைவனும் என அகப்பொருள் பற்றி வரும் பாட்டினுள் பாடப்படுவோர் இருவர் என்றவாறு.

220

### விளக்கம்

பாட்டுடைத் தலைவன் — புலவனை ஆதரித்துப் பாட்டு இயற்றச்செய்த தஞ்சைவாணன் போல்வான்.

கிளவித் தலைவன் — இயற்பெயர் சுட்டப்படாது அகத்திணைக் கண் வழங்கும் வெற்பன், காளை, நாடன், ஊரன், சேர்ப்பன் முதலிய பெயர்களால் குறிப்பிடப்படுபவன்.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ 245

220

## சிறந்த தலைவன்

அவருள்,

593 உயர்ந்தோன் பாட்டுடை உரவோன் ஆகும்.

இஃது அவருள் ஒருவற்கு உயர்ச்சி கூறுகின்றது.

(இ-ள்) மேற்கூறிய இருவருள்ளும் உயர்ந்தோன் பாட்டுடைத் தலைவனும் என்றவாறு.

'கழித்துஉறை செறியா வாள்உடை எறுழ்தோள்
இரவுத்துயில் மடிந்த தானை
உரவுச்சின வேந்தன் பாசறை யேமே.' அகநா. 24

என்றதனால் பாட்டுடைத்தலைவன் உயர்ந்தோனாதல் அறிக. வேந்தன் பாண்டியன். பிறவும் அன்ன. 221

### விளக்கம்

'கழித்துஉறை'—

'கழித்தவாளை உறையில் செறித்து இரவில் தூங்கிக் கொண்டிருக்கும் படைவீரரை உடைய வலிய சினம்மிக்க மன்னனுடைய பாசறைக்கண் யாம் உளேம்.'

கிளவித்தலைவன் அரசனுடைய படை வீரருள் ஒருவனாக இருந்து பாசறைக்கண் புலம்பும் நிலையன் ஆதலின், பாட்டுடைத்தலைவனின் இவன் இழிந்தவன் என்பதற்கு இஃது எடுத்துக்காட்டு.

பாட்டுடைத்தலைவன் உலகில் நடமாடி வரலாற்றுக்கு உரியவன். கிளவித்தலைவன் புலவர் கற்பனை அளவில் இருப்பவன்.

### ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 246
221

## பாடப்படுவோர் பெயர்

594 நிலப்பெயர் வினைப்பெயர் பண்புப் பெயரொடு
குலப்பெயர் இயற்பெயர் கூறுப அவர்க்கே.

இது மேற்கூறிய இருவகைத் தலைவர்க்கும் உரிய பெயர் இத்துணைத்து என்கின்றது.

(இ-ள்) நிலப்பெயர் முதலிய ஐந்து பெயரும் கூறுவர், மேல் சொல்லப்பட்ட தலைமக்கள் இருவர்க்கும் என்றவாறு.

நிலப்பெயர் : மலைநாடன், சோணாடன், பாண்டி நாடன், வெற்பன், சேர்ப்பன் என்றாற்போல்வன.

வினைப்பெயர் : கடம்பு எறிந்தான், தூங்கு எயில் எறிந்தான், வடிம்பு அலம்ப நின்றான், கோவலன், வேட்டு வன் என்றாற்போல்வன.

பண்புப் பெயர் : நெடுஞ்சேரலாதன், இளஞ்சேட் சென்னி, முதுகுடுமிப் பெருவழுதி, தோன்றல், அண்ணல் என்றாற்போல்வன.

குலப்பெயர் : சேரன், சோழன், பாண்டியன், குறவன், ஆயன் என்றாற்போல்வன.

இயற்பெயர் : குரவரால் பெற்ற பெயர். 222

### விளக்கம்

முன்னையன பாட்டுடைத் தலைவனுக்கும் பின்னையன கிளவித்தலைவனுக்கும் கொள்க. வெற்பன்சேர்ப்பன், கோவலன்வேட்டுவன், தோன்றல்அண்ணல், குறவன்ஆயன் என்பன கிளவித்தலைவன் பெயர்கள். ஏனைய பாட்டுடைத் தலைவன் பெயர்கள்.

கிளவித்தலைவனுக்கு இயற்பெயர் கூறப்படமாட்டாது என்பது அடுத்த நூற்பாவில் கூறப்பட்டுள்ளது.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 247

222

## கிளவித்தலைவன் பெயர்

அவற்றுள்,

595 இயற்பெயர் கிளவித் தலைவற்கு இசையார்.

இஃது ஒன்றற்கு எய்தியது விலக்குகின்றது.

(இ-ள்) மேல் சொல்லப்பட்ட பெயருள் குரவரால் பெற்ற பெயரினைக் கிளவித் தலைவற்குச் சொல்லார் ஆசிரியர் என்றவாறு.

223

விளக்கம்

கிளவித்தலைவனது இயற்பெயர் கூறின் அப்பாடல் புறத்திணையது ஆகுமே அன்றி அகத்திணையது ஆகாது.

ஒத்த நூற்பா

' மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்
சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்.'

தொல். பொ. 54

முழுதும் — ந. அ. 248

223

## பாடப்படுவோர் பெயர் பாடலுள் அமையுமாறு

596 இருவரும் ஒருங்கே வருதலும் தனித்தனி
வருதலும் இருவரும் வாராது ஒழிதலும்
உரிய என்மனார் உணர்ந்திசி னோரே.

இஃது அத்தலைவர்க்கு ஆவதோர் இயல்பு கூறுகின்றது.

(இ-ள்) மேல் சொல்லப்பட்ட தலைமக்கள் இருவரும் கூடவருதலும், அவருள் ஒருவரே வருதலும், அவ்விருவரும் வாராது ஒழிதலும் உரிய என்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு. 224

### விளக்கம்

இதற்கு நம்பியகப்பொருளுரையுள் எடுத்துக்காட்டும் உள.எடுத்துக்காட்டுக்கள் பல முன்னர் வந்துள்ளமையின் ஈண்டுக் கூறப்படவில்லை.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 249
224

## அகப்புறப்பாட்டின் இயல்

597 அகப்புறப் பாட்டும் இகப்பில அவையே.

இஃது எதிரது போற்றி இங்ஙனம் கூறிய இலக்கணம் புறப்பொருட்கும் எய்துவிக்கின்றது, இதன்வழிக் கூறப் படுவது புறத்திணையியல் ஆகலின்.

(இ-ள்) அகப்பாட்டிற்குச் சொன்ன இலக்கணங்களைக் கடவாது அகப்புறப்பாட்டும் என்றவாறு.

பொருந்துவ பொருந்தும் என்பார் ‘ இகப்பில அவை ’ என்றார்; என்னை ? அனைத்தும் வரல் வேண்டும் என்னும் யாப்புறவு இன்மையின். 225

### விளக்கம் :

நெடுநல்வாடை என்ற பத்துப்பாட்டில் ஒன்றாகும் பாடல் தலைவனைப் பிரிந்த தலைவி நிலைபற்றிக் கூறுவதால் அகமாகுமேனும், ‘ வேம்புதலை யாத்த நோன்காழ் எஃக

மொடு' என்று பாண்டியனுடைய அடையாளப்பூக் கூறப் பட்டமையால், அகமாகாது அகப்புறமாயிற்று. இவ்வாறு வருவன பிறவும் கொள்ளப்படும்.

முழுதும் — ந. அ. 250
225

## அகத்திணை இயலுக்குப் புறனடை

598 கூறிய அல்ல வேறுபிற தோன்றினும்
கூறிய வற்றொடு கூட்டி மெய்கொளக்
கூறி உணர்த்தல் குணத்தோர்க்கு இயல்பே,

இஃது இவ்வகத்திணைஇயற்கு ஆவது ஒரு புறனடை கூறுகின்றது,

(இ-ள்) யாம் கூறிய பொருள் அன்றி வேறு பிறவாற் றான் தோன்றிய ஆயினும், அவற்றையும் எடுத்து ஓதப்பட்ட பொருள்களோடு ஒருவாற்றான் சார்த்தி, உண்மை புலப்படச் சொல்லிப் பிறர்க்கு உணர்த்துதல், நற்குணங்களை உடை யார்க்கு மரபு என்றவாறு.

வேறு பிறவாவன, பெரும்பொருளகத்து வேறு பல வாகக் கூறிய அகப்பொருள் இலக்கணங்களை. அவை எல் லாம் ஈண்டு உரைப்பின் பெருகும். அவை ஆங்காங்கே கண்டு கொள்க. ஈண்டுக் கூறிய ஒழிபு இலக்கணங்களுள் உதாரணம் காட்டாதவற்றிற்கெல்லாம் மேற்காட்டியவற் றுள்ளும் பிறவற்றுள்ளும் காண்க. 226

### விளக்கம்

பெரும்பொருள் — பழங்காலத்துப் பொருளிலக்கணம் பற்றி இயற்றப்பட்ட பெருநூல் போலும்.
(சிந். 187. நச். உரை)

நச்சினார்க்கினியர் புறத்திணையியல் உரைக்கண் தந்துள்ள எடுத்துக்காட்டு வெண்பாக்கள் சில பெரும்பொருள் விளக்கம் என்ற நூலைச் சார்ந்தன என்பது புறத்திரட்டு என்ற தொகைநூல் வாயிலாகப் புலனாகிறது. நூற்பாவோடு எடுத்துக்காட்டுக்களும் அந்நூலாசிரியராலேயே இயற்றப் பட்டனபோலும். பெரும்பொருள் என்பதும், பெரும்பொருள் விளக்கம் என்பதும் ஒரே நூலோ வெவ்வேறு நூல்களோ என்ற செய்தியை அறிதல் இக்காலத்து அரிதாயுள்ளது. இவ்வாசிரியர் காலத்து அந்நூல் இருந்ததுபோதும். ஆனால் அந்நூலிலிருந்து இவர் எடுத்து மொழிந்ததாக எதனையும் குறிப்பிடாததும் உளங்கொளத்தக்கது.

ஒத்த நூற்பா

முழுதும் — ந. அ. 252
226

முதலாவது அகத்திணையியல் முற்றும்.

## இப்பதிப்பில் எடுத்தாளப்பட்டுள்ள நூல் முதலியவற்றின் சுருக்கெழுத்து விளக்கம்.

| | |
|---|---|
| அகநா. | — அகநானூறு |
| அம்பி. | — அம்பிகாபதிக் கோவை |
| ஆய். குரவை. | — ஆய்ச்சியர் குரவை |
| இரா. | — இராமாயணம் |
| இ. வி. | — இலக்கண விளக்கம் |
| இ. வி. பொ. | — இலக்கண விளக்கப் பொருளதிகாரம் |
| இறை. அக. | — இறையனார் அகப்பொருள் } |
| இறை. கள. | — இறையனார் களவியல் } |
| உஞ்சை. | — உஞ்சைக்காண்டம் |
| உரை. எடு. | — உரையாசிரியர் எடுத்துக்காட்டு |
| உரை. மே. | — உரையாளர்கள் மேற்கோள் |
| எடு. | — எடுத்துக்காட்டு |
| ஐங். ஐங்குறு. | — ஐங்குறுநூறு |
| ஐந். ஐம். | — ஐந்திணை ஐம்பது |
| கப். | — கப்பற்கோவை |
| கலி. | — கலித்தொகை |
| கானல். | — கானல் வரி |
| குறுந். | — குறுந்தொகை |
| சிலப். | — சிலப்பதிகாரம் |
| சீவக. | — சீவகசிந்தாமணி |
| சுந். | — சுந்தரகாண்டம் |
| தஞ்சை. | — தஞ்சைவாணன் கோவை |
| த. நெ வி. | — தமிழ்நெறி விளக்கம் |
| திணைமாலை. | — திணைமாலை நூற்றைம்பது |
| திணைமொழி | — திணைமொழி ஐம்பது |
| திரு. | — திருக்கோவையார் |
| தொ. சொ. | — தொல்காப்பியச்சொல்லதிகாரம் |
| தொ. சொ. நச். | — தொல்காப்பியச் சொல்லதிகார நச்சினார்க்கினியர் உரை. |

| | |
|---|---|
| தொ. பொ. | — தொல்காப்பியப்பொருளதிகாரம் |
| தொ. பொ. உரை. | — உரையாசிரியர் உரை |
| தொ. பொ. பே. | -- பேராசிரியர் உரை |
| தொ. பொ. மே. | — தொல்காப்பியப் பொருளதிகார உரை எடுத்துக்காட்டு |
| தொல். | — தொல்காப்பியம் |
| தொ. வி. | — தொன்னூல் விளக்கம் |
| ந. | — நச்சிஞர்க்கினியர் உரை |
| ந. அ. | — நம்பி அகப்பொருள் |
| நற். | — நற்றிணை |
| நாலடி. | — நாலடியார் |
| பா. சபா. சூ. | — பாரதம் - சபாபருவம் - சூதுப் போர்ச் சருக்கம் |
| பு. வெ. பெ, | — புறப்பொருள்வெண்பாமாலை பெண்பால் கைக்கிளை |
| புறநா. | — புறநானூறு |
| பெரிய. | — பெரிய புராணம் |
| பெருங். | — பெருங்கதை |
| மதுரை. | — மதுரைக் கலம்பகம் |
| மா. அ. | — மாறன் அகப்பொருள் |
| மா. அ. | — மாறன் அலங்காரம் (பக். 883, 887) |
| மு. வீ. | — முத்து வீரியம் |
| மு. வீ. அக. | — முத்துவீரிய அகவொழுக்கவியல் |
| மு. வீ. கள. | — களவொழுக்கவியல் |
| மு. வீ. கற். | — கற்பொழுக்கவியல் |
| மேற். | — மேற்கோள் |
| வஞ்சின. | — வஞ்சினமாலை |
| வீ, வீர, | — வீரசோழியம் |
| வீ. உரை. | — வீரசோழிய உரை |

## நூற்பா அகரவரிசை

# இலக்கணவிளக்கம்–பொருளதிகாரம்–அகத்திணையியல் எடுத்துக்காட்டுச் செய்யுள்

## அகரவரிசை

### பா

## மூ



## மெ

## உரைமேற்கோள் நூற்பா அகரவரிசை

120

---

# இலக்கணவிளக்கம்-பொருளதிகாரம்-அகத்திணையியல்

## துறை அகரவரிசை

## ஆ

துறை | பக்கம்

கா

துறை பக்கம்

## தா

துறை — பக்கம்

## தி, தீ, து



## தூ



## தெ, தே

துறை பக்கம்

| துறை | பக்கம் |
|---|---|

ப

துறை பக்கம்

**பா**

| துறை | பக்கம் |
|---|---|

## பெ

## பொ



## ம

| துறை | பக்கம் |
|---|---|

## வி



## வெ

## இலக்கணவிளக்கம்–பொருளதிகாரம்–அகத்திணையியல்
## பொருள்தொகுப்பு அகரவரிசை

### அ

## ஆ



## இ, ஈ

| பொருள் | | பக்கம் |
|---|---|---|


## உ

| பொருள் | பக்கம் |
|---|---|



ஊ, எ

| பொருள் | | பக்கம் |
|---|---|---|
| எதிர்பெய்து பரிதல் என்ற மெய்ப்பாடு | .... | 834 |
| எம்மெய் ஆயினும் ஒப்புமை கோடல் என்ற மெய்ப்பாடு | .... | 845 |
| எல்லா வரைவின்கண்ணும் பொதுவாக நிகழும் திறன் | .... | 626 |
| எழுவகைத் திணையும் புணர்ந்துரையாக உலகியலை உட்கொண்டு புகலப்படுதல் | .... | 102 |
| எழுவகையான் ஐயமுற்று ஓர்தல் | .... | 338 |

## ஏ

| | | |
|---|---|---|
| ஏதம் ஆய்தல் என்ற மெய்ப்பாடு | .... | 835 |
| ஏழைமை என்ற மெய்ப்பாடு | .... | 869 |
| ஏறிய மடல்திறம்—பெருந்திணைக் குறிப்பு | .... | 893 |
| ஏனை உவமம் | .... | 883 |
| ஏனைய பிரிவுகளின் வகை | .... | 189 |

## ஐ

| | | |
|---|---|---|
| ஐந்திணைப் பெயர்கள் | .... | 106 |
| ஐந்திணைக் கருப்பொருள்கள் | .... | 124 |
| ஐயத்தின் இலக்கணம் | .... | 271 |
| ஐயம் என்ற மெய்ப்பாடு | .... | 805 |
| ஐயம் கடிவன | .... | 273 |
| ஐயம் செய்தல் என்ற மெய்ப்பாடு | .... | 842 |

## ஒ, ஓ

| | | |
|---|---|---|
| ஒப்புமை என்ற மெய்ப்பாடு | .... | 869 |
| ஒப்புவழி உவத்தல் என்ற மெய்ப்பாடு | .... | 846 |
| ஒருசார்ப்பகற்குறி வகை | .... | 413 |
| ஒருசார்ப்பகற்குறி விரி | .... | 413 |
| ஒருபடிமீண்டு வரைதலின் விரி | .... | 618 |
| ஒருவழித்தணத்தல் | .... | 193 |

| பொருள் | | பக்கம் |
|---|---|---|

| பொருள் | | பக்கம் |
|---|---|---|

## தா, தி, து, தூ



## தெ, தே

## மு, மூ

# இலக்கணவிளக்கம்–பொருளதிகாரம்–அகத்திணையியல்

## ஒத்தநூற்பாக்கள் அகரவரிசை

## ஆ

### மா



### மி, மீ

## அ

அகலம்—மார்பு
அகலறை—அகன்றபாறை
அகற்சி—அகலுதல்
அகையெரி—கொழுந்துவிட்டெரியும் தீ
அசும்பு—திவலை
அச்சு—அச்சம்
அஞர்—துன்பம்
அஞ்சனி—காயா
அஞ்ஞை—அன்னை, மகள்
அடம்பு—அடப்பங்கொடி
அடல்—கொல்லுதல் வெல்லுதல்
அடவி—வனம்
அடுக்கம்—பக்கமலை
அடுமரம்—வில்
அடை—இலை
அடையார்—பகைவர்
அணங்கு—தெய்வம் வருத்தம்
அணங்குதல்—வருந்துதல்
அணவருதல்—ஆசைப் படுதல்
அணவுதல்—நெருங்குதல்
அணிபு—அணிந்து, அணிதல்
அணை—தலையணை
அண்டன்—தேவன்
அதர்—வழி
அதற்கொண்டு—அதனால்
அத்தம்—அரியவழி
அந்தாரம்—அழகிய நாரத்தை
அமலுதல்—நெருங்குதல்
அமலை—திரட்சி
அமளி—படுக்கை
அம்கலுழ்தல்—அழகு சோர்தல்
அம்பரம்—ஆகாயம்
அம்பல்—பழிச்சொல்
அம்போருகம்—தாமரை
(வீழா) அயர்தல்—கொண்டாடுதல்
அயர்த்தல்—மறத்தல், நீங்குதல்
அயிலுதல்—உண்ணுதல்
அயில்—வேல், கூர்மை
அரத்தம்—செம்மை, செவ்வாடை
அரி—சிங்கம், கோடு
அரிந்தமன்—வெற்றியாளன்
அரிபெய்புட்டில்—பரல்பெய்துள்ள கெச்சை
அரில்—பிணக்கம்
அருகுதல்—குறைதல்
அருக்கன்—கதிரவன்
அருக்கு—அருமை
அலத்தல்—பிரிதல்
அலமரல்—மனம் சுழலுதல்
அலவன்—நண்டு, நண்டு போன்ற சூதடுகாய்

அல்கல்—இரவு, நேற்று
அல்லி—அகவிதழ்
அவம்—பயனின்மை
அவல்—பள்ளம்
அவுணர்—அசுரர்
அழிபு—அழிந்து, அழிதல்
அழுங்கல்—(செலவு) தவிர்தல், தளர்தல், வருந்துதல்
அழுவம்—பரப்பு
அளகம்—கூந்தல்
அளகாடவி—கூந்தற்காடு
அளி—வண்டு, கருணை
அளிய—இரங்கத்தக்க
அளை—புற்று, குகை
அள்—செறிவு
அறப்புறம்—அறச்சாலை
அறல்—கருமணல்
அருலியர்—அருதிருக்க
அறுகால்—வண்டு
அறை—பாறை
அறைதல்—ஒலித்தல்
அற்சிரம்—முன்பனி
அனங்கன்—மன்மதன்

## ஆ

ஆ—பசு
ஆகம்—மார்பு
ஆகுதி—தேவர்க்கு வேள்வித் தீயிலிடும் உணவு
ஆகுலம்—வருத்தம்
ஆசாரம்—ஒழுக்கம்
ஆசினி—ஈரப்பலா
ஆடகவரை—பொன்மலை
ஆதரவு—விருப்பம்
ஆதி—நெடுஞ்செலவு
ஆதுலர்—நோயாளிகள்
ஆப்பி—சாணம்
ஆம்—நீர்
ஆயம்—கூட்டம்
ஆயு—ஆயுள்
ஆய்(மலர்)—அழகிய
ஆரஞர்—பொறுத்தற்கரிய துயரம்
ஆரணம்—வேதம்
ஆரம்—சந்தனம், மாலை, முத்து
ஆன்றோர்—பெரியார்
ஆரல்—மீன்விசேடம்
ஆரிடை—அரியவழி
ஆர்கலி—கடல்
ஆர்கை—உண்டல்
ஆர்தல்—மேய்தல்
ஆர்பதம்—உண்ணுமுணவு
ஆலம—விடம்
ஆலவட்டம்—விசிறி
ஆலித்தல்—தாவியோடுதல்
ஆலுதல்—ஒலித்தல், ஆடுதல்
ஆவணமறுகு-கடைத்தெரு
ஆவி—குளம்
ஆழி—மோதிரம்
ஆள்வினை—முயற்சி

## இ

இகத்தல்—கடத்தல்
இகப்பு—கடத்தல்
இகல்—மாறுபாடு
இகுத்தல்—ஒலித்தல், தாழ்த்துதல்
இகுதருதல்—சொரிதல்
இகுளை—தோழி
இக்கு—கரும்பு
இசும்பு—ஏற்றிழிவு
இதண்—பரண்
இதழி—கொன்றை
இந்திரசாபம்—வானவில்
இந்தீவரம்—நீலப்பூ
இந்து—சந்திரன்
இபம்—யானை
இப்பி—கிளிஞ்சல்
இமிர்தல்—ஒலித்தல்
இமையவன்—இறைவன்
இயம்—வாச்சியம்
இயவு—வழி
இர—இரவு
இரங்குதல்—ஒலித்தல், வருந்துதல்
இரதம்—சுவை
இரட்டல்—ஒலித்தல்
இரலை—மான்
இரிதல்—கெட்டோடுதல்
இரும்—இருமல்
இருவி—அரிதாள்
இருவுதல்—இருத்துதல்
இலஞ்சி இலஞ்சி—குளம்
இல்—குடி
இல்லத்துக்காழ்—தேற்றுங்கொட்டை
இல்லம்—தேற்றுமரம்
இல்லி—துளை
இல்லோன்—வறியோன்
இவர்தல்—மேற்கோடல்
இழிதல்—இறங்குதல்
இழுது—வெண்ணெய்
இறவு—இருமீன்
இறுத்தல்—தங்குதல்
இறுமாப்பு—பெருமிதம்
இறும்பு—குறுங்காடு
இறை—சிறிது, தங்குதல், முன்கை
இறைமை—தலைமை
இற்பந்தி—வீட்டுக்கட்டுத்தறி
இனைதல்—வருந்துதல்

## ஈ

ஈருள்—ஈரல்
ஈர்தல்—அறுத்தல்
ஈர்ந்தழை—குளிர்தழை

## உ

உகளுதல்—தாவுதல்
உசாத்துணை—சூழ்தற்காம் துணை
உசாவுதல்—சூழ ஆராய்தல்

உடங்கு—ஒருசேர
உணங்கல்—வற்றல்
உணங்கவை-காயவைத்தவை
உணா—உணவு
உணீஇய-உண்ணும்பொருட்டு
உண்கண்—மையுண்ட கண்
உததி—கடல்
உந்தி—கொப்பூழ், ஆற்றுச்சுழி
உமர்—உன்னைச் சார்ந்தவர்
உம்பரார்—தேவர்
உம்பர்—மேலிடம், தேவர்
உயங்குதல்—வருந்துதல்
உயவல்—வருந்துதல்
உயவை—காக்கணங்கொடி, உலவை
உய்யானம்—உய்யாவனம்
உரவுநீர்—கடல்
உரன்—திண்மை, திண்ணிய அறிவு
உரினுதல்—உராய்தல்
உரும்—இடி
உரைஇய—பரவிய
உலவை—காற்று
உலவைக்கால்—காற்று
உலறுதல்—வற்றுதல்
உவரி—கடல்
உவலைப்பதுக்கை—கற்குவியல்
உழத்தல்—துயரடைதல்
உழுவை—புலி
உழை—மான்
உளர்தல்—கோதுதல்
உளை—பிடரிமயிர்
உளைதல்—வருந்துதல்
உளைத்தவர்—வருந்தியவர்
உள்ளலர்—நினையாதவர்

## ஊ

ஊராண்மை—ஊரையாளும் முறைமை
ஊழ்—முறை
ஊழ்த்தல்—உதிர்த்தல், மறைத்தல்
ஊறல்—ஊறும் நீர்
ஊன்—இறைச்சி

## எ

எங்கை—என் தங்கை
எண்கு—கரடி
எதிர்தல்—எதிர்பார்த்தல், ஒத்தல், போரிடல்
எத்தும்—எற்றும் (-எவ்வளவும்)
எயிற்றி—பாலைநிலமகள்
எய்ப்பு—இளைப்பு
எய்யாமை—அறியாமை
எருவை—கழுகு
எவ்வம்—துன்பம்
எலுவன்—தோழன்
எல்—கதிரவன்
எல்லி—இரவு

எல்லு—பகல்
எல்லை—பகல், கதிரவன்
எழிலி—மேகம்
எறி(த்)தல்—வீசுதல்
எறிபோத்து—தாக்கும் புலி
எறுழ்—வலிமை
எற்றுதல்—மோதுதல்
என்றூழ்—கதிரவன்
எஃகம்—ஆயுதம்

## ஏ

ஏ—அம்பு
ஏக்கறுதல்—ஆசையால் தாழ்தல்
ஏதம்—துன்பம்
ஏதிலன்—அயலான்
ஏதில்மாக்கள்—அயல்மனிதர்
ஏத்தலர்—வழிபடாதவர்
ஏமம்—பாதுகாப்பு
ஏமரை—அம்புபட்டமான்
ஏமுற—ஏமமுற
ஏமுறுத்தல்—மயக்குறுத்தல்
ஏய்தல்—பொருந்துதல்
ஏர்—அழகு, எழுச்சி, உவம உருபு
ஏறங்கோள்—ஏறுகோட்பறை
ஏறு—ஆண்சிங்கம்
ஏனம்—பன்றி
ஏனல்—தினை, தினைப்புனம்

## ஐ

ஐ—வியப்பு
ஐது—அழகு, அழகியது
ஐம்பால்—கூந்தல்
ஐம்மை—மென்மை
ஐயர்—அண்ணன்மார்
ஐயுறவு—ஐயமுறுதல்
ஐவனம்—மலைநெல்
ஐவாயரவு—ஐந்தலைப்பாம்பு

## ஒ

ஒருவுதல்—நீங்குதல்
ஒரூஉதல்—நீங்குதல்
ஒவ்வாமை—பொருந்தாமை
ஒலித்தல்—தழைத்தல்
ஒல்குதல்—ஒசிதல்
ஒல்லுதல்—இயலுதல்
ஒளிறுதல்—ஒளிவீசுதல்
ஒற்கம்—தளர்ச்சி
ஒன்றுதல்—பொருந்துதல்
ஒன்னார்—பகைவர்

## ஓ

ஓகை—உவகை
ஓக்குதல்—வீசுதல்
ஓங்கல்—மலை

ஓதி—தலைமயிர்
ஒப்பல்—ஓட்டுதல்
ஓம்—ஓவும்
ஓம்படை—பாதுகாப்பு
ஓலுறுத்தல்—தாலாட்டுப் பாடுதல்
ஓல்—தாலாட்டொலி
ஓவுதல்—நீங்குதல்

க

கங்குல்—இரவு
கச்சம்—எண்
கஞற்றல்—கமழ்தல்
கஞ்சன்—கம்சன்
கஞ்சுகம்—சட்டை
கடப்பு—கடம்பமரம்
கடமா—யானை
கடமான்—காட்டுமான்
கடம்—மதநீர், காடு, கடமை
கடவுதல்—செலுத்துதல், வினவுதல்
கடாசலம்—மதமலை, யானை
கடாம்—மதநீர்
கடி—மணம், காவல்
கடிகை—நாழிகை, குத்துக்கோல்
கடிதல்—நீக்குதல்
கடிப்பு—குறுந்தடி
கடுமான்—குதிரை
கடுவன்—ஆண்குரங்கு
கடைஇ—கடவி
கடைக்கண்—இறுதிக்காலம்
கணம்—கூட்டம்
கணவீ—மலர்க்கூட்டம்
கணி—வேங்கை
கண்டகம்—நெய்தல்
கண்டம்—கழுத்து
கண்டல்—தாழை
கண்டிகும்—கண்டோம்
கண்ணி—முடிமாலை
கண்ணுதல்—சிவபெருமான்
கண்மாறுதல்—இடம்நீங்குதல்
கதலி—வாழை
கதழ்தல்—விரைதல்
கதி—செல்லும்வழி
கதுப்பு—கூந்தல்
கந்துகம்—பந்து, குதிரை
கம்பலை—ஆரவாரம்
கம்புள்—சம்பங்கோழி. வானம்பாடி
கயம்—குளம்
கராம்—முதலை
கரி—சான்று
கரியார்—கீழோர்
கருவீ—தொகுதி
கருணை—பொரிக்கறி
கலபம்—கலாபம்
கலவி—புணர்ச்சி
கலாபம்—மயிற்றோகை, அரைப்பட்டிகைக்கோவை
கலாய்த்தல்—சினத்தல்

சலி—ஆரவாரம்
கலிங்கம்—புடைவை
கலித்தல்—செழித்தல்
கலுழ்தல்- அழுதல், வருந்துதல்
கலை—கலைமான், ஆடை, மேகலை
கவலை—கவர்த்தவழி
கவவுதல்—அகத்திடுதல்
கவறல்—கவலையுறுதல்
கவான்—பக்கமலை, கள்வன்
கவி—குரங்கு
கவிகை—குடை, இடக்கவிந்தகை
கழறல்—இடித்துரைத்தல்
கழிப்புதல்—கழித்தல்
கழுமுதல்—கலத்தல்
கழை—மூங்கில், கரும்பு
களபம்—சந்தனம்
களபாசலம்—கொங்கை
களம்—கழுத்து
களவன்—சான்றுவான்
களைஇய—களைதல் வேண்டி
கறங்குதல்—ஒலித்தல்
கறி—மிளகு
கறுத்தல்—சினத்தல்
கறையடி—யானை
கற்பகநாடு—தேவருலகம்
கனம்—மேகம்
கனலி—கதிரவன்
கனைஇ—மிக்கு
கனைதல்—செறிதல்
கன்னல்—கரும்பு
கன்னி—சயமடந்தை
கன்னிகாரம்—குரவு

## கா

கா—சோலை, காவடித்தண்டு
காட்ட—போல
காண்கு—காண்பேன்
காண்மார்—காண்பார்
காதரம்—அச்சம்
காதுதல்—பொருதல்
காந்தட்டு—காந்தளையுடையது
காந்தன்—கணவன்
காம்பு—மூங்கில்
காரான்—எருமை
காரிகை—அழகு, பெண்
காரோடன்—சாணைக்கல் செய்வோன்
காலுதல்—வெளிப்படுத்தல்
கால்—காற்று, காம்பு, சக்கரம்
கால்கோடல்-தொடங்குதல்
காவி—நீலோற்பலம்
காழ்க்கொள்ளல்—மிகுதல்
காளபந்தி—கருமைவரிசை

## கி

கிடை—கிடப்பது
கிளத்தல்—சொல்லுதல்
கில்லாமை—மாட்டாமை

கீ

கீடம் செய்தல்—புழுப் போலத் துடித்தல்
கீலாலம்—நீர்

கு

குஞ்சரம்—யானை
குஞ்சி—ஆடவர் தலைமயிர் முடி
குடங்கை—உள்ளங்கை
குடம்பை—கூடு
குடாவடி—கரடி
குட்டன்—அன்புமகள்
குணது—கிழக்கிலுள்ளது
குய்—தாளிப்பு
குரகதம்—குதிரை
குரங்குதல்—வளைதல்
குரண்டகம்—கொக்கு
குரல்—கொத்து, கதிர்
குரவன்—தந்தை
குரவை—கைகோத்தாடும் கூத்து
குரு—நிறம்
குருகு—நாரை, கொக்கு, வளை
குருளை—குட்டி
குலம்—கூட்டம்
குலிகம்—இருப்பை
குல்லை—கஞ்சங்குல்லை
குவவு—பெருமை
குவை—குவியல்
குழி—குழீஇ
குழுமுதல்—கூடுதல்
குழை—இலை
குளகு—உணவு
குறுதல்—பறித்தல்
குறும்பு—பாலைநிலவூர்
குறைவு—இன்றியமையாமை
குனித்தல்—நடம்புரிதல்
குனிவு—வளைவு
குன்றி—குன்றிமணி

கூ

கூடார்—பகைவர்
கூதாளம்—கூதாளிச்செடி
கூம்பு—முகை
கூர்பலி—மிக்கபலி
கூவல்—கேணி
கூழை—மகளிர் தலைமயிர்

கெ, கே

கெழி—கெழீஇ
கெழுமுதல்—மேவுதல்
கேசம்—தலைமயிர்
கேதகை—தாழை
கேழ்—நிறம், ஒப்பு
கேள்—கேழ், உறவு

கை

கை—பக்கம், ஒழுக்கம்
கைதை—தாழை

கைத்தல்—கசத்தல், வருந்துதல்
கைம்மா—யானை
கைம்மிகல்—எல்லைகடத்தல்
கையடை—அடைக்கலம்
கையறுதல்—செயலறுதல்

### கொ

கொடி—காக்கை
கொடிச்சி—குறிஞ்சிநிலப் பெண்
கொடுங்கால்—கடுங்காற்று
கொண்கன்-கணவன், நெய்தல் நிலத்தலைவன்
கொண்டல்—கீழ்க்காற்று, மேகம்
கொந்து—கொத்து
கொம்பர்—கொடி
கொம்மை—திரட்சி
கொய்சுவல்—மட்டம் செய்யப்பட்ட பிடரிமயிர்
கொல்—கொலைத்தொழில்
கொழுதல்—கோதுதல்
கொளை—பண்
கொற்றம்—வெற்றி
கொன்—அச்சம், பெருமை
கொன்னே—வீணே

### கோ

கோகிலம்—குயில்
கோடரம்—எட்டிமரம்
கோடல்—காந்தள்
கோடி—புத்தாடை
கோடு—சங்கு, சிகரம், கரை
கோடும்—கொள்ளுவோம்
கோடை—மேல்காற்று
கோட்டம்—வளைவு
கோண்மா—புலி
கோதம்—துன்பம்
கோதை—மாலை, சேரன்
கோபம்—இந்திரகோபப்பூச்சி
கோமளம்—அழகு
கோம்பி—பச்சோந்தி
கோலுதல்—ஈட்டுதல்
கோல்—திரட்சி
கோவை—கொவ்வைக்கனி

### ச

சசி—சந்திரன்
சந்தம்—அழகு
சந்தாடவி—சந்தனச்சோலை
சந்து—சந்தனம்
சயிலம்—மலை
சரதம்—உண்மை
சனித்தல்—பிறத்தல்

### சா

சாந்தம்—சந்தனம்
சாந்து—சந்தனம்
ஈசனசாந்து—திருநீறு
சாயகம்—அம்பு

சாயல்—மென்மை
சாய்தல்—நுணுகுதல்
சாலி—அருந்ததி

சி

சிதகன்—தூக்கணங்குருவி
சிதர்—வண்டு
சிந்துரம்—வெட்சி
சிமை—உச்சி
சிமையம்—சிகரம்
சிரவம்—கவுதாரிப்புள்
சிலை—வில், மலை
சிலைத்தல்—சினத்தல், ஒலித்தல்
சிலைவேள்—காமன்
சிறுவரை—சிற்றெல்லை
சிறை—பக்கம்
சினைஇ—சினந்து

சீ

சீப்பு—கதவிடும் தாழ்
சீயம்—சிங்கம்
சீறடி—சிறிய அடி
சீறூர்—சிற்றூர்

சு

சுணங்கு—தேமல்
சுத்தி—தூய்மை
சும்மை—ஒலி
சுரபி—பசு
சுரும்பு—வண்டு
சுவல்—புறக்கழுத்து
சுறவு—சுறுமீன்
சுறவுக்கோடு—சுறுமீன் கொம்பு

சூ

சூட்டு—உச்சிக்கொண்டை
சூது—சூதடு கருவி
சூரல்—பிரம்பு
சூள்—சபதம்
சூழி—யானையது முகபடாம்
சூழ்தல்—பலரோடும்பழுதற எண்ணுதல்
சூறை—சுழல்காற்று

செ

செகுத்தல்—அழித்தல்
செக்கர்—செம்மை
செப்பாதீம்—செப்பாதீர்
செம்பழுக்காய்—கமுகின்பழம்
செம்மல்—தலைமை, தலைவன்
செயத்தோர்—வெற்றி பெற்றோர்
செயிர்—சினம், துயரம்
செரு—போர்
செல்—மேகம், இடி
செல்லல்—துன்பம்

செல்வு—செல்வம்
செவ்வி—தருணம், பருவம்
செறு—வயல்
செறுநர்—பகைவர்
சென்றீ—செல்லுதி

## சே. சோ

சேக்கை—தங்குமிடம், படுக்கை
சேடு—பெருமை
சேட்டை—ஜேஷ்டாதேவி
சேயர்—தொலைவிலுள்ளார்
சேயிறுல்—சிவந்த இறுமீன்
சேய்—முருகன்
சேர்ப்பன்—கடற்றுறைவன்
சேர்ப்பு—கடற்றுறை
சேல்—மீன்விசேடம்
சேறல்—செல்லுதல்
சேறி—செல்லுதி
சேறும்—செல்லுவோம்
சோமன்—சந்திரன்

## ஞ ஞா, ஞெ

ஞமலி—நாய்
ஞாங்கர்—பக்கம்
ஞாளி—நாய்
ஞான்றல்—வழிதல்
ஞெமிதல்—ஒடிதல்
ஞெமிர்தல்—பரத்தல்
ஞெறித்தல்—முறித்தல்

## த

தகைதல்—செறிதல்
தகைத்தல்—தடுத்தல்
தட—பெருமை
தடவரல்—தடவுதல்
தடிதல்—வெட்டுதல், கொய்தல்
தடைஇ—தடுத்து
தணத்தல்—நீங்குதல்
தணிந்தீக—தணிக
தண்டாதவர்—மிக்கோர்
தண்டாமை—தவிராமை
தண்ணளி—குளிர்ந்தகருணை
தண்ணுமை—மத்தளம்
தண்பதம்—குளிர் நிலை
ததைதல்—செறிதல்
தமர்—தம்மவர்
தமி—தனியே
தயல்—தையல்
தரங்கம்—அலை
தரளம்—முத்து
தரியலர்—பகைவர்
தருணம்—இளமை
தருபு—தந்து
தருப்பணம்—அவல்
தலைஇ—பெயல் பொழிந்து
தலைப்பெய்தல்—ஒருங்கு சேர்தல்
தவ—மிகுதி
தவல்—கெடுதல், வருத்தம்
தவளாதபம்—வெண்கதிர்

தவிசு — ஆதனம்
தழங்குதல்—ஒலித்தல்
தழல்— தீ
தழாஅல்—தழுவுதல்
தளவு—முல்லை
தளி — பெயல்
தறுகண் —அஞ்சாமை

## தா

தா இடை — வலிய இடம்
தாது—மகரந்தப்பொடி
தாதுண்பறவை — வண்டு
தாமம்—மாலை
தாரகை—விண்மீன்
தாரணி—பூமி
தாரை—கூர்மை

## தி, தீ

திணை — ஒழுக்கம்
திண்டி—யானை
திதலை — தேமல்
திமிர்தல்— பூசுதல், சூடுதல்
திமில்— மீன்பிடிபடகு, வேங்கைமரம்
திறை—கப்பம்
தின்னி — தின்பவன்
தீ, தீம்— இனிமை
தீரிய—தீர்தற்பொருட்டு
தீவிய—இனிய

## து

துகிர் — பவளம்
துங்கம்—சிறப்பு
துஞ்சுதல்—தூங்குதல்
துணர்—பூங்கொத்து
துணை — இரட்டை
துதைதல்—செறிதல்
துப்பு—வலிமை, பவளம்
துயல்வருதல்—அசைதல்
துயர்வது—வருந்துவது
துய்—பஞ்சுத்துய்
துரத்தல்—ஓட்டுதல்
துருமம் — சோலை
துரூஉப்பலி—ஆட்டுக் கிடாய்ப்பலி
துவக்குதல்—கட்டுதல்
துவைத்தல் — ஒலித்தல்
துழாய்—துளசி
துளங்குதல்—அசைதல்
துறுகல்—பொற்றைக்கல்
துறுதல்—செறிதல்
துனி—சினம், வெறுப்பு
துனித்தல்—சினத்தல், துன்பமுறல்
துன்னார்—பகைவர்
துன்றுதல்—செறிதல்

## தூ

தூ — பற்றுக்கோடு
தூங்குதல் — தொங்குதல், செறிதல்

தூசு—ஆடை
தூது—சிறுகல்
தூம்பு—உள் துளை
தூரியம்—வாச்சியம்
தூவி—அன்னச்சிறகு, சிற கரின் மென்மயிர்

## தே, தை

தெள்—தெளிவு
தெம்முனை—பகைவரிடம்
தெருமரல்—மனம் சுழலுதல்
தெவ்வர்—பகைவர்
தெறுதல்—காய்தல்
தேம்—தேன்
தேம்புதல்—வாடுதல்
தேயு—ஒளி
தேரலர்—ஈடுபடாதவர்
தேவகுலம்—தேவாலயம்
தேறுதல்—தெளிதல்
தேன்—வண்டுவிசேடம்
தைவரல்—தடவுதல்

## தொ

தொங்கல்—மாலை
தொடர்தல்-தொங்கவிடுதல்
தொடுதல்—அணிதல்
தொடை—அம்புதொடுத்தல்
தொண்டை-கொவ்வைக்கனி
தொத்து—கொத்து
தொத்துதல்—கொத்தமைதல்
தொழும்பு—அடிமை
தொழுவை—மடு
தொய்யில்—மகளிர் மார்பிலும், தோளிலும் அணியும் வண்ணக்குழம்பு

## தோ

தோகை-தோகைமயில், வால்
தோடு—பூ
தோட்டி—அங்குசம்
தோட்டு—தோளையுடையது
தோப்பி—நெற்கள்
தோம்—குற்றம்
தோரை—துவரை
தோல்—யானை
தோளாமணி—துளையிடா மணி

## ந

நகர்—மனை
நகாஅலிர்—நகுமின்
நகூஉ—நகைத்து
நகைமொக்கு—புன்முறுவல்
நடம்—நடனம்
நடன்—கூத்தன்
நடி—நடிப்பு
நடைமணி—புதல்வன்
நந்து—சங்கு
நணி—நணிமை

நந்து—சிவன், நந்தியாவட்டப்பூ
நயப்பு—விரும்பம்
நயனாரவிந்தம்—விழித்தாமரை
நரந்தம்—பூவிசேடம்
நரலுதல்—ஒலித்தல்
நல்குதல்—உதவுதல்
நள்ளார்—பகைவர்
நறவு—தேன்
நறவு—குங்குமமரம்
நனந்தலை—அகலிடம்
நனை—அரும்பு

## நா

நாகம்—சுரபுன்னை, யானை, மலை
நாப்பண்—நடுவு
நாம்—அச்சம்

## நி

நிரையம்—நரகம்
நிறம்—மார்பு, தன்மை

## நீ

நீடல்—காலம் தாழ்த்துதல்
நீவுதல்—நீங்குதல்

## நு, நூ

நுசுப்பு—இடை
நுதல்—நெற்றி
நுந்துதல்—தள்ளுதல்
நூக்குதல்—தள்ளுதல்

## நே, நொ

நேர்தல்—உடன்படுதல்
நொச்சி—மதில்
நொதுமலர்—அயலார்
நொடிதல்—சொல்லுதல்
நோகு—வருந்துவேன்

## ப

நோன்றல்—பொறுத்தல்
பகடு—யானை, காளை
பகல்—கதிரவன்
பகழி—அம்பு
பகுவாய்—திறந்தவாய்
பங்கம்—தாழ்வு
பங்கேருகம் தாமரை
பஞ்சாய்—கோரைவிசேடம்
படப்பை—தோட்டம்
படர்தல்—நினைத்தல், துன்புறுதல், செல்லுதல்
படலை—இலைமாலை
படாமை—தோன்றாமை, சாயாமை
படாம்—போர்வை
படிச்சந்தம்—ஒப்பு
படிறு—பொய்
படு—பள்ளம்
பணம்—பாம்பின் படம்
பணி—பாம்பு

பணிலம்—சங்கு, முத்து
பணை—பெருப்பு, மூங்கில்,
பணைத்தாள்—பருவடி
பண்ணை—வயல், விளையாட்டு
பதங்கம்—விட்டில்
பதம்—செவ்வி
பதுக்கை—கல்மேடு
பதுமம்—தாமரை
பந்தி—வரிசை
பயலன்—பாதியன்
பயலை—இளமை
பயின்—பிசின்
பயோதரம்—கொங்கை
பரன்—மேலோன்
பராக்கதம்—பிறக்குரியன கோடல்
பரவுதல்—வாழ்த்துதல்
பரி—விரைவு
பரிசு—தன்மை
பரிதல்—பற்றியிழுத்தல், விரைதல், அறுத்தல், அன்புகோடல்
பரித்தல்—தாங்குதல்
பரிமளம்—வாசனை
பவர்—கொடி
பருவரல்—துன்பம்
பரிவு—துயரம், அன்பு
பழங்கண்—வருத்தம்
பழனம்—வயல்
பள்ளி—படுக்கை
பறை—பறத்தல், சிறகு
பறைஇ—பறந்து
பறைகொளல்-முரசுமுழங்குதல்
பறைத்தொகுதி—பறவைக் கூட்டம்
பற்றை—செங்காந்தள், சிறு தூறு
பன்மூன்று—பதின்மூன்று

## பா

பாகர்—குழம்பு
பாகல்—பலாக்காய்
பாகு-பாகுபாடு,யானைப்பாகர்
பாசடை—பசிய இலை
பாடலம்—பாதிரிப் பூ
பாடலர்—பாடாதவர்
பாடு—படுதல். பெருமை, ஒலி, உலகியல்
பாண்—பாட்டு, பாணர்
பாத்துண்டல்—பகுத்துண்டல்
பாந்தள்—பாம்பு
பாரித்தல்—பரப்புதல்
பார்ப்பு—குஞ்சு
பால்—வீதி
பாவகன்—அக்கினி
பாவித்தல்—துணிதல், கருதுதல்
பாவுதல்—பரவுதல்
பாழி—வலிமை
பாறு—பருந்து

பாறுதல்—சிதறுதல்
பானல்—கருங்குவளை
பானாட்கங்குல்—நடுஇரவு

### பி, பீ

பிணங்கல்—மாறுபடுதல்
பிணை—பெண்மான்
பிணையல்—மாலை
பித்திகை—சிறுசண்பகம்
பிரசம்—தேன்
பிழி—கள்
பின்னகம்—பின்னல்
பீலி—மயிற்றோகை

### பு

புகலல்—சொல்லுதல், விரும்புதல்
புகற்சி—விருப்பம்
புங்கம்—உயர்வு
புதல்—புதர்
புணரி—கடல்
புயலேறு—இடி
புயல்—கார்மேகம்
புரந்தரன்—இந்திரன்
புராரி—சிவபெருமான்
புரிசை—மதில்
புலத்தல்—வெறுத்தல்
புலம்—வயல். அறிவு
புலம்பு—தனிமை
புலர்தல்—பொழுதுவிடிதல், உலர்தல்
புலிப்பல்குரல்-புலிப்பல்தாலி
புலவி—ஊடல்
புல்லுதல்—தழுவுதல்
புழை—வாயில்
புழைக்கால்—துளையுடைய தண்டு
புளகம்—மயிர்க்கூச்சல்
புளகித்தல்—புளகம் உண்டாதல்
புளினம்—மணற்குன்று
புறவு—முல்லை, புறா
புனிற்று—ஈன்றுஅணிமைத் தாகிய பசு
புன்புலம்—மனைக்கொல்லை
புன்னாகம்—புன்னை

### பூ

பூகம்—கமுகு
பூசல்—ஆரவாரம்
பூரணம்—நிறைவு
பூரியார்—நீசர்

### பெ, பே

பெண்ணை—பனை
பெற்றி—தன்மை
பேதுறல்—துன்புறுதல்
பேய்த்தேர்—கானல்நீர்
பேரீந்து—பேரீச்சை

## பை, பொ

பைதல் — வருத்தம்
பைது — பசுமை
பொடித்தல்—துகளாதல், தோன்றுதல்
பொதிதல்—மூடுதல்
பொதும்பர்—மருதநிலச் சோலை
பொய்தல்—விளையாட்டு
பொரிப்புன்கு—பொரிப் போலப் பூக்கும் புன்கு
பொருந்தலர்—பகைவர்
பொருவு—ஒப்பு
பொழில்—உலகு
பொறி—ஊழ், நல்வினை
பொறிவரி—புள்ளிகோடுகள்
பொறை—பாரம்
பொற்பு—பொலிவு

## போ

போக்கு—குற்றம்
போதகம்—யானை
போதருதல்—வருதல்
போதா—பெருநாரை
போறல்—போலுதல்

## ம

மகவு—குழவி
மகார்—பிள்ளைகள்
மங்குல்வானம்—கார்மேகம்
மஞ்சு—வெண்மேகம்
மஞ்ஞை—மயில்
மடவியர்—மகளிர்
மடிதல்—சோம்புதல், தூங்குதல்
மடுக்கு—செலுத்துவேன்
மடை—தேவர்க்குப் படைக்கும் உணவு
மணியக்கு—அக்குமணி
மண்ணுதல்—கழுவுதல்
மதர்த்தல்—செருக்குதல்
மதுகை—வெற்றி
மதைஇய—மதர்த்த
மத்தகம்—நெற்றி
மந்தமாருதம்—தென்றல்
மந்தி—பெண்குரங்கு
மம்மர்—மயக்கம்
மரீஇயோர்—மருவியவர்
மரு—வாசனை
மருங்குல்—இடை
மருப்பு—தந்தம்
மருள்—மயக்கம்
மலைதல்—போரிடுதல், மேற்கோடல்
மலைத்தல்—மாறுபடுதல்
மல்லல்—வளப்பம்
மல்லை—வளப்பம்
மவ்வல்—முல்லை
மழ—இளமை, குழவி
மழை—மேகம், குளிர்ச்சி

மறலி—இயமன்
மறி—மான் கன்று
மறுகல்—மனம்சோர்தல்
மறுகு—தெரு
மறந்தைக்க—மறப்பாயாக
மறையாதீம்—மறையாதே

### மா

மா—மான், விலங்கு
மாகம்—ஆகாயம்
மாக்கட்டு—மக்களையுடையது
மாக்குரல்—பெருங்கொத்து
மாசுணம்—மலைப்பாம்பு
மாதங்கம்—யானை
மாதவி—குருக்கத்தி
மாதிரம்—திசை
மாது,—மாதர்—அன்பு
மாநனை—மாம்பூ
மாயோள்—கரியவள்
மாரன்—மன்மதன்
மாருதம்—காற்று, தென்றல்
மால்—மயக்கம், திருமால்
மாழை—அழகு
மான—போல

### மி மு

மிடைதல்—செறிதல்
முகடு—உச்சி
முகிழ்—மொட்டு
முகை—மொட்டு
முட்டின்று—முட்டுப்பாடுடையது
முண்டகம்—தாமரை
முதுக்குறைமை, முதுக்குறைவு — இளமையில் பேரறிவுடைமை
முந்நீர்—கடல்
முயக்கு-முயங்குதல், தழுவுதல்
முரம்பு—காடு
முரலுதல்—ஒலித்தல்
முருகு—வாசனை
முருந்து—மயிலிறகின் அடி
முழுவுதல்—முத்தமிடுதல்
முளரி—தாமரை
முளிதயிர்—நன்குதோய்ந்த தயிர்
முறி—தளிர்
முனிதல்—சினத்தல், வெறுத்தல்
முனைதல்—வெறுத்தல்
முன்னம்—குறிப்பு
முன்னுதல்—கருதுதல்

### மூ, மே

மூசுதல்—மொய்த்தல்
மூரல்—அரும்பு, பல்
மூரி—சோம்பல் முரிப்பு
மூர்ச்சனை—மூர்ச்சை
மேகப்புள்—வானம்பாடி
மேதி—எருமை
மேவலர்—பொருந்தலர்
மேன—மேலன

### மை

மைந்து — வலிமை
மையல் — மயக்கம்
மையாழி — கருங்கடல்

### மொ, மோ

மொய்ம்பு—வலிமை, தோள்
மோடு — பெருமை, வயிறு

### யா

யாத்தல்—கட்டுதல்
யாணம் — அழகு
யாணர்—புதுவருவாய்
யாழோர்—கந்தருவர்
யாழ்முரலல்—யாழ்போல ஒலித்தல்

### வ

வகுளம்— மகிழமரம்
வசந்தன் — மன்மதன்
வஞ்சி—கொடி
வடமீன் —அருந்ததி
வடவரை—மேரு
வடி—மாவடு, கூர்மையான
வடு—குற்றம், மாவடு
வட்கார் —பகைவர்
வட்குதல்— நாணுதல்
வட்டித்தல்—சுழலுதல்
வணங்குதல்—வளைதல்
வண்டல்—சிறுமியரது விளையாட்டு
வண்டல்தைஇ – விளையாட்டயர்ந்து
வண்டு— சங்கு
வந்தீம் — வம்மின்
வம்பலர் — புதியர்
வம்பு—புதுமை, கச்சு, காலமல்லாக் காலத்து மழை
வம்பே — வீணே
வய — வலிமை
வயமா—புலி முதலிய கொடிய விலங்கு
வயிர்— ஊது கொம்பு
வரதம்—பெருமை
வரன்றல் — கொழித்தல்
வரிவயம்—புலி
வருகு—வருவேன்
வருக்கை—பலாவிசேடம்
வருட்டுதல்—அமைதியுறுவித்தல்
வரை—மலை, மூங்கில்
வரைதல்— மணத்தல், நீக்குதல், பேணுதல்
வலக்காரம்—விரகு
வலவன்—தேர்ப்பாகன்
வலித்தல்—உளம் துணிதல்
வல்—சூதடு கருவி
வல்சி—உணவு

வல்லி—கொடி
வல்லேறு—கடுங்குரல்இடி
வல்லை—விரைவாக
வளை—சங்கு
வள்பு—வார்
வள்ளம்—கிண்ணம்
வழங்குநர்—செல்லுவோர்
வழை—சுரபுன்னை
வறுங்கை—வறிதானமை
வனசம்—தாமரை
வன்கண்மை—கொடுமை
வன்புறை—வற்புறுத்துதல்

**வா**

வாங்குதல்—வளைத்தல்
வாசி—அன்பு, குதிரை
வாமமீன்-அழகிய வெள்ளிமீன்
வாமம்—இடப்பாகம்,அழகு
வாம்—வாவும்
வாயசம்—காக்கை
வாய்த்தகை—உண்மைத் தன்மை
வாய்விடுதல்-வெளிப்படுத்தல்
வாரணம்-யானை,கோழி,சங்கு
வாரி—கடல்
வாலிய—வெண்மைய
வாலிழை—சிறந்த அணி
வாவல்—வௌவால்
வாவுதல்—தாவுதல்
வாளாது—செயற்படாமல்
வாள்—ஒளி

**வி, வீ**

விகங்கம்—பறவை
விசும்பு—ஆகாயம்
விஞ்சை—விச்சை
விடர்—பிளப்பு
விதிர்ப்பு—நடுக்கம்
விதிர்விதிர்த்தல்—நடுநடுங்குதல்
விந்தைமங்கை—வெற்றித்திரு
வியங்கம்—தவளை
விரகு—உபாயம்
விரைஇ—விரவி, (கலந்து)
விலங்கல்—மலை, தடுத்தல்
விழுமம்—சிறப்பு, துன்பம்
விளர்த்தல்—வெளுத்தல்
வீ—மலர்
வீழுநர்—விரும்பும் காதலர்

**வெ**

வெண்தேர்—பேய்த்தேர்
வெதிர்—மூங்கில்
வெந்—முதுகு
வெய்யன்—விரும்புதலையுடையான்
வெருவுதல்—அஞ்சுதல்
வெளிறு—உள்ளீடின்மை
வெள்ளம்—ஒரு பேரெண்
வெறி—மணம், வெறியாடல்
வெறுப்பு—செறிவு
வெற்பு—மலை
வெஃகுதல்—விரும்புதல்

| வே | வை, வெள |
|---|---|
| வேட்டம்—வேட்டை | வை—கூர்மை |
| வேய்—மூங்கில் | வைகல்—நாள், கழிதல் |
| வேரல்—மூங்கில் | வையம்—உலகம், நடைத் தேர் |
| வேழம்–யானை, வேழக்கரும்பு | வெளவுதல்-வலியக் கவர்தல் |

குறிப்பு : 134 ஆம் பக்கத்தில் 16 ஆம் வரிக்குக் கீழ்

'திரைநீர் வருணன் சேர்ப்பன் புலம்பன்
பரத்தி நுளைச்சி பரதர் பரத்தியர்
நுளவர் நுளைச்சியர் அளவர் அளத்தியர்
பாக்கம் பட்டினம் வாயசம் சுறவம்
உவர்நீர்க் கேணி கவர்நீர் நெய்தல்
கண்டகம் கைதை முண்டகம் அடம்பு
மீன்உப்புப் படுத்தல் விளரியாழ் செவ்வழி
நளிமீன் கோட்பறை நாவாய்ப் பம்பை
நெடுநீர் நெய்தல் கருப்பொருள் ஆகும்'

மு வீ. அக. 28

என்பதனையும்,

664 ஆம் பக்கத்தில் 22 ஆம் வரிக்குக் கீழ்,

அநுவாத முகத்தால் வெள்ளணி அணிந்து விடுத்தலும் வரப்பெறும்.

அதற்குச் செய்யுள் :

'துதையும் சுரும்புஉறை மல்லிகை யேய்ந்துவெண் தூசு புனைந்து
இதயம் களிவர நித்திலம் பூண்டுஎதிர்ந் தார்உடலம்
புதைஅம்பு அனைய விழிமட மாதர்பொற் பூண்புதல்வன்
உதயம் புகல அகலமுன் ஓடினர் ஊரனுக்கே.'

அம்பி, 462

எனவரும்.

என்பதனையும் கொள்க.

# இப்பதிப்பில் காணப்படும் அச்சுப் பிழைகளும் அவற்றின் திருத்தங்களும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| 530 | 30 | ஒர் | ஓர் | 702 | 24 | என | எனவும் |
| 534 | 7 | நீர் | நீர் | 722 | 27 | எம் | — |
| 543 | 8 | இவ் | இல் | 742 | 17 | இருங் | எழில் |
| 546 | 8 | இவள் | இலன் | 746 | 18 | யோன் | யோன் |
| 547 | 22 | போதா | போதா | 749 | 25 | பொருள் | பொருள் |
| 556 | 18 | டான் | டாள் | 794 | 27 | கெட் | கெட்ட |
| 557 | 8 | மூரு | மூரு | 819 | 9 | தான் | தான் |
| 560 | 28 | — | எனவும்வரும் | 823 | 14 | நிகழ்த் | நிகழ்ந் |
| 567 | | — | ஒத்த நூற்பாக்கள் | 829 | 6 | பாரா | பார |
| 568 | 1 | வானை | லானை | 832 | 26 | லாய் | வாய் |
| 576 | 27 | — | வரும் | 838 | 14 | நோ | நோ |
| 583 | 1 | தெய் | தெய் | 840 | 27 | நின் | நின் |
| 598 | 26 | யிலே | யிலே | 859 | 7 | அதற்கு | அதற்குப் |
| 631 | 12 | சிறப்பு | சிறப்பு | | 15 | தலை | தலை |
| | 27 | சுண் | கண் | 862 | 16 | வளை | வளி |
| 634 | 8 | இவள் | இவன் | 876 | 4 | பின் | யின் |
| 643 | 14 | யுய | புய | 877 | 18 | ருள் | ருன் |
| 648 | 8 | பாக்கி | பாங்கி | 880 | 20 | உன் | உள் |
| 653 | 21 | தா | தா | | 21 | னின் | னின் |
| 655 | 10 | இட்டு | இட்டுப் | 896 | 17 | தானே | தானே |
| 673 | 3 | கறி | கரி | | 21 | தோள | தோன் |